ஸ்ரீமதேராமாநுஜாயநம:

பரமகாருணிகரான

திருவரங்கத்தமுதனாரருளிச்செய்த

# இராமாநுசநூற்றந்தாதிமூலமும்,

இதற்கு

பெரியஜீயரருளிச்செய்த

உரையும்,

பிள்ளைலோகாசார்யஜீயரருளிச்செய்த

வ்யாக்யாநமும்;

சக்கரகூடம்,

கந்தாடை-திருவேங்கடாசாரியரால்

பரிசோதிக்கப்பட்டு,

சென்னை

மிமோரியல் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டன

1891

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

சென்னை திருவல்லிக்கேணி பேயாழ்வார்ஸந்நிதிவீதி 12-வது கதவிலக்கமுள்ள திருமாளிகையிலகிடைக்கும்தமிழ் ஸ்ரீகோசஙகள

| | ரூபா. | அ | பை. |
|---|---|---|---|
| முதலாயிரவயாகயாநம 3-ஸம்புட முள்ளது பைண்டுடன் ... ... ... | ௩௭ | ௮ | 0 |
| ராமாநுஜதிவ்யசரிதையெனனும உடையவர வைபவம... ... ... ... ... | ௨ | ௧௨ | 0 |
| பின்பழகிய பெருமாள்ஜீயர் சோத்தருளின வாரததாமாலை ... ... ... | ௧ | ௧௨ | 0 |
| திருசசநதவிருத்தவ்யாக்யாநம ... ... | ௧ | ௧௨ | 0 |
| திருமாலைவ்யாக்யாநமபைண்டுடன ... ... | ௧ | ௪ | 0 |
| திருப்பலலாண்டுவ்யாகயாநம ... ... | 0 | ௮ | 0 |
| திருப்பாவை ௩000 ப்படி, ௪000 ப்படி, ஸ்வாபதேசம பதவுரையுடன் ... ... ... | ௩ | ௮ | 0 |
| திருககுறுநதாணடகம், திருநெடுந்தாண்டக வ்யாகயாநம * மைவண்ணநறுஙகுஞ்சிக்கு பட்டர்படியுடன ... ... .. | ௨ | ௮ | 0 |
| திருமந்த்ரார்த்தம அரும்பதததுடன பைண்டு ... | ௧ | ௧௨ | 0 |
| இராமாநுசநூற்றந்தாதி பெரியஜீயா உரை, பிளளைலோகார்யஜீயாவ்யாகயாநததுடன பைண்டு ... .. ... | ௬ | ௮ | 0 |

இங்ஙனம

சித்ரகூடம-கந்தாடை,

திருவேங்கடாசார்யர்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

---

## அச்சிட்டிருக்கும் தமிழ் ஸ்ரீகோசங்கள்.

| | ரூபா. | அ. | பை. |
|---|---|---|---|
| முதலாயிரவ்யாக்யாநம் 3-ஸம்புடமுள்ளது பைண்டுடன் .. ... .. ... | கஎ | அ | 0 |
| ராமாநுஜதிவ்யசரிதையென்னும் உடையவர் வைபவம் ... ... ... ... ... | உ | கஉ | 0 |
| பின்பழகியபெருமாள்சேர்த்தருளினவார்த்தாமாலை. | க | கஉ | 0 |
| திருநெடுந்தாண்டகவ்யாக்யாநம்பைண்டுடன் ... | உ | அ | 0 |
| திருச்சந்தவிருத்தவ்யாக்யாநம் ... ... | க | கச | 0 |
| திருமாலைவ்யாக்யாநம்பைண்டுடன் ... .. | க | அ | 0 |
| திருப்பல்லாண்டுவ்யாக்யாநம் . .. | 0 | அ | 0 |

சென்னை திருவல்லிக்கேணி பேயாழ்வார்ஸந்நிதிவீதி 12-வது கதவிலக்கமுள்ள திருமாளிகையில் இந்த க்ரந்தங்கள் கிடைக்கும்

இங்ஙனம்

சித்ரகூடம்-கந்தாடை,

திருவேங்கடாசார்யர்.



ஸ்ரீ

ஆழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.

(நம்பெருமாளருளிச்செய்த தனியன்)

శ్రీశైలేశదయాపాత్రం ధీభక్త్యాదిగుణార్ణవమ్।
యతీన్ద్రప్రవణం వన్దే రమ్యజామాతరం మునిమ్॥

ஸ்ரீசைலேசதயாபாத்ரம் தீபக்த்யாதிகுணார்ணவம்-
யதீந்த்ரப்ரவணம்வந்தே ரம்யஜாமாதரம்முநிம்

(எம்பெருமானாரருளிச்செய்தது.)

లక్ష్మీనాథసమారమ్భాం నాథయామునమధ్యమామ్।
అస్మదాచార్యపర్యన్తాం వన్దే గురుపరమ్పరామ్॥

லக்ஷ்மீநாதஸமாரம்பாம் நாதயாமுநமத்யமாம்-
அஸ்மதாசார்யபர்யந்தாம் வந்தேகுருபரம்பராம்.

(கூரத்தாழ்வானருளிச்செய்தது.)

యోనిత్యమచ్యుతపదామ్బుజయుగ్మరుక్మవ్యామోహతస్తదితరాణి తృణాయ మేనే।
అస్మద్గురోర్భగవతోऽస్య దయైకసిన్ధోః రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే॥

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணிதருணாயமேநே-
அஸ்மத்குரோர்ப்பகவதோஸ்யதயைகஸிந்தோ
ராமாநுஜஸ்யசரணௌசரணம்ப்ரபத்யே.

(ஆளவந்தாரருளிச்செய்தது.

మాతా పితా యువతయస్తనయా విభూతిః సర్వం యదేవ నియమేన మదన్వయానామ్।
ఆద్యస్య నః కులపతేర్వకుళాభిరామం శ్రీమత్తదఙ్ఘ్రియుగళం ప్రణమామి మూర్ధ్నా॥

மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ்
ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம்-
ஆத்யஸ்யந꞉குலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா.

(பராசரபட்டரருளிச்செய்தது.)

భూతం సరశ్చ మహదాహ్వయభట్టనాథ శ్రీభక్తిసారకులశేఖరయోగివాహాన్।
భక్తాఙ్ఘ్రిరేణుపరకాలయతీన్ద్రమిశ్రాన్ శ్రీమత్పరాఙ్కుశమునిం ప్రణతోऽస్మి నిత్యమ్॥

பூதம்ஸரஸ்யமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலசேகரயோகிவாஹாந்-
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிச்ராந்
ஸ்ரீமத்பராங்குசமுநிம்ப்ரணதோஸ்மிநித்யம்

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பிள்ளைலோகார்யஜீயரருளிச்செய்தவ்யாக்யாநம்.

அவதாரிகை.—(முன்னைவினையகல) ப்ராக்தநகர்மநிவ்ருத்த்யர்த்தமாக அபிஜாதரான அமுதனார் திருவடிகளை சிரோபூஷணமாக தரித்தேன், ஆகையால கர்மபலாநுபவம்பண்ணுவிக்கும் யமாதிகளுக்கு என்னோடு என்ன ப்ராப்தியுண்டென்கிறது.

மூ.—முன்னைவினையகல மூங்கிற்குடியமுதன்
பொன்னங்கழற்கமலப்போதிரண்டு - மென்னுடைய
சென்னிக்கணியாகச்சேர்த்தினேன் தென்புலத்தார்க்கு
என்னுக்கடவுடையேன் யான்.

வ்யா —(முன்னைவினையகல) (முன்னருமாரியனால) என்னாநிறே வாதிகேஸரி யழகியமணவாளச்சீயரும்; அப்படியே அநாதிகாலார்ஜிதகர்மங்கள் அகன்றுபோக. பாவமெல்லாமகன்று என்னைவிட்டுப்போக. அது எத்தாலேயென்ன; அமுதன்கால் தலைப்பட்டத்தாலேயென்கிறது (மூங்கில் குடியமுதன இத்யாதியாலே.) மூங்கில்குடியாவது - "வேயர்தங்கள்குலம்" என்னுமாப்போலே இவர்க்குமூங்கில்குடியாய்த்தது. அக்குலத்திலேயவதரித்த அமுதனாருடைய. (பொன்னங்கழற்கமலப்போதிரண்டும) ஸ்ப்ருஹணீயமாய அழகிதாயிருக்கிற திருவடித்தாமரைப்பூவிரண்டையும். (என்னுடையசென்னிக்கணியாகச்சேர்த்தினேன) அவருடைய சென்னிக்கணி * ராமாநுசனடிப்பூ: என்னுடைய சென்னிக்கணி இவையாய்த்து.

(சென்னிக்கணியாகச்சேர்த்தினேன) தலைக்கலங்காரமாகச் சேர்த்தேன. (செம்மாபாதபற்புத்தலைசேர்த்து) என்னுமாப்போலே அங்குப்ராதத்தை; இங்குகாதார்த்தத்தை. ஆத்தால, தென்புலத்தார்க்கு-யமபுரவாஸிகளானயமகிங்கரர்க்கு. (என்னுக்கடவுடையேன) இனிஏதுக்காக கர்மபலாநுபவத்துக்குக்கடவேன. கர்மக்ஷயம்பிறந்தவாறே பலாநுபவமில்லையிறே. ஆகையாலேகர்மபலாநுபவம்பண்ணுவிப்பார்க்கு காத்தவ்யமில்லை. * பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து என்சென்னித்திடரில் பாதவிலச்சினை வைக்கையாலே தென்புலக்கோன்பொறியொற்றிவைத்தவிலச்சினை மாற்றித் தூதுவரோடியொளித்தார், அத்தாலே (என்னுக்கடவுடையேன்யான்) என்கிறது. "என்பெயவினை தென்புலத்தில் பொறித்தஅப்புத்தகச்சுமமைபொறுக்கியபின) என்னக்கடவதிறே. (யான் என்னுக்கடவுடையேன்) பொன்னங்கழற்கமலப் போதிரண்டும் என்னுடைய சென்னிக்கு அணியாகச்சேர்த்த யானென்றபடி

(என்னுக்கடவுடையேன்) என்னுக்குளென்கிறகுகரம் கடைக்குறைத்தலாயிருக்கிறது. கடவுடையேன் - ஏதுக்காகப்ராப்தியுடையேனென்றபடி. அம்ர்தத்துக்கும விஷத்துக்கும் சேர்த்தியில்லாதாப்போலே திருவரங்கத்தமுதனார் திருவடிகளில் ஸம்பந்தமுடையார்க்கும் தெனபுலக்கோனடியார்க்கும் என்ன சேர்த்தியுண்டு. "அரங்கமாநகருளானே - நின்னுமங்கற்ற வாவலிப்புடைமைகண்டாய - நமன்றமர்தலைகள்மீதே நாவலிட்டுழிதருகின்றோம்" என்றும், "அரங்கமென்றழைப்பராகில் பொறியில்வாழ்நரகமெல்லாம்புலலெழுந்தொழியுமன்றே" என்றும், "నచజ్ఞానస్యసఙ్కోచం నచైవయమగోచరమ్। తస్మాద్రఙ్గం మహాపుణ్యం కోనసేవేతబుద్ధిమాన్" "நசஜ்ஞாநஸ்யஸங்கோசம் நசைவயமகோசரம, தஸ்மாத்ரங்கம்மஹாபுண்யம்கோநஸேவேதபுத்திமாந்" என்றும், "నఖలుభాగవతాయమవిషయం గచ్ఛన్తి" "நகலுபாகவதா யமவிஷயங்கச்சந்தி" என்றுமசொல்லக்கடவதிறே.

அ —(நயந்தருபேரின்பமெல்லாம் பழுதென்று) ப்ராப்யாபாஸங்களை ஹேயமெனறுபுத்திபண்ணிதம்திருவடிகளை ஆச்ரயித்தவர்கள்விஷயமாக ஸாம்ராஜ்யத்தைப்பண்ணித்தருமத்தாலே வந்த யசஸ்ஸையுடைய எம்பெருமானார்திருவடிகளிலே உத்துங்கருணத்தையுடையதிருவரங்கத்தமுதனார், தம்முடையநிரவதிகபக்தியாலேபணிக்கும் நூற்றந்தாதியை ஓதஸம்மதியென்று மநஸ்ஸை அர்த்திக்கிறது

மூ.—நயந்தருபேரின்பமெல்லாம்பழுதென்றுநண்ணினர்பால்
சயந்தருகீர்த்திஇராமாநுசமுனிதாளிணைமேல்
உயர்ந்தகுணத்துத்திருவரங்கத்தமுதோங்குமன்பால்
இயம்புங்கலித்துறையந்தாதியோதவிசைநெஞ்சமே.

வ்யா.—(நயந்தருபேரின்பமெல்லாம்) விஷயங்களாலேவரும் நிரவதிகஸுகங்களையெல்லாம். நயம் - விஷயம. "நாணுமைநள்ளேனயம்" என்கிறவிடத்துக்கு - விஷயங்களை என்றிறே வ்யாக்யாநம்பண்ணியருளிற்று. அஜ்ஞாபிப்ராயத்தாலே சிற்றின்பத்தைப் பேரின்பமெனகிறது. (பழுதென்று) அவற்றைஹேயமென்று விசாரித்துவிட்டு. (நண்ணினர்பால்) ஆச்ரயித்தவர்கள்விஷயத்திலே. (சயந்தருகீர்த்திஇராமாநுசன்) அவர்களுக்கு ஸாம்ராஜ்யத்தைப்பண்ணித்தருகிற எம்பெருமானார். இப்படி ஆபாஸஸுகங்களை விட்டு ஆச்ரயித்தவர்கள் ஆழ்வானும்அமுதனருமாய்த்து. "రామానుజార్యవిషయీకృతమ్" "ராமாநுஜார்யவிஷயீக்ருதம்" என்றும், "அக்காதலளற்றழுந்திமாயுமெனனாவியை வந்தெடுத்தான்" என்றிறே. "కామాదిదోషహరమాత్మపదాశ్రితానాం రామానుజం యతిపతిమ్" "காமாதி

தோஷஹரமாத்ம பதாச்ரிதாநாம்ராமாநுஜம்யதிபதிம்'' என்றும், "[illegible]" "மதநகதநைர்நக்லிச்யந்தே யதீச்வரஸம்ச்ரயா:" என்னக்கடவதிறே. இதுவாய்த்து சயந்தரு கீர்த்தி. "சயப்புகழார்" என்னுமாப்போலே.

(இராமாநுசமுனிதாளிணைமேல்) இப்படி ஆச்ரிதஜநஜயப்ரதரான எதித்தலைநாதனிராமாநுசமுனி சரணத்வயவிஷயங்களிலே வாசிக கைங்கர்யமாகச்செய்த ப்ரபந்தத்தை அப்யஸிக்க ஸமமதி என்று ஸௌமநஸ்யமுண்டாம்படி மநஸ்ஸையர்த்திக்கிறது. "ராமாநுசன் சரணாரவிந்தம்" என்றும், "ராமாநுசன்றனிணையடி" என்றும், "இராமாநுசனடிப்பூமன்னவே" என்றுமிறே ஆதிமத்யாவஸாநம் அநுஸந்தேயவிஷயமாயிருப்பதாயத்து - இப்ப்ரபந்தந்தான்.

அன்றிக்கே, "நயந்தருபேரின்பமெல்லாம பழுதென்றுநண்ணி நம்பால சயந்தருகீர்த்தியிராமாநுசமுனி" என்று இத்தனியனருளிச்செய்தவரபிப்ராயமாகவுமாம். அதாவது, நயந்தருபேரின்பமெல்லாம பழுதென்றி நண்ணிநம்பால் - நன்மையைப்பண்ணுமதாய் விரதிசயஸுகங்களெல்லாம, பழுதென்றி - ஸங்கோசமின்றிக்கே, நண்ணிநன்பால - "தந்தைநலதாயதாரம தநயர் பெருஞ்செலவம என்றனக்கு நீயே யெதிராசா" என்கிறபடியே ஸர்வஸ்வங்களும அவரேயென்று ஆச்ரயித்த நம்முடைய விஷயமாக என்று இங்ஙனேயும யோஜிக்கவுமாம் மேலபூர்வவத்.

அன்றிக்கே, நயந்தருபேரின்பமெல்லாம பழுதென்று - தத்ஸாதநங்களை தர்ணவத்கரித்து, நண்ணி - நாராயணனை நண்ணினவருமாய என்று எம்பெருமானார்க்கு விசேஷணமாகவுமாம. நன்பால் - நல்லஸ்வபாவத்தாலே பாஸுர்த்தியே பெறுமா ஸ்வபாவத்தாலே. (சயந்தருகீர்த்தியிராமாநுசன்) தாம நயந்தருபேரின்பமெல்லாம் பழுதென்றி நண்ணினமாத்ரமன்றிக்கே, தம்மை யாச்ரயித்தவர்களும், "நரகத்தை நகுநெஞ்சே" என்கிறபடியே ஸம்ஸாரத்தை வெல்ல வல்லராம்படி பண்ணி அத்தாலேவந்த யசஸ்ஸையுடையவரென்றாகவுமாம். "తృణీకృతవిరించాది నిరంకుశవిభూతయః। రామానుజపదాంభోజసమాశ్రయణశాలినః" "த்ருணீகர்தவிரிஞ்சாதி நிரங்குசவிபூதய:| ராமாநுஜபதாம்போஜ ஸமாச்ரயணசாலிந:" என்னக்கடவதிறே.

**அ.—(சொல்லின்தொகைகொண்டு) இது அமுதனாருளிச்செய்ததாதல்; அவரபிப்ராயத்தாலே அபிநிவேசமுடைய ஆஸ்திகரருளிச்செய் ...**

### பிள்ளைலோகார்யஜீயரருளிச்செய்தவ்யாக்யாநம்.

### அமுதனாரருளிச்செய்ததனியன்.

மூ.—சொல்லின்தொகைகொண்டுனதடிப்போதுக்குத்தொண்டு
செய்யும், நல்லன்பரேத்துமுன்னாமமெல்லாமென்றன்னா
வினுள்ளே, அல்லும்பகலுமமரும்படிநல்கறுசமய, வெல்
லும்பரமவிராமாநுசவிதென்விண்ணப்பமே.

வ்யா.—(சொல்லின்தொகைகொண்டு) இவ்வளவாகச்சொல்லக்கடவோமென்றுஸங்க்யாநிர்த்தேசம்பண்ணி. அன்றிக்கே, சப்தஸமூஹங்களைக் கொண்டென்னவுமாம். (உனதடிப்போதுக்கு) தேவரீருடைய திருவடித்தாமரைகளுக்கு. (தொண்டுசெய்யும்) வாசிககைங்கர்யமாக*இருங்கவிகளைப்புனையும். (நல்லன்பர்) ஏத்தும் "நல்லாரபரவும" என்கிறபடியே அநந்யப்ரயோஜநபக்தியுக்தரானதும். (உன்நாமமெல்லாம) அந்தபக்திபாரவச்யத்தாலே ஸ்தோத்ரம்பண்ணும் தேவரீருடைய திருநாமமெல்லாம். (என்றன்நாவினுள்ளே) அந்தத்திருநாமங்களை அநுஸந்திக்கவேணுமென்றிருக்கிற என்றன்நாவினுள்ளே.

(அல்லும்பகலுமமரும்படிநல்கு) "நள்ளிருளளவும பகலும் நானழைப்பன்" என்னும்படி திவாராத்ரவிபாகமறப் பொருந்தியிருக்கும்படி உபகரித்தருளவேணும். (அறுசமயம்வெல்லும்பரம) *கூறுசமயங்களாறுங்குலையும்படியிறேவெல்லுவது; இப்படி (வெல்லும்பரம) வெல்லுகிறமேலானவரே ச்ரேஷ்டரானவரே. (இராமாநுச) நாலெழுத்தாய நாராயணநாமத்திலும் அதிகமான திருநாமத்தையுடையவரே. உன்நாமமெல்லாம என்றன் நாவினுள்ளே அல்லும்பகலு மமரும்படிநல்கு, இதென்விண்ணப்பம் - இது என்விஜ்ஞாபநம. தேவரீர நாலெழுத்துடைய திருநாமம் என்நாவில அமருமபடி நல்கியருளவேணும். "ராமாநுசன்" என்றிறே முடியவருளிசசெய்தது.

(சொல்லின்தொகைகொண்டு) நூற்றெட்டுப்பாட்டாகச்சொல்லவேணுமென்று, சொல்லின்தொகையை - ஸங்க்யாநிர்த்தேசத்தைத் திருவுள்ளத்திலேகொண்டு. (உனதடிப்போதுக்கு) "ராமாநுசன்சரணாரவிந்தம நாமமன்னிவாழ" "ராமாநுசனடிப்பூமன்னவே" என்றிறே இவர்ராமாநுசனடிப்போதுக்கு வாசிகமாகத் தொண்டுசெய்தது. இப்படிதொண்டுசெய்யும நல்லன்பர்அமுதனாரிறே. (ஏத்துமுன்னாமம்) அவர்களாலே ஸ்தோத்ரம்பண்ணப்பட்ட தேவரீர்திருநாமமான நூற்றெட்டுப்பாட்டும். (என்றன் நாவினுள்ளே அல்லும்பகலு மமரும்படிநல்கு) இத்தை நிரந்தரமநுஸந்திக்கவேணுமென்கிற என்னாவினுள்ளே இவர்ராத்ரம்

திருநாமமருளும்படி அநுக்ரஹிக்கவேணும். (இதென்விண்ணப்பம்) * (ఇదమ్‌మమ విజ్ఞాపనమ్) "இதம்மமவிஜ்ஞாபநம்" "அடியேன் செய்யும் விண்ணப்பமே.) இது அமுதனார் நிர்வாஹத்தை அநுவதித்துச் சொன்னபடி.

அ.—(இனியென்குறைநமக்கு எம்பெருமானார் திருநாமத்தினால்) ஸகலவேதஸாரமான ஸாவித்ரியின் ஸாரமாய பரபந்நகாயத்ரியாம்படி நூற்றெட்டுப்பாட்டிலும் "ராமாநுசன" என்னும் திருநாமத்தை யருளிச்செய்து உபகரிக்கையாலே த்ர்ஷ்டாத்ர்ஷ்டங்களிரண்டிலும் ஒருகுறைகளுமில்லையென்று பெற்றலாபத்தைப் பேசுகிறது.

சோமாசியாண்டானருளிச்செய்தது.

மூ.—இனியென்குறைநமக்கெம்பெருமானார்திருநாமத்தால்
முனிதந்தநூற்றெட்டுச்சாவித்திரியென்னுநுண்பொருளை
கனிதந்தசெஞ்சொல்கலித்துறையந்தாதிபாடித்தந்தான
புனிதன்திருவரங்கத்தமுதாகியபுண்ணியனே.

வ்யா.—(இனியென்குறைநமக்கு) ஒன்றுங்குறையில்லை-த்ர்ஷ்டத்தில் சொல்லப்புகில், "வாயமுதமபரக்கும-ராமாநுசனென்று சொல்லுமின்" - அமுதன்வாயிலேயிறே அமுதமுண்டாவது. "హృద్యాన్యమృతకల్పాని మనఃప్రహ్లాదనానిచ । తామేవేక్ష్వాకునాథస్య భరతస్యాక్షరాం కురు" "ஹ்ர்த்யாந்யம்ர்தகல்பாநிமநப்ரஹ்லாதநாநிச । தாமேவேக்ஷ்வாகுநாதஸ்யபரதஸ்யகதாம்குரு;-" இவரும ராமாநுசனிறே; ஆகையாலே த்ரஷ்டஸுகமுமுண்டு; மோக்ஷஹேதுவாகையாலே அத்ர்ஷ்டஸுகமுமுண்டு; அததாலே இனியென்குறை யென்கிறது. (எம்பெருமானார் திருநாமத்தால்) "ராமாநுசன திருநாமம என்றிறே யருளிச்செய்தது, அந்ததிருநாமததாலே. நம்பெருமானை நாராயணன் நாமத்துக்கு ஒரு குறையுண்டு பந்ததுக்கு ஹேதுவாகை; எம்பெருமானார்ராமாநுசனென்னும் திருநாமம் மோக்ஷத்துக்கே ஹேதுவாகையாலே அக்குறையுமில்லை. ஏவம்விதவைலக்ஷண்யததையுடைய திருநாமததினாலே பாடித்தந்தானென்கிறது.

(முனிதந்த) "తస్యధ్యానాత్తస్య" "தஸ்யதயாநாநதஸ்த்தஸ்ய" என்றும், "முனிமாபபிரமமுதலவித்தாய" என்றும், "முனியே" என்றுமிறே ஸ்ர்ஷ்ட்யுந்முகனை ஸர்வேச்வரனைச் சொல்லுவது. அப்படிப்பட்டஸர்வேச்வரன்ப்ரஹ்மாவைஸ்ர்ஷ்டித்து "వేదప్రదానపూర్వంగాయత్రీంవేదమాతరమ్" "வேதப்ரதாநபூர்வம்காயத்ரீம்வேதமாதரம்" என்னும்படியான காயத்ரியையும் ப்ரணவபூர்வகமாக,

உபதேசித்தான்; அது அஷ்டோத்தரசதமாயிறே! உச்சரித்துப் போருவது, அப்படியே அநுஸந்திக்கும்படி, அதின் நுண்பொருளை - ஸூக்ஷ்மார்த்தத்தை. அந்தகாயத்ரிக்கும் மாதாவாயிறே ப்ரணவமிருப்பது.

அதில் அகாரத்தாலே - எம்பெருமானையும், உகாரத்தாலே - பிராட்டியையும், மகாரத்தாலே தச்சேஷபூதனான சேதநனையுமிறே சொல்லுவது. "[illegible]" "மகாரஸ்து தயோர்தாஸ:" "[illegible]" "அக்ரத:" இத்யாதியாலே - அகார உகாரமகாரார்த்தங்கள் சப்தார்த்தஸ்வாரஸ்யங்களோடே கூடியிறே யிருக்கிறது; இவரும் ராமாநுசனிறே. "[illegible]" "ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத" என்று - சப்தஸ்வாரஸ்யத்தாலே பேநப்ராதாந்யத்வமுண்டிறே ப்ரணவத்துக்கு; அதிறே நுண்பொருளாவது. "ராமாநுசன்" என்றிறே பாட்டுதோறும்ப்ரஸ்தமாயிருப்பது. * உவ்வானவரிறே - உடையவர். தன் நாமத்திலுமதிகநாமமிறே அவன்றனக்கும் இஷ்டமாயிருப்பது.

இனித்தான், "[illegible]" "தத்ஸவிதுர்வரேண்யம்" என்று - ஆதித்யமண்டலாந்தர்வர்த்தியான நாராயணனையிறே அங்கு ப்ரதிபாதிக்கிறது; "[illegible]" "[illegible]" "ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருச்யதே" "ஸ யச்சாயம்புருஷே யச்சாஸாவாதித்யே ஸ ஏக:" என்கிறபடியே - * அவைதன்னொடும்வந்திருப்பிடம் மாயனிராமாநுசன்மனமிறே; அதனாலே சாவித்ரியாய்த்தது இவர் வடிவிருப்பது. இவரும் * ராமாநுஜதிவாகரரிறே * கடலளவாய சுடரொளியாலேயிறே அவ்விருளைத்துரந்தது. இப்படியாய்த்தது - * சாவித்திரியென்னும் நுண்பொருளைப்பாடித் தந்தது; ஸகலவேத ஸங்க்ரஹமான திருமந்த்ரத்தின் தாத்பர்யமிறே, ததீயசேஷத்வம். "நின் திருவெட்டெழுத்துங் கற்று நானுற்றது முன்னடியார்க்கடிமை."

நுண்பொருளைப்பாடித்தந்த ப்ரகாரஞ்சொல்லுகிறது (கலிதந்தசெஞ்சொலித்யாதியாலே) கலிதருகையாவது - மிடுக்கைத் தருகை. அன்றிக்கே ஆரவாரமாதல்; அபூர்வமாதல். இப்படி, கலியைத்தந்த-சப்தசக்தியைத்தந்த. (செஞ்சொல்) செவ்வியசொல். "செவிக்கினியசெஞ்சொல்" என்னக்கடவதிறே. (கலித்துறையந்தாதிபாடித்தந்தான்) "கலித்துறை" என்கிறபாவிலேயாய்த்துப் பாடித்தந்தது. (செஞ்சொல்கலித்துறை) ச்ராவ்யமான கலித்துறையிலேயாய்த்து அந்தாதிபாடித்தந்தது. அந்தாதிப்பாட்டு அடியெடுத்து ஸுலபமாயிறேயிருப்பது. (பாடித்தந்தான்)

அநுபவபரீவாஹமாகப்பாடி பின்புள்ளார்க்கு முபகரித்தார். (புனி தன்) பரிசுத்தன். பாடித்தந்தசுத்தி. அசுத்தரையும் சுத்தராக்க வல்ல சுத்தி. * போற்றும் புனிதனைப்போற்றுமவரிறே.

(திருவரங்கத்தமுதாகிய புண்ணியனே) திருவரங்கத்தமுத னாராகிற தார்மிகன். "ராமாநுசன்மிக்கபுண்ணியன்" என்னுமாப் போலே மிக்கபுண்ணியனடியாகவந்த புண்ணியம். திருவரங்கத் தமுதாகிய புண்ணியன் - எம்பெருமானார் திருநாமத்தால் - கலித் துறையந்தாதி பாடித்தந்தான்; இனியென்குறை நமக்கு என்று க்ரியை. "అష్టోత్తరసహస్రం వా శతమష్టసమాహితైః। లక్ష్మణస్యమనుర్జప్యః ముముక్షుభిః సతన్ద్రితైః" "அஷ்டோத்தரஸஹஸ்ரம்வா ஶதமஷ்டஸமாஹிதை:। லக்ஷ்மணஸ்யமநுர்ஜப்ய: முமுக்ஷுபிதந்த்ரிதை:" என்றும், "యోజపేల్లక్ష్మణమనుం నిత్యమేకాన్తసంస్థితః। ముచ్యతేసర్వపాపేభ్యో విష్ణులోకం స గచ్ఛతి" "யோஜபேலக்ஷ்மணமநும்நித்யமேகாந்தஸம்ஸ்தித:। முச்யதேஸர்வபாபேப்யோ விஷ்ணுலோகம்ஸகச்சதி" என்றுமிறே ஆகஸ்த்ய ஸம்ஹிதையில ப்ரமாணப்ராசஸ்த்யமிருப்பது. இவரும் "லக்ஷ்மண முனி" என்று சொல்லப்படும் ராமாநுசனிறே.

பிள்ளைலோகார்யஜீயர்திருவடிகளேசரணம்.

---

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

திருவரங்கத்தமுதனாரருளிச்செய்த

# இராமாநுசநூற்றந்தாதி.

## பெரியஜீயரருளிச்செய்தவுரையினவதாரிகை.

ஸகலசாஸ்த்ரஸங்க்ரஹமான திருமந்த்ரத்தினுடைய தாத்பர்யமாய், பகவதாகஸ்மிகக்ருபாலப்தத பரிசுத்தஜ்ஞாநரான ஆழ்வார்களுடைய திவ்யப்ரபந்தஸாரார்த்தமாய், பரமகாருணிகரான நம்மாழ்வாருடைய பரிபூர்ணகடாக்ஷபாத்ரபூதரான ஸ்ரீமதுரகவிகளுடைய உக்த்யநுஷ்டாநங்களாலேப்ரகடிதமாய், ஆழ்வார்தம்மாலே நாதமுனிகளுக்கருளிச்செய்யப்பட்டதாய், அவர் தம் திருவடிகளையாச்ரயித்த யோகயவிஷயங்களுக்கு உபதேசித்தருள

---

## பிள்ளைலோகார்யசீயரருளிச்செய்த வ்யாக்யாநாவதாரிகை.

ஸ்ரீயப்பதியாய் பரமகாருணிகனான ஸர்வேச்வரன், (వైకుణ్ఠేతు పరేలోకే శ్రీసహాయో జనార్దనః। ఉభాభ్యాం భూమినీళాభ్యాం సేవితః పరమేశ్వరః) (వైకుణ్ఠేతు పరేలోకే శ్రియా సార్ధం జగత్పతిః। ఆస్తే విష్ణురచిన్త్యాత్మా భక్తైర్భాగవతైస్సహ) (வைகுண்டேது பரேலோகே ஸ்ரீஸஹாயோஜநார்த்தந:। உபாப்யாம்பூமிநீளாப்யாம் ஸேவித: பரமேச்வர:) (வைகுண்டேதுபரேலோகேஸ்ரீயாஸார்த்தம்ஜகத்பதி:। ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ்ஸஹ) என்கிறபடியே நித்யவிபூதியிலே போகோபகரணனாயிருந்து லீலாவிபூதியில் த்ரிகுணப்ரக்ருதிஸம்ஸர்க்கத்தாலே ஜீவவர்க்கங்களுக்கு நித்யஸூரிகளைப்போலே இந்த ஆநந்தரஸத்தையநுபவித்துவருகைக்குயோக்யதையுண்டாயிருக்கச்செய்தேயும் * ஒழிக்க வொழியாத நமமோடுறவறியாதே ஸம்ஸாரஸாகரத்தின் பெருக்குச்சுழியிலேயகப்பட்டு கரைமரஞ்சேரப்பெறாதேயிருந்ததுக்கு போரநொந்து இவர்களுக்கும் அந்தவுறவையறிவித்து ஸம்ஸாரஸாகரத்தினின்றும் உத்தரிப்பிக்கக்கடவோமென்று நினைப்பிட்டு கலியுகாதியிலே நம்மாழ்வாரையவதரிப்பித்து அவருக்கு * மயர்வறமதிநலமருள,

அவரும் அந்தஸம்யக்ஜ்ஞானத்தாலே ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளைத்தாமநுபவித்து அது உள்ளடங்காமே * எதிர்பொங்கி மீதளிப்ப, அதுக்குப்போக்குவீடாக திவ்யப்ரபந்தங்களை நிர்மித்தும் மதுரகவியாழ்வார்தொடக்கமானவர்களுக்கு உபதேசித்து, அதுக்குஸாரமாய் தத்வஹித புருஷார்த்த யாதாத்ம்யாவபோதகமாய் ஸகலவேதஸங்க்ரஹமான திருமந்த்ரத்திலே குஹ்யதமமாக ப்ரதிபாதிக்கப்பட்ட சரமோபாயத்தை

அவர்கள்தாங்களும இப்படியே உபதேசிக்கையாலே உபதேசபரம்பராப்ராப்தமாய், அகிலசேதநர்க்கும் ஸ்வரூபோபாய புருஷார்த்தயாதாத்ம்யரூபேண அவச்யாபேக்ஷிதமாய், பரமரஹஸ்யமாயிருந்துள்ள சரமபர்வநிஷ்டாப்ரகாரத்தை, எம்பெருமானார், கேவலக்ருபையாலே தம்மை ஆழ்வான்திருவடிகளிலே ஆச்ரயிப்பித்து தந்முகேந உபதேசித்தருளக்கேட்டு. அவ்வர்த்தத்தை யதார்த்தசம்பண்ணி, அநவரதம எம்பெருமானார்திருவடிகளைஸேவித்துக்கொண்டுபோராநின்றுள்ள பிள்ளையமுதனார், அவருடைய திவ்யகுணங்களைத் தம்முடையப்ரேமத்துககுப போககுவீடாகப் பேசி அநுபவிக்கவேண்டும்படியான தசைதமககு விளைகையாலும் இவ்வர்த்தஜ்ஞாநம் சேதநாக்குஸுலபமாம்படி பண்ணவேணுமென்கிறதம்முடைய பரமக்ருபையாலும், தாமஎம்பெருமானாருடைய திவ்யகுணஙகளைப்ரேமாநுகுணமாகபபேசுகிற பாசுரஙகளாலே, தத்ப்ரபாவத்தை எல்லாாககும ப்ரகாசிப்பியாநின்றுகொண்டு, முன்பு ஆழ்வாாதிருவடிகளுககு அநந்யார்ஹரான ஸ்ரீமதுரகவிகள்,

---

மதுரகவியாழவாரொருவர்க்கு முபதேசிகக, (மிககவேதியர்வேதத்திளுட்பொருள்நிற்கப் பாடியென்னெஞ்சுளநிறுத்தினுன்) என்றும், (தேவுமற்றறியேன) என்றும-உகதாநுஷ்டாநஙகளாலே பூதராணபினபு அந்த அர்த்தவிசேஷஙகளையெல்லாம தமககுபாஸிக்கவேணுமென்று ஸ்ரீமநநாதமுநிகள ப்ராாத்திகக, அவருககு அர்ச்சாவ்யவஸ்த்தையையதிக்ரமித்து திருவாயதிறந்து உபதேசிக்கஅவரடியாகவாயத்து இநதஸமபரதாயமவநதது;

இவ்வாத்தவிசேஷஙகளையெல்லாம * இருள்தருமாஞாலமான பூலோகத்திலே ஜநங்களுககுபதேசித்துஸாவர்ககும மோக்ஷத்தை கரதலாமலக மாககவேணுமென்று, (సప్తకోటేషు...వాసేస్యు...ప్రోద్ధ తలే| అహీనామీశ్వరస్సాయ మాసీద్రామానుజోమునిః) (பதயுகேமலவாஸிந்யாஹ ப்ரோஹணத்பர்திவீதலே, அஹீநாமீஸ்வரஸ்ஸாயமாஸீத்ராமாநுஜோமுநி:) எனகிறபடியே ஸாவேச்வரன் திருவநந்தாழ்வானையேவ, அவர்வந்து ஸ்ரீபெருமபூதூரிலேயவதரித்து ஸகலசாஸ்த்ரப்ரவீணராய் திருககச்சிநம்பிமுகமாக தேவபபெருமாளறிவித்த அறிவாலேதத்வஹிதஙகளையெல்லாமவிசதமாகததெரிந்தும், பெரியபெருமாள்கர்பையாலே உபயவிபூதி ஸாமராஜ்யத்தை நிர்வஹியும்என்றுசெங்கோலைக்கொடுககப்பெற்றும், நாதயாமுநாதிஸம்ப்ரதாயபரம்பராப்ராப்தமானதத்வஹித புருஷார்த்த ததயாதாத்ம்ய ஜ்ஞாநமாகிற அர்த்தவிசேஷத்தை லபித்தும், தமககு அந்தரங்கரான ஆழ்வான்முதலான முதலிகளுக்கு அவ்வர்த்தவிசேஷத்தை உபதேசித்துக்கொண்டும் வாழுகிறகாலத்திலே.

ஸ்வநிஷ்ட்டாகதநரூபேணவும் பரோபதேசரூபேணவும் உஜ்ஜீவநார்த்தத்தை லோகத்துக்குவெளியிட்டருளினுப்போலே, தாமும் ஸ்வநிஷ்ட்டாகதநரூபத்தாலும் பரோபதேசத்தாலும் அவரைப் போலேஸங்க்ரஹேண பத்துப்பாட்டாக வன்றிக்கே, பரக்கக்கொண்டு ஆசார்யாபிமாநநிஷ்டர்க்குஜ்ஞாதவ்யார்த்தங்களையெல்லாம் இப்ப்ரபந்தமுகேந அருளிச்செய்கிறார். எம்பெருமானார்திருவடிகளிலேப்ரேமமுடையவர்களுக்கு "ஸாவித்ரிபோலே இதுநித்யாநுஸந்தேயவிஷயமாகவேணும" என்றுய்த்துப்பாட்டுத்தோறும் திருநாமத்தைவைத்து நூற்றெட்டுப்பாட்டாகவருளிச்செய்தது; ஆகையாலே இதைப்ரபந்நஸாவித்ரியென்றுய்த்து நம்முதலிகள் அருளிச்செய்வது.

அ.—முதற்பாட்டு. தம்திருவுளத்தைக்குறித்து எம்பெருமானாருடையதிருவடிகளை நாம் பொருந்திவாழும்படியாக அவருடையதிருநாமங்களைச்சொல்லுவோம்வாவென்கிறார்.

---

திருவரங்கத்தமுதனார் ஸகலசாஸ்த்ரபரிபூர்ணராயிருந்தும் ஸத்ஸம்ப்ரதாயம்தெரியாதேயிருக்க, எம்பெருமானார் தம்முடைய நிர்ஹேதுகக்ருபையாலே ஆழ்வானையிட்டு அவரைத்திருத்துவிக்க, அவரும் ஆழ்வானை யாச்ரயித்து அவர் காட்டிக்கொடுக்க எம்பெருமானார்திருவடிகளைக்கண்டு அதிலே அத்யந்தாபிநிவிஷ்டசித்தராய ஸர்வதா அநுபவம்பண்ணிக்கொண்டு போந்து அவ்வநுபவம் உள்ளடங்காதேபரிவாஹரூபேண, "கலித்துறை" என்கிறசந்தஸ்ஸிலே அந்தாதியாக நூற்றெட்டுப்பாட்டாய், பாட்டுத்தோறும் எம்பெருமானார்திருநாமத்தைச்சேர்த்து ப்ரபந்தீகரித்துப்போந்தாராகையாலே இது ப்ரபந்நகாயத்ரியென்று அத்யவஸிக்கப்பட்டு, நம்முதலிகளெல்லார்க்கும், (గురోర్నామసదాజపేత్) (குரோர்நாமஸதாஜபேத்) என்கிறபடியே நித்யாபிஜப்யமாயிருக்கிறதாய்த்து.

அ.—முதற்பாட்டு பிள்ளையமுதனார் தமக்கு ஆசார்யப்ரஸாதத்தாலே லப்தமாய மந்த்ரரத்நகண்டத்வயார்த்த யாதாத்ம்ய ஜ்ஞாநரூபமாய் பரமரஹஸ்யமாயிருந்துள்ள அர்த்தவிசேஷங்களை, (ఏకస్స్వాదు నభుంజీత) (ஏகஸ்ஸ்வாது நபுஞ்ஜீத) என்கிறபடியே தின்னகத்தனியிழிவார்க்குத்துணைத்தேட்டமாமாப்போலேஎம்பெருமானாருடைய கல்யாணகுணஸாகரத்திலே யிழிவதுக்குத்துணைத்தேட்டமாய, உபயவிபூதியிலும் ஆராய்ந்தால் நித்யவிபூதியிலேயிருந்துள்ள நித்யஸூரிகளும முக்தரும, (సదా పశ్యన్తి) (ஸதாபச்யந்தி) (ఇమాంల్లోకాన్ కామాన్నీ కామరూప్యనుసఞ్చరన్, ఏతత్సామగాయన్నాస్తే, హా౩వుహా౩వు) என்கிறபடியே பரத்வத்தை முற்றூட்டாக வநுபவித்து ஸாமகாநம்பண்ணிக்கொண்டு களித்து, (నోపజనం స్మరన్నిదం శరీరమ్) (நோபஜநம்ஸ்மரந்நிதம்ஶரீரம்) என்கிறபடியே-லீலாவிபூதியிலே கண்வையாதேயிருந்தார்களாகையாலும், லீலாவிபூதியிலுள்ள

மூ.—பூமன்னுமாதுபொருந்தியமார்பன்புகழ்மலிந்த
பாமன்னுமாறனடிபணிந்துய்ந்தவன்பல்கலையோர்
தாமன்னவந்தவிராமாநுசன்சரணாரவிந்தம்
நாமன்னிவாழநெஞ்சேசொல்லுவோமவன்நாமங்களே. (க)

| பதம். | உரை. |
| --- | --- |
| | ([illegible]) (பத்மே ஸ்திதாம) என்கிறபடியே, |
| பூ | தாமரைப்பூவை, |
| மன்னு | இருப்பிடமாகவுடைய, |
| மாது | பெரியபிராட்டியார், இந்த போக்யதையைக்கண்டபின்பு அத்தை உபேக்ஷித்து, (இறையும் அகல கில்லேன்) என்று, |
| பொருந்திய | நித்யவாஸம் பண்ணும், |
| மார்பனை | திருமார்பையுடையவனுடைய, |
| புகழ் | கல்யாண குணங்களால், |
| மலிந்த | ஸம்ருத்தமா யிருந்துள்ள, |
| பா | திருவாய்மொழியிலே, |
| | (கவியமுதம் நுகர்ச்சியுறுமோ முழுதும்) என்னும்படி, |
| மன்னு | திருவுள்ளத்தில ஊற்றத்தை யுடையரான, |
| மாறன் | ஆழ்வாருடைய, |
| அடி | திருவடிகளை, |
| பணிந்து | ஆச்ரயித்து, |
| உய்ந்தவன் | உஜ்ஜீவித்தவராய், |
| பல்கலையோர்தாம | அநேக சாஸ்த்ரங்களை அதிகரித்திருக்கச்செய்தேயும தத்வஹித புருஷார்த்த நிர்ணயமபண்ண வறியாதே ஒன்றிலும ஒருநிலையற்றிருக்குமவர்கள், அவற்றினுடையயாதாத்மய வேதநத்தாலே, |
| மன்ன | ஸுப்ரதிஷ்டிதராமபடியாக, |
| வந்த | அவதரித்த, |

ஸம்ஸாரிஜநங்களப்ராக்ர்தத்வேந அஜ்ஞாநகையாலே, ([illegible] [illegible]) (நந்தந்த்யுதித ஆத்மயே நநதந்த்யஸ்தமிதேரவெள) என்றும், (உண்டியேயுடையேயுகந்தோடும்மண்டலம்) என்றும்சொல்லுகிறபடியே உண்டுடுத்து, * (புறமேபுறமேயாடி) என்கிறபடியே லீலாவிபூதியிலே சௌரிசிந்தா விமுகராய் விஷயாந்தரங்களிலே மண்டியிருக்கையாலும, எமபெருமானார் ஸமபந்தமுடையஜ்ஞாநாதிகரெல்லாரும்,(பாலேபோல்சீர)எனகிறபடியே பரமபோக்யமானவவருடைய கலயாணகுணஙகளை யநுதிலேது,(காலாழும்நெஞ்சழியும) இத்யாதிப்படியே அவ்வநுபவதபவித்ஆழங்கால்பட்டு குமிழ்நீருண்டுநின்றூர்களாகையாலும, இந்நால் வரும் துணையல்லா தொழிகையாலே தம்முடைய ஸுகதுக்கங்களுக்கு எப்போதும் பொதுவாயிருக்கிற தம்மநஸ்ஸே துணையாக வேணுமென்று திருவுள்ளம்பற்றி அதுதன்னையே ஸமபோதித்துச் சொல்லுகிறூர்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இராமானுசன் | எம்பெருமானாருடைய, | நாமங்கள் சொல்லுவோம் | திருநாமங்களைப்பேசுவோம். |
| சரணாரவிந்தம் | திருவடித் தாமரைகளை, | | |
| நாம் | இதுவேப்ராப்யமென்றறிந்தநாம், | | |
| மன்னிவாழ | பொருந்தி வாழும்படியாக, | | |
| நெஞ்சே | நெஞ்சே!, | | |
| அவன் | அவருடைய, | | |

தாம்மன்னஎன்றது- தாங்களே வந்தாச்ரயிக்கும்படி யென்றுமாம். நாம்என்றது - அநாதிகாலம் இதரவிஷயங்களின் காற்கடையிலே துவண்ட நாமென்னவுமாம். மன்னுதல் - பொருத்தமும், நிலைப்பாடும். ... (க)

---

வ்யா.— (பூமனனுமாதுபொருந்தியமார்பன்) (పద్మేస్థితాం) (பத்மேஸ்த்திதாம்) என்றும்,(மலர்மேல்மங்கை)என்றும், (అరవిన్దవాసినీ) (அரவிந்தவாஸிநீ) என்றும் சொல்லுகிறபடியே-ஸௌகந்த்ய ஸௌகுமார்யங்களாலே அத்யந்தபோக்யமான தாமரைப்பூவின் பரிமளந்தானே ஒருவடிவுகொண்டாப்போலே அதிலேயவதரித்த பெரியபிராட்டியார ஸ்வயம் "பத்மினி" என்கிறபேரை யுடையளாய், அவ்வீட்டின்போக்யதையாலே அத்தைவிடமாட்டாதே இருப்பிடமாக அதிலேயிருந்து அதுவேநிரூபகமாகச் சொல்லப் பட்டபினபு, * ஸாக்ஷாந்மந்மதமந்மதனான நாராயணன், தன்னை தனக்கு பத்நியாக பரிணயித்துபரிஷ்வங்கம்பண்ணவே அவன்றிருமார்வையநுபவித்து அந்தபோகயதையிலேயீடுபட்டு நின்றபின்பு தாமரைப்பூவின் போக்யதையும் அருவருத்து ஒருக்காலும் அத்தைஸ்மரியாதே,(இறையும் - அகலகில்லேன்) என்று நித்யவாஸம் பண்ணபபடுகிற திருமார்வையுடையனான ஸர்வேச்வரனுடைய. (பூமன்னுமாது பொருந்தியமார்பன்) என்று - விசேஷ்யபூதனான ஸர்வேச்வரனுடைய நாமநிர்த்தேசம்பண்ணாதே, அமுதனார் விசேஷணபூதையான பெரியபிராட்டியாரைமாத்ரமே யருளிச்செயதது, "அகஸ்த்யப்ராதா" என்னுப்போலே யிருக்கிறதுகாணும்; அப்படியேயிறேச்ருதிஸ்ம்ர்திகளிலும்,(శ్రద్ధయా దేవో దేవత్వమశ్నుతే) (ச்ரத்தயாதேவோதேவத்வமச்நுதே') என்றும், (అప్రమేయం హి తత్తేజో యస్య సా జనకాత్మజా) (அப்ரமேயம்ஹிதத்தேஜோ யஸ்யஸாஜநகாத்மஜா) என்றும்-இவளையிட்டு அவனுடைய அதிசயம் சொல்லப்படுகிறது. (పితుశ్శతగుణం మాతా గౌరవేణాతిరిచ్యతే) (பிதுஶ்ஶதகுணம் மாதாகௌரவேணாதிரிச்யதே) என்று பர்த்தாவுக்கு இப்படியே ப்ரதிபத்தியுண்டாகவேண்டியிருக்குமிறே.

(புகழ்மலிந்த) * (உயர்வறவுயர்நலமுடையவன் - அயர்வறும மரர்களதிபதி) (திடவிசும்பெரிவளிநீர் நிலமிவைமிசை படர்பொருள்முழுவதுமாயவையவைதொறும் உடல்மிசையுயிரெனக்கரந்தெங்குமபரந்துளன் சுடர்மிகு சுருதியுளிவையுண்டசுரன், )

* (நீர்தொறும்பரந்துளன் பரந்தவண்டமிதென) (ஒன்றுந்தேவு முலகுமுயிரும் மற்றும்யாது மில்லாவன்று நான்முகன்றன்னொடு தேவருலகோடுயிர்படைத்தான்) (உலகமுண்ட பெருவாயா வுலப்பில்கீர்த்தியம்மானே,) (புணராநின்ற மரமேழன்றெய்த வொருவில்லவலவாவோபுணரேய்நின்றமரமிரண்டின்நடுவேபோன முதல்வாவோ) (கோலாதாற்றேனுனபாதம் காணவென்று நுண்ணுணர்வில் நீலார் கண்டத்தம்மானும நிறைநான்முகனுமிந்திரனும்) (செந்தாமரைக்கட்செங்கனிவாய் நாற்றோளமுதா வெனதுயிரே) (முனியேநான்முகனே முக்கண்ணப்பா,) * (சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில்பெரும்பாழேயோ சூழ்ந்ததனில் பெரிய பரநன்மலர்ச்சோதியோ ! சூழ்ந்ததனில் பெரியசுடர் ஞானவின்பமேயோ) என்று தலைக்கட்டுகையாலே, (உயர்வற) என்று தொடங்கி, (உயர்ந்தே) என்னுமளவும்-ஆதிமத்யாவஸாநங்களிலே ஒருபடிப்பட்ட கல்யாணகுணங்களால் ஏற்பட்ட.

(பா) பகவத்ஸ்வரூபரூபகுண விபூதிகளை உள்ளபடி விசத்தமமாவநுபவிக்கவநுபவிக்க அது உள்ளடங்காமே, பக்திபலாத்காரத்தாலே வந்ததானாலும், (పాదబద్ధాక్షరసమస్తార్థలయసమన్వితః) (பாதபத்தோக்ஷரஸமஸ்தநதர்லயஸமந்விதः) என்னுமாப்போலே நிர்ஹேதுகபகவத் விஷயீகாரத்தாலே ஸாவலக்ஷண்யோபேதமாய, (கவியமுதம்) என்றும், (தொண்டர்க்கமுதுண்ணச்சொன்மாலைகள் சொன்னேன) என்றுமதாமேச்லாகிக்குமபடியான திருவாய்மொழியிலே, (மன்னு) ஸாவத்ராநிப்சலராயிருநதுளள (மாறன) (அரங்காவண் புகழ்மேலான்றதமிழ்மறைகளாயிரமும் ஈனறமுதலதாய் சடகோபன் * குழல்மலியசசொன்னவோராயிரத்துள்.

(மாறன) இதுவாயத்து ப்ரதமோபாதாநமான திருநாமம். (వినాశాయచదుష్కృతామ్) (விநாஸாயசதுஷ்கர்தாம்) என்னுமாப்போலே பாஹ்யகுதர்ஷ்டிகளை சிக்ஷித்து அவர்களுடைய ஸம்ஸாரநாசகரரானவர். (மாறன) அஜ்ஞாநத்துக்குமாரகர். அன்றிகேகே, (సాక్షాన్మన్మథమన్మథః) (ஸாக்ஷான்மந்மதமந்மதः) என்கிறவனுமபிச்சேறி ஊமத்தங்காய தின்றவனைப்போலே - * மின்னிடைமடவாரில் வ்யாமுக்த்தனுமபடி பண்ணவல்லதாய் பெண்பிள்ளைத்தனத்தையும, * ஊனிலவாழுயிரிலே ஒரு நீராகக்கலந்து வ்யாமுக்தனும்படி பண்ணவல்லஜ்ஞாநாதிகபத்தையுமுடையவராகையாலே (மாறன) எனனவுமாம. இப்படிப்பட்ட ஆழ்வாருடைய. (அடி) ஆழ்வாரபர்யந்தமல்ல இவர் தம்முடையஸ்வாமித்வாத்யவஸயம. ஆக தமக்கு நிருபாதிகஸ்வாமியானவனென்னுதல். தமமைவசீகரிக்கைககு மூலமானவனென்னுதல். இப்படிப்பட்ட திருவடிகளை. (பணிந்து) ஆச்ரயித்து. (శ్రీమత్తదంఘ్రియుగళం ప్రణమామి మూర్ధ్నా) (ஸ்ரீமத்ததங்க்ரியுகளம் ப்ரணமாமிமூர்த்நா) என்று ஆளவந்தாரருளிச்செய்தது. அடியிலே யிப்படி யருளிச்செய்கையாலே இப்ப்ரபந்தம் சரமபர்வநிஷ்டர் விஷயமென்று தோற்றுகிறது.

(உய்ந்தவன்) உஜ்ஜீவித்தவன். இவருக்கு உஜ்ஜீவநம் அந்ந பாநாதிகளாலேயன்றுகாணும், ஆழ்வார் தம்முடையதிருவடிகளை இவருக்குப்படியாகவிட்டுப்போந்தாரிறே. அவ்வாழ்வார் திருவடிகளைப்பணிந்தபின்பு இவர் அவைதன்னையேயநுபவித்துப்போந்தார். ஆழ்வார்க்கும் இவர்க்கும் காலவிப்ரகர்ஷமானாலும், முதலிலே ஆழ்வார்நாதமுனிகளுக்கு உபதேசம் பண்ணும்போது இவரைத்யாநம் பண்ணி, (యస్స్వాపకాలే కరుణాకరస్సన్ భవిష్యదాచార్యవరస్వరూపమ్। సందర్శయామాస మహానుభావం తం కారిసూనుం శరణం ప్రపద్యే) (யஸ்ஸ்வாபகாலே கருணாகரஸ்ஸந் பவிஷ்யதாசார்யவரஸ்வரூபம் - ஸந்தர்சயாமாஸ மஹாநுபாவம் தம் காரிஸூநும் சரணம் ப்ரபத்யே) என்கிறபடியே இவருடைய பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தை ஸ்வப்நமுகேந நாதமுநிகளுக்குக் காட்டிக்கொடுத்தபடியை யபிமாநித்து, பரகதஸ்வீகாரத்தாலே அவர்க்கு ஆசார்யரானகையாலே இவரும் அவ்வாழ்வார் திருவடிகளைப்பற்றி, அவர், (உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையுமெல்லாம் கண்ணனெம்பெருமான்) என்று அத்யவஸித்த பகவத்பரபாவத்தை ஸ்ரீபாஷ்யமுகேந ப்ரகாசிப்பித்து, வேங்கடாசல யாதவாசலஸ்தலங்களை, (శేషోవా సైన్యనాథోవా శ్రీపతిర్వేతి సాత్త్వికైః। వితర్క్యాయ మహాప్రాజ్ఞైః మునిస్సోయం ప్రసీదతు) (க்ருமாஷ்டிகுஹநாமுகே நிபததஃபரப்ரஹ்மண:| கராக்ரஹவிசக்ஷணோ ஜயதி லக்ஷ்மணோயம் முநி:) என்கிறபடியே நிர்வஹித்து ஸகலதிவ்யதேசங்களையும் திருத்தி இதுவே உஜ்ஜீவநமாகவிருக்கிறவரென்றபடி.

(பல்கலையோர்) ஸகலசாஸ்த்ரபாரீணரான கூரேச குருகேச கோவிந்த தாசரதி முதலான முதலிகளும் ப்ரத்யவஸ்தாநம்பண்ணி ப்ரஸங்கித்தபின்பு எம்பெருமானார் தம்முடைய விஷயீகாரத்தாலே தத்வஹிதபுருஷார்த்த யாதாத்ம்யஜ்ஞாநத்தைப்பெற்ற யாதவப்ரகாச யஜ்ஞமூர்த்யாதிகளும் (தாம்மன்ன) யதாவஸ்திதஜ்ஞாநத்தாலே ஸுப்ரதிஷ்டிதராம்படி. மன்னுதல்-பொருந்தமும், நிலைப்பாடும் (வந்த) பரமபதத்தினின்றும் ஸர்வேச்வரனுடைய நியமநத்தாலே யெழுந்தருளின. (இராமாநுசன்) இவர் சக்ரவர்த்தித் திருமகனை அநுஸரித்து ஜநித்தார்காணும்; அவன், (అభయం సర్వభూతేభ్యో దదామ్యేతద్ వ్రతం మమ) (அபயம்ஸர்வபூதேப்யோ ததாம்யேதத்வ்ரதம்மம) என்று ஸர்வருக்கும் அபயப்ரதாநம்பண்ணினாற்போலே இவரும் மோக்ஷோபாயமான மந்த்ரத்தை ப்ரதாநம்பண்ணினாரிறே. இப்படிப்பட்ட வெம்பெருமானாருடைய. (சரணாரவிந்தம்) அரவிந்தமென்கிற, மந்மதபாணம் போலேதம்மை மோஹிப்பித்தவையாகையாலே சரணங்களுக்கு அரவிந்தத்தைப் போலியாகச்சொல்லுகிறார். ஆச்ரிதருக்கு பாவநத்வ போக்யதைகளாலே ஏகரூபமாயிருக்கையாலே ஏகவசநப்ரயோகம் பண்ணுகிறார். (மன்னி) ஆச்ரயித்து. நிச்சலமாகத்ர்டாத்யவஸாயத்தைப் பண்ணி.

(நாம்வாழ) நானொருத்தனுமே ஆச்ரயிக்க என்னுடைய ஸம்பந்திஸம்பந்திகளெல்லாம,(ప్రయతపాణిశ్శరణమహంప్రపద్యే)(స్వస్తిచిన్నాథ్యే వ్యభయన్నో అస్తు) (భుక్త్వైభోగానవిదితన్యపస్సేరకస్స్యార్భకాదిః) என்றும்,(ఋణంభవత్సత్వం)(సాచత్వద్యైవకమలారమణేర్థితాయత్తే మస్స ఏవహియతీన్ద్రభవచ్ఛృతానామ్) என்றும் சொல்லுகிறபடியே உஜ்ஜீவிக்கும்படியாக, (సకృదేవప్రపన్నాయ తవాస్మీతిచయాచతే। అభయంసర్వభూతేభ్యో దదామ్యేతద్వ్రతంమమ) என்று அவன் சொன்னானிறே (நாமமன்னி) (రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే) என்றபடி. (வாழ) (ஸ்ரீமதேராமாநுஜாயநம:) என்றபடி. (நெஞ்சே) ஒருமஹாநிதிலாபத்தால் அந்தரங்கராயிருப்பாரகுச்சொல்லுவர் லௌகிகர், அப்படியே தமக்கு அந்தரங்கமான மநஸ்ஸை ஸேவித்துத் தாம் பெற்ற பேற்றைச் சொல்லுவதாக ஸம்போதிக்கிறார்.

(சொல்லுவோமவன்நாமங்களே) நாமிருவருங்கூடி அவர் திருநாமங்களைச் சொல்லுவோம். * వాచాధర్మమవాప్నుహి - வாசாதர்மமவாப்நுஹி என்கிறார். ஒருக்திமாத்ரத்தாலே ப்ராப்யப்ராபகங்களிரண்டுமதர்மபூதமான சரணாரவிந்தத்திலே அத்திருநாமந்தானே நம்மைசசேர்க்கும. ரஸ்யமான பதார்த்தம் லபித்தால், (ఏకస్స్వాదు నభుఞ్జీత) போதயந்தஃபரஸ்பரம்) என்கிறபடியே அந்யோந்யம்ரஸித்துக்கொண்டு அநுபவிக்கக் கடவோமென்றபடி. (அவன்நாமங்களே) (தேவுமற்றறியேன்) என்று - அநந்யபரராகக்கொண்டு அவருடையதிருநாமங்களைச் சொல்லுவோம. த்ரிவிதகரணங்களால் இல்லையாகிலும் * நாமஸங்கீர்த்தநாம்ர்தமே யமையும். (గురోర్నామసదాజపేత్) (குரோர்நாமஸதாஜபேத்) என்னக்கடவதிறே. (நெஞ்சேசொல்லுவோம) என்றது - தமக்கு உபகரித்த உபகாரத்தை யநுஸந்தித்து சேதநஸமாதியாகச்சொல்லுகிறார். (నచేద్రామానుజేత్యేషాచతురాచతురక్షరీ। కామవస్థాంప్రపద్యన్తే జన్తవోహన్తమాదృశాః) (நசேத்ராமாநுஜேத்யேஷாசதுராசதுரக்ஷரீ। காமவஸ்தாம்ப்ரபத்யந்தே ஜந்தவோஹந்தமாத்ருசா:) என்றானிறே ஆழ்வான். (வேதமொருநான்கினுட்பொதிந்தமெய்ப்பொருளும் கோதில்மநுமுதல்கூறுவதும், தீதில், சரணாகதிதந்ததன்னிறைவன்றாளே, அரணாகுமென்னுமது) என்று அருளாளப் பெருமாளெம்பெருமானார் அருளிச்செய்தாரிறே. (பூமகள்கோன் தென்னரங்கன் பூங்கழற்குப்பாதுகமாய்த், தாமகிழுஞ்செல்வச்சடகோபர், தேமலர்த்தாட்கு, ஏய்ந்தினிய பாதுகமாமெந்தை யிராமாநுசனை, வாய்ந்தெனது நெஞ்சமேவாழ்) என்றிறே ஜீயருமருளிச்செய்தது. (నగురోరపరస్తోత్రా) என்னக்கடவதிறே. ... ... ... ... ... (க)

---

அ.—இரண்டாம்பாட்டு. என்னுடையநெஞ்சானது எம்பெருமானாருடைய சீலகுணமொழியவேறொன்றை நினையாதபடியாய்த்து, இது எனக்கு ஸித்தித்தபெருவிரகு ஒன்றுமறிகிறிலேனென்கிறார்.

மூ.—கள்ளார்பொழில்தென்னரங்கன்கமலப்பதங்கணெஞ்சில்
கொள்ளாமனிசரைநீங்கிகுறையல்பிரானடிக்கீழ்
விள்ளாதவன்பனிராமாநுசன்மிக்கசீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சொன்றறியேனெனக்குற்றபேரியல்வே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கள் ஆர் | மதுமிக்க, | குறையல் | திருக்குறையலூரைத்திருவவதாரஸ்தலமாகவுடையராய், |
| பொழில் | பொழிலையுடைத்தாய், | பிரான் | திவ்யப்ரபந்த நிர்மாண முகத்தாலே லோகோபகாரகரான திருமங்கையாழ்வாருடைய, |
| தென | தர்சநீயமாயிருந்துள்ள, | அடிக்கீழ் | திருவடிகளின்கீழ், |
| அரங்கன் | கோயிலிலே கண்வளர்ந்தருளுகையாலே அததேசஸம்பந்தத்தை யிட்டுத்தம்மைநிரூபிக்கலாம்படியிருக்கிற பெரிய பெருமாளுடைய, | விள்ளாத | விட்டுநீங்காத, |
| கமலப்பதங்கள் | விகாஸாதிகளால் தாமரை போலே போக்யமான திருவடிகளை, | அன்பன் | ஸ்நேஹத்தையுடையராயிருந்துள்ள, |
| நெஞ்சில் | தங்கள் மநஸ்ஸிலே | இராமாநுசன் | எம்பெருமானாருடைய, |
| கொள்ளா | ஒருக்காலும் வையாத, | மிக்கசீலமல்லால் | நிரவதிகமான சீலகுணத்தையொழிய, |
| மனிசரை | சாஸ்த்ரவச்யமான ஜந்மத்திலே பிறந்துவைத்து நிர்ப்பாக்யரா யிருக்குமவர்களை, | எனநெஞ்சு | என்னுடைய நெஞ்சானது, |
| நீங்கி | விட்டகன்று, | ஒன்றுஉள்ளாது | வேறொன்றையும் சிந்திக்கிறதில்லை; |
| | | எனக்குஉற்ற பேரியல்வு | இது எனக்குவந்த பெரியவிரகு, |
| | | ஒன்றறியேன். | ஒன்றுமறிகிறிலேன். |

விள்ளுதல் நீங்குதல். இயல்வு-விரகு ... (உ)

அ.—இரண்டாம்பாட்டு. கீழ்ப்பாட்டில், (நெஞ்சே சொல்லுவோமவன் நாமங்களே) என்று-தம்முடைய மநஸ்ஸோடேகூடி உபதேசித்தவாறே மநஸ்ஸானது அவருடையசீலகுணத்திலேஆழங்கால்பட்டு, (அநந்யாஶ்சிந்தயந்தோமாம்) (அநந்யாஶ்சிந்தயந்தோமாம்) என்கிறபடியே அவர்திருவடிகளை அநுபவித்துக்கொண்டு தத்வ்யதிரிக்தமானவற்றை விரும்பாதேயிருந்தது,இதென்ன ஆச்சர்யமென்கிறார்.

வ்யா.—(கள்ளார்பொழில்) "மதுவிருந்தொழுகின மாமலரெல்லாம் - கொழுங்கொடிமுல்லையின் கொழுமலரணவிக் கூர்ந்தது, குணதிசைமாருதமிதுவோ, எழுந்தன மலரணைப்பள்ளிகொண்டன்னமீர்பனிநனைந்த தமிருஞ்சிறகுதறி - பைம்பொழில கமுகின் மடலிடைக் கீறிவண்பாளைகள்நாற வைகறைகூர்ந்ததுமாருதமிதுவோ) என்றும், (வான்றிகழுஞ்சோலைமதிளரங்கர்) என்றும், (పూగీకణ్ఠద్వయససరసస్నిగ్ధనీరోపకణ్ఠాం ఆవిర్మోదస్తిమితశకునానూదితబ్రహ్మఘోషామ్) (பூகீகண்டத்வயஸஸரஸஸ்நிக்த்த நீரோபகண்டாம் ஆவிர்மோதஸ்திமிதசகுநாநூதிதப்ரஹ்மகோஷாம்) என்றும் சொல்லுகிறபடியே மதுஸ்யந்தியான புஷ்பவிசேஷங்களாலே வ்யாப்தங்களான உத்யாநங்களாலே சூழப்பட்ட.

(தென்னரங்கன்) அதனாலே தர்சநீயமான திருவரங்கமே தனக்கு நிரூபகமாம்படி நித்யவாஸம்பண்ணுகிற ஸ்வாமியுடைய திருப்பதியென்றபடி. இவ்விடத்துக்கு இது முக்யமான திருநாமங்காணும். (கமலப்பதங்கள்) கமலப்பதமிதி தத்வாசகமாய-பாவநமானவென்னுதல்; ஸம்ஸாரதாபதப்தனுடைய ச்ரமஹரமானவென்னுதல் பாதக்கமலம் என்றே முந்துறமுன்னம் (கமலம்) என்றது - ஸர்வேச்வரன திருவடிகளை ஸேவிக்கும்போது பாவநத்வாதிகளுக்கு முன்னே போக்யதையைக்கண்டு முற்றூட்டாக வநுபவித்தவராகையாலே. (நெஞ்சிலகொள்ளாமனிசரை) (విచిత్రా దేహసమ్పత్తిరీశ్వరాయ నివేదితుమ్। పూర్వమేవ కృతా బ్రహ్మన్ హస్తపాదాదిసంయుతా) (விசித்ராதேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும் - பூர்வமேவ க்ருதாப்ரஹ்மன் ஹஸ்தபாதாதிஸம்யுதா) ([illegible] ధర్మ [illegible] ధారమ్। [illegible]) என்கிறபடியே அலப்யலாபமாக பகவச்சரண கமலபரிசரணத்துக்கு இட்டுப் பிறந்த மநுஷ்யதேஹத்தைப்பெற்றும் திருவடிகளை நெஞ்சிலேகொள்ளாதே யிருக்கிற கர்ப்பநிர்ப்பாக்யர் கோஷ்டியிலநின்றும், (நீங்கி) அகன்று. ([illegible] త్రివేదీమ్) என்று ஸர்வரும் சலாகிக்கும்படி பாஹ்யகுத்ருஷ்டிகளை பராஜிதமாகப் பண்ணுவித்து

(குறையல்பிரான்) திருக்குறையலூரிலே யவதரித்து, திவ்யப்ரபந்தநிர்மாணத்தாலும் திருவத்யயநத்துக்கு ஏகாதசியிலே திருநாள் நடப்பித்தபடியாலும், அவ்விடத்திலே பெருமாளுக்கு ரங்கத திருமதிளை நிர்மாணம்பண்ணிவைத்தபடியாலும், ருத்ரபக்ஷபாதிகளான குத்ருஷ்டிகளோடே தர்க்கித்து அவர்களைஜயித்து அவர்களாலே பழிக்கப்பட்ட திவ்யதேசங்களை நிர்வஹித்தபடியாலும், இப்படிகளாலே உபகாரகரான திருமங்கையாழ்வாருடைய.

இவ்விடத்திலே இன்னமொருயோஜனையுண்டு;-(குறையல்பிரான்) (குறைவொன்றுமில்லாத கோவிந்தா) என்கிறபடியே ஹேயப்ரத்யநீகனானகோவிந்தன். கோவர்த்தநோத்தரணம் பண்ணினபோது இந்த்ரன்கோவிந்தாபிஷேகம்பண்ணினவாறேகோகோபீஜநங்களை ரக்ஷித்த உபகாரகன். அந்த அவதாரத்திலே, பூதநா சகட யமளார்ஜுநாரிஷ்ட ப்ரலம்ப தேநுக காளியகேசிகுவலயாபீட சாணூர கௌஸல கம்ஸாதிகளை நிரஸித்து ஸ்வாச்ரிதர்களான பாண்டவர்களுக்கு தௌத்யஸாரத்யங்களைப்பண்ணி, (న త్వేవాహం జాతు నాసమ్) என்றுதொடங்கி(మాశుచః)என்னுமளவும் தத்வோபதேசம்பண்ணியும், இப்படி நிகிலமநுஜமநோநயநஹாரி திவ்யசேஷ்டிதங்களைப் பண்ணின உபகாரகன். இதில சரமச்லோகத்தை உபதேசிக்கை உபகாரத்திலே ப்ரதாநம. இப்படி ஒரு அர்த்தவிசேஷம தோன்றினாலும் நம்மாசார்யர்கள திருமங்கைமன்னன்விஷயமாக அருளிச்செய்கையாலே பேசிறறே பேசுகையே அவர்களுக்கேற்றமென்று முதல்சொன்னபொருளே ஸங்கதமாகக்கடவது. (அடிக்கீழ்) திருமங்கையாழ்வாருடைய திருவடிகளின்கீழே.

(விள்ளாதவன்பன்) இவ்வாழ்வார் ப்ரதமபர்வ நிஷ்டராகையாலே, * அணிபொழில் திருவரங்கத்தம்மானை ப்ரார்த்தித்துக்கொண்டிறேயிருப்பர்; இவ்வெம்பெருமானார் சரம பர்வததிலே ஊற்றமுடையவராகையாலே அவ்வாழ்வாருடைய திருவடிகளின் கீழ் ஒருக்காலும்விடாதே ஸக்தமான பக்தியை யுடையராயிருப்பர். விள்ளுதல்-நீங்குதல். அன்பு-பக்தி. (இராமாநுசன்)பூர்வாவதாரத்திலே ராமாநுவர்த்தநமபண்ணின வாஸனை இப்போதும் அநுவர்த்திகையாலே இதுக்கு சரமபர்வமானவிதிலே ஈடுபட்டார்காணும். (மிக்கசீலமல்லால்)தாம் மஹாநுபாவராயிருந்துவைத்தும் என்போலாம மந்தமதிகளோடே புரையறக்கலந்து பரிமாறின சீலகுணம் ஒன்றிலுமே ஈடுபட்டு, அதொழிய வேறொன்றிலும் போகமாட்டாது. உள்ளுதல்-சிந்திததல். (என்னெஞ்சு) என்மநஸ்ஸு. என்னாலே உபதேசிக்கப்பட்ட நெஞ்சு (నపుంసకమితిజ్ఞాత్వా తాంప్రతి ప్రేషితంమనః। తత్రైతత్రైవరమతే) என்னும்படியாய்த்து

(ஒன்றறியேனெனக்குற்றபேரியல்வே)என்னவாச்சர்யம்,இப்படி ப்ரவணமாகைக்குவிரகொன்றுமறிகிலேன்.(எனக்கு) (జన్మాన్తర సహస్రేషు తపోజ్ఞానసమాధిభిః। నరాణాం క్షీణపాపానామ్) என்றுப்போலே பஹுஜந்மங்கள்தன்னில்தபோஜ்ஞாநஸமாதிகளைப் பண்ணவேண்டியிருக்க, அங்ஙனன்றியே, (சொல்லுவோமவன் நாமங்களே) என்று அத்யவஸாய மாத்ரம் பண்ணினபடி. எனக்கு, உற்ற-ஸித்தித்த. (பேரியல்வே)[నార్హన్తిశరణస్థస్య కలాంకోటితమీమపి] ஸமஸ்தோபாயங்களைக்காட்டிலும பெரியதாய் விலக்ஷணமான உபாயவிசேஷம்.

அ.—மூன்றாம்பாட்டு. ப்ராக்ருதரோட்டை ஸம்பந்தத்தை நீக்கி எம்பெருமானார திருவடிகளில் ஸம்பந்தமுடையவர்கள் திருவடிகளில் ஸம்பந்தமுடையவர்கள் திருவடிகளிலே என்னைசசேர்த்தவுபகாரத்துக்கு நெஞ்சே! உன்னை வணங்கினேனென்கிறார்.

மூ.—பேரியல்நெஞ்சேயடிபணிந்தேனுன்னைப்பேய்ப்பிறவிப்
பூரியரோடுள்ளசுற்றமபுலர்த்திப்பொருவருஞ்சீர்
ஆரியன்செம்மையிராமாநுசமுனிக்கன்புசெய்யுஞ்
சீரியபேறுடையாரடிக்கீழென்னைச்சேர்த்ததற்கே. (௩)

| பதம். | உரை. |
| --- | --- |
| பேர்இயல் நெஞ்சே | பெரியஸ்வபாவத்தையுடைய மநஸ்ஸே, |
| பேய்ப்பிறவி | ஹேயஜந்மாக்களாய், |
| பூரியரோடுள்ள | அஹங்காராதி தோஷதூஷிதரானவர்களோடுண்டான, |
| சுற்றம்புலர்த்தி | ஸம்பந்தத்தைநீக்கி, |
| பொருவருமசீர் | உபமாந ரஹிதமான குணங்களையுடையராய், |
| ஆரியன் | ஸமதிகதஸமஸ்தசாஸ்த்ரராய், |
| செம்மை | ஆச்ரிதருடையகௌடில்யம்பார்த்துக் கைவிடாதே அவர்களுக்கிடாகத்தம்மையமைத்துப் பரிமாறும் ஆர்ஜவ குணயுக்தரான, |
| இராமாநுசமுனிக்கு | எமபெருமானார்விஷயத்திலே, |
| அனபுசெயயும் | ப்ரேமத்தைப் பண்ணுகையாகிற, |
| சீரியபேறுடையார | பரம புருஷார்த்தத்தை யுடையவர்களுடைய, |
| அடிக்கீழ் | திருவடிகளின்கீழே, |
| என்னைச் சேர்த்ததற்கு | என்னைச் சேர்த்த இநதமஹோபகாரத்துககு, |
| உன்னை அடி பணிந்தேன் | உன்னை வணங்கினேன. |

பேய்ப்பிறவி தீதானபிறவி. பூரியர் - பொல்லாதவர்கள். பூரி - பொல்லாங்கு. புலத்தல் - நீககல். ... ... ... ... (௩)

---

(ஒன்றறியேன) எததாலே இந்தச்சொற்சோத்திலபிததது, நான் ஒன்றுமறிகிறிலேன். * முந்துற்றநெஞ்சே! நீயறிந்தாயாகில் சொல்லிக்காணு யென்னை; (నాహంపురుష కారేణ నచాప్యన్యేన హేతునా। కేవలం స్వేచ్ఛయైవాహం ప్రేక్షే కఞ్చిత్కదాచన) என்னுமாப்போலே நிர்ஹேதுகமகாவிஷ்டித்தொன்றாயத்து. இயலவு—விரகு. ... (௨)

அ —மூன்றாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே தம்முடைய நெஞ்சானது எம்பெருமானாருடைய சீலகுணத்திலே ஈடுபடடமாத்ரமன்றிகே இப்படியநுபவிக்கஅநுபவிக்க அபிநிவேசம்கரைபுரண்டு எனனைக்கொண்டுபோய்த் ததீயருடைய திருவடிகளின்கீழே சேர்த்தது, இந்தமஹோபகாரத்துக்குத்தக்கஸமர்ப்பணம்தம்பக்கல் ஒன்றுமில்லையென்று * நெஞ்சினுருடையகாலிலேவிழுகிறார். ()

வ்யா.—(பேரியல்நெஞ்சே) பெரியஸ்வபாவத்தை யுடைய மநஸ்ஸே. முதலிலே எம்பெருமானாருடைய சிலகுணத்திலேயீடுபட்டு அதிலே அத்யபிநிவிஷ்டமாய் உன்னோட்டை ஸம்பந்தமே ஹேதுவாக என்னையும் ததீயபர்யந்தமாக அத்யவஸிப்பித்தஸ்வபாவத்தையுடையமநஸ்ஸேயென்கிறபடி. (பேய்ப்பிறவிப்பூரியரோடுள்ள சுற்றம்புலர்த்தி) அஸுரவர்க்கத்திலே ஜநித்து நிஹீநரான மூடரோடுண்டான ஸம்பந்தத்தை ஸவாஸநமாகப்போக்கி. (ఆసురీంయోనిమాపన్నాం మూఢాజన్మనిజన్మని। మామప్రాప్యైవకౌన్తేయ తతోయాన్త్యధమాంగతిమ్) என்றுசொல்லப்பட்ட நீசருடைய ஸம்பந்தத்தை, (అద్యప్రభృతి హేలోకాః యూయంయూయంవయంవయమ్) என்னும்படி பண்ணுவித்து. (கூழாட்பட்டு நின்றீர்களை யெங்கள் குழுவினில் புகுதலொட்டோம்) என்னும்படியே பண்ணுவித்ததென்கிறபடி. (பேய்ப்பிறவி) தீதானபிறவி. பூரியர்-பொல்லாதவர்கள். புலத்தல்-நீக்குதல்.

(பொருவருஞ்சீர்) (అచిన్త్యాద్భుతాక్లిష్టజ్ఞానవైరాగ్యరాశయే) என்கிறபடியே உபமாநரஹிதமாகையாலே ஏவம்பூதமென்று நிரூபித்துச்சொல்ல வரிதாயிருக்கிற கல்யாணகுணங்களையுடையராய். (ஆரியன்) ஸகலசாஸ்த்ரபாரீணராய். (యతిరాజోజగద్గురుః। తస్మిన్రామానుజార్యే గురురితిచపదంభాతినాన్యత్ర) என்கிறபடியே இவ்விபூதியிலே யிருந்துள்ள ஸகலசேதநருக்கும் திருவேங்கடமுடையானுக்கும் ஆசார்யராய். (தன்னாரியனுக்கு) என்று ஆர்யபதத்தை ஆசார்யபத ஸமாநார்த்தமாக ஜீயர்ப்ரயோகித்தருளினாரிறே. (செம்மை) தாம்ஸங்கல்பித்தபடியே அநுஷ்டித்தும் உபதேசித்தும் இப்படிகரணத்ரயஸாரூப்யதை யுடையரான. (ఆచినోతిహిశాస్త్రార్థానాచారేస్థాపయత్యపి। స్వయమాచరతేయస్తు సఆచార్యఇతీరితః) என்றிறே ஆசார்யலக்ஷண மிருக்கும்படி.

(இராமாநுசமுனிக்கு) (పుణ్యామ్భోజవికాసాయ పాపధ్వాన్తక్షయాయచ। శ్రీమానావిరభూద్భూమౌ రామానుజదివాకరః) என்னும்படியான தம்முடைய அவதாரப்ரயோஜநத்திலே எப்போதும் மநநம்பண்ணிக்கொண்டிருக்கிற எம்பெருமானார்விஷயத்திலே. (அன்புசெய்யுஞ்சீரியபேறுடையார்) அத்யபிநிவிஷ்ட சித்தராய் அதுதானே விலக்ஷணமென்று அத்யவஸித்திருக்கும் ஆழ்வான்முதலான ததீயருடைய. (அடிக்கீழ்) திருவடிகளின்கீழே. (என்னைச்சேர்த்ததற்கே) என்னுடையசிரஸ்ஸிலே அத்திருவடிகள் பூஷணமாம்படி பூர்வகாலத்திலே சரமபர்வத்தினுடைய ப்ரபாவத்தை யறியாதேயிருக்கிறஎன்னைஅமைத்துவைத்ததற்கே. தனக்கு நான் உபதேசிக்கவேண்டியிருக்கத தானே யெனக்கு புருஷகாரமாய் என்னைக்கொண்டுபோய் ததீயருடைய ஸ்ரீபாதத்திலே சேர்த்ததற்கு.

இந்தமஹோபகாரத்துக்கு நான் எத்தைப்ப்ரத்யுபகாரமாகப் பண்ணுவது என்று ஆராய்ந்து பார்த்தால், (మమనాథయదస్తి యోస్మ్యహం సకలం తద్ధి తవైవ మాధవ। నియతస్వమితి ప్రబుద్ధధీరథవా కిన్ను సమర్పయామి తే) என்றிருக்கச் செய்தே, (బ్రహ్మవిద్యాప్రదానస్య దేవైరపి న శక్యతే। ప్రతిప్రదానమథవా గద్యాచ్ఛక్తి తదాత్) என்றும், (ఏష సర్వస్వభూతో మే పరిష్వఙ్గో హనూమతః) என்றும் சொல்லுகிற படியிலே, (அடிபணிந்தேனுன்னை) உன்னுடைய திருவடிகளிலே ஆச்ரயித்தேனை; உனக்கொரு நமஸ்காரம் பண்ணுகிறேனென்றபடி. (వాచా యతీన్ద్ర మనసా వపుషా చ యుష్మత్పాదారవిన్దయుగళం భజతాం గురూణామ్। కూరాధినాథకురుకేశముఖాద్యపుంసాం పాదానుచిన్తనపరస్సతతం భవేయమ్) என்று - பெருப்பெருக ஜீயர் ப்ராத்தித்தருளின ததீயபாரவச்யத்தைக் காணும் இவருக்கு இவருடைய மநஸ்ஸு முதலிலே யுண்டாக்கிற்று. ... ... ... (௩)

---

அ.—நாலாம்பாட்டு. இப்படித் திருவுள்ளத்தைக் கொண்டாடினவாறே இன்னமும் அநுவாஸனையாலே நெஞ்சுதான் நழுவ நிற்குமாகிலும் உம்முடைய நிஷ்டைக்கு ஹாநிவாராதோவென்ன; எம்பெருமானார் தாமே நிர்ஹேதுகமாக அங்கீகரிக்கப்பெற்ற வெனக்கு ஒரு ஹாநியும் வாராதென்கிறார்.

மூ.—என்னைப் புவியிலொருபொருளாக்கி மருள்சுரந்த
முன்னைப் பழவினை வேரறுத் தூழி முதல்வனையே
பன்னப் பணித்த இராமாநுசன் பரன் பாதமுமென்
சென்னித் தரிக்கவைத்தா னெனக்கேது சிதைவில்லையே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஊழி | காலோபலக்ஷிதஸகல பதார்த்தங்களுக்கும், | மருள்சுரந்த | அவித்யா ஸம்வர்த்தகமாய், |
| முதல்வனையே | காரணபூதனான ஸர்வேசுவரனையே, | முன்னைப் | அநாதியாகையாலே |
| பன்ன | ஸாவரும் விவேகித்தநுஸந்திக்கும்படி, | பழவினை | மிகவும் பழையதாயப் போருகிற கர்மங்களை, |
| பணித்த | ஸ்ரீபாஷ்யமுகேந அருளிச்செய்த, | வேரறுத்து | ஸவாஸநமாகப் போக்கி, |
| பரன் | ஸர்வோத்கர்ஷ்டரான, | பாதமும் | தம்முடைய திருவடிகளையும், |
| இராமாநுசன் | எம்பெருமானார், | என்சென்னித்தரிக்க வைத்தான் | என் தலையிலே தரிக்கும்படி வைத்தருளினார்; ஆனபின்பு, |
| என்னை | அவஸ்துவான வென்னை, | | |
| புவியில் | லோகத்திலே, | எனக்கு ஏதும் சிதைவில்லை | எனக்கு ஒரு பரிஹாநியுமில்லை. |
| ஒருபொருளாக்கி | ஒரு வஸ்துவாம்படி பண்ணி, | | |

(ச)

பதம். உரை

அன்றிக்கே, (பரன்பாதமுமென்சென்னித் தரிக்கவைத்தான்) என்கிறவித்தைமேலே கூட்டி-ஸர்வஸ்மாத்பரனான ஸர்வேச்வரனுடைய திருவடிகளையும் என்

பதம். உரை.

சென்னிதரிக்கவைத்தானென்னவுமாம். (பரன்பாதமென்சென்னித்தரிக்கவைத்தான்) என்றும் பாடமாம். பன்னுதல் - ஆராய்தல். சிதைவு-அழிவு, ... ... (ச)

அ.— நாலாம்பாட்டு. இப்படி மூன்றுபாட்டளவும் தம்முடைய அபிநிவேசாதிசயத்தைச் சொல்லிறுல் இதுஸ்வகதமாக வந்தது, அத்யந்தபாரதந்த்ர்யமான ஸ்வரூபத்துக்குச் சேருமோ, பரகதமாகவந்ததேயாகிலும் அதுக்குப்ரச்யுதியில்லையோவென்ன அருளிச்செய்கிறார்.

வ்யா.—(என்னை) இதஃபூர்வகாலத்திலே (నసమేయమ్) என்றிருந்தவென்னை. (అసన్నేవ స భవతి, అసద్బ్రహ్మేతి వేద చేత్) என்கிறபடியே ஒருபொருளல்லாத வென்னையென்றபடி. (புவியில்) * இருள்தருமாஞாலத்திலே. (ஒருபொருளாக்கி) (అస్తి బ్రహ్మేతి చేద్వేద, సన్తమేనం తతో విదుః) என்கிறபடியே ஒருவஸ்துவாகப்பண்ணி. ப்ரஹ்மவித்துக்களிலே அத்விதீயனாகப்பண்ணி யென்றபடி. (மருள்சுரந்தமுன்னைப்பழவினை) (సంసారసాగరం ఘోరమనన్తక్లేశభాజనమ్) என்றும், (అవివేకఘనాన్ధదిఙ్ముఖే బహుధా సన్తతదుఃఖవర్షిణి। భగవన్భవదుర్దినే) என்றும், (సంసారమరుకాన్తారే దుర్వ్యాధివ్యాఘ్రభీషణే। విషయక్షుద్రగుల్మాఢ్యే తృషాపాదపశాలినే॥ పుత్రదారగృహక్షేత్రమృగతృష్ణామ్బుపుష్కలే। కృత్యాకృత్యవివేకాన్ధం పరిభ్రాన్తమితస్తతః॥ అజస్రంజాతతృష్ణార్తమవసన్నాఙ్గమక్షమమ్। క్షీణశక్తిబలారోగ్యం కేవలం క్లేశసంశ్రయమ్॥ సన్తప్తం వివిధైర్దుఃఖైర్దుర్వచైరేవమాదిభిః) என்றும, (అనాదికాలప్రవృత్తాఽకృత్యకరణ కృత్యాఽకరణ భగవదపచారభాగవతాపచారాసహ్యాపచారరూప నానావిధానన్తాపచారాన్) என்றும சொல்லுகிறபடியே அநாத்யவித்யாகர்ம வாஸநாருசி ப்ரக்ருதி ஸம்பந்தாதமகமாயிருந்துள்ள புண்யபாபரூபமான கர்மங்களை. (வேரறுத்து) வேர்கிடந்தால் திரியட்டும் அங்குரித்து வளர்ந்துவருமென்று ஸமூலோந்மூலநமாகச் சேதித்து.

(ஊழிமுதல்வனையே) காலோபலக்ஷிதமான ஸர்வகார்யவர்க்கத்துக்கும்ப்ரதாநகாரணபூதனான ஸர்வேச்வரனை. (సకారణం కారణాధిపాధిపః) என்றதிறேச்ருதி. (మామేకం శరణం వ్రజ। సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి) என்றும், (புறம்புண்டான பற்றுக்களையடைய வாஸனையோடே விடுகையும், எம்பெருமானையே தஞ்சமென்று பற்றுகையும்) என்றும் சொல்லுகிறபடியே இச்சேதநருடைய ப்ராப்திப்ரதிபந்தகங்களெல்லாவற்றையும் விடுவித்து, (కారణంతు ధ్యేయః) என்கிறவனை. (முதல்வனையே) என்கிற ஏவகாரத்தாலே - (మామేకం శరణం వ్రజ) (మామేవ యే ప్రపద్యన్తే) (తమేవ చాద్యం పురుషం ప్రపద్యే) (మామేకమేవ శరణమాత్మానం సర్వదేహినామ్। యాహి సర్వాత్మభావేన) என்கிறபடியே அந்யயோகவ்யவச்சேதம்பண்ணினபடி.

(பன்னப்பணித்த) ஸர்வரும் விரும்பி விவேகித்தநுபவிக்கும்படி ஸ்ரீபாஷ்ய கீதாபாஷ்யமுகேந அருளிச்செய்த ஸர்வோத்கர்ஷடரான. பன்னுதல் - விவேகித்தல். (இராமாநுசன்) எம்பெருமானார். (సదాచార్యవానులోమన్త్రరత్నః) என்று த்வயோபநிஷத்திலும், (యస్మాత్తదుపదేష్టాసౌతస్మాద్గురుతరోగురుః) என்று மஹாபாரதத்திலும், (గురుముఖాచ్ఛ్రీశంప్రపద్యాత్మవాన్) என்று வரதாசார்யராலும், (దత్తేగ్ధీనిజమపిపదందేశికాదేశికాజ్ఞే) என்று வேதாந்தாசார்யராலும், (నారాయణోఽపివికృతిం యాతిగురోఃప్రచ్యుతస్యదుర్బుద్ధేః। కమలంజలాదపేతం శోషయతిరవిర్నపోషయతి) என்று வரதாசார்யராலும், (భగవత్ప్రపత్తిసంసాధ్యంగురువన్దనపూర్వకమ్) என்று அபியுக்தோக்தியாலும அந்வயவ்யதிரேகங்களாலே சொன்னகட்டளையாலே, தம்மை ஸகலஜகத்காரணபூதனான எம்பெருமான் திருவடிகளிலே ஆச்ரயிப்பித்த வெம்பெருமானார்.

(பரன்பாதமுமென் சென்னித்தரிக்க) ஸர்வோத்கர்ஷடரான வெம்பெருமானார் என்னுடைய சிரஸ்ஸிலே தரிக்கும்படி தம்முடைய ஸ்ரீபாதத்தை, (గురురేవపరంబ్రహ్మ) என்று இவ்விஷயத்திலே பரத்வப்ரதிபத்தி பண்ணினவராகையாலே (பரன்பாதம்) என்கிறார். அன்றிக்கே, (பரன்பாதமுமென்சென்னித்தரிக்க) ஸர்வஸ்மாத்பரனுடைய ஸ்ரீபாதத்தை நான் சிரஸ்ஸாலே தரிக்கும்படியென்னவுமாம். (வைத்தான்) நிர்ஹேதுகமாக பரகதஸ்வீகாரமாய்த்தானே வைத்தான். இப்படிஸ்வரூபாநுரூபமானபேற்றைநான் பெறும்படி உபகரித்தானென்றபடி. (எம்மாவீட்டுத்திறமுஞ்செப்பம் நின், செம்மா பாதபற்புத்தலைசேர்த்தொல்லை, கைம்மா துன்பங் கடிந்தபிரானே, அம்மாவடியேன் வேண்டுவதீதே) என்று *மயர்வற மதிநலமருளப்பெற்ற நம்மாழ்வாரும்பரதமபாவத்திலே அருளிச்செய்தாரிறே.

இப்படியானபின்பு (எனக்கேதும் சிதைவில்லையே) (గురుణాయోఽభిమన్యేత) என்கிறபடியே பரகதஸ்வீகாரபாத்ரபூதனான வெனக்கு ஏதேனுமொருஹாநியுண்டோ. சிதைவு - அழிவு. (యదాహ్యేవైషఏతస్మిన్ నదృశ్యేనాత్మ్యేనిరుక్తేఽనిలయనేఽభయంప్రతిష్ఠాంవిన్దతే। అథసోఽభయంగతో భవతి) (ఏతంహవావనతపతి, కిమహంసాధునాకరవమ్, కిమహంపాపమకరవమితి) என்று வேதபுருஷன் சொன்னானிறே. (சிதைவில்லையே) ஆகையாலே எனக்கொருகுறையுமில்லையெனகிறார். இவர் அடியேபிடித்து பாட்டுக்கள்தோறும், (சரணாரவிந்தம்) என்றும், (கமலப்பதங்கள்) என்றும், (பாதம், அடி) என்றும் இடைவிடாதே வாய்விட்டுப் புலம்புகிறார். மோருள்ளதனையும்சோறேயோ, ஆகிலும்இவர் தம்முடைய காதலிருக்கும்படி ஒருக்காற்சொன்னத்தை ஒன்பதின்கால்சொல்லிக்கொண்டு போந்தாரென்கை. .. ... (ச)

அ.—அஞ்சாம்பாட்டு. இப்படி எம்பெருமானுருடைய விஷயீகாரதார்ட்யத்தை யருளிசசெய்த வநந்தரம் அவன் திருநாமங்களைச் சொல்லுவோமென்று முன்பு உபக்ரமித்தபடியே ஸ்தோத்ரம்பண்ணுவதாக உத்யோகித்தவர், அதில் நிரவத்யமாகச்செய்கையாலே லாக்ஷிணிகர்நிந்திப்பார்களேயென்று நிவர்த்யுந்முகராய், மீளவும் தாமேசித்தஸமாதாநம்பண்ணிக்கொண்டு ப்ரவர்த்தராகிறார.

மூ.—எனக்குற்றசெல்வமிராமாநுசனென்றிசையகில்லா
மனககுற்றமாந்தர்பழிககில்புகழ்வன்மன்னியசீர்
தனககுற்றவன்பரவனதிருநாமங்கள்சாற்றுமென்பா
வினக்குற்றங்காணகில்லார்பத்தியேய்ந்தவியல்விதென்றே.

| பதம. | உரை. |
|---|---|
| எனக்கு | நமக்கு, |
| உற்ற | ஸ்வரூபாநுரூபமான, |
| செல்வம் | ஸம்பத்து, |
| இராமாநுசனென்று | எமபெருமானுென்று. |
| இசையகில்லா | இசையாத, |
| மனக்குற்றம் | மநோதோஷத்தையுடைய, |
| மாந்தர் | மநுஷ்யர், |
| பழிககில் | நிநதித்தாகளாகில் |
| புகழ் | அதுஸ்துதியாமித்தனை; |
| அவன் | அவருடைய, |
| மனனியசீர் தனக்கு | நித்யஸித்த கல்யாணகுணங்களுககு, |
| உற்ற | தகுதியான, |
| அன்பர் | ப்ரேமத்தை யுடையவாகள், |
| பத்தியேய்ந்த | பக்தியோடே கூடின, |
| இயல்விதெனறு | ப்ரவ்ர்த்தியையுடையதென்று, |

| பதம். | உரை. |
|---|---|
| அவன் | அவருடைய, |
| திருநாமங்கள் | திருநாமங்களை, |
| சாற்றும் | சொல்லாநின்றுள்ள, |
| என | என்னுடைய, |
| பாஇனம் | சந்தஸ்ஸமூஹத்தினுடைய, |
| குற்றம் | குற்றத்தை, |
| காணகில்லார் | காணமாட்டார்கள். |

இயல்வு-ப்ரவ்ர்த்தி. இயல்விதென்றது-இயல்வையுடையதென்றபடி. "பத்தியேய்ந்த வியலிது" என்று பாடமானபோது-இது பக்தியோடே கூடினசொல்லென்று கொண்டு குற்றம்காணகில்லாரென்கை. பா-சந்தஸ்ஸு. இனம்.-ஸமூஹம். தாழிசை, துறைவிருத்தமென்று இனத்தின் வகையான கலித்துறையாகையாலே பாவினமெனறுராகவுமாம். (௫)

அ.—அஞசாம்பாட்டு. (எனக்குற்றசெல்வம்) கீழ்ப்பாட்டிலே - எம்பெருமானுர் தம்மை நிர்ஹேதுகமாக விஷயீகரித்தாரென்று கொண்டாடினுர்; இதில் - அந்தப்ரீதியாலே ப்ரேரிதராய்க் கொண்டு அவருடையகுணகீர்த்தநம்பண்ண உத்யோகித்து, குத்ர்ஷ்டிகளாயிருப்பார் இதில் ஏதேனுமொரு குற்றத்தை ஆரோபித்து தூஷித்தார்களாகில் அதுவேஎனக்கு பூஷணமென்றுசொல்லாநின்றுகொண்டு,இதின்ரஸமறிந்தவர்கள் குணமாகவிரும்புவர்களென்கிறார்.

வயா.—(எனக்குற்றசெல்வம்) (శరీరపాతనావధిప్రభుణి షేవణాపాద నాదకీర్తనధనఙ్ఞ యుప్రశమఙ్గనంఙ్గనమ్) என்கிறபடியே அப்ராப்தமாய் அதி தீக்ஷ்ணமாய் அநித்யமான தநம்போலன்றிக்கே, (ధనఞ్జయమవర్ధనంధనమ గూఢగోవర్ధనం సుసాధనమబాధనంసుమనసాంసమారాధనమ్) என்றும், (ధనఞ్జయస్య స్తనభూషణంధనమ్) என்றும, (ధనంమదీయంతవపాదపఙ్కజమ్) என்றும், (అస్తి మేహస్తిశైలాగ్రేఅస్తిపైతామహంధనమ్) என்றும் சொல்லப்பட்டவிஷயத்தி னுடைய சரமபர்வமாய் தத்யாதாத்ம்யபூதமாய், (గురురేవపరంధనమ్) என்று அவதாரணபரத்வப்ரதிபத்தி பூர்வகமாகவே நிஷ்கர்ஷிக்கப் பட்டதாய் எனக்கு ஸ்வரூபப்ராப்தமாயிருந்துள்ள ஸம்பத்து.

(இராமாநுசனென்று) (தந்தைநல்தாய் தாரம் தனையர்பெரு ஞ்செல்வமென்றனுக்கு நீயேயெதிராசா) என்கிறபடியே எம்பெரு மானாரே தந்தாமுக்கு மஹாநிதியென்று அத்யவஸித்து. (తృణీకృత విరిఞ్చాదినిరఙ్కుశవిభూతయః) என்கிறபடியே ததந்யஸம்பத்துக்களை யெல்லாம் அஸத்கல்பமாக தர்ணீகரித்து, நாம் அவருடைய குண கீர்த்தநமொன்றுமே பணைககடவோமென்று கணிசித்திருகக, (இசையகில்லா மனக்குற்றமாந்தர்)ஸம்மதிககமாட்டாதபடியான மநோதோஷத்தையுடைய மநதமதிகள்.

(பழிககில்) இவர்கள், குணங்களை யறியமாட்டாதே தோஷ தர்க்குக்களாகையாலே, (విద్యాన్యాశిల్పనైపుణమ్) என்று சொல்லப் படுகிற துஸ்தர்க்கங்களாலும் ஸாஹித்யததாலும் குதர்ஷ்டிகல்பந மாகிற தோஷங்களையேறிட்டு நிந்தித்தால் (మాయయాఽపహృతజ్ఞానాః) என்றும், (పమ్యామజానన్తః) என்றும், (అజ్ఞానేనావృతంజ్ఞానం తేనముహ్యన్తి జన్తవః) என்றுஞ்சொல்லுகிறபடியே அவாகள அஜ்ஞராகையாலே (மாந்தர்) எனகிறார். (ప్రాయస్యప్రమాదాత్తంతత్త్వమనుదాహృతమ్ । తాన కృత్వాపవాదోమన్దాః) என்றிறே இவர்களை சாஸ்த்ரஞ்சொலலுகிறது.

(பழிக்கில்புகழ்) (జ్యోతిష్టోమేనస్వర్గకామోయజేత, వాయవ్యం శ్వేతమాలభేత భూతికామః। రాయస్పోషాయసుప్రజాస్త్వాయసువీర్యాయ) என்று பலததோடே வ்யாப்த்தங்களான காமயகர்மங்களை யிழந்தாரென்றிறே அவர் கள் பழிசொல்லுவது, அவை தன்னை ஆராய்ந்தால், (యామిమాం పుష్పితాంవాచంప్రవదన్త్యవిపశ్చితః) (నాన్యదస్తీతివాదినః) (నతుమామభిజానన్తి తత్త్వేనాతశ్చ్యవన్తితే। అన్తవత్తుఫలంతేషాం తద్భవత్యల్పమేధసామ్) (క్షీణేపుణ్యేమర్త్యలోకం విశన్తి) (గతాగతంకామకామాలభన్తే) என்கையாலே ஸாதநாந்தரஙகளின் தோஷமறியாதவர்கள்சொல்லும்பழியாகையாலே அதுவேநமக்கு ப்புகழாம். (సత్కర్మనిరతాశ్శుద్ధాస్సాఙ్ఖ్యయోగవిదస్తథా । నార్హన్తిశరణస్థస్య కలాంకోటితమీమపి॥ యద్యేనకామకామేననసాధ్యస్సాధనాన్తరైః। ముముక్షుణాయ సాఙ్ఖ్యేన యోగేనచభక్తితః॥ తేనతేనాప్యతేతత్తన్న్యాసేనైవమహామునే। ప్రాప్యతేపరమంధామ యతోనావర్తతేపునః॥ పరమాత్మాచతేనైవ సాధ్యతేపురుషోత్తమః) என்றும

சொல்லப்படுகிறவிஷயததைப் பற்றிஞர்க்கு, (సిద్ధిర్భవతి వా నేతి సంశయో ఽచ్యుతసేవినామ్) என்கையாலே பலஸித்தியில் கண்ணழிவுண்டாயிருக்கும், அப்படியன்றிக்கே, (న సంశయో ఽస్తి తద్భక్తపరిచర్యారతాత్మనామ్) என்கிற ததீயவைபவத்தை யறியாதவர்கள் சொல்லும்பழியாகையாலே எனக்கு அதுவேபுகழாம். (ஞாநமநுட்டாநமிவை நன்றாகவே யுடையனான குருவையடைந்தக்கால், மாநிலத்தீர், தேனார்கமலத் திருமாமகள்கொழுநன், தானேவைகுந்தந்தரும்)என்றும்,(உய்ய நினைவுண்டாகில் உங்குருக்கள் தம்பதத்தே, வையுமன்புதன்னை யிந்தமாநிலத்தீர், மெய்யுரைக்கேன், பையரவின்மாயன் பரமபத முங்களுக்காம், கையிலங்குநெல்லிக்கனி) என்றும சொல்லப்படும் விஷயத்திலேயிறே அவர்கள் பழிசொல்லுவது, அதுபுகழேயாய்த் தலைக்கட்டுமித்தனை. (న్యాసవిద్యైకనిష్ఠానాం వైష్ణవానాం మహాత్మనామ్ । నీచైః కృతాస్తుతిర్నిన్దా నిన్దాస్తుతిరితి స్మృతా) என்றும், (அலகைமுலைசுவைத்தார்க் கன்பரடிக்கணபர் திலதமெனத்திரிவார தம்மை, உலகர்பழிதூற்றில்துதியாகும்) என்றும சொல்லக்கடவதிறே.

(அவன் மன்னியசீர்தனக்குற்றவன்பர்) (அவன்) (పాషణ్డద్రుమషణ్డదావదహనశ్చార్వాకశైలాశనిః బౌద్ధధ్వాన్తనిరాసవాసరపతిర్జైనేభకణ్ఠీరవః। మాయావాదభుజఙ్గభఙ్గగరుడస్త్రైవిద్యచూడామణిః శ్రీరఙ్గేశజయధ్వజో విజయతే రామానుజోఽయం మునిః) என்று ப்ரஸித்தரான எம்பெருமானாருடைய. (மன்னியசீர்) நித்யஸித்தங்களாய் ஸ்வாபாவிகங்களாய், (ప్రత్యక్షతాముపగతస్త్విహ రఙ్గరాజః । వశ్యస్సదా భవతి తే యతిరాజ తస్మాచ్ఛక్తస్స్వకీయజనపాపవిమోచనే త్వమ్) என்கிற ச்லோகத்திலே சொல்லப்பட்ட ஜ்ஞாநசக்திகள் தொடக்கமான கல்யாணகுணங்கள்.

(தனக்கு உற்றவன்பர்) தனக்குத்தகுதியான ப்ரேமத்தையுடையரானமஹாத்மாக்கள். (அவன்திருநாமங்கள் சாற்றுமென்பாவினக்குற்றம்) அவர்விஷயமானபக்தி ஸந்துக்ஷணமபண்ணதத்ப்ரீதனுய்க்கொண்டு அவருடைய திருநாமங்கள் பத்யரூபேணஸமர்ப்பிப்பதாக என்னாலேசொல்லப்பட்ட சந்தஸ்ஸமூஹத்திலே அவத்யத்தை. அனறிக்கே, (அவன்திருநாமங்கள் சாற்றுமென்பாவினக்குற்றம) அவருடையதிருநாமங்களைச் சொல்லாநின்றுள்ள என்னுடைய சப்தஸமூஹத்திலே குற்றத்தையென்னவுமாம். பா-சந்தஸ்ஸு. இனம்-ஸமூஹம்.

(காணகில்லார்) வத்ஸலஸ்வபாவராகையாலேதோஷாடதர்சிகளாய்ப்போருவார்கள். கில்லார் - ஸமர்த்தரல்லாதார்; மந்தமதிகளானவர்கள் தந்தாமுடைய அறிவுகேட்டாலே இவன்காம்யகர்மபரித்யாகம் பண்ணிஞனென்றும் லக்ஷணத்தில் குறைச்சலாகச் சொன்னுனென்றும் இப்படியான தோஷங்களைக் காணகில்லாதொன்றபடி. அதுக்கு மூலமேதென்ன (பத்தியேய்ந்தவியல்விதென்றே) பக்தியோடேகூடின வ்ர்த்தியையுடையதென்னவுமாம். இயல்வு-ப்ரவர்த்தி. ஏய்தல்-கூடுதல். ... ... ... ... (ரு)

அ.—ஆறாம்பாட்டு. “பத்தியேய்ந்த இயல்விதென்று - என் பாவினக்குற்றம்காணகில்லார்” என்றார் - கீழ்; அந்தபக்திதான் தமக்குண்டோ வென்று பார்த்தவிடத்தில் அதுவும் விஷயாநுகுணமாகத்தமக்கில்லாமையாலே ஸ்தோத்ரோத்யுக்தரான தம்மை கர்ஹிக்கிறார்.

மூ.—இயலும்பொருளுமிசையத்தொடுத்தீன்கவிகளன்பால்
மயல்கொண்டுவாழ்த்துமிராமானுசனைமதியின்மையால்
பயிலுங்கவிகளில்பத்தியில்லாதவென்பாவிநெஞ்சால்
முயல்கின்றனன்அவன்றன்பெருங்கீர்த்திமொழிந்திடவே.()

| பதம். | உரை. |
|---|---|
| இயலும் | சப்தமும், |
| பொருளும் | அர்த்தமும், |
| இசையத் தொடுத்து | பொருந்தத் தொடுத்து, |
| ஈன்கவிகள் | விலக்ஷணமான கவிகள், |
| அன்பால் | ப்ரேமத்தாலே, |
| மயல்கொண்டு | அறிவழிந்து, |
| வாழ்த்தும் | ஏத்தாநின்றுள்ள, |
| இராமானுசனை | எம்பெருமானாரை, |
| பயிலும் | ப்ரதிபாதகத்வேந செறிந்திருப்பதான, |
| கவிகளில் | கவிகளிலே, |
| பத்தியில்லாத | பக்தியின்றிக்கேயிருக்கிற, |
| என் | என்னுடைய, |
| பாவிநெஞ்சால் | பாபிஷ்டமான மநஸ்ஸாலே, |
| அவன்றன் | அவருடைய, |
| பெருங்கீர்த்தி | நிரவதிககீர்த்தியை, |
| மொழிந்திட | பேசுவதாக, |
| மதியின்மையால் | அறிவுகேட்டாலே, |
| முயல்கின்றனன் | உத்ஸாஹியாநின்றேன். |

இப்படி துச்சபர்யர்த்தியிலேயிழிந்த மூர்க்கருமானால் இளிதைச் செய்யேனென்றுகருத்து. “பாவிநெஞ்சால் அவன்றன் பெருங்கீர்த்திமொழிந்திட” என்று - இப்படியிருந்துள்ள மநஸ்ஸோடே கூடிக்கொண்டு அவருடைய கீர்த்தியைப்பேசுவதாக வென்கை. பயிலுதல்-செறிதல் முயலுதல்-உத்ஸாஹித்தல்.(௬)

---

அ.—ஆறாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே-மந்தமதிகள் பழிசொன்னார்களாகில் அதுவே தமக்கு பூஷணமென்றார்; இப்பாட்டிலே-என்னைப்பார்த்து, கீழ்ப்பாட்டிலே பரஸ்துதரான அஜ்ஞர்சொல்லும்பழிக்கு ஒருபடிஸமாதாநம்பண்ணிக்கொண்டு போனதாம், என்னைப்பார்த்தால்,ஸர்வலோகபரஸித்தரான எம்பெருமானாருடைய வைபவத்துக்குத் தகுதியாயிருந்துள்ள பக்திப்ரேமங்களிலே ஒன்றாகிலும் என்பக்கலிலேயில்லை, ஆனாலும் அவர்தம்மை ஏத்துவதாக உத்ஸாஹியாநின்றேன், எத்தனை ஸாஹஸம்பண்ணத்தொடங்கினேனென்று, (మహ్లాంన మోస్తుకన యుంసిపత్రపాయ) என்றாப்போ

வ்யா.—(இயலும்)(சப்தமும்) பொருளும்-அர்த்தமும். ஸமுச்சயத்தாலே-ராகமும். (இசைய) பொருந்தும்படி. (தொடுத்து) ப்ரதிபாதகத்துக்கும் ப்ரதிபாத்யத்துக்கும் ஒருகுறையில்லாதபடி ஸந்தர்ப்பித்து. (ஈன்) அவதரிப்பித்து. ப்ரபந்த நிர்மாணம்பண்ணுகிற. (கவிகள்) (వాచామగోచరమహాగుణదేశికాగ్య్రకూరాధినాథకథితాఖిలనైచ్యపాత్రమ్। ఏషో௨హమేవ నపునర్జగతీదృశస్తద్రామానుజార్య కరుణైవతుమద్గతిస్తే॥) என்று இப்படிப் பட்டகவிகள். (ஈன்கவிகள்) விலக்ஷணமான கவிகளென்னவுமாம் (அன்பால்) ப்ரேமப்ரகர்ஷத்தாலே.

(மயல்கொண்டு) அறிவழிந்து. ஜ்ஞாநவிபாககார்யமான அஜ்ஞாநம் தலையெடுத்து. (வாழ்த்தும்) (జయతిసకలవిద్యావాహినీజన్మశైలో జనపదపరివృత్తిశ్రాన్తనిశ్రాన్తశాఖీ। నిఖిలకుమతిమాయాశర్వరీబాలసూర్యో నిగమజలధివేలా పూర్ణచన్ద్రోయతీన్ద్రః॥) என்றும; (வாழியெதிராசனவாழியெதிராசன்வாழியெதிராசனெனவாழ்த்துவார், வாழியெனவாழ்ததுவார், வாழியெனவாழ்த்துவார் வாழியெனவாழ்ததுவார்தாளிணையில் தாழ்த்துவார்விண்ணோர்தலை)என்றும், (அறுசமயச்செடியதனையடியறுத்தான்வாழியே)என்றுதொடங்கி, (அறமிகுநல்பெரும்பூதூரவதரித்தானவாழியேயழகாருமெதிராசரடியிணைகள்வாழியே) என்றும்; (சீராருமெதிராசர் திருவடிகள்வாழி என்றுதொடங்கி, இனிதிருப்போடெழில் ஞாநமுத்திரைவாழி) என்றும், (வாழியரோ, தக்கோர்பரவுந் தடஞ்சூழ்பெரும்பூதூர் முககோல்பிடித்தமுனி)என்றும், இப்படி அவர்களாலே மங்களாசாஸநம் பண்ணப்படும்.

(இராமாநுசனை) எம்பெருமானாரை. (மதியின்மையால்)(యస్యాప్రభాగుణ...) எனகிறபடியே அவருடைய கல்யாணகுணவைபவத்தை யறியாமையாலே. (பயிலும்) அடைவுகெடச்சொல்லும். (கவிகள்) கவநங்களிலே - பாட்டுக்களிலே. அன்றிக்கே, பயிலுங்கவிகள்-எம்பெருமானாருடைய கல்யாணகுணங்களையே ஸர்வகாலமும் அநுபவியாநிற்கிற ஆழ்வான், ஆண்டான, எம்பார்தொடக்கமானாரிடத்திலே யென்னவுமாம். (பத்தியில்லாத) ஸம்யஜ்ஞாநமில்லாவிடிலும் மூடபக்திதானே என்மநஸ்ஸிலே யுண்டோவென்னில்; அந்தபக்தியும் என்மநஸ்ஸிலேயில்லை.

(பாவிநெஞ்சால்) ஜ்ஞாநபக்த்யாதிகள் இன்றிக்கே யொழிந்தாலும் மநஸ்ஸு பரிசுத்தமானால் க்ரமேண இவற்றையுண்டாகக்கொள்ளலாமிறே, அந்த சுத்தியில்லாமையாலே என்மநஸ்ஸு அத்யந்தம்பாபிஷ்டமாயாய்த்திருப்பது, இப்படிப்பட்டமநஸ்ஸாலே. (அவன் றனபெருங்கீர்த்தி மொழிந்திடவே) (அவன்றன்) (அடையார்கமலத்தலர்மகள் கேள்வன்கையாழியென்னும், படையோடு நாந்தகமும் படர்தண்டுமொண் சார்ங்கவில்லும், புடையார்புரிசஙகமு மிந்தப்பூதலங்காப்பதற்கென,றிடையேயிராமாநுசமுனியாயின விந்நிலத்தே) என்றுதம்மாலேயும்,

(ஆன்ற தமிழ்மறைகளாயிரமுமீன்ற முதல்தாய் சடகோபன் மொய்ம்பால் வளர்த்தவிதத்தாயிராமாநுசன்)என்று மற்றுள்ள ஆசார்யர்களாலும் கொண்டாடப்பட்டு பரவஸித்தரானவருடைய.(பெருங்கீர்த்தி) அவருடையகீர்த்தியும் அவருக்குறுதியாகக் காணுமிருப்பது. (రాశజ్యా శజ్యా రాదేర్భజతియతిపతౌ భద్రవేదీం త్రివేదీమ్)(శ్రీరఙ్గేశజయధ్వజో విజయతే రామానుజోஃయం మునిః)(எய்ந்தபெருங்கீர்த்தி)(எண்டிசையுமேத்துமெதிராசன்) என்கிறபடியே மஹாதநமானகீர்த்தியை. (மொழிந்திடவே)ஜ்ஞாநபக்திகளில்லாத வென்மநஸ்ஸிலே வாசாகைங்கர்யமாக க்ரந்திகரித்து ஸமர்ப்பிக்கக்கடவேனென்று. (முயல்கின்றனன்) உத்ஸாஹியாநின்றேன். (ధిగశుచిమవినీతం నిర్దయం మామలజ్జం పరమపురుష యోஃహం యోగివర్యాగ్రగణ్యైః। విధిశివసనకాద్యైర్ధ్యాతుమత్యన్తదూరం తవ పరిజనభావం కామయే కామవృత్తః) என்றாப்போலே எத்தனைஸாஹஸம் பண்ணுகின்றேனென்று ஸ்வநைச்யத்தை அநுஸந்திக்கிறாராய்த்து. (கூ)

---

அ.—ஏழாம்பாட்டு. இப்படி தம்முடைய அயோக்யதையைப்பார்த்து "நமக்கு இது துஸ்ஸகம்" என்று மீள நினைத்தவர், ஆழ்வான் திருவடிகளில்ஸம்பந்தமுண்டானபின்பு எனக்கு அசக்யாம்சமொன்றுமில்லையென்று ஸ்தோத்ரத்திலே ப்ரவர்த்தராகிறார்.

மூ.—மொழியைக்கடக்கும்பெரும்புகழான்வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்குநங்கூரத்தாழ்வான்சரண்கூடியபின்
பழியைக்கடத்துமிராமாநுசன்புகழ்பாடியல்லா
வழியைக்கடத்தலெனக்கினியாதும்வருத்தமன்றே. (எ)

| பதம். | உரை. |
|---|---|
| மொழியை கடக்கும் | பேச்சுக்கு நிலமல்லாத, |
| பெரும் | பெரிய, |
| புகழான் | புகழையுடையராய், |
| வஞ்சம் | ஆத்மாபஹாரத்தை விளைப்பதாய்த்தனித்தனியே ப்ரபலமாய்க்கொண்டுமூலையடியே நடத்துவதான, |
| முக்குறும்பாம் குழியை | அபிஜநவித்யா வ்ருத்தங்களாகிறபடுகுழியை, |
| கடக்கும் | கடந்திருப்பாராய், |
| நம் | நமக்குநாதரான, |
| கூரத்தாழ்வான் | கூரத்தாழ்வானுடைய, |
| சரண் | திருவடிகளை, |
| கூடியபின் | ஆச்ரயித்தபின்பு, |
| பழியைக் கடத்தும் | பழிபோலே அவச்யமநுபோக்தவ்யமானபாபகர்மங்களில் மக்நராகாதபடி, நிஸ்தரிப்பிக்கும், |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய, |
| புகழ் | திவ்யகுணங்களை, |
| பாடி | ப்ரீதி ப்ரேரிதராய்க்கொண்டுபாடி, |
| அல்லாவழியை | ஸ்வரூபாநுரூபமல்லாதமார்க்கங்களை, |

| பதம். | உரை. |
| --- | --- |
| கடத்தல் | தப்புகை, |
| எனக்கு | எனக்கு, |
| | ,, |
| யாதும் | ஒன்றும், |
| வருத்தமன்று | அருமையில்லை. |

"குழியைக்கடத்தும்" என்றுபாடமானபோது - தம்முடைய அபிமாநாந்தர்ப்பூதரையும் இப்படுகுழியில் வீழாமல் கடத்துமவனென்கை. "எம்கூரத்தாழ்வான்" என்றும் பாடம் சொல்லுவர்கள். ... ... (எ)

அ.—ஏழாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - ஜ்ஞாநபக்த்யாத்யநுபவரூபமான தம்முடைய அயோக்யதையை நினைத்து ப்ரபந்தாரம்பத்திலே பிற்காலித்தது, இப்பாட்டிலே - ஆழ்வான்திருவடிகளின் ஸம்பந்தமாகிற ராஜகுலமாஹாத்மயத்தை அநுஸந்தித்து, இப்ப்ரபந்தோத்யோகம் கடிநமல்ல, ஸுலபமாயேயிருக்குமென்று அதிலே ஒருப்படுகிறார்.

வ்யா.—(மொழியைக்கடக்கும் பெரும்புகழான்) ஒருசப்த்தத்தையிட்டு வாணிக்கவரிதாய் நித்யாபிவ்ர்த்தங்களாய்க்கொண்டு பரமபதத்தளவும் பெருகிவருகிற கல்யாணகுணங்களையுடையவன். (వాచామగోచరమహాగుణాదేశికాగ్ర్యకూరాధినాథ) என்னக்கடவதிறே. (வஞ்சமுக்குறும்பாம்) வஞ்சகஹேதுக்களாய் ததீயவிஷயத்திலே ஸ்வஸாமயபுத்திகளையும ஸ்வஸ்மிந்ஆதிக்யபுத்திகளையும் பிறப்பித்து ஸ்வரூபநாசகங்களாயிருந்துள்ள அபிஜநவித்யாவ்ர்த்தங்களாகிற அஹங்காரத்ரயமும் (முக்குறும்பு)(కృత్వాఽభిజనవపుస్తృహమీనృశోపిశ్రుత్యాదిసిద్ధనిఖిలాత్మగుణాశ్రయోఽయమ్। ఇత్యాదరేణకృతినోఽపిమిథఃప్రవక్తుమద్యాపివఞ్చనపరోఽత్రయతీన్ద్రవర్తే) என்கிறபடியே ஜந்தப்ரதாரகங்களான இம்மூன்றுமாகிற.

(குழியைக்கடத்தும்) தம்முடைய அபிமாநாந்தர்ப்பூதரை அந்தப்படுகுழியிலே விழாதபடி தம்முடைய உபதேசத்தாலே ததவஹிதபுருஷாரத்த யாதாத்மயஜ்ஞாநத்தைப்பிறப்பித்து அதில் நின்றும் கடத்துமவன். கடத்துகை - தாண்டுவிக்கை. (குழியைக்கடக்கும்) என்று பாடமானபோது இம்மூன்றுமாகிற படுகுழியைக்கடந்திருக்குமவனென்றபடி. (நங்கூரத்தாழ்வான்) நம்முடையகூரத்தாழ்வான். இவரை உத்தரிப்பிக்கைக்குக்காணும் அவருடைய வவதாரம். ஆகையாலேயிறே (நங்கூரத்தாழ்வான்) என்கிறார். (கூரம்) என்கிற திவ்யதேசத்துக்கு நிர்வாஹகரான ஸ்வாமியுடைய திருநாமத்தைவஹித்தவர். (எங்கூரத்தாழ்வான்)என்றும் பாடஞ்சொல்லுவர்கள். (சரண்கூடியபின்) இப்படிப்பட்ட வைபவத்தையுடையரான ஆழ்வானுடைய திருவடிகளை ஆச்ரயித்த பின்பு. இப்படிப்பட்ட ராஜகுலமாஹாத்ம்யத்தை நான்பெற்ற பின்பு

(பழியைக்கடத்தும்) இவ்வளவாக நான் மூலையடியே நடந்துபோகையாலே வந்தேறியாய் லோகசர்ஹிதமாய தம்முடைய குணகீர்த்தநம் பண்ணுகைக்கு விரோதியான வென்னுடையபாபத்தை ஸவாஸநமாக நிவர்த்திப்பிக்கும். (இராமாநுசனை) எம்பெருமானாருடைய. (புகழ்பாடி) * ஏயந்தபெருங்கீர்த்தி இராமாநுசமுனிவன், * தமிழ்மறைகளாயிரமுமமெய்ம்பாலவளர்த்த இதததாயிராமாநுசன் என்னும்படியான அவருடையகல்யாண குணங்களை இப்ப்ரபந்தமுகேந கீர்த்தநம்பண்ணி. (அல்லாவழியைக்கடத்தல்) என்னுடைய அபதப்ரவ்ர்த்தியைத் தப்புகை. அன்றிக்கே கர்ப்பயாம்ய தூமாதிகளை ஆக்ரமிக்கையாலென்னுதல். எம்பெருமானாருடைய திருவடிகளைகிட்டி அநுபவிக்கையிலென்றபடி.

(எனக்கினியாதும் வருத்தமன்றே) (எனக்கினி) இப்படிஎம்பெருமானாருடைய கைங்கர்யத்திலே அதிகரித்த க்ர்தார்த்தனானவெனக்கு இத்தனைநாளும் சிலவுபத்ரவமுண்டா யிருந்தாலும் இன்றுமுதலாக மேலுள்ளகாலமெல்லாம். (யாதும்) எந்தவிஷயத்திலேயாகிலும். (வருத்தமன்றே) அஸாத்யமானதில்லை. (அல்லாவழியை) என்று - அம்மார்க்கங்கள அதிஹேயங்களாகையாலே தம்முடைய திருப்பவளத்தாலே இன்னதென்று நிர்த்தேசிக்க அருவருத்து ஸாமாந்யேந வருளிச்செய்தார். (அல்லாவழியைக்கடத்தல எனக்கினியாதும் வருத்தமன்றே) (తదా విద్వాన్ పుణ్యపాపే విధూయ నిరంజ నః పరమం సామ్యముపైతి) என்கிறபடியே-ஸகலபாபவிமோக்ஷணபூர்வகமான பரமபதத்தைப் பெறுகையிலும இவருக்கு ஒருகண்ணழிவின்றிக்கே அத்யந்தஸகலபலமாயக்காணுமிருப்பது. (வைகுந்தமாநகர் மற்றதுகையதுவே) என்னக்கடவதிறே ... (எ)

அ.—எட்டாம்பாட்டு. முதலிலே எம்பெருமானார் திருநாமங்களைச் சொல்லுவோம்வாஎன்று தம்திருவுள்ளத்தைக் குறித்து அருளிச்செய்து, அநந்தரம் தம்முடையதிருவுள்ளம் எம்பெருமானாருடைய சீலகுணமொழிய மற்றொன்றறியாதிருக்கிறபடியைப் பேசி; அநந்தரம் தம்முடைய திருவுள்ளம தமக்குப்பண்ணின உபகாரத்தை யநுஸந்தித்து அதினகாலிலேவிழுந்து; அநந்தரம் தம்முடைய திருவுள்ளத்தினுடைய அஸ்தைர்யத்தைச்சொல்லி, இன்னமும உமக்கு நிலைநின்றவாறென் என்றவர்களைக்குறித்து எம்பெருமானார் தம்முடைய விஷயீகாரதார்ட்யத்தை தர்சிப்பித்தார், ஆகையாலே நமக்கொருஹாநியுமில்லையென்று; அநந்தரம் தத்விஷயஸ்தோத்ரப்ரவ்ர்த்தரானவர், ஸாக்ஷிணிகர் நிந்திக்கிலசெய்வதென்னென்று நிவ்ர்த்யுநமுகராய, மீளவும்தாம், எம்பெருமானாரளவில் ப்ராப்யபுத்தியில்லாதார் நிந்தித்தார்களாகில் ஸ்துதியாமித்தனை, தத்விஷயப்ரேமயுக்தர் இவனுடைய ப்ரேமகார்யமன்றோவென்று இதில் தோஷதர்சநம் பண்ணமாட்டார்க ளென்று

ப்ரவ்ருத்யுந்முகராய்; அநந்தரம அந்தப்ரேமந்தன்னை நிரூபித்தவிடத்தில் அதுவும தமக்கு விஷயாநுரூபமாகப்போராமையாலேதமக்கு ஸ்தோத்ராதிகார மில்லாமையைச்சொல்லி க்ஷேபித்து; அநந்தரம் ஆழ்வான் திருவடிகளில ஸம்பந்தபலத்தை யநுஸந்தித்து, இதுவுண்டானபின்பு நமக்கு அசக்யாம்சமொன்றுமில்லையென்று ஸமாஹிதராய் நின்றார்-கீழ்; இனி மேலெல்லாம் ஸ்தோத்ரம் பண்ணுகிறார்.

பொய்கையாழ்வாரருளிச்செய்த திவ்யப்ரபந்தத்தைத்தம்முடைய திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டிருக்கும பெருமையையுடைய எமபெருமானார் எங்களுக்கு நாதரெனகிறார்.

மூ.—வருத்தும்புறவிருளமாற்றவெமபொய்கைப்பிரான்மறையின்
குருத்தினபொருளையுஞ்செந்தமிழ்தன்னையுங்கூட்டியொன்ற
திரித்தன்றெரித்ததிருவிளக்கைத்தந்திருவுள்ளத்தே [த்
யிருத்துமபரமனிராமாநுசனெம்மிறையவனே. ... (அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வருத்தும் | " [illegible] " இத்யாதிபடியே பகவதாஜ்ஞாநுஸாரிகளாயிருக்கிறவஸ்துக்களிலே ஸ்வதந்த்ர புத்தியைப்பண்ணுவித்து அவ்விஷயமாயாதக்தவப்ரதிபத்தியாலே சேதநரை வருந்தப்பண்ணுமதாய், பரத்யக்கான ஆத்மாவும தத்தாராத்மாவான ஈச்வரனும்போலன்றிகே, | | திருக்கும் அஜ்ஞாநாந்தகாரத்தை, |
| | | மாற | போக்கும்படியாக, |
| | | எம் | பரபந்நகுலோத்தேச்யராய், |
| | | பொய்கைப்பிரான் | பரமோதாரரான பொய்கையார், |
| | | மறையின் குருத்தின் பொருளையும் | வேதாந்தத்தினுடைய அர்த்தத்தையும், |
| | | செந்தமிழ் தன்னையுங்கூட்டி | * நடைவிளங்குதமிழான சொல்லையுங்கூட்டி, |
| | | ஒன்றத்திரித்து | தன்னிலே சேரும்படிஸம்பந்தித்து, |
| | | அன்று | திருவிடைகழியிலே ஸர்வேச்வரன் வந்து நெருக்கின போது, |
| புறம்இருள் | சக்ஷுர்விஷயமாய்க்கொண்டுபுறம்பே தோற்றுகிற விபூதியை விஷயீகரித்த | எரித்ததிருவிளக்கை | "வையந்தகளியா" என்று தொடங்கி ப்ரகாசிப்பித்த திருவிளக்கை, |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தம்திருவுள்ளத்தே | தம்முடைய திருவுள்ளத்திலே, | பரமன் | நிரதிசயப்ரபாவரான, |
| | | ராமாநுசன் | எம்பெருமானார், |
| இருத்தும் | வைத்துக்கொண்டிருக்கும், | எம் | எங்களுக்கு, |
| | | இறையவன் | நாதர் ... (அ) |

அ.—எட்டாம்பாட்டு. முதலிலே எம்பெருமானாருடைய திருநாமங்களைச்சொல்லுவோம்வாவென்று தம்திருவுள்ளத்தைக்குறித்து அருளிச்செய்து, அநந்தரம் தம்முடைய திருவுள்ளம் எம்பெருமானாருடைய சீலகுணத்திலே ஆழங்காற்பட்டு மற்றொருவிஷயத்தையறியாதபடியைக்கண்டு ஆச்சர்யப்பட்டு, அநந்தரம் தம்முடையதிருவுள்ளம் ததீயபர்யந்தமாகத் தம்மைச்சேர்த்த மஹோபகாரத்துக்குத்தோற்று அவர்காலிலேவிழுந்து, அநந்தரம் எம்பெருமானார் தம்மை நிர்ஹேதுகமாக விஷயீகரித்த ராஜகுலமாஹாத்மயத்தைப்ரகடியாநின்றுகொண்டு தமக்கொருகுறையுமில்லையென்று தம்முடையஸ்தைர்யத்தை யருளிச்செய்து, அநந்தரம் தத்விஷயஸ்தோத்ரத்திலே ப்ரவ்ருத்தரானவர், அதுக்கு ஸஹியாதப்ராதிகூல்யரை நிந்தித்தாராகில் செய்வதென்னென்று நிர்ப்பயராய், மீளவும் தாமே எம்பெருமானாரளவிலே ப்ராப்யபுத்தியில்லாதார் நிந்தித்தார்களாகிலும் அதுவே நமக்குஸ்துதியாமத்தனை, தத்விஷயப்ரேமயுக்தர் இவருடைய ப்ரீதிபரீக்ஷிக்கவந்த சொல்லன்றோவென்று இதிலதோஷதர்சநம் பண்ணமாட்டாதே இதுதனை குணமாக நினைப்பவரொருவ ஸமாஹிதராய் ஸ்தோத்ரம்பண்ண ஒருப்பட்டு, அநந்தரம் இப்படியாலும் அந்தப்ரேமந்தன்னை நிரூபித்தவிடத்தில் அது தமக்குவிஷயாநுகுணமாகப் போராமையாலும் அப்படியே விஷயாநுகுணமாகச் சொல்லவரிதாகையாலும் தமக்கு ஸ்தோத்ராதிகாரமில்லையென்று சொல்லி ஆக்ஷேபித்து, அநந்தரம் தமக்குண்டான ஆழ்வான்திருவடிகளின் ஸம்பந்தத்தை யநுஸந்தித்து, இது உண்டானபின்பு நமக்கு அசக்யாசமொன்றுமில்லையென்று ஸமாஹிதமநஸ்கராயினார் - கீழ்; இவ்வளவும் ஸ்தோத்ரோபோத்காதம்; இனிமேலெல்லாம் ஸ்தோத்ரம் பண்ணுகிறார்.

லோகத்தாருடைய அஜ்ஞாநாந்தகாரத்தை நிவர்த்திப்பித்து அவர்களுக்கு ஹேயோபாதேயவிவேகத்தையுண்டாக்கி உபகரிப்பதாக ஜ்ஞாநதீபத்தையெடுத்து பொய்கையாழ்வாரருளிச்செய்த திவ்யப்ரபந்தத்தைத் தம்முடைய திருவுள்ளத்திலே ஸுப்ரதிஷ்டிதமாம்படிவைத்த பெருமையையுடையரான எம்பெருமானார் நமக்குநாதரென்கிறார்.

வ்யா.—(வருத்துமென்றுதொடங்கி) (வருத்தும்புறவிருள் மாற்ற) வருத்தும் என்கிறது இருளுக்குவிசேஷணம். வருத்தத்தைப்பண்ணக்கடவதான இருளென்றபடி. புறவிருள்-பாஹ்யவிஷயப்ராவண்யத்துக்குடலான அஜ்ஞாநம். அதுதான லோகத்திலே வருத்தங்களைப் பணணககடவதாயிருக்குமே நிஷித்தவிஷயங்களிலே ஸக்தனானவனுககு அவறறைப்பெறுமபோதுமபெற்ற பின்பும் ஐஹிகாமுஷ்மிகஙகளிலும் சிலதுக்கங்களுண்டிறே;- ஒரு வேச்யாஸக்தனானவன் அவளுககுஒருவ்யாதிப்ராப்ததமாய்ப்ராணஸம்சயம் வந்தவாறே இவள்பிழைத்தாளாகில் நான் அக்நிப்ரவேசம்பண்ணுகிறேனென்று க்ஷுத்ரதேவதைகாலிலேவிழுந்து அப்படியே செய்தானென்று லோகப்ரஸித்தமிறே. சிலஐஹிகபலங்களைககுறித்து க்ஷுத்ரதேவதைகளை ஆராதிக்கப்போனால், ஆட்டையறுததுததாஎன்றும், உனதலையையறுத்துததாஎனறும, செடிலாட்டம்பண்ணச்சொல்லியும அதிகோரமான பூஜைகளை அபேக்ஷிக்க அப்படியே அவனும் பண்ணிககொண்டுபோவானிறே; ராவணன் தனதலைகளையறுததது ருத்ரனை ஆராதித்தானெனறும ப்ரஸித்தமிறே. ராஜாவுககு ஒருவன் புதரனைககொடுத்து அந்த புத்ரனை விநாசம்பண்ணி யாகமபண்ணவேணுமென்று சொல்ல அந்த ராஜாவும் அபபடியே பண்ணி அபதாநம்ப்ரஸித்தமிறே. (భస్మోద్ధూళన జటాధారణ మలలేపన సురాకుంభస్థాపన నగ్నత్వోర్ధ్వబాహుత్వ)பஸ்மோத்தூளந ஜடாதாரண மலலேபந ஸுராகும்பஸ்த்தாபந நக்நத்வோர்த்தவபாஹு தவாதிருபமான வருத்தத்தை தர்ஷ்டத்திலும், நரகாநுபவரூபமான வருக்தத்தை ஆமுஷ்மிகத்திலும் பண்ணககடவதாயிறே பாஹ்யவிஷய ப்ராவண்யததுககுடலான அஜ்ஞாநமிருப்பது.

(புறவிருள) ப்ரதயக்ஷமான ஆத்மாவையும் ததந்தர்யாமியான ஈச்வரனையும போலனறிககே அவவிருவரிலுங்காட்டிலும் பாஹ்யராய ப்ரகாதிவிதராய அபரிசுத்தராய, (భీషాऽస్మాద్వాతః పవతే, భీషోదేతి సూర్యః, భీషాऽస్మాదగ్నిశ్చేన్ద్రశ్చ, మృత్యుర్ధావతి పఞ్చమః) எனறும், (ఏతౌ ద్వౌ విబుధశ్రేష్ఠౌ ప్రసాదక్రోధజౌ స్మృతౌ। తదాదర్శితపన్థానౌ సృష్టిసంహారకారకౌ) என்றும்சொல்லுகிறபடியே ஸர்வேச்வரனாலே ப்ராப்தமான ஐச்வர்யததைபபெற்றும் ரஜஸ்தமோதரேகத்தாலே அததைமறந்தும் அஹஙகாரக்ரஸ்தராயபம்பாருகிற ஸாமாநயதேவதைகளை க்ஷுத்ரபலஙகளுககாக ஆராதித்தவாறே, (దేహి మే దదామి తే) என்னும்படி ஸாபேக்ஷரான அவாகளை யாசிககப்பண்ணும்அஜ்ஞாநாந்தகாரமெனனவுமாம். (மாற்ற) அததைஸவாஸநமாகப போக்குகைக்காக.

(எம்பொய்கைப்பிரான்) தம்மொருவர் பொருட்டன்றிக்கே நம்முடைய ஸமபந்தி ஸமபந்திகள் பொருட்டும வந்தவரித்தாரொனறுகாணும் இவருடைய அபிநிவேசம். (எம்பொய்கை) என்னுடையகோடியான பரபந்நஜநங்களுக்காக காஞ்சிநகரத்திலே பொய்கையென்னும்பேரையுடைத்தான புண்டரீகஸரஸ்ஸிலே அவதரித்து, அதுதன்னையே நிருபகமானதிருநாமமாகவுடையரான.

அஜ்ஞாநாந்தகார நிவர்த்தகமாய் ப்ரதீபம்போலே தத்வார்த்த ப்ரகாசகமா யிருக்கிற திவ்யப்ரபந்தத்தை நிர்மித்து உபகரித்த உபகாரகர்

(மறையின் குருத்தின் பொருளையும்) (దీపోపమే స్నేహయుక్తే ప్రపద్యే) என்றும், (తేషామేవానుకంపార్థమహమజ్ఞానజం తమః, నాశయామ్యాత్మభావస్థో జ్ఞానదీపేన భాస్వతా) என்றுஞ்சொல்லப்படுகிற வேதாந்தார்த்தங்களையும். (செந்தமிழ்தன்னையும்) இவருடையப்ரபந்தத்துக்குச் செம்மையாவது - தத்வஹித புருஷார்த்தங்களை அடைவே ப்ரதிபாதிக்குமளவில் ஆதிமத்யாவஸாநங்களிலே ஏகரூபமாயிருக்கை. (தமிழ்தன்னையும்) த்ராவிடரூபமான திவ்யப்ரபந்தத்தையும். (கூட்டி) வேதாந்தார்த்தங்களையும் * நடைவிளங்குதமிழான சொல்லையும் தன்னிலே சேரும்படி ஸந்தர்ப்பமாக்கி.

(ஒன்றத்திரித்து) அவ்விரண்டையும் ஒன்றாகக்கொண்டு சேரும்படி ஒப்பித்து. (அன்று) திருக்கோவலூரிலே ஒருராத்ரி அந்தகாரத்திலே முதலாழ்வார்கள் மூவரும்வந்து அதிஸங்குசிதமானவொருதிருவிடைகழியிலே ஒருவரையொருவர் அறியாமல்நிற்க இவர்களை ஸம்ச்லேஷிக்கைக்காக ஆயனார்வந்து மூவர்நடுவிலும் புகுந்து அவர்களைநெருக்கினஸமயத்திலே. (எரித்ததிருவிளக்கை) (வையந்தகளியாவார்கடலேநெய்யாகவெய்யகதிரோன் விளக்காக) என்று-சதுர்த்தச புவநாத்மகமானலோகமெல்லாம் தகளியாகப் பண்ணியும், ஜலதத்வத்தையெல்லாம் ஒருபடியாகக்கொண்டஸப்தஸமுத்ரங்களை நெய்யாகப்பண்ணியும், தீக்ஷ்ணகிரணனானஸூர்யனைவிளக்காகச்சோதியும், லோகத்திலிருந்தபதார்த்தங்களென்றும் பிரிகதிர்படாதபடி எல்லாவற்றையும் ப்ரகாசிக்கும்படி யிட்டருளின திவ்யப்ரபந்தப்ரதீபத்தைச் செய்தபடி.

(தந்திருவுள்ளத்தேயிருத்தும்) அந்தீபத்தை ஸ்நேஹநிர்ப்பரமான தம்முடைய திருவுள்ளத்திலே ஸ்தாவரப்ரதிஷ்டையாம்படி நிறுத்தவல்ல. (பரமன்) (దేవమివాచార్యముపాసీత) (అజ్ఞానతిమిరాంధస్య జ్ఞానాంజనశలాకయా। చక్షురున్మీలితం యేన తస్మై శ్రీగురవే నమః॥ యస్మాత్తదుపదేష్టాసౌ తస్మాద్గురుతరో గురుః) என்றும், (అజ్ఞానధ్వాంతరోధాదఘపరిహరణాదాత్మసామ్యావహత్వాజ్జన్మప్రధ్వంసిజన్మప్రదగరిమతయా దివ్యదృష్టిప్రభావాత్। నిష్ప్రత్యూహానృశంస్యాన్నియతరసతయా నిత్యశేషిత్వయోగాత్ ఆచార్యస్సద్భిరప్రత్యుపకరణధియా దేవవత్స్యాదుపాస్యః) என்றுஞ்சொல்லப்பட்ட பெருமையையுடையரான. (இராமாநுசன்) எம்பெருமானார். (எம்மிறையவனே) எங்களுடையநாதர். ஸ்வாமியென்றபடி. (ఆచార్యదేవో భవ) (గురురేవ పరంబ్రహ్మ) (ఆచార్యస్స హరిస్సాక్షాచ్చరరూపీ న సంశయః) என்னக்கடவதிறே. ... ... (அ)

அ.—ஒன்பதாம்பாட்டு. பூதத்தாழ்வார் திருவடிகளைத் தம் திருவுள்ளத்திலே வைத்தநுபவிக்கும் எம்பெருமானார் திவ்யகுணங்களைச் சொல்லுமவர்கள், வேதத்தை ரக்ஷித்து லோகத்திலே ப்ரதிஷ்டிப்பிக்குமவர்களென்கிறார்.

மூ.—இறைவனைக்காணுமிதயத்திருள்கெடஞானமென்னும்
நிறைவிளக்கேற்றியபூதத்திருவடிதாள்களெஞ்சத்
துறையவைத்தாளுமிராமாநுசன்புகழோதுமநல்லோர்
மறையினைக்காத்திந்தமண்ணகத்தேமன்னவைப்பவரே. ( )

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இறைவனை | வகுத்த சேஷியானவனை. | நெஞ்சத்து | திருவுள்ளத்திலே, |
| காணும் | ஸாக்ஷாத்கரிக்கைக்கு உபகரணமான | உறையவைத்து | நிரந்தரவாஸம்பண்ணும்படியாக வைத்து, |
| இதயத்து | ஹ்ருதயத்தைப் பற்றிக்கிடக்கிற, | ஆளும் | அநுபவிக்கும், |
| இருள் | அஜ்ஞாநாந்தகாரமானது, | இராமாநுசன் | எம்பெருமானாருடைய, |
| கெட | நசிக்கும்படியாக, "அன்பே தகளியா" என்று தொடங்கி, "ஞானச் சுடர்விளக்கேற்றினேன்" என்று, | புகழ் | கல்யாண குணங்களை, |
| ஞானமென்னும் | பரஜ்ஞாநமாகிற, | ஓதும் | ஸ்தோத்ரம் பண்ணும், |
| நிறைவிளக்கு | பரிபூர்ண தீபத்தை, | நல்லோர் | ஸத்துக்களானவர்கள், பாஹ்ய குத்ருஷ்டிகளால் அழிக்கவொண்ணாதபடி, |
| ஏற்றிய | ப்ரகாசிப்பித்த, | மறையினைக் காத்து | வேதத்தை ரக்ஷித்து, |
| பூதம்திருவடி | ஸ்ரீபூதத்தாராகிற ஸ்வாமிகளுடைய, | இந்தமண்ணகத்தே | இந்த லோகத்திலே, |
| தாள்கள் | திருவடிகளை, | மன்னவைப்பவர் | ஸுப்ரதிஷ்டிதமாக வைக்குமவர்கள். |

(௯)

அ.—ஒன்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - பொய்கையாழ்வாருடைய ஸம்பந்தத்தாலே ஸர்வோத்தரான எம்பெருமானார் தமக்கு ஸ்வாமியென்றருளிச்செய்து, இப்பாட்டிலே-ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரனைக் காண்கைக்கு ஸர்வர்க்கும் உபகரணமாயிருந்துள்ள ஹ்ருதயம் அஜ்ஞாநாந்தகாரத்தாலே மோஹிதமாப்

**போரையாலே அத்தை நசிப்பிப்பதாக பரஜ்ஞாநமாகிற பரிபூர்ண தீபத்தையேற்றியருளினபூதத்தாழ்வாருடைய திருவடிகளைமநஸ்ஸிலே வைத்துக்கொண்டு அநுபவிக்கிற எம்பெருமானாருடைய கல்யாணகுணங்களை யநுஸந்தித்து, ஸத்துக்களானவர்கள் இந்தலோகத்திலே ஸகலவேதங்களையும் பாஹ்யகுத்ருஷ்டிகளால் அழிக்கவொண்ணாதபடி ரக்ஷித்து ஸுப்ரதிஷ்டிதமாக வைக்கவல்லவர்களென்கிறார்.**

வ்யா.—(இறைவனை)ஸர்வலோகத்துக்கும் ஸ்வாமியானவனை. (காணும்) தாசநம்பண்ணுகைக்கு உபகரணமான. (இதயத்து) ஹ்ருதயத்தைப்பற்றிக்கிடக்கிற. (இருள்கெட) (సర్వస్య చాహం హృది సన్నివిష్టో మత్తస్స్మృతిర్జ్ఞానమపోహనఞ్చ। ఈశ్వరస్సర్వభూతానాం హృద్దేశేర్జున తిష్ఠతి) என்றும், (గుహాం ప్రవిష్టావాత్మానౌ హి తద్దర్శనాత్) என்றுஞ்சொல்லுகிறபடியே ஸர்வேச்வரனுக்கு இருப்பிடமான ஹ்ருதயஸ்த்தாநமிறே - அவனை யறியக்கடவதானஜ்ஞாநத்துக்குப்ரஸரணத்வாரம். (హృదా మనీషా మనసాభిక్లృప్తః) என்றும், (సపనంవిదుర్వృత్తాస్తేభవన్తి) என்றுஞ்சொல்லப்படுகிறஜ்ஞாநத்துக்கு வாரகமாய் இவர்களுடைய பூர்வகர்ம வாஸனையாலே வந்திருப்பதொரு அஜ்ஞாநமுண்டு; (అజ్ఞానేనావృతం జ్ఞానం తేన ముహ్యన్తి జన్తవః) என்னக்கடவதிறே, அதுகெட. (ఛిత్త్వైనం సంశయం కృష్ణ హృత్స్థం జ్ఞానాగ్నినాత్మనః) (అహమజ్ఞానజంతమః)(నాశయామ్యాత్మభావస్థో జ్ఞానదీపేన భాస్వతా) என்கிறபடியே யாதாத்மய ஜ்ஞாநபாதயமான அஜ்ஞாநாந்தகார மானது வாஸனையோடே நசிக்கும்படியாக.

(ஞாநமென்னும் நிறைவிளக்கு)(యథా ప్రియ తేజోద్యోత్యామలప్రజ్ఞానాన్యతేః। యథోదపానకరణాత్ క్రియతే నజలామ్బరమ్) என்றாப்போலே ஜ்ஞாநத்துக்கு வாரகமான அஜ்ஞாநம் உடனே ப்ரகாசிக்குமிறே. இப்படிப்பட்ட பரஜ்ஞாநமாகிற பரிபூர்ணதீபத்தை. (జ్ఞానేనతుతదజ్ఞానమేషాంనాశితమాత్మనః। తేషామాదిత్యవజ్జ్ఞానం ప్రకాశయతి తత్పరమ్) என்றானிறே கீதோபநிஷதாசார்யனும். (ஏற்றிய) (அன்பேதகளியா ஆர்வமே நெய்யாக, இன்புருகுசிந்தை யிடுதிரியா, நன்புருகி, ஞானச்சுடர் விளக்கேற்றினேன் நாரணற்கு) என்று தம்முடைய பக்தியைத் தகளியாகப்பண்ணி, அபிநிவேசாதிசயத்தை நெய்யாக்கி, பகவதநுபவாநந்தத்தாலே உருகிக்கிடக்கிற மநஸ்ஸைத் திரியாக்கி, நாரணற்கு பரஜ்ஞாநமாகிற பரிபூர்ணதீபத்தை ஏற்றினேன் நான்என்று தொடங்கி தாமிட்டருளின திவ்யப்ரபந்தமாகிறபரிபூர்ணதீபத்தை ஏற்றி ஸர்வர்க்கு முபகாரமாம்படி ப்ரகாசிப்பித்த. (பூதத்திருவடி தாள்கள்) பூதத்தாழ்வாரென்கிற ஸ்வாமிகளுடைய திருவடிகள். **(அந்தமிழால் நற்கலைகளாய்ந்துரைத்த வாழ்வார்கள் இந்தவுலகிலிருள் நீங்கவந்துதித்த) என்றும்** ஜீயரருளிச்செய்தாரிறே.

(நெஞ்சத்துறையவைத்தாளும்) தம்முடையமநஸ்ஸிலே நிரந்தரவாஸம்பண்ணும்படியாகவைத்து ஸர்வகாலமும் அநுபவித்துக்கொண்டிருக்கிற. ஆளுகை - யதேஷ்டவிநியோகார்ஹமாம்படி விநியோகங்கொள்ளுகை. (இராமாநுசன்) எம்பெருமானாருடைய. (புகழோதும்) கல்யாணகுணங்களை ஸதோச்சாரணம் பண்ணும். (நல்லோர்) (கலியுங்கெடுங்கண்டுகொண்மின்) என்றருளிச்செய்த நம்மாழ்வார். அவ்வாழ்வாருடைய ப்ரஸாதத்தாலே லபித்த பவிஷ்யதாசார்யவிக்ரஹத்தைத் தம்முடையகாலமெல்லா மாராயந்துகொண்டுபோந்த ஸ்ரீமந்நாதமுனிகள். இவரவதரித்த பின்பு இவருடையகல்யாணகுணங்களைகேட்டருளி வித்தராய்த் திருப்புற்றுக்குக்கிழக்காகக்கரியமாணிக்கப்பெருமாள்திருமுன்பே இவரைக்கடாக்ஷித்து, (ஆமுதல்வன்) என்று ப்ரார்த்தித்தருளின ஆளவந்தார்போல்வாரானஸத்துக்கள்.

(மறையினைக்காத்து) (బిభేత్యల్పశ్రుతాద్వేదః) (பிபேத்யல்பச்ருதாத் வேதஃ) என்றும், (అర్థోన్న్యమనస్థానా ... తస్మాత్సర్వప్రయత్నేన) என்றும் சொல்லுகிறபடியே அல்பச்ருதரானபாஹ்யகுத்ர்ஷ்டிகளாலே கலங்காதபடி வேதத்தையெல்லாம் ரக்ஷித்தது. அவர்கள்தாமொன்னில் (యస్త్వస్త్రయ్యాం ... యాన్త్రిక జన్మసూత్రతామ్) என்னும்படியாகச்ருதிபைஸாதநமாக்கின ஆழ்வான்தொடக்கமானாரும், (மறையினை) என்றுபொதுவாகச்சொல்லுகையாலே-த்ரமிடவேதத்துக்குப்பிற்காலத்திலே அல்பச்ருதரானகுத்ர்ஷ்டிகளால்அழிவுவாராதபடி அத்தைவ்யாக்யாநம்பண்ணியருளின பிள்ளான்தொடக்கமானாருமென்றபடி அவர்களசெய்தது அவ்வளவேயன்றுகாணும் (இந்தமண்ணகத்தேமன்னவைப்பவரே) விரோதிபூயிஷ்டமான இந்த மஹாப்ருதிவியிலே அவ்விரண்டையும் ஸுப்ரதிஷ்டிதமாம்படி ப்ரவர்த்திப்பித்துக்கொண்டு போந்தார்களென்கிறார். ... (௬)

---

உரை.—அ.—பத்தாம்பாட்டு. பேயாழ்வார்திருவடிகளை ஸ்துதிக்கும் ஸ்வபாவரான எம்பெருமானார்விஷயத்திலே ஸ்நேஹயுக்தர்திருவடிகளை சிரஸாவஹிக்குமவர்கள், எல்லாக்காலத்திலும் சீரியரென்கிறார்.

மூ—மன்னியபேரிருள்மாண்டபின்கோவலுள்மாமலராள்
தன்னொடுமாயனைக்கண்டமைகாட்டுந்தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்றுமிராமாநுசற்கன்புபூண்டவர்தாள்
சென்னியிற்சூடுந்திருவுடையாரென்றுஞ்சீரியரே. (௧௦)

| பதம். | உரை. |
|---|---|
| மன்னிய | பேர்க்கப்போகாதபடிநின்ற, |
| பேரிருள் | அஜ்ஞாநமாகிற மஹாந்தகாரமானது, |
| மாண்டபின் | முற்பாடரான ஆழ்வாரக ளிருவரும் ஏற்றின இருவிளக்காலே நிச்சேஷமாகப்போனபின்பு, |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | "நீயுந் திருமகளும்' என்கிற பாட்டுப் படியே, | போற்றும் | புகழும் ஸ்வபாவரான. |
| கோவலுள் | திருக்கோவலூரிலே | இராமாநுசற்கு | எம்பெருமானார் விஷயத்தில், |
| மாமலராள் | திருமா மகளாருடனே, | அன்பு | ப்ரேமத்தை, |
| தன்னொடும் | | பூண்டவர் | தங்களுக்கு ஆபரணமாக தரிக்குமவர்களுடைய திருவடிகளை, |
| ஆயனை | க்ர்ஷ்ணாவதாரத்தில் ஆச்ரித பவ்யதையடங்கலும்தோற்றும்படி வந்து நின்ற ஸர்வேச்வர | தாள | |
| | | சென்னியில் | தங்கள்சிரஸ்ஸிலே |
| | | சூடும்திருவுடையார் | தரிக்கும் ஸம்பத்தை யுடையவர்கள், |
| கண்டமை | ஸாக்ஷாத்கரித்தப்ரகாரத்தை, | என்றும் | ஸர்வகாலத்திலும் |
| காட்டும் | தர்சிப்பித்த, | சீரியர் | ச்ரியா. |
| தமிழ்த்தலைவன் | தமிழுக்குத் தலைவரான பேயாழ்வாருடைய, | | |
| பொன் | ஸ்ப்ர்ஹணீயமான திருவடிகளை, | | |
| அடி | | | |

போற்றுதல்-புகழுதல். அன்பு பூண்டவரென்றது – அன்பிலே பூட்சியையுடையவர்கள்; அதிலே ஊன்றியிருக்குமவாகளென்னவுமாம். ... ... (௪0)

வ்யா.—அ.—பத்தாம்பாட்டு கீழிரண்டுபாட்டாலும்-பொய்கையாழ்வார்பூதத்தாழ்வாராகிற இருவராலேயுமெடுக்கப்பட்டபரிபூர்ணதீபமான திவ்யப்ரபந்தங்களிரண்டாலும லோகத்திலேஒருவராலும் பரிஹரிக்கவொண்ணாதபடி வ்யாப்தமாய்நின்ற அஜ்ஞாநமாகிற மஹாந்தகாரம் நசித்தபடியை யருளிச்செய்து, இப்பாட்டிலே - அவ்வந்தகாரம் நசித்தபின்பு தாம் திருக்கோவலூரிலேவீற்றிருந்த ச்ரிய:பதியை ஸாக்ஷாத்கரித்து அந்தலாபத்தை எல்லார்க்கும் திவ்யப்ரபந்தரூபேண உபதேசிக்கும்பேயாழ்வாருடைய ஸ்ப்ர்ஹணீயமானதிருவடிகளை ஸ்துதிக்கிற எம்பெருமானார் விஷயமான ப்ரீதியாலே பரிஷ்கரிக்கப்பட்டவர்களுடைய ஸ்ரீபாதங்களைத் தந்தாமுடையதலைமேலேதரிக்கும்ஸம்பததையுடையவர்கள் ஸர்வகாலத்திலும் ஸ்ரீமான்களென்கிறார்.

வ்யா.—(மன்னியபேரிருள்மாண்டபின்) (மன்னியபேரிருள்) தத்வஜ்ஞாநேநவிநா மற்றொன்றால் போக்குகைக்கு அரியதாய ஆத்மாவைப்பற்றிக்கிடக்கிற அஜ்ஞாநமாகிற மஹாந்தகாரம்.

(అవివేకఘనాన్తదిఙ్ముఖేబహుధాసన్తతదుఃఖవర్షిణి। భగవన్భవదుర్దినే)(அவிவேக கநாந்ததிங்முகேபஹுதாஸந்ததது:கவர்ஷிணி। பகவங்பவதுர்த்திநே) என்று சொல்லுகிற இருளானது. (மாண்டபின்) இந்தப்பேயாழ்வாருக்குமுன்னே ஜ்ஞாநதீபத்தை யெடுத்தருளினபொய்கையாழ்வார் பூதத்தாழ்வாராகிற இருவராலேயும் நசிப்பித்தபின்பு. (గుశబ్దస్త్వన్ధకారస్స్యాత్ రుశబ్దస్తన్నిరోధకః। అన్ధకారనిరోధిత్వాత్ గురురిత్యభిధీయతే) (குசப்தஸ்த்வந்தகாரஸ்யாத ருசப்தஸ்தந்நிரோதக:-அந்தகார நிரோதித்வாத்குருரித்யபிதீயதே) என்னும்படி அஜ்ஞாநத்வாந்தத்தை ஸவாஸநமாகப் போக்கினபின்பு.

(கோவலுள் மாமலராள்தன்னொடும்)(ஒண்டொடியாள் திருமகளும் நீயுமேநிலாநிற்ப) என்றும், (அகலகில்லேனிறையுமென்றலர்மேல்மங்கையுறைமார்பா) (రుక్మిణీకృష్ణజననీ) (ருக்மிணீக்ர்ஷ்ண ஜநநீ) என்கிறபடியே புருஷகாரபூதையான பெரியபிராட்டியாருடனே. (மாயனை) க்ர்ஷ்ணனாயவதரித்து ஸ்வாச்ரிதரான பாண்டவர்களுக்குக் கழுத்திலே ஓலையைக்கட்டிக்கொண்டு போந்த தௌத்யமும, அர்ஜுநன் தன்காலாலே பரிக்கப்பண்ணின ஸாரதயமுமாகிற நிஹீநக்ர்தயங்களைப் பண்ணுகையும், ஆயுதமெடேனென்று ஆயுதமெடுக்கையும, பகலை இரவாக்குகையும், கோவர்த்தநோத்தரணம் பண்ணுகையும, அர்ஜுநனை நித்யவிபூதியருகே கொண்டுபோகையும், அவனுக்கு சரமோபாயத்தை யுபதேசிக்கையுமாகிற இவ்வாச்சர்யகுணங்களையுடையனான ஸர்வேச்வரனை. (ஆயனை) ஆயனானாயென்னவுமாம். கீழ்ச்சொன்ன குணசேஷ்டிதங்களையுடையனான க்ர்ஷ்ணனை யென்னவுமாம். (கண்டமை) அவ்வந்தகாரத்தைப்போக்கின ஜ்ஞாநதீபத்தாலே தாம் ஸாக்ஷாத்கரித்து அந்தத்தாழ்ச்சிப்ரகாரத்தை யெல்லாம். (காட்டும்) (திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் திகழுமருக்கனணி நிறமும்கண்டேன், செருக்கிளரும், பொன்னாழிகண்டேன் புரிசங்கம் கைக்கண்டேன், என்னாழிவண்ணன்பாலின்று) என்றுதொடங்கி தாமிட்டருளின திவ்யப்ரபந்தத்தாலே காட்டியருளும்.

(தமிழ்த்தலைவன்) (பாலேய்தமிழர்) என்றும், (இன்கவிபாடும் பரமகவிகள்)என்றும், -* மயர்வறமதிநலமருளப்பெற்றநம்மாழ்வாராலே கொண்டாடப்பட்ட த்ரமிடசாஸ்த்ரப்ரவர்த்தகரில் மூலபூதரான பேயாழ்வாருடைய. (பொன்னடிபோற்றும்)ப்ரபந்நஜநங்களுக்கெல்லாம் ஸ்ப்ர்ஹணீயமான திருவடிகளை மங்களாசாஸநம்பண்ணுகிற சேஷத்வாநுரூபமாக வடிமைத்தொழில்செய்கைதவிர்ந்து, ஸ்ப்ர்ஹணீயமாகையாலே ப்ரேமபரவசராய்க்கொண்டு மங்களாசாஸநம் பண்ணத்தொடங்கினார் காணும். போற்றுதல் - புகழ்தல். (இராமாநுசற்கு) எம்பெருமானார்விஷயமான.

(அன்புபூண்டவர்தாள்) ப்ரீதியைத்தங்களுக்கு ஆபரணமாமபடி அலங்கரித்துக்கொண்ட மஹாத்மாக்களுடைய திருவடிகளை. (சென்னியில்சூடும்) தந்தாமுடைய சிரஸ்ஸிலே செவ்விப்பூவைச்சூடுவாரைப்போலே தரிக்கும். (திருவுடையார்) (సతునాగవరశ్శ్రీమాఙ్) (లక్ష్మణోలక్ష్మీసమ్పన్నః) (అన్తరిక్షగతశ్శ్రీమాఙ్) (ஸதுநாகவரஶ்ஶ்ரீமாங்) (லக்ஷ்மணோலக்ஷ்மிஸம்பந்நꞏ) (அந்தரிக்ஷகதஶ்ஶ்ரீமாந்) என்கிற ஸம்பத்துக்கு ஸீமாபூமியான ஸம்பத்தையுடையவர்கள்.

(என்றும் சீரியரே) ததியப்ராவண்யத்தை யுடையவரானகையாலே அவர்கள் காலதத்வமுள்ளதனையும் ஸ்ரீமாந்கள். (శ్రీమద్భాగవతార్చనంభగవతఃపూజా విధేరుత్తమం శ్రీశ్శ్లోరవమాననాద్గురుతరం శ్రీవైష్ణవోల్లఙ్ఘనమ్। తీర్థాదచ్యుతపాదజాద్గురుతరం తీర్థంతదీయాఙ్ఘ్రిజం తస్మాన్నిత్యమతన్ద్రితోభవసదా తేషాం సమారాధనే। తస్మాత్పరతరంప్రోక్తం తదీయారాధనంనృప। మమమద్భక్తభక్తేషు ప్రీతిరభ్యధికాభవేత్॥ తస్మాన్మద్భక్తభక్తాశ్చ పూజనీయావిశేషతః) (ஸ்ரீமத்பாகவதார்ச்சநꞏ பகவதꞏபூஜாவிதேருத்தமꞏ ஸ்ரீவிஷ்ணோரவமாநநாத் குருதரꞏ ஸ்ரீவைஷ்ணவோல்லங்கநம்-தீர்த்தாதச்யுதபாதஜாத்குருதரꞏ தீர்த்தꞏததியாங்க்ரிஜꞏ தஸ்மாந்நித்யமதந்த்ரிதோபவஸதா தேஷாꞏஸமாராதநே) (தஸ்மாத்குருதரம்ப்ரோக்தꞏ ததியாராதநமந்ர்ப-மமமத்பக்த பக்தேஷுப்ரீதிரப்யதிகாபவேத்-தஸ்மாத்மத்பக்த பக்தாஶ்ச பூஜநீயாவிசேஷதꞏ) என்னக்கடவதிறே. (திருமாலடியார்களைப் பூசிக்கநோற்றார்கள்) என்று ஆழ்வாரு மருளிசெய்தாரிறே. அப்படியே, (వాచాయతీన్ద్ర) (வாசாயதிந்த்ர) என்று தொடங்கி, (పాదానుచిన్తనపరస్సతతంభవేయమ్) (பாதாநுசிந்தநபர ஸ்ஸததꞏபவேயம்) என்று இதொன்றையுமே பரார்த்தித்தருளினரிறே ஜீயரும்.

---

உரை.—அ.—பதினோராம்பாட்டு. திருப்பாணாழ்வார் திருவடிகளை சிரஸாவஹிக்கும் எம்பெருமானாரை தங்களுக்கு அபாச்ரயமாகப்பற்றியிருக்குமவர்களுடையகார்யவைலக்ஷண்யம இந்தலோகத்தில் என்னால்சொல்லித் தலைக்கட்டவொண்ணாதென்கிறார்.

மூ.—சீரியநான்மறைச்செம்பொருள்செந்தமிழாலளித்த
பாரியலும்புகழ்ப்பாண்பெருமாள்சரணாம்பதுமத்
தாரியல்சென்னியிராமாநுசன்றன்னைச்சார்ந்தவர்தம்
காரியவண்மையென்னாற்சொல்லொணாதிக்கடலிடத்தே.()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சீரிய | பகவத் ஸ்வரூப ரூப குணவிபூதிகளை உள்ளபடி பரதிபாதிக்கையால் வந்த சீர்மையை யுடைத்தாய, | நால் | ரிகாதி பேதத்தாலே நாலுவகைப் பட்டிருந்துள்ள, |
| | | மறை | வேதத்தினுடைய, |
| | | செம்பொருள் | ஸ்வரஸமான அர்த்தத்தை, |

| பதம். | உரை. |
|---|---|
| செந்தமிழால் அளித்த | * நடைவிளங்கு தமிழ்மாலையாலே உபகரித்தருளினவராய், |
| பார்இயலும் | பூமியிலேவர்த்தியாநின்றுள்ள, |
| புகழ | கீர்த்தியையுடைய, |
| பாண்பெருமாள்சரணம் | திருப்பாணாழ்வார்திருவடிகளாகிற, |
| பதுமத்தார் | தாமரைப் பூவாலே, |
| இயல்சென்னி | அலங்கர்தமான திருமுடியையுடைய, |
| இராமாநுசன்றன்னை | எம்பெருமானாரை: |
| சார்ந்தவர் தம் | அபாச்ரயமாகப் பற்றியிருக்குமவர்களுடைய |
| காரியவண்மை | அநுஷ்டாந வைலக்ஷண்யம், |
| இக்கடலிடம் | இந்தக்கடல் சூழ்ந்த பூமியில், |
| என்னால்சொல்லொணாது | என்னால் சொல்லித் தலைக்கட்டவொண்ணாது. |

இக்கடலிடத்தே-இராமாநுசன்றன்னைச்சார்ந்தவர் என்றந்வயித்து - பகவத்ஸமாச்ரயணத்துக்குங்கூட இசைவாரில்லாத இங் ய எல்லைநிலத்தளவும் வந்து எம்பெருமானாரை ஆச்ரயிக்கப்பெற்றவர்களென்னவுமாம். பாரியல் என்றவிடத்தில், இயல்தல்-நடத்தல். தாரியல் என்றவிடத்தில், இயல்தல்-அலங்கரித்தல். தார்-பூ. காரியம்-க்ர்த்யம். "காரியல்வண்மை" என்றுபாடமானபோது-காரினுடையஇயல்வையுடைத்தானஔதார்யமென்கை. அதாவது-ஜலஸ்த்தலவிபாகம்பாராதே அதுவர்ஷிக்குமாப்போலே ஸர்வவிஷயஸமமாக எம்பெருமானுருடைய திவ்யகுணங்களைவர்ஷிக்கை. (கக

வ்யா.—அ.—பதினேராமபாட்டு. இவ்வளவாக மூன்றுபாட்டாலும் முதலாழ்வார்கள்மூவருடையவும் ஸம்பந்தத்தையுடைய எம்பெருமானாரைக்கொண்டாடி, இப்பாட்டிலே-தமக்கு இவ்வளவான வதிகாரமுண்டாம்படி முதலடியிலேதம்மை விஷயீகரித்த பெரிய பெருமாளுடைய திருவடிகளிலே திருவவதாரமே பிடித்துஇடைவிடாதே நிரவதிகப்ரவணராய், (இசைகாரர்) என்று நம்மாழ்வாராலே கொண்டாடப்பட்ட மஹாவைபவத்தையுடையரான திருப்பாணாழ்வார்திருவடித்தாமரைகளிலே நிரவதிகப்ரவணரான எம்பெருமானாரை ஆச்ரயித்தவருடைய அநுஷ்டாநம் இந்தமஹாப்ர்திவியிலே என்னால் சொல்லித்தலைக்கட்டப்போகாதென்கிறார்.

வ்யா.—(சீரியநான்மறைச்செம்பொருள்) ([illegible]) (ஸாஹ்ரீம்ர்தாஸதாம்) என்று ஸத்துக்களுக்கு ஸம்பத்தாய், ரிக்யஜுஸ்ஸாமாதர்வணரூபேண நாலுவகைப்பட்டிருக்கிற

வேதங்களில் வைத்துக்கொண்டு, (అసారమల్పసారఞ్చ సారం సారతరం త్యజేత్। భజేత్ సారతరం శాస్త్రం రత్నాకరఇవామృతమ్॥ అణుభ్యశ్చ మహద్భ్యశ్చ శాస్త్రేభ్యో మతిమాన్నరః। సర్వతస్సారమాదద్యాత్ పుష్పేభ్యఇవషట్పదః) (அஸாரமல்பஸாரஞ்ச ஸாரம்ஸாரதரம்த்யஜேத் - பஜேத்ஸாரதரம்சாஸ்த்ரம் ரத்நாகரஇவாம்ர்தம் - அணுப்யஶ்சமஹத்ப்யஶ்ச சாஸ்த்ரேப்யோமதிமாந்நர:- ஸர்வதஸ்ஸாரமாதத்யாத்புஷ்பேப்யஇவஷட்பத:) என்றும், (శ్రుతిపథవిపరీతం క్ష్వేళకల్పం శ్రుతౌ చ ప్రకృతి పురుషయోగ ప్రాపకం శోచ్యతథ్యః। తదిహవిబుధగుప్తం మృత్యుభీతా విచిన్వన్త్యుపనిషదమృతాబ్ధేరుత్తమం సారమార్యాః) (ச்ருதிபதவிபரீதம்க்ஷ்வேளகல்பம்ச்ருதௌச ப்ரக்ர்திபுருஷயோகப்ராபகம்சோச்யத்ய:-ததிஹவிபுதகுப்தம் ம்ர்த்யுபீதாவிசிந்வந்த்யுபநிஷதம்ர்தாபத்தேருத்தமம்ஸாரமார்யா:) என்றுஞ்சொல்லுகிறபடியே உபாதேய ஸாரதமமாயிருந்துள்ள திருமந்த்ரத்தினுடைய ப்ரக்ர்தியான ப்ரணவத்தினுடைய அவயவங்களான அகார உகார மகாரங்களுடைய அர்த்தவிசேஷங்களை.

(செந்தமிழால) (அமலனுதிபிரான) என்றும், (உவந்தவுள்ளத்தனுய்) என்றும், (மந்திபாயவடவேங்கடமாமலை) என்றும் தம்முடைய ப்ரபந்தாதியான மூன்றுபாட்டுக்களுடைய முதலடியிலே ஸாரதமார்த்தவிசேஷப்ரதிபாதகங்களாயிருக்கையாலே ஸகலவேதஸாரமென்று ச்லாகிக்கப்படுகிற அக்ஷரத்தையுங்கூட்டி ஸந்தர்ப்பித்த ப்ரபந்தத்தாலே. (அளித்த) ஸர்வரையும ரக்ஷித்தருளினவராய். (பாரியலும்புகழ்) அகண்டமான பூமண்டலத்திலே வ்யாபித்த கல்யாணகுணங்களையும் கீர்த்தியையுமுடையராய். இயலுதல்-நடத்தல. (பாண்பெருமாள) (இசைகாரர) எனகிறபடியே தந்த்ரீலயைகளை அடைவேயறிந்து, (ఏతత్సామగాయన్నాస్తే) (ஏதத்ஸாமகாயந்நாஸ்தே) என்றுப்போலே பெரியபெருமாளுக்கு உகப்பாம்படி இனிதாகப்பாடுமவராகையாலே அநதஇசையை தமக்கு நிருபகமாகவுடையராய் மஹாநுபாவரான திருப்பாணாழ்வாருடைய.

(சாரணும் பதுமத்தாரியல்செனனி) (గురుపాదామ్బుజం ధ్యాయేత్) (குருபாதாம்புஜம்த்யாயேத்) என்றும, (భవత్పదాబ్జే హ్యాష్టాస్తు నిత్యమనుభూయమమాస్య బుద్ధిః) (பவத்பதாப்ஜே ஹ்ராஷ்டாஸ்துநித்யமநுபூயமமாஸ்யபுத்தி:) என்றுஞ்சொல்லுகிறபடியே போக்யதமமானபாதபத்மத்தாலே, கிரீடாதிசிரோபூஷணங்களாலே தந்தாமுடைய சிரஸ்ஸுக்களை அலங்கரித்துக்கொள்ளுவாரைப்போலே அலங்கரிக்கப்பட்ட உத்தமாங்கத்தையுடையராய், (இராமாநுசன்றன்னை) இப்படிதீயப்ராவண்யஸீமாபூமியான எம்பெருமானுரை. (சார்ந்தவர்தம்) அபாச்ரயமாகப் பற்றியிருக்குமவர்களுடைய.

(காரியவண்மை) (समयनियतया सा साधुवृत्त्या) (ஸமயநியதயாஸா
ஸாதுவ்ர்த்யா) என்கிறபடியே ஸம்ப்ரதாயஸித்தமாகக்கொண்டு,
(கர்த்தவ்யம் ஆசார்யகைங்கர்யமும், பகவத்கைங்கர்யமும்) என்று
உபதேசிக்கப்பட்ட அநுஷ்டாநஸௌஷ்டவம். ஸர்வப்ரபந்நஜநங்க
ளுக்கும் இதொன்றுமேகர்த்தவ்யமென்று தெரியும்படி வெளிச்
செறிப்பாகப்பண்ணினவர்களாகையாலே அவர்களுடைய இப்படி
ப்பட்ட ஔதார்யத்தை யென்றபடி.

(என்னுற்சொல்லொணுதிக்கடலிடத்தே) சதுஸ்ஸமுத்ரபரிவே
ஷ்டிதமானபூலோகத்திலேஅவர்களுடையப்ரபாவததைஉள்ளபடி
யறியமாட்டாத என்னாலே சொல்லிததலைக்கட்டவரிதாயிருக்கும்.
பதுமத்தார்-தாமரைபுஷ்பம். இயல்தல்-அலங்கரித்தல்-காரியம்-க்ர்
த்யம். (இக்கடலிடத்தே) என்கிறவாக்யத்தை, (இராமாநுசன்ற
ன்னைச்சார்ந்தவர்தம்) என்கிறவாகயத்தோடேகூட்டி அந்வயித்த
போது பகவத்ஸமாச்ரயணத்துக்குங்கூட இசைவாரில்லாத * இரு
ள்தருமாஞாலத்திலே அதினுடைய எல்லைநிலமான எம்பெருமா
னார்திருவடிகளை ஆச்ரயிக்கப்பெற்றவர்களுடைய ப்ரபாவம் என்
னால் சொல்லித்தலைக்கட்ட அரிதாயிருக்குமென்றபடி. (காரியல்
வண்மை) என்று பாடமானபோது, கார்-வர்ஷாகவலாசம்; அதி
னுடைய இயலாவது-ஜலஸ்த்தல விபாகம்பாராதே ஏகரூபமாக
வர்ஷிக்கை. வண்மை-அம்மேகம்போலே ஸர்வவிஷயமாகவும் எம்
பெருமானுருடைய திவ்ய குணங்களை வர்ஷிக்கையாகிற ஔதார்
யத்தையென்றபடி.

இராமாநுசன்றனனைச்சார்ந்தவர்தம்காரியவண்மை என்றது-
போதாயநவ்ர்த்தியை ஸகர்த்தர்சநத்தாலே ஆநுபூர்வியாகக்ரஹித்
தும், க்ர்மிகண்டன்ஸதஸ்ஸிலேசென்று குத்ர்ஷ்டிகளை ப்ரஸங்க
முகத்தாலே ஜயித்தும் நிர்வாஹகராயிருந்துள்ள ஆழ்வானும்,
எம்பெருமானார் மேல்நாட்டிலே திக்விஜயம்பண்ணியருளி கோயி
லேறவெழுந்தருளுகிறபோது மார்க்கத்திலே ஒரு அக்ரஹாரத்
திலே மாயாவாதி வித்வாங்கள அநேகம்பேர் திரண்டிருக்க அவர்
களைக்கடாக்ஷித்து எல்லாரையும ஸ்ரீவைஷ்ணவராம்படி திருத்த
வேணுமென்று திருவுள்ளம்பற்றி, ஆண்டானைக்கடாக்ஷித்து, நீர்
போய் அவர்கள் ஸ்நாநம்பண்ணுகிறதுறையிலே நித்யம் ஸ்ரீபாத
த்தைவிளக்கிக்கொண்டுவாரும் என்றருளிச்செய்ய; அவரும் அப்
படியேபண்ண; பின்பு அத்தீர்த்தபாநத்தாலே அந்தமாயாவாதிக
ளெல்லாருக்கும் துர்வாஸனைபோய் ஆபிமுக்யம்பிறந்து எம்பெரு
மானார்திருவடிகளிலே ஆச்ரயித்தார்களென்று குருபரம்பராப்ர
பாவத்திலே சொல்லப்பட்டமுதலியாண்டானும், ஸகலவேதார்த்

ஸாரமான திருவாய்மொழிக்கு வ்யாக்யாநம்பண்ணின பிள்ளானும், திருவேங்கடமுடையான்விஷயமாக, (ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம்) என்று ஆழ்வார் ப்ரார்த்தித்தருளின கைங்கர்யங்களைப் பண்ணிக்கொண்டு போந்து தாமாக ஒருதடாகநிர்மாணம்பண்ணுகிறபோது, திருவேங்கடமுடையான்தானே தம்மோடொக்க மண்தட்டைச்சுமந்துகொண்டுவந்து ஸஹாயம்பண்ணும்படி அப்ரதிமப்ரபாவரான அநந்தாழ்வானும், ஒருநாள்வளையிலே எம்பெருமானாருடைய கோஷ்டிக்குப்போரும்படியாக ததீயாராதநம்பண்ணின பருத்திக்கொல்லையம்மாள்தேவிகள் முதலானவர்களுடைய ப்ரபாவத்தை பாசுரமிட்டுச் சொல்லப்போமோ? * வாசாமகோசரமென்றபடி.( )

உரை.—அ.—பன்னிரண்டாம்பாட்டு. திருமழிசைப்பிரானுடைய திருவடிகளுக்கு ஆவாஸமான திருவுள்ளத்தையுடைய எம்பெருமானாரை யாச்ரயிப்பார்களொழிய ஸ்நேஹியாதவர்கட்கோ நான் ஸ்நேஹித்திருப்பதென்கிறார்.

மூ.-இடங்கொண்டகீர்த்திமழிசைக்கிறைவனிணையடிப்போ
தடங்குமிதயத்திராமாநுசனம்பொற்பாதமென்றும்
கடங்கொண்டிறைஞ்சுந்திருமுனிவர்க்கன்றிக்காதல்செய்யாத
திடங்கொண்டஞானியர்க்கேயடியேனன்புசெய்வதுவே (௧௨

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இடம்கொண்ட | பூமியெங்கும் வ்யாப்தையான | என்றும் | ஸர்வகாலத்திலும், |
| | குணவத்தா ப்ரதையையுடையரான, | கடம்கொண்டு | ஸ்வரூபப்ராப்தமென்றுநினைத்து, |
| ம | திருமழிசைப்பிரானுடைய, | இறைஞ்சும் | வணங்குகையாகிற |
| றைவன | | திரு | ஸம்பத்தையுடையராய, |
| | சேர்த்தியழகையுடைத்தான, | முனிவர்கள் அன்றி | தத்விஷயமநநசீலராயிருக்குமவர்களுக்கொழிய, |
| அடிப்போது | திருவடிகளாகிற செவ்விப்பூக்கள், | காதல்செய்யா | ஸ்நேஹத்தைப்பண்ணாத, |
| அடங்கும் | தன்னுள்ளே யடங்கும்படியான, | திடங்கொண்ட ஞானியர்க்கே | த்ருடதரஜ்ஞாநயுக்தர்களுக்கோ, |
| | திருவுள்ளத்தையுடைத்தாயிருக்கிற, | அடியேன் அன்புசெய்வது | அடியேன் ஸ்நேஹத்தைப்பண்ணுவது |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய, | | |
| அம் | விலக்ஷணமாய், | | |
| பொன் | ஸர்வ ஸமாச்ரயணீயமான, | | |
| பாதம் | திருவடிகளை, | | |

கடம் - கடன்; ப்ராப்தம். இடம் - திடம். கொள்கை - உடைத்தாகை. ... ... ... (௧௨)

அ.—பன்னிரண்டாம்பாட்டு. கீழ்நாலுபாட்டாலும் ஆழ்வாருடைய ஸம்பந்தத்தையிட்டு எம்பெருமானை அநுபவிக்கும் ப்ரகாரமாகையாலே முதலாழ்வாரோடு ஸமானகாலராய் பேயாழ்வாருடைய ப்ரஸாதத்தாலே தத்வஹிதபுருஷார்த்தயாதாத்ம்யஜ்ஞானரான திருமழிசையாழ்வாருடைய பரஸ்பர ஸத்ர்சமான திருவடிகளைத் தம்முடைய திருவுள்ளத்திலே நிறுத்திக்கொண்ட எம்பெருமானாருடைய பரமபோக்யமான திருவடிகளை ஆச்ரயித்தவர்களுக்கொழிய வேறொருவர்க்கு விதேயமாகாத த்ருடாத்யவஸாயபரரான ஜ்ஞானிகளுக்கு அடியேன் பக்தனாகாநின்றேனென்கிறார்.

வ்யா.—(இடங்கொண்டகீர்த்தி) பூமியெங்கும் வ்யாப்தமான குணவத்தாப்ரதையையுடைய மாஹாத்ம்யத்தை சோதிப்பதாக ருத்ரன் பார்வதீஸமேதனாய்க்கொண்டுவந்து அநேகமாக ஸம்வாதித்து இவருடைய ப்ரபாவத்தைக்கண்டு ஆச்சர்யப்பட்டுப்போனானென்றும், காஞ்சீநகரத்திலே ஒருவ்ருத்தஸ்த்ரீ சிலநாள் அநுவர்த்தனம்பண்ணினவாறே அவளுக்கு யௌவநஸௌந்தர்யாதிகளைக் கொடுத்தாரென்றும், அப்படியே இவ்வாழ்வாருடைய நகரத்தில் நின்றும் க்ஷுத்ரோபத்ரவ வ்யாஜேந தக்ஷிணதிக்கேறப்போகத் தொடங்க அக்காலத்திலே அங்கேபள்ளிகொண்டருளின எம்பெருமானும் இவருடனேயெழுந்தருளுவதாகப் புறப்பட அவரும் அதைக்கண்டு அவ்விடத்திலேதானேயிருக்கவேணுமென்றருளிச்செய்ய, அப்படியே அந்த எம்பெருமானும் இவர்சொன்னபடிசெய்து, "சொன்னவண்ணஞ்செய்த பெருமாள்" என்று ஸர்வலோகப்ரஸித்தமாய்க்கொண்டு அதுவே நிரூபகமாம்படி யிருந்தானென்றும், சோழமண்டலத்திலே ஒரு அக்ரஹாரத்திலே இவரெழுந்தருள; வீதியிலே அத்யயநம்பண்ணுகிற சில ப்ராஹ்மணர்கள் இவரைக்கண்டு அத்தைநிறுத்தி இவர் புறம்பேசென்றவாறே அந்தப்ராஹ்மணருக்கு தாவாய தெரியாதேபோக, இதென்ன என்று ஆச்சர்யத்துடனே இவரைப்போயழைக்க, இவரும் கறுப்புநெல்லையெடுத்து உகிராலே உரிக்க அத்தைக்கண்டு அந்த ப்ராஹ்மணருக்கு மேலதோற்றிற்று என்றும் ப்ரஸித்தமிறே; இவ்வ்ருத்தாந்தங்களையெல்லா மநுஸந்தித்து "இடங்கொண்டகீர்த்தி" என்கிறார்.

(இடங்கொண்டகீர்த்தி)(நிற்பதுமோர்வெற்பகத்து) என்கிற பாசுரப்படியே ஸர்வதிக்குக்களிலும் வ்யாப்தையான கீர்த்தியையுடையரான. (மழிசைக்கிறைவன்) திருமழிசையென்கிற திவ்யதேசத்துக்கு ஸ்வாமியாய் அதுவே நிரூபகமாகவுடையரான திருமழிசைப்பிரானுடைய. (இணையடிப்போது) பரமபோக்யமாய்

பரஸ்பரஸத்ருசமான திருவடிகளாகிற பத்மங்கள். போது-பத்மம. (அடங்குமிதயத்து) அணுவானமநஸ்ஸிலே மஹத்தான அத்திருவடிகள் அடங்கும்படி அமைத்துக்கொள்ளுகிற ஹ்ருதயப்ரதேசத்தையுடையரான. (இராமாநுசன்) எம்பெருமானாருடைய.

(அம்பொற்பாதமென்றும்) ஸௌந்தர்யத்துக்கு கொள்கலமாகையாலே அதிவிலக்ஷணமாய ஸ்பார்ஹணீயமாகையாலே ஸர்வர்க்கும் ஸமாச்ரயணீயமாயிருக்கிற திருவடிகளை ஸர்வகாலத்திலும். (கடங்கொண்டிறைஞ்சும) (సంశయస్తుత్భక్తపరిచర్యరతాత్మనాం) (గురు రేవపరంబ్రహ్మ) (நஸம்ஸயஸ்துதத்பக்தபரிசர்யரதாத்மநாம) (குருரேவபரம்ப்ரஹ்ம) 'என்றும், '(நீக்கமில்லாவடியார்தமடியாரடியாரொங்கோக்கள் அவர்களுக்கேகுடிகளாய்ச் செல்லும் நல்லகோட்பாடே) என்றுமசொல்லுகிறபடியே ப்ராப்யமென்று அத்யவஸித்து ஆச்ரயிக்கும. கடம-ப்ராப்யம். கொள்கை-அத்யவஸிக்கை. (திருமுனிவர்க்கலாதிக்காதல்செய்யா) இப்படிப்பட்டவிரவதிகஸம்பத்தையுடையராய்க்கொண்டு, அதிலஉபகாரஸ்ம்ருதியாலே அத்தையே மநநம்பண்ணிக்கொண்டிருக்கிறஜ்ஞாநாதிகர், (తృణీకృతవిరించాది నిరంకుశవిభూతయః। రామానుజపదాంభోజ సమాశ్రయణశాలినః) (த்ர்ணீக்ர்தவிரிஞ்சாதிநிரங்குசவிபூதய:- ராமாநுஜபதாம்போஜஸமாச்ரயணசாலிந.) என்றுமபடியானவர்களுக்கொழிய மற்றொருவருக்கு ச்ருதிஸ்ம்ருதிஹாஸ புராணங்களிலே அதிரஹஸ்யமான சரமபர்வவிஷயத்திலே பண்ணப்படும் ஸ்தோத்ரத்தைப்பண்ணாத. (இடங்கொண்டஞாநியர்க்கே) தாடாத்யவஸாயத்தையுடையரான ஜ்ஞாநாதிகர்க்கே. இடம-த்டம. கொள்கை உடைத்தாகை. ஒருநாள்வரையிலே அழகியமணவாளர்வாஹநத்துடனே எம்பெருமானார் மடத்தருகே எழுந்தருள எம்பெருமானாரும திருவீதியிலே யெழுந்தருளி அவரைத் திருவடித்தொழுது மடத்திலே யெழுந்தருள,வடுகநம்பி அவரைத் திருவடித்தொழாதே அங்கே தானேயிருக்கையாலே அதனைக்கடாக்ஷித்து, "நம்பெருமாளைச்ஸேவிக்க ஏன்காணும்வரவில்லை,என்ன; அவரும் தேவரீருடையபெருமாளை ஸேவிக்கப்போனால் அடியேனுடைய பெருமானுக்குக்காய்ச்சின பால் பொங்கிப்போமே எனறார்" என்று ப்ரஸித்தம்றே.

க்ருமிகண்டனுபத்ரவத்துக்காக எம்பெருமானார் மேல்நாட்டுக் கெழுந்தருளினபின்பு ஆழ்வான அந்தப்பையலுடைய ஸதஸ்ஸிலே புகுந்து அங்குண்டானகுத்ருஷ்டிகளை ஜயித்து திரும்பவும் கோயிலுக்கெழுந்தருளி அங்கேயிருக்கிறகாலத்திலே ஒருநாள் பெரியபெருமாளை ஸேவிப்பதாகக் கோயிலுக்குள்ளே யெழுந்தருள, திருக்கோபுரத்வாரத்திலே யிருக்கிறராஜபடர் இவரைப்

பார்த்து, "ராமாநுஜஸம்பந்தமுடையா ரொருவரையாகிலும் கோயி லுக்குள்ளே புகவிடவேண்டா" என்றராஜசாஸநத்தைச்சொல்ல, வேறேசிலர் அப்படியேயாகிலும் இவர் ஜ்ஞாநாதிகர், உள்ளேபு குரவிடுங்கோளென்ன; இவரும் அவர்களுடைய உக்திப்ரத்யுத்தர ங்களைக் கேட்டருளி தம்மைப்போரவெறுத்து உடனே நாலடிபிற் காலித்து, எம்பெருமானார் ஸம்பந்தத்துக்குப் புறம்பானஜ்ஞாநா திகயமும் இந்தபகவத்ஸேவையும் நமக்குவேண்டாவென்று அன்று முதலாகக்கொண்டு எம்பெருமானார் திரும்பவும் கோயிலுக்கெழுந் தருளுகிறபர்யந்தம் பெரியபெருமாளைத் திருவடித்தொழாதே யிருந் தாரென்றும் ப்ரஸித்தமிறே. இப்படிப்பட்ட தாட்டாத்யவஸாய யுக் தரான ஜ்ஞாநாதிகருக்கென்றபடி. (அடியேனன்புசெய்வதுவே) (அடியேன்) இப்படித்ததீயபர்யந்தமான சேஷத்வைகஸ்வரூபனான நான். (அன்புசெய்வதுவே) ஸ்நேஹித்து ஸக்தனாயிருப்பதென் கிறார். (వాచా యతీన్ద్ర మనసా వపుషా చ యుష్మత్పాదారవిన్దయుగళం భజతాం గురూణామ్। కూరాధినాథకురుకేశముఖాద్యపుంసాం పాదానుచిన్తనపరః సతతం భవేయమ్) (வாசா யதீந்த்ர மநஸா வபுஷா ச யுஷ்மத் பாதாரவிந்தயுகளம் பஜ தாம்குரூணாம்-கூராதிநாதகுருகேசமுகாத்யபும்ஸாம் பாதாநுசிந்தந பரஸ்ஸததம்பவேயம்) என்று இத்தையே ஜீயரும் ப்ரார்த்தித் தாரிறே. .. ... .. . . .. (௧௨)

உரை.—அ—பதின்மூன்றும்பாட்டு. ஸ்ரீதொண்டரடிப் பொ டியாழ்வார் திருவடிகளையொழிய மற்றொன்றில ஆதரமற்றிருக்கும் எம்பெருமானார் திருவடிகளே நமக்குப்ராப்யமென்கிறார்.

மூ—செய்யும்பசுந்துளபத்தொழில்மாலையுஞ்செந்தமிழில்
பெய்யுமறைத்தமிழ்மாலையும்பேராதசீரரங்கத்
தையன்கழற்கணியும்பரன்றாளன்றியாதரியா
மெய்யனிராமாநுசன்சரணேகதிவேறெனக்கே (௧௩)

| பதம். | உரை. | பதம். | உரை |
|---|---|---|---|
| செய்யும் | * மிக்க சீர்த்தொண்டரான தம்மாலே செய்யப்பட்ட தாய், | தொழில் | வகுப்புண்டாகச் சமைத்த, |
| | | மாலையும் | திருமாலையும், |
| | | செம் | ஸ்வார்த்த ப்ரகாசகமான, |
| பசுந்துளவம் | தம்முடைய கரஸ்பர்சத்தாலே வந்த புதுக்கணிப் பெல்லாம் நிறத்திலே காணலாம்படி யிருக்கிற திருத்துழாயாலே, | தமிழ் | தமிழிலே, |
| | | பெய்யும் | உண்டாக்கப் பட்டதொரு, |
| | | மறை | வேதமென்னலான, |
| | | தமிழ்மாலையும் | தமிழ்த் தொடையும், |

| பதம். | உரை. |
|---|---|
| பேராத | "வீடில்சீர்" என்கிறபடியே நித்யஸித்தமான, |
| சீர் | கல்யாணகுணங்களை யுடையராயக் கொண்டு, |
| அரங்கத்தையன் | "ஐயனேயரங்கனே" என்னும்படி பரமபந்துத்வந்தோற்றக் கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய, |
| கழற்கணியும் | திருவடிகளுக்குச் சாத்துமவராய் சேஷத்வ காஷ்டையிலே நிலைநிற்கையாலே, |

| பதம். | உரை. |
|---|---|
| பரன்றாளன்றி | சேஷத்வத்துக்குத் தம் கருமேற் பட்டாரில்லை யென்னும்படியிருக்கிற ஸ்ரீதொண்டரடிப் பொடியாழ்வாருடைய திருவடிகளையொழிய, |
| ஆதரியா | விரும்பாத, |
| மெய்யன் | ஸத்யசீலரான, |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய, |
| சரணே | திருவடிகளே, |
| எனக்கு | எனக்கு விசேஷித்து |
| வேறுகதி | ப்ராப்யம். |

பெய்தல் - உண்டாக்குதல்.
பேராமை-நீங்காமை. ... (௧௩)

அ.—பதின்மூன்றும்பாட்டு. கீழ்ப்பாட்டிலே-திருமழிசையாழ்வாருடைய ஸம்பந்தத்தையிட்டு எம்பெருமானாரைக் கொண்டாடி, இப்பாட்டிலே தாம் முந்துற முன்னம் தொண்டுபட்ட பெரியபெருமாள் திருவடிகளிலே அதிப்ரவணராய், "மற்றுமோர்தெய்வமுண்டே" என்று-அவனையொழிந்த எம்பெருமான்களை விரும்பாத பாதிவ்ரத்யத்தையுடையரான ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வாருடைய திருவடிகளையொழிய வேறொன்றிலே ஆதரமற்றிருக்கிற எம்பெருமானார் திருவடிகளே எனக்கு ப்ராப்யமென்கிறார்.

வ்யா.—(செய்யும் பசுந்துளபத்தொழில்மாலையும்) * மிக்க சீர்த்தொண்டரான தம்மாலே, வைஜயந்தீவநமாலையென்றும், கலம்பகன்மாலையென்றும் அநுபோக்தாக்களாலே உல்லேகிக்கும்படி ஸந்தர்ப்பிக்கப்பட்டதாய் தம்முடைய கரஸ்பர்சத்தாலே வந்த புதுக்கணிப்பெல்லாம் நிறத்திலே காணலாம்படியான பசுமையையுடைத்தான திருத்துழாயாலே வகுப்புண்டாகச் சமைத்த திருமாலையும். * தொடையொத்ததுளபமுங்கூடையும்பொலிந்து தோன்றியதோள் தொண்டரடிப்பொடி என்னுமிவர், தம்மைத் தாமே நிரூபித்துக்கொள்ளவல்லாரிறே. (செந்தமிழில்பெய்யும் மறைத்தமிழ்மாலையும்) * அருமறைகள்போலே த்ரைவர்ணிகாதிகாரமாயிருக்கையன்றிக்கே பெண்ணுக்கும் பேதைக்கும் அதிகரிக்கலாம்படி ஸார்வாதிகாரமாய அந்யோந்யோபமர்த்தவாக்யங்

களாலே ப்ரமத்தை விநாசிப்பித்தும் ஸ்வார்த்தத்தை யறிவதற்கு உரவகாஹநங்களாயு மிருக்கையன்றிகேசே, ஸாரதமார்த்தப்ரகாசகமாய் த்ரமிடபாஷையாலே நிர்மிக்கப்பட்ட திருவேதமென்று நிரூபிக்குமபடியாயிருப்பதாய் திருமாலையென்னும பேரையுடைத்தான தமிழ்மாலையையும். செய்தல் - உண்டாக்குதல்.

(பேராதசீராங்கத்தையன) (పరాస్య శక్తిర్వివిధైవ శ్రూయతే, స్వాభావికీ జ్ఞానబలక్రియాచ) (యస్సర్వజ్ఞస్సర్వవిత్) (నిత్యస్సత్యోఽనిష్కలోఽనఘో నిరంజనో నిర్వికల్పో నిరాఖ్యాతశ్శుద్ధో దేవ ఏకో నారాయణః) (பராஸ்யசக்திர்விவிதைவச்ரூயதே ஸ்வாபாவிக்ஜ்ஞாநபலக்ரியாச) (யஸ்ஸர்வஜ்ஞஸ்ஸர்வவித்) (நித்யஸ்ஸத்யோநிஷ்களநகோநிரஞ்சநோ நிர்விகல்போநிராக்யாதச்சுத்தோதேவஏகோநாராயண:) என்றும், (ஏறிலவண்புகழ்நாரணன்) என்றும் சொல்லுகிறபடியே ஹேயப்ரதிபடங்களாய் நித்யங்களாயிருக்கிற கல்யாணகுணங்களையுடையனும், (మాతాపితాభ్రాతానివాస శ్శరణంసుహృద్గతిః)(மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்கதி:) என்றும், (పితాసిలోకస్యచరాచరస్య)(பிதாஸிலோகஸ்யசராசரஸ்ய)என்றும், (పితాభ్రాతాచమాతాచమాధవః) (பிதாப்ராதாசமாதாசமாதவ:) என்றும (தாயாய்த்தந்தையாய) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸர்வவிதபந்துத்வம் தோற்றும்படி கோயிலிலே கண்வளர்ந்தருளின பெரியபெருமாள். (ஐபமினை யரங்கனே) என்று இவரும் தம ப்ரபந்தத்திலே யருளிச்செய்தாரிறே.

(அரங்கத்தையன்) அந்தஸ்தலத்தையிட்டு அவர்தம்மை நிரூபிக்கவேண்டும்படி காறும இவர்தமக்கு அதிலே ப்ராவண்யாதிசயமிருப்பது. பேராமை-நீங்காமை அப்படிப்பட்டவருடைய (கழற்கணியும) திருவடிகளுக்கு அலங்காரமாக ஸமர்ப்பித்த. (பரன) சேஷத்வத்துக்கு தமக்குமேற்பட்டாரில்லையென்னும படி அதினுடைய சரமாவதியிலே நிற்கையாகிற அதிகாரத்தைப் பெற்று உத்கர்ஷரான ஸ்ரீதொண்டரடிப்பொடியாழ்வாருடைய. (தொண்டரடிப்பொடியென்னு மடியனை அளியனென்றருளி உன்னடியார்க்காட்படுத்தாய்) என்று சேஷத்வத்தினுடைய சரமாவதியை யிறே இவர் ப்ரார்த்தித்தது. (தாளன்றி) திருவடிகளையொழிய. இவர்கோடியான ஆழ்வார்களுடையவும் பெரியமுதலியார்தொடக்கமான ப்ரபந்நருடையவும் திருவடிகளையொழிய வேறறபடி. (ஆதரியாமெய்யன்) வேறொருஸாதநாந்தர நிஷ்டரை விரும்பாத ஸத்யசீலரான. யதார்த்தார்த்தவாதித்வம் ஸத்யசீலத்வம. ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளை தாம் அவனுக்கு பர்யங்கமாயிருக்கிற தசையிலே கண்டபடியே அவதாரத்திலே ஸ்ரீபாஷ்யத்தை யருளிச்செய்த ஸத்யசீலராகையாலே (மெய்யன்) என்கிறார்.

(இராமாநுசன) எம்பெருமானாருடைய. (சரணகதிவேறெனக்கே) திருவடிகளே என்ற அவதாரணத்தாலே - அநந்யகதித்வஞ்சொல்லிற்று. (எனக்கே) வேறொருக்ரியாவிசேஷத்தைப பண்ணமாட்டாத அகிஞ்சநனான வடியேனுக்கு திருவடிகளே விசேஷித்து உபாயமும் உபேயமுமென்றபடி. (ఉపాయోపేయభావేన తత్త్వత స్స్వదేశికై: । సంశ్రితాంఘ్రిపద్మాయ యతిరాజాయ మంగళమ్) (உபாயோபேயபாவேந தத்வதஸ்ஸ்வதேசிகை: - ஸம்ச்ரிதாங்க்ரிபத்மாய யதிராஜாயமங்களம) என்னக்கடவதிறே. ... ... ... (௪௩)

உரை.—அ—பதினைலாம்பாட்டு. ஸ்ரீகுலசேகரப் பெருமாளுடைய திவ்யஸூக்தியைப் பாடுமவர்களையேத்துமெம்பெருமானார் என்னைப்பிரியாமையாலே புருஷார்த்தலாபத்துக்காக துஸ்ஸாதநங்களை அநுஷ்டிக்கும்ஸ்வபாவமபோகப்பெற்றேனென்கிறார்.

மூ—கதிக்குப்பதறிவெங்கானமுங்கல்லுங்கடலுமெல்லாங், கொதிக்கத்தவஞ்செய்யுங் கொள்கையற்றேன் கொல்லிகாவலன் சொல், பதிக்குங்கலைக்கவிபாடும் பெரியவர்பாதங்களேதுதிக்கும் பரமனிராமாநுசனென்னைச்சோர்விலனே (௪௪)

| பதம். | உரை. |
|---|---|
| கொல்லிகாவலன் | ஸ்ரீகுலசேகரப் பெருமாள், |
| சொல் | ரத்நங்களைப் பதித்தாபபோலே சாஸ்தரச்சொற்களைப்பதித்த, |
| பதிக்கும் கலை | கவிகளை, |
| பாடும்பெரியவர் | ப்ரீதிக்குப் போககுவிட்டுப் பாடாநின்றுள்ள வைபவத்தை யுடையவர்களுடைய, |
| பாதங்களே | திருவடிகளை |
| ஏத்தும் | ஏத்துமவராய், |
| பரமன் | பாகவத விஷயபராவண்யத்துக்கு மேற்பட்டாரில்லாதபடி யிருக்கும், |
| இராமாநுசன் | எம்பெருமானார், |

| பதம். | உரை. |
|---|---|
| என்னைச் சோர்விலன் | என்னைவிட்டு நீங்குகிறிலர், |
| ஆதலால் | ஆதலால், |
| கதிக்குப் பதறி | பரமபதத்தைப் பற்றத்வரித்து, (பொருப்பிடையே நின்றும் புனல்குளித்தும் ஐந்து நெருப்பிடையே நிற்கவும்) என்கிறபடியே |
| வெம் | அத்யுஷ்ணமான, |
| கானமும் | காட்டிலும் மலையோலும் கடலோடுவாசியற |
| கல்லும் கடலும் | [illegible] |
| எல்லாம் | எல்லா வ்யவஸ்தைகளிலும் |
| கொதிக்க | ஜநம் ஒக்க நின்று கொதிக்கும்படியாக, |
| தவஞ்செய்யும் | தபஸ்ஸுக்கள் பண்ணும் |
| கொள்கையற்றேன் | ஸ்வபாவம் போகப் பெற்றேன் |

| பதம். | உரை. |
|---|---|

அன்றிக்கே, (வெங்கானமும் கல்லும் கடலும் எல்லாங்கொதிக்கத் தவஞ்செய்யும் கொள்கை) என்றதுக்கு - இவனுடைய தபஃகௌர்யத்தைக்கண்டு அவைதானும் கிலேசப்படுபரிதபிக்க அவ்வவ ஸ்தலங்களிலே தபஸ்ஸுபண்ணு மஸ்வபாவம் என்றுஞ்சொல்லு வர்கள். (கொல்லிகாவலன் சொல் பதிக்குங்கலைக்கவி) என்றதுக்கு ௧௬-ஸ்ரீகுலசேகரப்பெருமாள் அநுபவபரீவாஹரூபமான ஸ்வோக்திகளை ரத்நங்களைப்பதித்து வைத்தாப்போலே நிரைத்து வைத்ததாய் சாஸ்த்ரரூபமாயிருந்துள்ளகவிகளென்னவுமாம். கொள்கை-ஸ்வபாவம். சோர்வு - பிரிவு. சோர்விலன் - பிரிவிலனென்னபடி. ... ... (௧௬)

அ—பதினாலாம்பாட்டு. இவ்வெம்பெருமானார் தம்முடைய பூர்வாவதாரத்திலே தாம் ஈடுபட்ட சக்ரவர்த்தித்திருமகன்விஷயத்திலே அதிவ்யாமுக்தரான ஸ்ரீகுலசேகரப்பெருமாள், (ஸூக்தி மணிகர்த்தா இவ) (ஸூக்திமணிகர்த்தா இவ) என்னும்படி முகமறிந்தவர்கள் மாணிக்கங்களைக் கோக்குமாப்போலே சாஸ்த்ரஞ்சொல்லுகளைப்பதித்துத் தம்முடைய திவ்யஸூக்திகளாலே நிர்மித்த திவ்யப்ரபந்தங்களை அநுஸந்திக்கும் பெரியோர்களுடைய திருவடிகளை ஸ்துதிக்கும் எம்பெருமானார் என்னை விடமாட்டார், ஆனபின்பு புருஷார்த்தலாபத்துக்காக துஸ்ஸஹங்களான ஸாதநாந்தரங்களை அநுஷ்டிக்கும் ஸ்வபாவம்போகப் பெற்றேனென்கிறார்.

வ்யா.—(கொல்லிகாவலன் சொல்பதிக்குங் கலைக்கவி) கொல்லியென்றுசொல்லப்படுகிற திருவஞ்சிக்களத்துக்கு ரக்ஷகரான ஸ்ரீகுலசேகரப்பெருமாள், சாஸ்த்ரச்சொல்லுக்களினுடைய தாத்பர்யவிஷயபூதங்களாயிருக்கிற பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளையும் தத்வஹிதபுருஷார்த்தங்களையும், முத்துக்களையும் ரத்நங்களையும் முகமறிந்துகோக்கும் விரகரைப்போலே விசதமாகத் தத்தத்ஸ்தாநங்களிலேசேர்த்து, (இருளிரியச்சுடர்மணிகள்) என்றுதொடங்கி, (நலந்திகழ்நாரணனடிக்கீழ் நண்ணுவார்) என்றுமளவாக திவ்யப்ரபந்தரூபேண வருளிச்செய்த போக்யமானகவிகளை. காவலன் - ரக்ஷகன். (பாடும்பெரியவர்பாதங்களே) தந்தாமுடைய ப்ரீதிக்குப் போக்குவீடாகப் பாடாநின்றுள்ள வைபவத்தையுடையரான நாதமுநிகள், ஆளவந்தார், பெரியநம்பி, திருமலைநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, திருவரங்கப்பெருமாளரையர், திருமாலையாண்டான்முதலான ஜ்ஞாநாதிகருடைய திருவடிகளையே. (துதிக்கும்பரமன்) (గురుపాదామ్బుజం ధ్యాయేత్ గురోర్నామ సదా జపేత్। గురోర్వృత్తాన్ కథయేత్ గురోరన్యం న భావయేత్॥ అర్చనీయశ్చ వన్ద్యశ్చ కీర్తనీయశ్చ సర్వదా) (குருபாதாம்புஜம்த்யாயேத் குரோர்நாமஸதாஜபேத்-

குரோர்வ்ர்த்தாம்ஸகதயேத் குரோர்நாமபாலயேத்-அர்ச்சநீயம்ஸ சவந்த்யஸ்ஸகீர்த்தநீயஸ்ஸஸர்வதா) என்கிறபடியே ஸதாஸ்தோத்ரம்பண்ணிக்கொண்டுபோந்து, அந்தபாகவதநிஷ்டைக்கு மேற்பட்டாரில்லையென்னும்படி உத்க்ருஷ்டரான. (யவரேனும்-எம்மையாளும்பரமர்) என்றும், (நம்மையாளுகும் பிரான்கள்) என்றும் *மயர்வறமதிநல மருளப்பெற்றவரும் அப்படியே யருளிச்செய்தாரிறே. (இராமாநுசனென்னைச்சோரவிலனே) (இராமாநுசன்) எம்பெருமானார். (என்னை) பரகதஸ்வீகாரமாக அங்கீகரிக்கப்பட்டவென்னை. (சோர்விலன்) இனிவிடமாட்டார். சோர்வு - பிரிவு. சோர்விலன் என்றது - பிரிகிறிலனென்றபடி. ஆனபின்பு ப்ராப்யத்திலே த்வரித்து ப்ராபகாந்தரங்களிலே கண்வைக்கும் ஸ்வபாவத்தைத் தவிர்ந்தேனென்கிறார். ப்ராபகாந்தர பரித்யாகத்துக்கும் அஜ்ஞாநாசக்திகளன்று, ஸ்வரூபவிரோதமே ப்ராதாநஹேது. “ப்ராபகாந்தரம் அஜ்ஞர்க்குபாயம், ஜ்ஞாநிகளுக்கபாயம்” என்னக்கடவதிறே.

(கதிக்குப்பதறி) பரமபுருஷார்த்தத்துக்கு த்வரித்து. (வெங்கானமும் கல்லும் கடலும்) (பொருப்பிடையேநின்றும் புனலிற்குளித்தும் ஐந்துநெருப்பிடையே நிற்கவும் நீவேண்டா) என்றும், (ஊனவாட வுண்ணாதுயிர்காவலிட்டு உடலில் பிரியாப்புலனைந்தும் நொந்து, தாம் வாடவாடத்தவஞ்செய்யவேண்டா) என்றும், (காயோடுநீடுகனியுண்டு வீசுகடுங்காலநுகர்ந்து நெடுங்காலமைந்து தீயோடுநின்று தவஞ்செய்யவேண்டா) என்று சொல்லுகிறபடியே அதிக்ரூரங்களான காடுகளிலே யிருந்தும் பாஷாணங்களிலே வஸித்தும், சீதளமான ஸமுத்ரங்களிலே அவகாஹித்தும், பஞ்சாக்நிமத்யத்திலே நின்றும், (எல்லாம் கொதிக்கத் தவஞ்செய்யும்) எல்லாவுபாயங்களுக்கு மோக்ஷ பரிதபித்துக் கொதிக்கும்படியாக தபஸ்ஸுகளைப்பண்ணும். (கொள்கையற்றேன்) ஸ்வபாவம் போகப்பெற்றேன். கொள்கை - ஸ்வபாவம்.

அன்றிக்கே, (வெங்கானமும் கல்லுங்கடலும் மெல்லாங்கொதிக்கத் தவஞ்செய்யுங்கொள்கையற்றேன்) என்றது - (ఏతాం దృష్టిమవష్టభ్య నష్టాత్మానోఽల్పబుద్ధయః। ప్రభవన్త్యుగ్రకర్మాణః క్షయాయ జగతోఽహితాః॥ కామమాశ్రిత్య దుష్పూరం దమ్భమానమదాన్వితాః। మోహాద్గృహీత్వాఽసద్గ్రాహాన్ ప్రవర్తన్తేఽశుచివ్రతాః) (ஏதாம்த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மாநோல்பபுத்தய:-ப்ரபவந்த்யுக்ரகர்மாண: க்ஷயாயஜகதோஹித: -காமமாச்ரித்யதுஷ்பூரம் டம்பமாநமதாந்வித: - மோஹாத்க்ருஹீத்வா ஸத்க்ராஹாந்ப்ரவர்த்தந்தேஶுசிவ்ரதா:) என்றுகீதையிலும், (బహుభిర్నియమైర్యుక్తో విశ్వామిత్రో మహామునిః। లోభితః కోపితశ్చైవ తపసా చాభివర్తతే॥ నహ్యస్తి వృజినం కించిచ్ఛ

దృశ్యతేసూక్ష్మమప్యథా। నదీయతేయదిత్వస్యమనసోయదభీప్సితమ్॥ వినాశయేతత్త్రైలోక్యం తపసాసచరాచరమ్। వ్యాకులాశ్చదిశస్సర్వాః నచకిఞ్చిత్ప్రకాశతే॥ సాగరాః క్షుభితాస్సర్వే విశీర్యన్తేచపర్వతాః। ప్రకమ్పతేచపృథివీ వాయుర్వాతిభృశాకులః॥ భాస్కరోనిష్ప్రభశ్చైవ మహర్షేస్తస్యతేజసా) (பஹுபிர்காரணைர்த்தேவோ விச்வாமித்ரோமஹாமுநி:। லோபிதஃகோபிதஶ்சைத புஸாசாபிவர்த்ததே। நஹ்யஸ்திவ்ரஜிநம்கிஞ்சித் த்ர்ஶ்யதேஸூக்ஷ்மமப்யதா। நதீயதே யதித்வஸ்யமநஸோயதபீப்ஸிதம் । விநாசயேதத்ரைலோக்யம்தபஸாஸசராசரம் । வ்யாகுலாஶ்சதிஶஸ்ஸர்வா: நசகிஞ்சித்ப்ரகாசதே । ஸாகரா: க்ஷுபிதாஸ்ஸர்வேவிசீர்யந்தேச ஸர்வத: । ப்ரகம்பதேச ப்ர்திவீவாயுர்வாதி ப்ர்சாகுலா: ॥ பாஸ்கரோநிஷ்ப்ரபஶ்சைவமஹர்ஷேஸ்தஸ்யதேஜஸா) என்று ஸ்ரீராமாயணத்திலும், (తస్యధూమస్సముత్పన్నః సధూమోగ్నిస్తపోమయః। తిర్యగూర్ధ్వమధోలోకాన్ అతపద్విష్వగీరితః। దివిష్ఠాతుంనశక్నువన్) (தஸ்யதூமஸ்ஸமுத்பந்ந: தூமோக்நிஸ்தபோமய:। திர்யகூர்த்த்வமதோலோகா நதபத்விஷ்வகீரித:। திவிஸ்த்தாதும்நசக்நுவந்) என்று பாகவதத்திலும் சொல்லுகிறபடியே இப்படிப்ராப்யாந்தரங்களுக்காக தபஸ்ஸுக்களைப் பண்ணி லோகத்துக்கெல்லாம் க்ஷோபத்தைப்பண்ணும் ஸ்வபாவம் போகப்பெற்றேனென்கிறானென்னவுமாம். ... (கச)

உரை.—அ.—பதினஞ்சாம்பாட்டு. பெரியாழ்வார்திருவடிகளிலே ப்ரவணசித்தரான எம்பெருமானார் குணங்களில் அநந்விதரைச்சேரேன், எனக்கு என்னதாழ்வுண்டென்கிறார்.

மூ.—சோராதகாதல்பெருஞ்சுழிப்பால்தொல்லைமாலையொன்றும்
பாராதவனைப் பல்லாண்டென்று காப்பிடும்பான்மையன்
பேராதவுள்ளத்திராமாநுசன்தன்பிறங்கியசீர் [ருள்
சாராமனிசரைச்சேரேனெனக்கென்னதாழ்வினியே. (கரு

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| சோராத | அவ்யபிசாரிணியான, | ஒன்றும்பாராது | ஏகதேசமும் நிரூபியாதே, |
| காதல் | பக்தியினுடைய பால், | | அநித்யராய் ரக்ஷ்யபூதராயிருப்பார்க்கு ஆயுரர்த்தமாக மங்களாசாஸநம் பண்ணுவாரைப்போலே |
| பெருஞ்சுழிப்பால் | பெரியசுழியில் அகப்படுகையாலே, | | |
| தொல்லை | நித்யனாய், | | |
| மாலை | ஸ்வேதர ஸமஸ்தவஸ்துக்களுக்கும் ரக்ஷகனாகையால்வந்த பெருமையையுடையவனை, | வனை | அவனைக்குறித்து, |
| | | பல்லாண்டென்று | பல்லாண்டு பல்லாண்டென்று காலத்தைப்பெருக்கி, |

| பதம். | உரை. |
| --- | --- |
| காப்பிடும் | "உன்செவ்வடி செவ்வி திருக்காப்பு" என்று மங்களாசாஸநம்பண்ணுகின்றவுள்ளத்தையே |
| பான்மையன்றாள் | தமக்கு ஸ்வபாவமாகவுடையரான பெரியாழ்வாருடைய திருவடிகளை, |
| பேராத | விட்டு நீங்காத, |
| உள்ளத்து | திருவுள்ளத்தையுடையரான, |
| இராமாநுசன்றன் | எம்பெருமானாருடைய, |
| பிறங்கியசீர் | நிரவதிககுணங்களை, |
| சாராமனிசரைச்சேரேன் | தங்களுக்கு அபாச்ரயமாகப் பற்றியிராத மநுஷ்யரைச்சேரேன்; |
| இனி | இந்நினைவு பிறந்தபின்பு, |
| எனக்கென்னதாழ்வு | எனக்கு என்ன குறையுண்டு. |

பிறங்குதல்-மிகுதி, ப்ரகாசமுமாம். சோராதகாதலென்றது-அஸங்குசிதமான காதலென்னவுமாம். அப்போதைக்கு, சோர்தல்-வாடுதல்; அதாவது - ஸங்கோசம். சோராமை-அஸங்குசிதமாயிருக்கை. இத்தால்-பரிபூர்ண பக்தியென்றபடி. ... (௧௫)

---

அ.—பதினைஞ்சாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே-குலசேகரப்பெருமாளுடைய ஸம்பந்தத்தையிட்டுத் தம்மாலே கொண்டாடப்பட்ட எம்பெருமானார் தம்மைபரிக்ரஹித்த வைபவத்தைச்சொல்லி, இப்பாட்டிலே - ஸர்வபூதஸுஹ்ருத்தாய ஸர்வரக்ஷகனான ஸர்வேச்வரனை ஸாக்ஷாத்கரித்து அவனுடைய ரக்ஷகத்வாதிகளிலே கண்வையாதே ப்ரேமத்தைத்தலையெடுத்து அவனுக்கு என்வருகிறதோவென்று மதிசங்கையாலே திருப்பல்லாண்டாலே மங்களாசாஸநம்பண்ணி அவனுக்குக் காப்பிட்ட பெரியாழ்வாருடைய திருவடிகளுக்கு ஆச்ரயமாககின்ற திருவுள்ளத்தையுடையரான எம்பெருமானாருடைய கல்யாணகுணங்களைத் தங்களுக்கு ஆச்ரயமாகப்பற்றியிராத மநுஷ்யரை நானகிட்டேன், ஆகையாலே எனக்கு இனி என்னகுறையுண்டென்கிறார்.

வ்யா.—(சோராதகாதல்) சோராதே-வாடாதே - ஸங்குசிதமாகாதேயிருக்கிறபக்தி. பரிபூர்ணபக்தியென்றபடி. (पुनर्विश्लेषभीरुत्वं परमभक्तिरुच्यते) (புநர்விச்லேஷபீருத்வம் பரமபக்திருச்யதே) என்னும்படியான பக்தியென்றபடி. அன்றிக்கே, சோராதகாதல்-அவ்யபிசாரிணியான பக்தியென்னவுமாம். (பெருஞ்சுழிப்பால்) அவர்பட்டசுழிதான் ஸங்குசிதமன்றாகாநும. (பெருஞ்சுழி) பரிபூர்ணையானபக்தி கரைபுரண்டவோபாதி அதினுடைய மஹாப்ரவாஹத்தின் நடுவேபிறந்ததாகையாலே மஹாவேக கர்த்தத்தோடேகூடி அதிவிஸ்தாரமாயிருக்கிற சுழியிலே யகப்பட்டு

ஆழுங்கால் படுகையாலே. (தொல்லைமாலை) (నిత్యస్సత్యః) (நித்யஸ்ஸத்ய꞉) என்கிறபடியே நித்யஸத்யனுமாய், (ఏకో హ వై నారాయణ ఆసీత్, న బ్రహ్మా నేశానః, సప్తకాశీనరమేత) (ஏகோஹவை நாராயண ஆஸீத், நப்ரஹ்மா நேசாந꞉, ஸஞகாஸீநரமேத) என்றும், (అపినః శ్లిష్టా ప్రళయే జన్తూన్ సవలోక్య జాతనిర్వేదః) (அபிதவிஷ்டாங்ப்ரளயேஜந்தூநவலோக்ய ஜாதநிர்வேத꞉) என்றுஞ் சொல்லுகிறபடியே * ஸம்ஸாரமாகிற பெருங் கடலிலே விழுந்து நோவுபட்டு உருமாய்ந்துகிடக்கிற இச்சேத நருக்காக நிர்வேதப்படும்படியான வ்யாமோஹத்தை யுடைய சரியபதியை.

(ஒன்றும்பாராது) (మఙ్గళానాఞ్చ మఙ్గళమ్) (న వాసుదేవాత్పరమస్తి మఙ్గళమ్) (மங்களாநாஞ்ச மங்களம்) (நவாஸுதேவாத்பரமஸ்தி மங்களம்) என்றும், (உயர்வறவுயர்நலமுடையவன் - அயர்வறு மமரர்களதிபதி) என்றும், (நிகரில்மரர்முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே) என்றும், (ஒன்றும் தேவுமுலகுமுயிரும் மற்றுமியாதுமில்லாவன்று நான்முகன்றன்னொடு தேவருலகோ டுயிர்படைத்தான்) என்றும் சொல்லுகிறபடியே - ஸகலஜகத் ஸ்ரஷ்டாவாய் ஸர்வைச்வர்யாதி ஸர்வமங்களங்களையும் கொடுக்கக் கடவனானவனை இப்புடைகளாலே ஏகதேசமும் நிரூபியாதே. தம் முடைய ப்ரேமபாவசராய்க்கொண்டு, இவையொன்றும் விசாரி யாதே - இவற்றிலொன்றிலும் கண்வையாதேயென்றபடி.

(அவனைப்பல்லாண்டென்றுகாப்பிடும்பான்மையன்தாள்)லோ கத்திலேபரிமிதகாலவர்த்தியான ஸாதாரணஜநங்களுக்குஆயுரர்த் தமாக (ఆయురాశాస్తే) (ஆயுராசாஸ்தே) என்கிறபடியே தீர்க்காயுஷ் மாந்பவேத என்றுமங்களாசாஸநம்பண்ணுவாரைப்போலேஅந்த ச்ரியபதியைக்குறித்து, (பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தா ண்டு, பல்கோடிநூறாயிரமும், மல்லாண்ட திண்டோள் மணி வண்ணாஉன், செவ்வடிசெவ்விதிருக்காப்பு) (நின்வலமார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு, சுடராழியும்பல்லாண்டு, அப் பாஞ்சசன்னியமும் பல்லாண்டு) என்று அபரிமிதமானகாலத்தை யுண்டாக்கி அதுதன்னையேபெருக்கி இப்படிப்பட்ட காலதத்வ முள்ளதனையும் செவ்விமாறாதே நித்யஸ்ரீயாக வாழவேணுமெ ன்று இப்படி மங்களாசாஸநம் பண்ணுகையே தமக்கு ஸ்வ பாவமாகவுடையரான பெரியாழ்வாருடையதிருவடிகளை. பான் மை - ஸ்வபாவம். தாள் - திருவடிகள்.

(பேராதவுள்ளத் திராமாநுசன்றன்) விட்டுநீங்காத திரு வுள்ளத்தையுடையரான எம்பெருமானாருடைய. பேருகை - நீங் குகை. (பிறங்கியசீர்) நித்யாபிவ்ர்த்தமான கல்யாணகுணங்களை.

(కుదృష్టికుహనాముఖేనిపతతఃపరబ్రహ్మణః కరగ్రహవిచక్షణోజయతి లక్ష్మణోయంమునిః) (குத்ர்ஷ்டிகுஹநாமுகேநிபததஃபரப்ரஹ்மண꞉ - கரக்ரஹவிசக்ஷணோஜயதி லக்ஷ்மணோயமுநி꞉) என்கிறபடியே குத்ர்ஷ்டிகளாலே யழிக்கப்பட்ட பகவத்வைபவத்தை ஸ்ரீபாஷ்யமுகேந வெளிப்படுத்தி, இவ்வளவும் இனிமேலுள்ள காலமெல்லாமும் நித்யாபிவ்ர்த்தமாம்படி பண்ணுகையாலே இவருடைய கல்யாணகுணங்களும் நித்யாபிவ்ர்த்தமாய்க்காணுமிருப்பது. பிறங்குதல்-மிகுதி.

(சாராமனிசரை) அவற்றைத் தங்களுக்கு அபாச்ரயமாகப் பற்றியிராத மநுஷ்யரை. (నృదేహమాద్యంప్రతిలభ్యదుర్లభమ్) (ந்ர்தேஹமாத்யம் ப்ரதிலப்யதுர்லபம்) என்கிறபடியே அதிதுர்லபமான மநுஷ்யதேஹத்தையுடையரா யிருந்தும். (పుమాన్భవాప్తిం నతరేత్ స ఆత్మహా) (புமாந்பவாப்த்திம்நதரேத் ஸ ஆத்மஹா) என்னும்படி நஷ்டப்ராயரான மநுஷ்யரென்றபடி. யோக்யதையில்லாதே அங்ஙன்றுபோனார்களென்று ஆறியிருக்கப்போமோ. ச்ரவணமநநங்களுக்கு ஸாதநங்களையுடைத்தான மநுஷ்யதேஹத்தைப்பெற்றும ஆச்ரயியாத கர்ப்பநிர்ப்பாக்யரை. (சேரேன) அப்படிப்பட்டவரை ஒருக்காலும் கிட்டாதே ஸவாஸநமாக விட்டிருந்தேன். (నాస్తిసఙ్గతిరస్మాకం యుష్మాకఞ్చపరస్పరమ్) (நாஸ்திஸங்கதிரஸ்மாகம் யுஷ்மாகஞ்சபரஸ்பரம்) என்கிறபடியே குடநீர்வழித்துக்கொண்டிருந்தேன். (எனக்கென்னதாழ்வினியே) இப்படியானபின்பு எம்பெருமானாருடைய க்ர்பைக்கு விஷயபூதனான வடியேனுக்கு என்ன, தாழ்வுண்டு-என்ன அவத்யமுண்டு. (తదేవముష్యాత్యసుభాగ్యశేషతః)(ததேவமுஷ்யாத்யசுபாங்யசேஷத꞉) என்றும், (సిద్ధేతదీయశేషత్వేసర్వార్థాస్సమ్భవన్తిహి) (ஸித்தேததீயசேஷத்வே ஸர்வார்த்தாஸ் ஸம்பவந்திஹி) என்றுஞ் சொல்லுகிறபடியே ஒருகுறைகளுமின்றிக்கே ஸர்வமும் கரதலாமலகமாயிருக்குமென்றபடி. ... ... ... (௧௫)

உ-ரை.—அ.—பதினாறும்பாட்டு. இப்படி ஸ்வலாபாநுஸந்தாநத்தாலேஹ்ர்ஷ்டரானவர், எல்லாரும் தம்மைப்போலே தத்விஷயப்ரவணராகைக் குறுப்பாக பகவத்வல்லபையானஆண்டாளுடைய ப்ரஸாதபாத்ரமான எம்பெருமானார் லோகத்துக்குச் செய்தவுபகாரத்தை யருளிச்செய்கிறார்.

மூ.—தாழ்வொன்றில்லாமறைதாழ்ந்துதலமுழுதுங்கலியே
ஆள்கின்றநாள்வந்தளித்தவன்காண்மினரங்கர்மௌலி
சூழ்கின்றமாலையைச்சூடிக்கொடுத்தவள்தொல்லருளால்
வாழ்கின்றவள்ளலிராமாநுசனென்றும் * மாமுனியே. ()

* "என்னும் மாமுனி" என்று உரையினபாடம்.

| பதம். | உரை. |
|---|---|
| அரங்கர் | பெரிய பெருமாளுடைய, |
| மௌலிசூழ்கின்றமாலையை | திருமுடியிலே சாத்துகிற திருமாலையை, |
| சூடிக்கொடுத்தவள் | தன்னுடைய திருக்குழலிலே சூடி வாஸிதமாக்கிக் கொடுத்த வைபவத்தையுடையளான ஆண்டாளுடைய |
| தொல் | ஸ்வாபாவிகமான, |
| அருளால் | க்ர்பையே விளைநீராக, |
| வாழ்கின்ற | வாழாநிற்பாராய, |
| வள்ளல் | பரமோதாரராய், |
| மாமுனியென்னும் | முநிச்ரேஷ்டரான, |
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| | நித்யத்வா பௌருஷேயத்வப்ரயுக்தமாய் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணவிலக்ஷணமாய யதாபூதவாதியாயிருக்கையாலே, |

| பதம். | உரை. |
|---|---|
| ஒருதாழ்வில்லாமறை | ஸ்வப்ராமாண்யத்தில் ஒருகுறைவற்றிருக்கிற வேதமானது, |
| தாழ்ந்து | பாஹ்ய குத்ர்ஷ்டிகளாலே அபிபூதமாய்க்கொண்டு இழிவுபட்டு, தீபஸங்கோசத்தில் திமிரவ்யாப்தி போலே, |
| தலமுழுதும் | பூமியெங்கும், |
| கலி | கலியுகமானது, |
| ஆள்கின்றநாள் | தனிக்கோல் செலுத்துகிற காலத்திலே, |
| வந்து | அபேக்ஷாநிரபேக்ஷமாக வந்து, |
| அளித்தவன் காண்மின் | அந்தவேதத்தை உத்தரிப்பித்து லோகத்தை ரக்ஷித்தருளினவர் காணுங்கோள். |

ஆதலால் நீங்களும் என்னைப்போலே அவரையல்லதறியோமென்று இருக்கையன்றோ அடுப்பதென்றுகருத்து. ... (௧௬)

---

அ.—பதினாறும்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - பெரியாழ்வார்ஸம்பந்தத்தையிட்டு எம்பெருமானாரைக் கொண்டாடி, இப்பாட்டிலே அந்த ஆழ்வாருடைய பெண்பிள்ளையான ஆண்டாளுடைய ஸ்வாபாவிகக்ர்பையாலே வாழ்ந்துகொண்டு பரமோதார ஸ்வபாவராய், அத்தாலே எல்லாருக்கும் பரமபதத்தைக் கொடுக்கைக்கு மநநம்பண்ணிக்கொண்டு போருகிற வெம்பெருமானார், வேதமார்க்கமெல்லா மழிந்து பூமண்டலமெங்குமொக்க வ்யாபித்து கலியானது ஸாம்ராஜ்யம் பண்ணுகிறகாலத்திலே * விண்ணின் தலைநின்றும் மண்ணின் தலத்துதித்து எல்லாரையும் ரக்ஷித்தரு

(தாழ்வொன்றில்லாமறை) வேதத்துக்குத் தாழ்வொன்றில்லாமையாவது - பரமப்ரமாதவிப்ரலம்பாதி தர்மவிசிஷ்டத்வம், புருஷப்ரணீதத்வம், ஸ்வப்ராமாண்யே அந்யஸாபேக்ஷத்வம், அநித்யத்வம் தொடக்கமானவற்றில் ஒன்றின்றிக்கே, யதா பூதவாதியாய் அபௌருஷேயமாய் நித்யமுமாயிருக்கை. (மறைதாழ்ந்து) இப்படிப்பட்ட வேதமானது பாஷண்டபரான பாஹ்யகுத்ருஷ்டிகளாலேயாதல், கலிதோஷத்தாலேயாதல் அபிபூதமாய்க் கொண்டு இழவுபட்டு கலியுகமானது வேதத்தை ஸங்கோசிப்பித்து அழித்தபடி ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் ஸ்ரீபாகவதத்திலும் விஸ்தரேண உபபாதிக்கப்பட்டதிறே (కలౌ జగత్పతిం విష్ణుం సర్వస్రష్టారమీశ్వరమ్। నార్చయిష్యన్తి మైత్రేయ పాషణ్డోపహతా జనాః) (கலௌ ஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வஸ்ரஷ்டாரமீச்வரம், நார்ச்சயிஷ்யந்தி மைத்ரேய பாஷண்டோபஹதா ஜநா:) என்றும் (అన్తశ్శాక్తం బహిశ్శైవం సభామధ్యే తు వైష్ణవమ్। కలౌ కష్టాః ప్రవర్తన్తే వర్ణాశ్రమజనా మునే॥ కలౌ కార్తయుగం ధర్మం కర్తుమిచ్ఛన్తి యే నరాః। స్వామిదోషితం మత్వా తస్మై ప్రద్విషతే కలిః) (அந்தஸ்ஸாக்தம் பஹிஸ்ஸைவம் ஸபாமத்யே து வைஷ்ணவம், கலௌ கஷ்டா: ப்ரவர்த்தந்தே வர்ணாச்ரமஜநா முநே, கலௌ கார்த்தயுகம் தர்மம் கர்த்துமிச்சந்தியே நரா:, ஸ்வாமிதரோஷிதம் மத்வா தஸ்மை ப்ரத்விஷதே கலி:) என்றும் சொல்லுகிறபடியே நிஷித்தமார்க்கத்தை நடப்பித்துக்கொண்டு போருகிற கலிதோஷத்தாலே வேதமார்க்கமானது மூலையடியே நடந்து.

(தலமுழுதுங் கலியேயாளுகின்றநாள்) தீபஸங்கோசத்தில் திமிரவ்யாப்திபோலே * இருள்தருமாஞாலமான பூமிக்கு கலியுகமானது தனிக்கோல் செலுத்தும்படி ஸாம்ராஜ்யம்பண்ணுகிறகாலத்திலே. தேசகாலங்கள் ஸமீசீநங்களானால் திருத்திரக்ஷிக்கலாம், அப்படியன்றிக்கே தேசமோ அநேகவிரோதிபூயிஷ்டமானது, காலமோ தத்வசத்ருக்கு வர்த்தகமானது. (வந்து) இப்படி அதிக்ரூரங்களான தேசகாலங்களிலே பரமபதத்தில் நின்றும் இந்த விபூதியிலே ஸ்ரீபெரும்பூதூரிலே யவதரித்தருளி. (அளித்தவன் காண்மின்) உத்தரிப்பித்து இந்தலோகத்தை ரக்ஷித்தவர்காணுங்கோள். எல்லாரும் இவரை ரக்ஷகரென்று தெளிந்து ஆச்ரயித்து உஜ்ஜீவியுங்கோளென்று கருத்து. (கலியுகங்கெடுங்கண்டு கொண்மின்) என்னக்கடவதிறே.... ... ... ... (௧௬)

உரை.—அ.—பதினேழாம்பாட்டு. இப்படி எம்பெருமானார் செய்த வுபகாரத்தைக்கேட்டு தத்ஸமாச்ரயணருசிபிறந்தவர்கள் இவ்விஷயத்தை யாச்ரயித்தாலும் ஸம்ஸாரதுக்கநிபந்தநமான கலக்கம்வரில்செய்வதென்னென்ன; திருமங்கையாழ்வார் பக்கல்

ஸ்நேஹயுக்தராய் எங்கள்நாதராயிருக்கும் வெம்பெருமானாரை ஆச்ரயித்தவர்கள் அவைமேலிட்டாலும் கலங்காரென்கிறார்.

மூ.—முனியார்துயரங்கண்முந்திலுமின்பங்கண்மொய்த்திடினும்
கனியார்மநங்கண்ணமங்கைநின்றானைக்கலைபரவும்
தனியானையைத்தண்டமிழ்செய்தநீலன்றனக்குலகில்
இனியானையெங்களிராமாநுசனைவந்தெய்தினரே. (௧௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கலை | ஸகல சாஸ்த்ரங்களாலும், [னாய், | எங்கள் | எங்களுக்கு நாதரான, |
| பரவும் | ஸ்துதிக்கப் படுவா | இராமாநுசனை | எம்பெருமானாரை, |
| தனி ஆனையை | அத்விதீயமான மத்தகஜம்போலே அத்தால் வந்தசெருக்கையுடையனாய்க்கொண்டு, | வந்தெய்தினர் | வந்துப்ராபித்தவர்கள், |
| கண்ணமங்கைநின்றானை | திருக்கண்ணமங்கையிலேநின்றருளினவனை, "நின்றனக்கும் குறிப்பாகில் கற்கலாம்கவியினபொருள்" என்னும்படி, | துயரங்கள் | துக்கங்களானவை |
| தண் | ப்ரதிபாத்யார்த்த கௌரவத்தாலே ஸாம்ஸாரிக ஸகல தாபஹரமான, | முந்திலும் | அஹமஹமிகயா வந்தாலும், |
| தமிழ்செய்த | தமிழைச் செய்தருளின, [வார்க்கு, | முனியார் | இதுவந்ததேயென்று வெறுக்கார்கள்; |
| நீலன்றனக்கு | திருமங்கை யாழ் | இன்பங்கள் | ஸுகங்களானவை, |
| உலகில்இனியானை | லோகத்திலே ஸ்நேஹிதராயிருப்பாராய், | மொய்த்திடினும் | ஏகோத்யோகேந வந்து திரண்டாலும், |
| | | மநம்கனியார் | பக்வபலம் போலே மநஸ்ஸில் நினைக்கார்கள். |

ஆனபின்பு, நீங்களும் இவற்றால்வரும்ஹர்ஷ காலுஷ்யத்தை நினைத்து அஞ்சவேண்டாவென்று கருத்து. முனிவு - வெறுப்பு. மொய்த்தல்-திரளுதல் ()

அ.—பதினேழாம்பாட்டு. கீழெல்லாம் ஆழ்வார்களுடைய ஸம்பந்தத்தையிட்டே எம்பெருமானாரைக் கொண்டாடுகிற ப்ரகரணமாகையாலே இப்படி எம்பெருமானார் செய்தருளின உபகாரத்தைக்கேட்டு தத்ஸமாச்ரயண ருசிபிறந்தவர்கள் இவ்விஷயத்தை ஆச்ரயித்தாலும் ஸுகதுக்க நிபந்தமாகக்கலக்கம்வாரில

செயவதென்னென்று திருக்கண்ணமங்கையுள் நின்றருளின பத்தராவிவிஷயமாக திவ்யப்ரபந்தத்தை அருளிச்செய்த திருமங்கையாழ்வாருக்கு ப்ரியதமரான வெம்பெருமானாரை ஆச்ரயித்தவர்களுக்கு ஸுகதுக்கங்கள் வந்துமேல்விழுந்தாலும் ஹர்ஷாமர்ஷங்களாலே சலியார்களென்கிறார்.

வ்யா.—(கலைபரவும்) (సర్వే వేదా యత్పదమామనన్తి) (వేదాక్షరాణి యావన్తి పఠితాని ద్విజాతిభిః। తావన్తి హరినామాని కీర్తితాని న సంశయః॥ వేదే రామాయణే పుణ్యే భారతే భరతర్షభ। ఆదౌ మధ్యే తథాన్తే చ విష్ణుః సర్వత్ర గీయతే) (ஸர்வேவேதாயத்பதமாமநந்தி) (வேதாக்ஷராணியாவந்தி படிதாநித்விஜாதிபி: । தாவந்திஹரிநாமாநி கீர்த்திதாநிநஸம்சய:॥ வேதேராமாயணே புண்யே பாரதேபரதர்ஷப। ஆதௌமத்யேததாந்தேச விஷ்ணுஸ் ஸர்வத்ரகீயதே)என்கிறபடியே ஸகலச்ருதிஸ்ம்ருதிஹாஸபுராணங்களாலும் ஸ்துதிக்கப்படுமவனாய். (தனியானை) (ద్యావాపృథివీ జనయన్దేవ ఏకః) (స యశ్చాయం పురుషే, యశ్చాసావాదిత్యే, స ఏకః) (దివ్యో దేవ ఏకో నారాయణః) (த்யாவாப்ருதிவீஜநயன்தேவஏக:) (ஸயஸ்சாயம்புருஷே, யஸ்சாஸாவாதித்யே, ஸஏக:) (திவ்யோதேவஏகோநாராயண:) என்கிறபடியே அத்விதீயமாய மத்தகஜம்போலே செருக்கையுடையனாய்க்கொண்டு. (கண்ணமங்கையுள்நின்றானை) (முத்தின் திரள்கோவையைப் பத்தராவியை நித்திலத்தொத்தினை, யரும்பினையலரை யடியேன்மனத்தாசையை அமுதம் பொதியும் சுவைக் கரும்பினைக்கனியைச்சென்றுநாடி கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே) என்கிறபடியே தன்னுடையபோக்யதையையெல்லாருமநுபவிக்கும்படி திருக்கண்ணமங்கையிலே யெழுந்தருளியிருக்கிற பத்தராவியை

(தண்டமிழ்செய்த) (நின்றனக்குங் குறிப்பாகில் கற்கலாங்கவியின்பொருள்தானே) என்கிறபடியே அவனுடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளாகிற ப்ரதிபாத்யார்த்த கௌரவத்தாலே தன்னை அப்யஸித்தவர்களுடையஸகலதாபங்களுமாறும்படிச்ரமஹரமாய் த்ரமிடபாஷாரூபமாக ப்ரபந்தீகரித்தருளின. (நீலன்றனக்கு) திருமங்கையாழ்வாருக்கு. (கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்றுகாதலால் கலியனுரைசெய்தவண்ணவொண்டமிழ்) என்று ஆழ்வார்தாமே யருளிச்செய்தாரிறே. (உலகிலினியானை) இவ்விபூதியிலே ஸமஸ்தபாகவதஜநங்களுக்கும் அதிப்ரியகரரான.(పరకాలముఖాబ్జమిత్రమ్) (பரகாலமுகாபஜமித்ரம்) என்று ஜீயருமருளிச்செய்தாரிறே. (எங்களிராமாநுசனை) என்னைப்போலே எல்லாரையுமுத்தரிப்பிக்கைக்காகவந்தவதரித்தருளின எம்பெருமானாரை. (வந்தெய்தினரோ) (శ్రీమానావిరభూద్భూమౌ రామానుజదివాకరః) (ஸ்ரீமாநாவிரபூத் பூமௌராமாநுஜதிவாகர:) என்னுமபடியான ப்ரபாவத்தை யறிந்து வந்து ஸபந்திபண்ணி ஆச்ரயித்த பாக்யவான்கள்.

9

(முனியார்துயரங்கள் முந்திலும்) துக்கங்களானவை * அஹமஹமென்கையாய் வந்து மொசிந்தாலும் இது வந்ததேயென்று வ்யாகுலப்படார்கள். முனிவு-வெறுப்பு. (இன்பங்கள் மொய்த்திடினுங்கனியார்மநம்) ஸுகங்களானவை ஏகோத்யோகேந வந்து திரண்டாலும் இந்த அதிசயம் நமக்கு வந்ததேயென்று பக்வபலம் போலே மநஸ்ஸிலே ஏகாகாரங்களாய். மொய்த்தல் - திரளுதல் ([illegible]) (நப்ரஹ்ருஷ்யேத்ப்ரியம்ப்ராப்ய நோத்விஜேத்ப்ராப்யசாப்ரியம்) என்றாரிறே கீதாசார்யரும் ([illegible]) (மதாகதநைநாகஸிம்யாந் தேயதீச்வர ஸம்ச்ரயா.) என்று இவ்வர்த்தத்தை அபியுக்தரும் அருளிச்செய்தாரிறே. ... .. ... ... ... (௧௭)

உ-ரை.—அ.—பதினெட்டாம்பாட்டு நம்மாழ்வாரைத் திருவுள்ளத்திலே வைக்கைக்கு அநுரூபரானவரான ஸ்ரீமதுரகவியாழ்வார்குணங்களை ஸகல ஆத்மாக்களும் உஜ்ஜீவிக்கைக்காக உபகரிக்கும் எம்பெருமானார் எனக்கு ஆன துணையென்கிறார்.

மூ.—எய்தற்கரியமறைகளையாயிரமின்றமிழால்
செய்தற்குலகில்வருஞ்சடகோபனைச்சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும்பெரியவர்சீரையுயிர்களெல்லாம்
உய்தற்குதவுமிராமாநுசனெம்முறுதுணையே. (௧௮)

| பதம். | உரை. | பதம் | உரை. |
|---|---|---|---|
| எய்தற்கரிய | துஷ்ப்ராபங்களான | சடகோபனை | பாஹ்ய குத்ருஷ்டிகளாகிற சடர்க்கு பரதிபடராயிருக்கையாலே சடகோபனென்னும் திருநாமத்தை யுடைய ஆழ்வாரை |
| மறைகளை | வேதங்களை, பரணவம்போலே சுருங்கி யிருத்தல் வேதம்போலே பரவியிருத்தல் செய்கையன்றிக்கே, | | |
| ஆயிரம் | ஆயிரம்பாட்டாகவும், | சிந்தையுள்ளே | தம் திருவுள்ளத்திலே, |
| இன் | அதுதான் ரஸமாகவும், | பெய்தற்கிசையும் | வைக்கைக்குத் தகுதியாயிருந்துள்ள |
| தமிழால் | ஸகல பாலர்களுக்கும் கற்கலான பாஷையாலே, | பெரியவர் | பரபாவத்தை யுடையரான ஸ்ரீமதுரகவிகளுடைய |
| செய்தற்கு | செய்தருளுகைக்கு, | | |
| உலகில்வரும் | லோகத்திலேவந்து அவதரித்தருளினவராய். | சீரை | ஜ்ஞாநாதி குணங்களை. |

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| உயிர்களெல்லாமுய்தற்கு | ஸகலாத்மாக்களுடையவும் உஜ்ஜீவநார்த்தமாக, | எம்முறுதுணை | எனக்கு சீரியதுணை. |
| உதவும் | உபகரித்தருளாநிற்கும், | | |
| இராமாநுசன் | எம்பெருமானார், | | |

அதவா, சடகோபனைச் சிந்தையுள்ளே பெய்தற்கிசையும் பெரியவரென்று - ஆழ்வாரையல்லதறியோமென்றிருக்குமவரெல்லாரையும் சொல்லவுமாம். ()

அ —பதினெட்டாம்பாட்டு. கீழ்ப்பாட்டுக்களிலே ப்ரதிபாதிக்கப்பட்ட ஆழ்வார்களெல்லாரையுங்கொண்டு ப்ரதாநராய் ஸர்வாதிகாரமாம்படி திருவாய்மொழியென்கிற திவ்யப்ரபந்தத்தையருளிச்செய்கைக்காக அவதரித்தருளின நம்மாழ்வாருக்கு அநந்யார்ஹரான ஸ்ரீமதுரகவியாழ்வாருடைய கல்யாணகுணங்களை ஸகலாத்மாக்களும் உஜ்ஜீவிக்கைக்காக உபகரித்தருளின எம்பெருமானார் எனக்கு ஸஹாயமென்கிறார்.

வ்யா.—(எய்தற்கரியமறைகளை) (அநந்தா வை வேதா:)(அநந்தா வை வேதா) என்கிறபடியே ஸங்க்யையிட்டுச் சொல்லப்போகாதபடி அபரிமிதங்களாய், ஸாவேபாஜ்யங்களாகாதே அதிகர்த்தாதிகாரங்களாய், அந்யோபமாதகவாக்யங்களாலே ஸ்வார்த்தத்தைத்தெளியும்போது, எத்தனையேனும் அதிசயிதஜ்ஞாநரானவர்களுக்கும் அருமைப்படுத்தாநடவனவான ஸம்ஸ்க்ருத வேதங்களை. (ஆயிரமின்றமிழால்) வர்ணாதி நியதியின்றிக்கே ருசிபிறந்தவர்களெல்லாரும் அதிகரிக்கும்படியாய், ஆயிரம் என்று ஒருஸங்க்யையோடே கூடியிருப்பதாய், (உயர்வறவுயர்நலம்) என்று தொடங்கி, (உயர்ந்தே) என்னுமளவும் - ஆதிமத்யாவஸாநங்களிலே பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிகளையும், சேதநாசேதநரூபஸ்வபாவங்களையும், சேதநருடைய ஸம்ஸாரபந்தஹேதுக்களையும், தந்நிவர்த்தகோபாயமான தத்விஷய ப்ரீதிரூபாபந்நஜ்ஞாநத்தையும், ஜகத்காரணவஸ்து நாராயணனேயென்று தேவதாவஸ்து விசேஷநிர்த்தாரணத்தையும், அவனுடைய ஸமஸ்தகல்யாண குணாத்மகத்வத்தையும், அநந்தகருடவிஷ்வக்ஸேநாதி திவ்யஸூரி பரிசர்யமாணநளிநனாய்க்கொண்டுநின்றபடியையும், தாமநுபவித்தபடியை எல்லாராலும் அநுபவிப்பிக்கைக்காக தம்முடைய நிர்ஹேதுக பரமகர்பையாலேலெளகிகரைக் குறித்து உபதேசித்தபடியையும், தம்முடைய அபிநிவேசமெல்லாந் தீரும்படி அவனைப்ராபித்தபடியையும் விசதமாக ப்ரதிபாதிப்பதாய், ஸ்வார்த்தத்தையெல்லாம் ஸுஸ்பஷ்டமாகவும் ஸங்க்ரஹமாகவும் தெரிவிக்குமதாய்,

அதாவது அத்யந்தஸரலமாய், (భక్తామృతమ్) (பக்தாம்ருதம்) (தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்) என்னும்படி அநுபோக்தாக்களுக்கு அத்யந்தம் போக்யமாய * நடைவிளங்குதமிழான த்ரமிடபாஷையாலே திருவாய்மொழியென்கிற ப்ரபந்தரூபேண. (செய்தற்கு) அவதரிப்பிப்பதற்கு. ஆவிர்ப்பாவத்தைப் பண்ணுவதற்கென்றபடி.

(உலகில்) (అశుద్ధాస్తేసమస్తాస్తు దేవాద్యాః కర్మయోనయః।) (ఆవిరిఞ్చాదమఙ్గళమ్) (அசுத்தாஸ்தேஸமஸ்தாஸ்து தேவாத்யா: கர்மயோநய:, ஆவிரிஞ்சாதமங்களம்) என்றும், (இருள்தருமாஞாலம்) என்றும், (గర్భజన్మాద్యవస్థాసు దుఃఖమత్యన్తదుస్సహమ్। నకిఞ్చిదణ్యనిత్యం సారమీన్ద్రియగోచరః) (கர்ப்பஜந்மாத்யவஸ்த்தாஸு து:கமத்யந்தது:ஸஹம், நகிஞ்சித கணயநித்யம் ஸாரமிந்த்ரியகோசர:) என்றுஞ் சொல்லப்படுகிற இந்த லீலாவிபூதியிலே. (வருஞ்சடகோபனை) வரும் என்ற வர்த்தமாந நிர்த்தேசத்துக்கு - அவருடைய திவ்யமங்கள விக்ரஹம் ஸமஸ்த திவ்யதேசங்களிலும் ஸமஸ்தப்ரபந்நஜநங்களுடைய திருமாளிகையிலும் நவநவமாய்க்கொண்டு ஆராதயமானதையும் அவருடைய திவ்யஸூக்திகள் இந்தலோகத்திலே இவ்வளவும் இன்னுமுள்ளகாலத்திலும் நடையாடிப்போருகையும் பொருளாகக்கடவது; இப்படியவதரித்தருளின. (சடகோபனை) சடராயுள்ள - ஸ்வரூபஜ்ஞாநமில்லாத ஸம்ஸாரிகள். அவர்களோடு ப்ரதிகூலித்து * ஒருநாயகத்திலும் * நண்ணாதார் முறுவலிப்பும் பருஷம பண்ணியவரை பாஹ்யகுத்ருஷ்டிகளாகிற சடர்க்குப்ரதிபடராயுள்ளவரென்றபடி. இப்படிப்பட்ட நம்மாழ்வாரை.

(சிந்தையுள்ளே) தம்முடைய திருவுள்ளத்திலே. (வைத்தற்கு) தமக்கு பரதேவதையாய ஆராத்யராயிருக்கும்படி வைக்கைக்கு. (இசையும்) உபயுக்தமானப்ரபாவத்தையுடைய (மேவினேனவன் பொன்னடி மெய்ம்மையேதேவுமற்றறியேன்) என்றும், (மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள நிற்கப்பாடியென் னெஞ்சுளநிறுத்தினான்) என்றும்றே இவர்தாமருளிச்செய்யும்படி. (பெரியவர்) "உண்டபோதொருவார்த்தையும் உண்ணாதபோதொருவார்த்தையுஞ் சொல்லுவார் பத்துப்பேருண்டிறே, அவர்கள் பாசுரங்கொண்டன்று இவ்வர்த்தமறுதியிடக்கடவது; அவர்களைச்சிரித்திருப்பாரொருவருண்டிறே; அவர் பாசுரங்கொண்டு இவ்வர்த்தமறுதியிடக்கடவோம்" என்று ஸ்ரீவசநபூஷணத்திலே சொல்லுகிறபடியே - (యస్మాత్తదుపదేష్టాసౌ తస్మాద్గురుతరో గురుః। అర్చనీయశ్చవన్ద్యశ్చ) (யஸ்மாத்ததுபதேஷ்டாஸௌ தஸ்மாத்குருதரோகுரு:। அர்சநீயஸ்சவந்த்யஸ்ச) இத்யாதிசாஸ்த்ரங்களிலே சொல்லப்பட்ட சரமபர்வநிஷ்டராயும் தத்ப்ரவர்த்தகராயுமிருக்கையாகிற மஹாப்ர

பாவத்தையுடையவராகையாலே ஸர்வாதிகரான ஸ்ரீமதுரகவியாழ்வாருடைய. (சீரை)(மாறன் சடகோபன்வண்குருகூரெங்கள், வாழ்வாமென்றேத்தும மதுரகவியா ரெம்மை, யாள்வாரவரே யரண்) என்றும்,(பாருலகில் மற்றுள்ளவாழ்வார்கள் வந்துதித்தநாள்களிலும் உற்றதெமக்கென்று நெஞ்சேயோர்) என்றும் இப்படி ச்லாகிக்கப்பட்ட கல்யாணகுணங்களை.

(உயிர்களெல்லாம்) வர்ணாச்ரமகுணவ்ர்த்தாத்யுத்க்ர்ஷ்டாபக்ர்ஷ்டவிபாகமறருசியுடையரான ஸகல ஸம்ஸாரிகளுடையவும். (உய்தற்கு) உஜ்ஜீவநார்த்தமாக. இதொழிந்த உபாயங்களெல்லாம் உஜ்ஜீவநஹேதுக்களன்றென்றுகாணும் இந்தவமுதனாருடைய திருவுள்ளத்திலோடுகிறது. (உதவும்) உபகரித்தருளும. எல்லாருக்கும் மோக்ஷோபாயமான திருமந்த்ரார்த்தத்தை யுபதேசிக்கும்வேளையிலே அர்த்தவிசேஷங்களையெல்லாம ததீயபர்யந்தமாக அநுஸந்திக்கவேணுமென்னும மதுரகவியாழ்வாருடைய நிஷ்டையையேகாணும் எம்பெருமானாருபதேசிப்பது. (இராமாநுசனெம துணையே) இப்படிப்பட்ட எம்பெருமானார் எனக்குத்தாடமான துணை. துணை-ஸஹாயபூதர். உறு-தர்டம. இதனால்-பரமபதத்திலே கொண்டுபோய்ச்சேர்க்குமென்றபடி. அன்றிக்கே, பெரியவா என்கிறபதத்துக்கு - ஆழ்வாருடைய திருவடிகளைத் திருவுள்ளத்திலே நிறுத்திக்கொண்ட ஸ்வாமிகளெல்லாரும என்றும பொருளாகவுமாம. ... ... ... ... ... ... ... (கஅ)

உரை.—அ.—பத்தொன்பதாம்பாட்டு. ஐச்வர்யாதி பரதேவதாபர்யந்தமான அபேக்ஷிதவஸ்துக்களெல்லாம திருவாய்மொழியேயென்று ஜகத்ப்ரஸித்தமாகநின்ற எம்பெருமானார எனக்குநிரதிசயபோக்யரென்கிறார்.

மூ.—உறுபெருஞ்செல்வமுந்தந்தையுந்தாயுமுயர்குருவும்
வெறிதருபூமகள்நாதனும்மாறனவிளங்கியசீர்
நெறிதருஞ்செந்தமிழாரணமேயென்றிந்நீணிலத்தோர்
அறிதரநின்றவிராமாநுசனெனக்காரமுதே. (ககூ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| உறு | ஸ்வஸம்பந்தமுடையவர்களுக்கு இனனென்னு மபவைக்கொடுக்குமதாய் ஹிதகாமுமாய ப்ரியகாமுமாய அஜ்ஞாத | | ஜ்ஞாபகமுமாய்ப் ராப்ய ப்ராபகங்களுமாயிருக்கையாலே சீரியதாய், |
| | | பெரும | நிரவதிகமான |
| | | செல்வமும் | ஸம்பத்தும், |
| | | தந்தையும் | பிதாவும், |

(செல்வமும்) ஸம்பத்தும். * அளவியன்றவநந்தாதியாயிறே யிது. (தந்தையுமதாயும) (మాతాపితృసహస్రేభ్యో వత్సలతరంశాస్త్రమ్) (மாதாபிதர்ஸஹஸ்ரேப்யோவத்ஸலதரஂசாஸ்த்ரம்) என்று-ஸகல ஜநோஜ்ஜீவநப்ரவர்த்தமாயிறே வேததவஸாமாநய விசிஷ்டவேதம் எல்லாரும் விரும்புவது. அப்படியே (ద్రావిడవేదసాగరమ్) (த்ராவிடவேதஸாகரம) என்று இத்தைவேதமாகநிதர்சிக்கையாலே ஸகலஜநோஜ்ஜீவநைகபரவர்த்தமாகையாலும, (భక్తామృతంవిశ్వజనానుమోదనమ్) (பக்தாமாதஂவிச்வஜநாநுமோதநம்) என்றும, (தொண்டர்க்கமுதுண்ணச்சொனமாலைகள சொன்னேன்)என்றும்சொல்லுகிறபடியே ப்ரியததையே நடததககடவதாகையாலும், திருவாய்மொழியிலே (வீடுமின்முற்றவும) என்று தொடஙகி, (கண்ணன்கழலிணை) என்றுமளவும் ஆதயநதத்திலே ஹிதத்தையேபோதிக்கையாலே ஹிததத்தை நடததககடவதாகையாலும் தாயுந்தந்தையுமாயிருககுமெனறபடி.

(உயாகுருவும்)(పుత్రాన్ బన్ధూన్ సఖీన్ గురూన్ - సర్వధర్మాంశ్చ సంత్యజ్య) (புத்ரான் பந்தூன்ஸகீன்குருந் - ஸர்வதர்மாஂஸ்சஸஂத்யஜ்ய) என்று த்யாஜ்யகோடியிலே பரிகணிககப்பட்ட குருவன்றிககே, (అత్రపరత్రాపి)(அத்ரபரத்ரசாபி)என்கிறபடியே உபயவிபூதியிலும் இச்சேதநனுக்கு உபாதேயதமனாய, * பொருளல்லாத வென்னைப் பொருளாக்கி அஜ்ஞாதஜ்ஞாபநம்பண்ணின ஸதாசார்யனும். இவ்வுபகாராதிசயததாலேகாணும் இவன் பரிதயாஜ்யனுகாதே யொழிந்தது. உயர்த்தியையுடையனானும், சேதநருடைய அஜ்ஞாநாந்தகாரத்தை நிவர்த்திப்பிததவனுகையாலே (குரு) என்கிறார். (అన్ధకారనిరోధిత్వాత్ గురురిత్యభిధీయతే) (அந்தகாரநிரோதித்வாத்குருரிதயபிதீயதே) என்னககடவதிறே.

(வெறிதருபூமகளநாதனும) வெறி-பரிமளம். இந்தபதம் புஷ்பத்துக்கு விசேஷணமாய-பரிமளமான புஷ்பத்தைப் பிறப்பிடமாக வுடையளான பெரியபிராட்டியாருக்கு, (பூமகளார் கனிககேள்வன)என்கிறபடியே வல்லபனான ஸர்வேச்வரனென்றபடி. அன்றிககே (வெறிதருபூமகள்) வெறிஎன்கிறபதம் பிராட்டிககு விசேஷணமாய, (గన్ధద్వారామ్) (கநதத்வாராம்) என்கிறபடியே திவ்யகந்த பரதமான திருமேனியையுடைய பெரியபிராட்டியாரென்னவுமாம. அனறிககே (வெறிதருபூமகள் நாதனும்) வெறி என்கிறபதம ஈச்வரனுக்கு விசேஷணமாய்,(సర్వగన్ధః) (ஸர்வகந்த:) என்கிறபடியே திவ்யபரிமளஸ்வரூபனான ஸ்ரீயஃபதி யென்றுஞ் சொல்லவுமாம.

இவ்வபிநிவேசமெல்லாம்இவருக்குஎவ்விஷயத்தைப்பற்றவென்றால் (மாறன்விளங்கியசீர்நெறிதருஞ்செந்தமிழாரணமேயென்று)

(மாறன்) நம்மாழ்வாருடைய பிதாவானகாரியாலே ஸமர்ப்பிக்கப்பட்ட திருநாமமாய்த்து - இது. இப்படிப்பட்ட நம்மாழ்வாருக்கு. (விளங்கிய) ப்ரகாசித்த. ஸர்வேச்வரன் தன்னுடைய நிர்ஹேதுகக்ருபையாலே உபயவிபூதிவ்ருத்தாந்தங்களையெல்லாம் அடைவேயறியலாம்படி * மயர்வறமதிநலமருளப்பெற்ற நம்மாழ்வாருக்கு. (ఏవంనిత్యాత్మభూతాధాత్రసౌకోపఃప్రణేష్యతి) (ஏவம்நித்யாத்மபூகாதாஸ்யஹட கோபஃப்ரணேஷ்யதி)என்கிறபடியே நித்யாபௌருஷேயமாயிருக்கிறவிது அவாதம்மாலேயுண்டாக்கப்பட்டதென்று,தோற்றும்-ப்ரகாசித்ததென்றபடி. ஆகையாலேயிறே (விளங்கிய) என்றருளிச்செய்கிறார். (சீர்நெறிதரும்) பகவத்ஸ்வரூபரூபகுணவிபூதிஸ்ரீயையெல்லாம் எல்லாருமறியும்படி ஸாத்மிகக ஸாத்மிக்க அநுபவிப்பிக்குமதாய். நெறி-ஒழுக்கம். அதாகிறது-ஸாத்மிக்க என்றபடி.

அன்றிக்கே, (மாறன்விளங்கியசீர்நெறிதரும்) ஆழ்வார், பகவத்ப்ரஸாதத்தாலேதமக்குப்ரகாசித்த பரபக்த்யாதி ஸ்வபாவங்களினுடைய அடைவிலே உபகரித்தருளினவென்று யோஜிக்கவுமாம். அங்ஙனன்றிக்கே, (சீர்நெறிதரும்) (అగస్త్యోభగవాన్సాక్షాత్తస్య వ్యాకరణంవ్యధాత్। ఛన్దశ్శాస్త్రానుసారేణ వృత్తానామపిలక్షణమ్॥ ఉక్తమన్యైస్తథాచార్యైర్ద్రామిడస్యమహామునే। సంస్కృతస్యయథాసన్తి పాఠ్యబన్ధస్యసర్వతః॥ లక్షణానితథాసన్తిద్రామిడస్యాపిభూతలే) (அகஸ்த்யோபகவாந்ஸாக்ஷாத தஸ்யவ்யாகரணம்வ்யதாத் । சந்தஶ்ஶாஸ்த்ராநுஸாரேண வ்ருத்தாநாமபி லக்ஷணம் ॥ உக்தமந்யைஸ்ததாசார்யை; த்ராமிடஸ்யமஹாமுநே। ஸம்ஸ்க்ருதஸ்யயதாஸந்தி பாட்யபந்தஸ்யஸர்வத;॥ லக்ஷணாநிததா ஸந்தி த்ராமிடஸ்யாபிபூதலே) எனகையாலே - எழுத்து, அசை, சீர், பந்தம், அடி, தொடை, நிரை, பா என்று சொல்லபபடுகிற ப்ரபந்தலக்ஷணபேதமாயிருக்குமெனனவுமாம். (சீர்) என்கிறவிது - எழுத்து அசைதொடககமானவற்றுக்கு உபலக்ஷணமாகக்கடவது. நெறி-ஒழுககம. அதாவது-ஸ்வபாவமாய - லக்ஷணமென்றபடி. தருகை-உடைததாகை.

(செந்தமிழாரணமேயென்று) ஆதிமத்யாவஸாநங்களிலே ஏகரூபமாய் த்ராமிடபாஷாரூபமான உபநிஷத்தேயென்று அவதாரணத்தாலே - அந்யயோகவ்யவச்சேதமபண்ணுகிறது. இதுகாறும எம்பெருமானாருடைய ப்ரதிபத்தி. எமபெருமானார் தமக்கு ஐசவர்யாதி பரதேவதாபர்யந்தமான புருஷார்த்தங்களெல்லாம திருவாய்மொழியேயன்றி வேறொன்றை அதயவஸிததிராரொன்றபடி (இந்நீணிலத்தோரறிதரநின்ற) இவ்வர்த்தத்தை விஸ்தீர்ணையான இந்த ப்ருதிவியிலேயுள்ள சேதநர்ககு அஜ்ஞாதஜ்ஞாபநமபண்ணுகைக்கு நின்றருளின.

அன்றிக்கே, இவ்வர்த்தத்தைமஹாப்ர்திவியி லுள்ளாரெல்லாருமறியும்படிநின்றருளின வென்னவுமாம். (ஏதத்வ்ரதம்மம) (ஏதத்வ்ரத0மம) என்கிறபடியே பத்தகங்கணராயிருக்கிற வென்றபடி. (இராமாநுசன்) எம்பெருமானார். (எனக்காரமுதே) அடியேனுக்கு அபர்யாப்த்தாம்ர்தம்; - நிரதிசயபோக்யனென்றபடி. (உக)

உரை.—அ.—இருபதாம்பாட்டு. நாதமுனிகளைத் தம்திருவுள்ளத்திலே அபிநிவேசித்தநுபவிக்கும் எம்பெருமானார் எனக்கு பரமதநமென்கிறார்.

மூ.—ஆரப்பொழில்தென்குருகைப்பிரானமுதத்திருவாய்
ஈரத்தமிழினிசையுணர்ந்தோர்கட்கினியவர்தம்
சீரைப்பயின்றுய்யுஞ்சீலங்கொள்நாதமுனியைநெஞ்சால்
வாரிப்பருகுமிராமாநுசனென்றன்மாநிதியே. (உ0)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆரப்பொழில் | சந்தநச் சோலைகளையுடைத்தாய, | உய்யுமசீலங்கொள் | தன்ஸத்தை பெறுகிற்கும் ஸ்வபாவத்தையுடையரான, |
| தென் | தர்சநீயமான, | நாதமுனியை | நாதமுனிகளை, |
| குருகைப்பிரான் | திருநகரிக்கு நாதபூதரான ஆழ்வாருடைய, | | பெருவிடாயர் மடுவிலே புகுந்து வாரிப்பருகு மாப்போலே, |
| அமுதம் | பரம போக்யமான, | நெஞ்சால் | தம்திருவுள்ளத் தாலே, |
| திருவாய | திருப்பவளத்தில் பிறந்த, | வாரிப்பருகும் | அபிநிவிஷ்ட ராய்க் கொண்டு அநுபவிக்கும், |
| ஈரம் | ஈரப்பாட்டையுடைத்தான, | இராமாநுசன் | எம்பெருமானார், |
| தமிழினிசை | திருவாய்மொழியினிசையை, | என்றன்மாநிதி | எனக்கு அக்ஷயமான நிதி. |
| உணர்ந்தோர்கட்கு | அறிந்தவர்களுக்கு, | | |
| இனியவர்தம் | ஸ்நிக்தரா யிருக்குமவர்களுடைய, | | |
| சீரை | குணங்களிலே, | | |
| பயின்று | செறிந்து, | ஆரம்—சந்தநம். | (உ0) |

வ்யா.—அ.—இருபத்தோராம்பாட்டு. தர்சநீயமான திருநகரிக்கு நிர்வாஹகரான நம்மாழ்வாருடைய அம்ர்தமய திவ்யஸூக்திரூபமாயிருந்துள்ள திருவாய்மொழியை ஸார்த்தமாக அப்யஸிக்கவல்லவர்திறத்திலே அதிப்ரவணராயிருக்குமவர்களுடைய கல்யாணகுணங்களிலே ஸக்தராய் உஜ்ஜீவிக்கும் ஸ்வபாவத்தையுடையரான ஸ்ரீமந்நாதமுநிகளை தம்முடையமநஸ்ஸாலே யநுபவிக்கும் எம்பெருமானார் அடியேனுக்கு மஹாநிதியாயிருப்பரென்கிறார்.

வ்யா.—(ஆரப்பொழில்தென்குருகை) திருத்தாம்ரபர்ணீதீர மாகையாலும் - நீர்வாசியாலும் நித்யாபிவ்ருத்தங்களான சந்தநச் சோலையாலே சூழப்பட்டு தாசநீயமான திருக்குருகூர்க்கு. ஆரம்-சந்தநம். (பிரான்) ஸர்வருக்கும் ஸேவ்யமாம்படி உபகாரகர். (குயில்நின்றால் பொழில்சூழ்குருகூர்நம்பி) என்று ஸ்ரீமதுரகவி யாழ்வாரருளிச்செய்தாரிறே. (குருகைப்பிரான்) திருக்குருகை யிலே யவதரித்து ஸகலஜகங்களுக்கும் திருவாய்மொழி முகத்தா லும், நாதமுநிகளுக்கு ஸகலார்த்தங்களையு முபதேசித்து ஸம்ப்ர தாயத்தை நடத்தினபடியாலும் உபகாரகரென்றபடி. (அமுதத் திருவாயிரத் தமிழினை) இப்படிப்பட்ட நம்மாழ்வாருடைய, (தொண்டர்க்கமுதுண்ணச்சொன்மாலைகள்சொன்னேன்)என்கிற படியே பரமபோக்யமாய்க் கொண்டு திருப்பவளத்தில பிறந்த தாய், ஸ்வநிஷ்டரான சேதநருடைய ஸம்ஸாரதாபமெல்லாம ஆறும்படியாக ஏரப்பாட்டையுடைத்தாய, த்ரமிடபாஷாரூபமான திருவாய்மொழியினுடைய. (இசை) சாநம. ராகாதி லக்ஷணங்க ளோடேகூடி. (உணர்ந்தோர்கட்கு) அப்யஸித்து பின்னையும ஆவ ர்த்தியண்ணி அதிலே பூர்ணஜ்ஞாநமுடையவர்களுக்கு.ஸ்ரீமந்மது ரகவிகள், திருமங்கையாழ்வாமுதலானவர்களுக்கென்றபடி.

(இனியவர்) அவர்களுக்கு அத்யந்தம் ப்ரியதமராய் ஸ்ரீமந் நாதமுநிகளுக்குக்கண்ணிநுண் சிறுத்தாமபை உபதேசித்தருளின ஸ்ரீபராங்குசநம்பி. (இனியவர்தம சீரைபயயின்று) அவர்களு டைய கல்யாணகுணங்களை ஸாவகாலமு மநுஸந்தித்து அவர் செய்தருளின உபகாரத்தை விஸ்மரியாதே க்ருதஜ்ஞராய்க்கொ ண்டு. பயிலுதல்-அநுஸந்திக்கை. (உயயும்) அவ்வளவாக இவரு க்கு உஜ்ஜீவநமில்லை, அந்தமதுரகவியாழ்வாருடைய ஸம்ப்ரதாய ஸத்தரான ஸ்ரீபராங்குசநம்பி உபதேசித்த வநந்தரம் அவர்பக்கலிலே க்ருதஜ்ஞராயப்போந்தபின்பு காணும் இவர் உஜ்ஜீவித்தது (சீலங்கொள்நாதமுனியை) இப்படி உஜ்ஜீவநமேஸ்வபாவமாக வுடையரான ஸ்ரீமந்நாதமுனிகளை. ஸ்ரீரங்கநாதருடையதிருநாமத் தைவஹித்து ஆழ்வார் தமக்கு உபதேசித்தவர்த்தங்களை அடை வே ஸர்வதாமநநம் பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந்நாதமுநிகளை யென்றபடி.

(நெஞ்சால் வாரிப்பருகும்) ஸமாநகாலமானால் காயிகமாகத் தழுவி முழுசிப் பரிமாறி யநுபவிப்பர்காணும். அதயந்தகாலவ்ய வதாநமா யிருக்கையாலே அந்தஸ்ரீமந்நாதமுநிகளை நெஞ்சாலே யள்ளிக்கொண்டு பிறிகதிர்ப்படாதபடி விக்ரஹகுணங்களோடே கூட வநுபவிக்கிற. பருகுகை - அநுபவிக்கை. (இராமாநுசன்)

எம்பெருமானார். (என்றன்மாநிதியே) லோகத்தாரெல்லாருக்குமாக அவதரித்தாராகிலும் அமுதனாருடைய அத்யவஸாயம் தமக்கேயாகவவதரித்தாரெனறுகாணும். (என்றன்மாநிதி) அடியேனுடைய மஹாநிதி. நவநிதியானதங்களுக்கும்தைநம்திரயப்ரளயத்திலும் அழிவுண்டு, அப்படி யன்றிக்கே அவற்றைக்காட்டில் விலக்ஷணமாய் அப்ராக்ர்தமான நிதியென்கிறார். யாவதாத்மபாவியாக உஜ்ஜீவந ஹேதுவாயிருக்கும் நிதியென்றபடி. (𑌅𑌤𑍍𑌰 𑌪𑌰𑌤𑍍𑌰 𑌚𑌾𑌪𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌂 𑌯𑌦𑍀𑌯𑌚𑌰𑌣𑍌 𑌶𑌰𑌣𑌂 𑌮𑌦𑍀𑌯𑌂) (அத்ரபாதரசாபிநித்யம் யதீயசரணௌ ஶரணம்மதீயம்) என்றருளிச்செய்தாரிறே ஆளவந்தாரும். (௨0)

உரை.—அ.—இருபத்தோராம்பாட்டு. ஆளவந்தாருடைய திருவடிகளாகிற ப்ராப்யலாபத்தைப் பெற்றுடைய எம்பெருமானார் என்னை ரக்ஷித்தருளினார், ஆகையால் க்ஷுத்ரருடைய வாசல்களிலேநின்று அவர்கள்ஔதார்யாதிகளைச்சொல்லி ஸ்துதியேனென்கிறார்.

மூ.—நிதியைப்பொழியும்முகிலென்றுநீசர்தம்வாசல்பற்றித்
துதிகற்றுலகில்துவள்கின்றிலேனினிதூய்நெறிசேர்
எதிகட்கிறைவன்யமுனைத்துறைவனிணையடியாங்
கதிபெற்றுடையவிராமாநுசனென்னைக்காத்தனனே. (உக

| பதம். | உரை. |
|---|---|
| தூய்நெறி சேர் எதிகட்கு | பரிசுத்தாநுஷ்டாநயுக்தரானயதிகளுக்கு, |
| இறைவன் | நாதரான, |
| யமுனைத்துறைவன் | ஆளவந்தாருடைய, |
| இணை | பரஸ்பரஸத்ர்சமான |
| அடியாம் | திருவடிகளாகிற |
| கதிபெற்றுடைய | ப்ராப்யத்தைப் பெற்றுடையராயிருக்கும், |
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| என்னைக்காத்தனன் | என்னை ரக்ஷித்தருளினார்; |
| இனி | ஆனபின்பு, |
| நிதியைப் பொழியும் முகிலென்று | நிதியை வர்ஷியாநிற்கும் மேகமென்று, |

| பதம். | உரை. |
|---|---|
| | அவர்களுடைய ஔதார்ய கதநத்துக்குறுப்பான, |
| துதிகற்று | ஸ்தோத்ரங்களைக் கற்று, |
| உலகில் | லோகத்திலே, |
| நீசர்தம் | அஹங்காராதி தூஷிதரான தண்ணியர்களுடைய, |
| வாசல்பற்றி | வாசலைப்பற்றி நின்று என்னுடைய ரக்ஷணார்த்தமாக அவர்களுடைய அவஸரம் பார்த்து, |
| துவள்கின்றிலேன் | துவளக்கடவேனல்லேன். |

தூய்நெறிசேர் எதிகட்கிறைவன் என்கிறவிது ஆளவந்தார்க்கு விசேஷணமாகவுமாம். நெறி-ஒழுக்கம். கதி-கதி; அதாவது-ப்ராப்யம். (உக)

அ.—இருபத்தோராமபாட்டு. இவ்வளவும் ஆழ்வார்களுடையவும ஸ்ரீமந்நாதமுனிகளுடையவும ஸம்பந்தத்தையிட்டு எம்பெருமானாருடைய வைபவத்தை யருளிச்செய்துகொண்டு வந்து, இதிலே - சரமபர்வநிஷ்ட்டரெல்லார்க்குமஸ்வாமியான ஆளவந்தாருடைய திருவடிகளை உபாயோபேயமாகப்பற்றின எமபெருமானார் என்னை ரக்ஷித்தருளினபின்பு இனிநீசரான மநுஷ்யரை ஸ்துதித்து க்லேசப்படேனென்கிறார்.

வ்யா.—(தூய்நெறிசேர்) ([illegible]) (ச்ருதிபதவிபரீதம் க்ஷ்வேளகல்பம் ச்ருதௌசப்ரகர்திபுருஷயோகப்ராபகம் சோநதத்ய:) என்கிறபடியே அபரிசுத்தமாயிருக்கிற உபாயாந்தரங்களுக்கும் * ப்ராபகாந்தரபரித்யாகத்துக்கும் அஜ்ஞாநசக்திகளன்று ஸ்வரூபவிரோதமே ப்ரதாநஹேதுவென்றும், மதிராபிந்துமிச்ரமான சாதகும்பகும்பகத தீர்த்தஸலிலம்போலே அஹங்காரமிச்ரமான உபாயாந்தரமென்றுஞ் சொல்லப்படுகிற அவத்யங்களொன்றுமின்றிக்கே அத்யந்தபாரதந்த்ர்ய ஸ்வரூபாநுரூபமாய், அதிலும் பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவான ஈசவரனைப பற்றுகை யன்றிக்கே மோக்ஷைகஹேதுவான ஸதாசார்யனைப்பற்றி, அதிலும் அஹங்காரகர்ப்பமானதானபறறுமபற்றுகையன்றிக்கே காருணிகாரபரஸநாசார்யரான ஆளவந்தாரதமமாலே பரகதமாக ஸ்வீகரிக்கப்பட்டதாகையாலே அத்யந்த பரிசுத்தமான ஆசார்யாபிமாநத்திலே யொதுங்கி வர்த்திக்கிற. தூயமை-பரிசுத்தி. நெறி-உபாயம்.

(எதிகட்கு) ([illegible]) (ஐஹிகாமுஷ்மிகம் ஸர்வம்கதிரஷ்டாக்ஷரப்ரத:) என்றும், ([illegible]) (மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ் ஸர்வம) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸ்வாசார்யரான ஆளவந்தாரே தங்களுக்கு ஐஹிகாமுஷ்மிகங்களெல்லாம என்றுகொண்டு மேகபிந்துகளையொழிய மற்றொன்றைவிரும்பாத சாதகம்போலே ததீய விஷயங்களை விரும்பாதபடி தந்தாமுடைய மநஸ்ஸை நியமித்துப் போருகிற பெரியநம்பி, திருமலைநம்பி, திருக்கோட்டியூர்நம்பி, திருவரங்கப் பெருமாளரையர், திருமாலையாண்டான், திருக்கச்சி நம்பி, மாறனேரிநம்பிமுதலானவர்களுக்கு (இறைவன) ஸ்வாமியானவர்.

(யமுனைத்துறைவன்) யமுநாதீரத்திலே யெழுந்தருளியிருந்த நாதமுநிகளுக்கு உத்தேச்யராய் காட்டுமன்னார்கோயிலிலே யெழுந்தருளி யிருந்த ஸ்வாமிகளுடையதிருநாமத்தை வஹித்த ஆளவந்தாருடைய. (இணையடியாம்) பாவநத்வபோக்யத்வங்க

ளாலே பரஸ்பரஸத்ர்சமான திருவடிகளாகிற. (கதிபெற்று) உபாயத்தை லபித்து. உபாயோபேயங்களாகப் பற்றியென்றபடி. கதி-கதி. அதாவது-ப்ராப்யமும், ப்ராபகமும். அத்தாலே-லோகத்தில் ப்ரபந்நஜநங்களுக்கெல்லாம் ஸ்வாமியாயிருக்கிற. (இராமாநுசன்) எம்பெருமானார். (என்னைக்காத்தனனே!) லோகத்திலே ஜ்ஞாநாதிகர்களை ரக்ஷித்தது ஆச்சர்யமாயிராது, ப்ரதிகூலனாயிருக்கிற வென்னை அநுகூலனாக்கி ரக்ஷித்தான; இதென்ன அகடிதகடநாஸாமர்த்யமென்று விஸ்மிதராகிறார். தூயநெறிசேர் யதிகட்கிறைவன யமுனைத்துறைவனிணையடியாங் கதிபெற்றுடைய என்கிறது - எம்பெருமானாருக்கு விசேஷணமாகவுமாம்.

(இனி) அவர்க்கு அடியேன் ரக்ஷ்யபூதனாய விட்டபின்பு. (இனி) மேலுள்ளகாலமெல்லாம், (நீசர்தமவாசலபற்றி) ([illegible]) (யர்கருசிதபுருஷாதமமுகதிபயகராமேச மல்பார்த்ததம) என்கிறபடியே அஹங்கார தூஷிதராய நிஹீநரா யிருக்கிறவர்களுடைய, ([illegible]) (துரீசவரதவாரபஹிர் விதர்த்திகாதுராஸிகாயைரசிதோயமஞ்ஜலி:) என்கிறபடியே நரகப்ராயமானவாசலை ஆச்ரயித்து.

(நிதியைப்பொழியும்முகிலென்று) லோகத்திலே மேகம ஜலத்தைவர்ஷிக்கு மித்தனை, இந்த தாதாவானவன நவநிதியையும ஒருக்காலே வர்ஷிக்கும காளமேகமாயிருந்தாயென்று. (துதிசற்று) (சொன்னால் விரோதமிதாகிலும சொல்லுவன கேண்மினோ, என்னாவிலினகவி யாவெருவர்க்கும் கொடுக்கிலேன) என்கிற * தாம ஜ்ஞஸமயத்தையும லங்கித்து வாய்வந்தபடியெல்லாம் ஸ்தோத்ரம்பண்ணி. மறறொருவர்சொன்ன மித்யாஸ்தோத்ரங்களை அபயஸித்து முன்னேசொல்லியென்றுதல (உலகில) இப்படியிருந்த * இருள்தருமாஞாலத்திலே. (துவளகினறிலேன) அவர்களுடைய அவஸரமபார்த்துஎன்னுடையரக்ஷணத்துக்காகக்லேசப்படக்கடவேனல்லேன். துவளுகை - வாடுகை ([illegible]) (குருபாதாம்புஜம் த்யாயேத குரோர்நாமஸதாஜபேத। குரோர்வார்த்தாஸ்சகதயேதகுரோரந்யம்நபாவயேத்) என்கிறபடியே யிருக்கக்கடவேனென்று கருத்து. ... ... ... (உக)

உரை.—அ—இருபத்திரண்டாமபாட்டு. முன்பு தனனோடு எதிரிட்ட தேவஜாதி,பின்பு தன்வைபவத்தையறிந்து ஸ்தோத்ரம் பண்ண அவர்களுக்காக வாணன் அபராதத்தைப் பொறுத்த ஸர்வேசவரனையேத்தும எமபெருமானார் எனக்கு ஆபத்தநமென்கிறார்.

மூ.—கார்த்திகையானுங்கரிமுகத்தானுங்கனலும்முக்கண்
மூர்த்தியும்மோடியும்வெப்பும்முதுகிட்டுமூவுலகும்
பூத்தவனேயென்றுபோற்றிடவாணன்பிழைபொறுத்த
தீர்த்தனையேத்துமிராமாநுசனென்றன்சேமவைப்பே

| பதம். | உரை. |
|---|---|
| கார்த்திகையானும | க்ர்த்திகாநக்ஷத்ரஸம்பந்தத்தாலே கார்த்திகேயனென்று சொல்லப்படுகிற ஸுப்ரஹ்மண்யனும, |
| கரிமுகத்தானும் | கஜமுகனான கணபதியும, |
| கனலும் | அவர்களுக்கு ஸஹாயமாய்வந்த அக்நியும, |
| முக்கண்மூர்த்தியும | த்ரிநேத்ர யுக்தமானவடிவையுடைய ருத்ரனும, |
| மோடியும | தூர்க்கையும, |
| வெப்பும | ஜ்வரமும், |
| முதுகிட்டு | "முண்டனீறன்மகன் வெப்புமோடியங்கியோடிட" என்கிறபடியே புறங்காட்டி யோட, "కృష్ణకృష్ణమహాబాహో జానే త్వాం పురుషోత్తమమ్" கர்ஷ்ண கர்ஷ்ண மஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம" என்கிறபடியே ஸர்வேச்வரனென்றறிந்தபின்பு, |
| மூவுலகும் | க்ர்தகம் அகர்தகம க்ர்தகாக்ர்தகம என்று மூன்றுவகைப்பட்டிருக்கிற இந்த அண்டத்தை, |
| பூத்தவனே யென்று | உன்னுடைய திருநாபீகமலத்திலே ஜநிப்பித்தவனே யென்று, அவனுடைய ஜநகத்வகதநத்தாலே அவனுக்கும் தங்களுக்குமுண்டான பித்ருபுத்ரஸம்பந்தாதிகளை ஸூசிப்பித்து நிராயுதர்களை ஆச்ரயித்தவனானனுடைய ரக்ஷகத்வமாக, |
| போற்றிட | ஸ்தோத்ரம்பண்ண, |
| வாணன்பிழைபொறுத்த | அவர்களுக்காக பாணாஸுரனுடைய அபராதத்தை க்ஷமித்த, |
| தீர்த்தனை | குணசுத்தியையுடைய ஸர்வேச்வரனை, |
| ஏத்தும் | அந்த குணவித்தராய்க்கொண்டுஏத்துகிற, |
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| என்றன்சேமவைப்பு | எனக்கு ஆபத்துக்குத்துணையாக சேமித்துவைத்த தநம். |

---

அ.—இருபத்திரண்டாம்பாட்டு. பாணனென்கிற மஹாஸுரன் கோரதபஸ்ஸாலே ருத்ரனை வசீகரித்து அவனைத் தன்வாசலிலே வைத்துக்கொண்டிருக்கிறகாலத்திலே, அவன் தன் பெண்பிள்

னையான உஷாநிமித்தமாக அநிருத்தாழ்வானை நிரோதிக்க க்ர்ஷ்ணன் இவ்வாத்தாந்தத்தைக்கேட்டு அவன்மேலேபடையெடுத்துவர ருத்ரனும் ஸபரிகரனாய்க்கொண்டுவந்து எதிரிட்டு க்ர்ஷ்ணனோடே கோரயுத்தம்பண்ணி பலாயிதனானபின்பு, தன்னை உள்ளபடியறிந்து ஸ்தோத்ரம்பண்ணினவாறே, அப்போது ருத்ரன்முதலான தேவஜாதிக்காக பாணனுடைய ஆர்த்த்ராபராதத்தைப் பொறுத்த க்ர்ஷ்ணனைஸ்துதிக்கும் எம்பெருமானார் எனக்கு மஹாநிக்ஷேபபூதரென்கிறார்.

வ்யா.—(கார்த்திகையனுமித்யாதி)ப்ரஹ்லாதனுடையபௌத்ரனாய் மஹாபலியுடைய புத்ரனான பாணனென்கிற மஹாஸுரன் கோரமானதபஸ்ஸுக்களாலே ருத்ரனை ப்ரஸந்நனாக்கி வசீகரித்துக்கொண்டு நீ என்வாசலிலேயிருந்து ஸகலலோக ஜயத்தையும் பண்ணித்தரவேணுமென்று அர்த்திததவாறே ருத்ரனும், 'அப்படியே பார்யாபுத்ராதி ஸஹிதனாய்வந்து தலையில்பூ வாடாதபடி உன்னைக்காக்கிறேனென்று ப்ரதிஜ்ஞைபண்ணி அவனுடையவாசலிலேயிருக்கிறகாலத்திலே, அவனுடைய கந்யகையானஉஷா ரூபலாவண்யாதிகளாலே அப்ரதிமையாயிருக்கையாலே அவளுக்கு க்ரீடார்த்தமாக ஒருஸௌதத்தைப் பண்ணிக்கொடுக்க; அவளும் பஹுபரிசாரிகாஸ்த்ரீகளோடே அந்த ஸௌததத்திலேவிஹரியாநின்றுகொண்டு தனக்குத்தகுதியானவாகளைததேடும்பருவம்வந்தவாறே ஒருமாயாப்பிறவியான தோழியை யழைத்து, பூலோகத்திலேயிருக்கிறராஜகுமாரரெல்லாரையும் ஒருசித்ரபடதிலே எழுதிக்கொண்டுவரவேணுமென்றுசொல்ல, அவளும அப்படியே எழுதிக்கொண்டு அவள்கையிலேகொடுக்க, அவள் எல்லாரையும்பார்த்து அவர்களிலே த்வாரகாநகரவாஸியாய் க்ர்ஷ்ணனுக்குப் பேரனாய் ப்ரத்யும்நனுடைய குமாரனான அநிருத்தாழ்வானைப்பார்த்து, அவனையேவரிக்கவேணுமென்னும அதிவ்யாமோஹத்தாலே அந்தத் தோழியைப்ப்ரார்த்திக்க, அவளும் அஸுரஜாதியிலேபிறந்த மாயாவிதியாகையாலே த்வாரகையிலுள்ளா ரெல்லாரையும் வஞ்சித்து அநிருந்தாழ்வானை யெடுத்துக்கொண்டுவந்து அந்தஸௌதத்திலேவைக்க, உஷையும் அநிருத்தாழ்வானும் அந்யோந்யம் ஸம்வதித்துக்கொண்டு காந்தர்வவிவாஹத்தாலே ஒருவரையொருவர் வரித்து போகபரராயிருக்க, பாணனும அச்செய்திதெரிந்து குடிலசித்தனாய் அநிருத்தாழ்வானைப் பிடித்து நிரோதிக்க; இவ்வர்த்தாந்ததைதை க்ர்ஷ்ணன கேட்டருளி வாணன்மேலே சீறி ஸபரிகரனாய்ப் படையெடுத்துவர, அவன வாசலிலேயிருந்த ருத்ரன எதிரிட்டுத் தோற்று ஸ்துதிபண்ணினானென்று இந்த வ்ர்த்தாந்தங்களெல்லாம் பாகவதஹரிவம்சாதிகளிலே ப்ரஸித்தமிறே; அந்தகதாமுகேந இப்பாட்டையருளிச்செய்கிறார்.

(கார்த்திகையானும்) ருத்ரபுத்ரனாய் க்ர்த்திகாநக்ஷத்ரத்திலே ஜலத்திலே ஜநித்த ஷண்முகனும். (கரிமுகத்தானும்)ருத்ரன் தக்ஷயாகத்வம்ஸம்பண்ணினபோது அங்கே யிருந்தவர்கள் இவனுடைய சிரஸ்ஸை சேதித்தவாறே தேவஜாதியெல்லாம் திரண்டுவந்து ஒரு ஆனையினுடையதலையை யறுத்துக்கொண்டுவந்து இவன் கழுத்தின்மேலே சேர்க்க அன்றுதொடங்கி கஜாநநனென்று பேசாவஹித்த ருத்ரகணபதியும். (கனலும் முக்கண்மூர்த்தியும்) லோகஸம்ஹாரம்பண்ணுகிற ஸம்வர்த்தகாலாக்நிபோலே ப்ரஜ்வலிதமான மூன்றுகண்களையுடையநாமத்தாலே விரூபாக்ஷனென்று பேசப்படுகிற ருத்ரனும. அனறிக்கே, கனலும என்று-அவர்களுக்கு ஸஹாயமான அக்நியைச் சொல்லவுமாம். (மோடியும) துர்கையும். (வெப்பும) யுத்தபரிகரமாய எதிரிப்படைக்கு ஸந்தாபகரமான ஜ்வராதிதேவதையும். இத்தனை ஸாதநங்களுடனே வந்து யுத்தம்பண்ணி க்ர்ஷ்ணனுடைய பாணபாதத்துக்கு ஸஹிக்கமாட்டாதே. (முதுகிட்டு) (முண்டன நீறனமக்கள் வெப்புமோடியங்கியோடிட) என்கிறபடியே விமுகராய்ப் புறங்காட்டியோடி. அப்போது அவனுடைய பரத்வத்தையறிந்து.

(மூவுலகும்பூத்தவனேயென்று)(కిం బ్రహ్మేతి నామ యో బ్రహ్మ సర్వదేహినామ్। అనాన్తరాత్ సముద్భూతో యస్తే కేశవ నామవాన్) (கஇதிப்ரஹ்மணோநாம ஈசோஹம்ஸாவதேஹிநாம்। ஆவாந்தவாங்கேஸம்பூதௌ தஸ்மாத்கேசவநாமவாந்) என்றும், (ఏతౌ ద్వౌ విబుధశ్రేష్ఠౌ ప్రసాదక్రోధజౌ స్మృతౌ। తదాదర్శితపన్థానౌ సృష్టిసంహారకారకౌ) (ஏதௌத்வௌவிபுதச்ரேஷ்டௌ ப்ரஸாதக்ரோதஜௌஸ்ம்ர்தௌ। ததாதர்சிதபந்தாநௌ ஸ்ர்ஷ்டிஸம்ஹாரகாரகௌ) என்றும்,(வானோபலரும முனிவரும் மற்றும் மற்றும் முற்றுமாய், தானோர பெருநீர தன்னுள்ளே தோற்றி யதனுடகண் வளரும்) என்றும் சொல்லுகிறபடியே ஸமஸ்தலோகங்களையும் ஸ்ர்ஷ்டிக்கைக்காக காரணஜலத்திலேயொரு பவனான ஆலந்தளிரின்மேலே பள்ளிகொண்டு அவனுடைய திருநாபீகமலத்திலே சதுர்முகனதொடக்கமான ஸகலஜகத்துக்களினுடையவும் உத்பத்திகாரணமாயிருப்பதொரு தாமரைப்பூவை விகஸிப்பித்த ஜகத்காரணபூதனானவனென்று.

(போற்றிட) தங்களுக்கு மவனுக்குமுண்டான பிதாபுத்ராதி ஸம்பந்தங்களை ஸூசிப்பியாநின்றுகொண்டு ஸ்தோத்ரம்பண்ண. போற்றுதல்-புகழுதல். (కృష్ణకృష్ణ మహాబాహో జానే త్వాం పురుషోత్తమమ్) (க்ர்ஷ்ணக்ர்ஷ்ண மஹாபாஹோ ஜாநேத்வாம் புருஷோத்தமம) என்றானிறே ருத்ரன். (కృష్ణేతి మఙ్గళం నామ యస్య వాచి ప్రవర్తతే। భస్మీభవన్తి రాజేన్ద్ర మహాపాతకకోటయః) (க்ர்ஷ்ணேதிமங்களம்நாம யஸ்யவாசிப்ர

| பதம். | உரை. |
| --- | --- |
| உகந்து | அந்த ஸம்பந்தமே |
| கொண்டு | ஹேதுவாக விரும்பி அங்கீகரித்து, |
| என்னையும் | தங்களைப்போலே என்னையும், |
| அவர்க்கு | அவர்க்கு சேஷமாம் |
| ஆளாக்கினார் | படி பண்ணினார்கள். |

| பதம். | உரை |
| --- | --- |
| | ஆகையாலே நானறிந்து இவ்விஷயத்தைப் பற்றினேனல்லேன், ஸ்ரீவைஷ்ணவர்கள் சேர்க்கச்சேர்ந்தேனித்தனையென்றுகருத்து. ஸ்ரீராமாயணத்தை பக்திஸாகரமென்றது - நிரவதிகபக்திஜநகத்வத்தாலே. கடி-மணம். ( ) |

வ்யா.—அ.—முப்பத்தேழாம்பாட்டு. இந்தப்படி ஆச்ரயணௌன்முக்ய பாதகங்களான க்ர்பாதிகுணங்களை நிறைந்தபின்பிறே ஆச்ரயித்தது, உமக்கு இப்படிதெளிவுபிறந்தது எனனென்று கேட்டவர்களைக்குறித்து, முதலிலே நானறிந்து ஆச்ரயித்தேனல்லேன், எம்பெருமானுருடைய கல்யாணகுணங்களை யறிந்து அநுபவிக்கும் ப்ரியதமருடைய திருவடிகளிலே அவகாஹித்தநுபவிக்கும் ரஸஜ்ஞர் தங்களுடைய பரஸமாத்மைக ப்ரயோஜநதையாலே என்னைப்பார்த்து அங்குத்தைக்கு ஆளாக்கி அநந்யார்ஹமாம்படி பண்ணினார்கள், அத்தாலே நானறிந்தேனென்கிறார்.

வ்யா.—(படிகொண்டகீர்த்தி) (వాల్మీకిగిరిసంభూతా రామసాగరగామినీ। పునాతిభువనంపుణ్యా రామాయణమహానదీ॥ శ్లోకసారసమాకీర్ణం సర్గకల్లోలసంకులమ్। కాండగ్రాహమహామీనం వన్దేరామాయణార్ణవమ్॥ శృణ్వన్రామకథానాదం కోనయాతిపరాంగతిమ్। ఇదంపవిత్రంపాపఘ్నం పుణ్యంవేదైశ్చసమ్మితమ్) என்றும், (శతకోటిప్రవిస్తరమ్) (சதகோடிப்ரவிஸ்தரம) என்றும, (వేదఃప్రాచేతసాదాసీత్ సాక్షాద్రామాయణాత్మనా) (வேதஃப்ராசேதஸாதாஸீத்ஸாக்ஷாத்ராமாயணாத்மநா) என்றுஞ்சொல்லுகிறபடியே பூலோகத்தையெல்லாம் வ்யாபித்திருக்கிறகீர்த்தியை யுடைத்தான. (படிகொண்ட) என்றவிது உபலக்ஷணம்; ஸத்யலோகத்தில் நின்றும ப்ரஹ்மாவும் தாத்ர்சரான நாரதபகவானும் பூலோகத்திலேவந்து வால்மீகியைக்குறித்து நியமித்தும் உபதேசித்தும் போருகையாலே இதினுடைய கீர்த்தி ஊர்த்த்வலோகங்களிலுமிறே ப்ரஸித்தமாயிருப்பது.

(ராமாயணமென்னும் பத்திவெள்ளம்)(కావ్యంరామాయణంకృత్స్నం సీతాయాశ్చరితంమహత్) (காவ்யம்ராமாயணம்க்ருத்ஸ்நம்ஸீதாயாஶ்சரிதம்மஹத்) என்றிருந்தாலும், (యస్యైతేతస్యతద్ధనమ్) (யஸ்யைதே தஸ்ய தத்தநம்) என்கிறகட்டளையிலே அவளுடைய ஸம்பத்தெல்லாம் சேஷியானவவனதாகையாலே ராமவிஷயமாயிருக்குமென்று சொல்லத்தட்டில்லையிறே. தாத்ர்சமான ராமாயணமென்கிற கடா

புரண்ட பக்திரஸத்தை. இதிலே ப்ரதிபாத்யமாயிருந்துள்ள அர்த்தத்தையே பக்திரஸமென்று சொல்லவேண்டியிருக்க இதுதன்னை, (பக்தி வெள்ளம்) என்றது-(తద్గుణాస్వాద్యత్వ్యపదేశః) (தத்குணாஸ்வாதத்வ்யபதேசஃ) என்றாப்போலே அதுக்கு உத்பாதகமாகையாலே. (ఏకైకమక్షరంప్రోక్తం మహాపాతకనాశనమ్) (ஏகைகமக்ஷரம்ப்ரோக்தம்மஹாபாதகநாசநம்) என்ற ப்ரகாரத்திலே அர்த்தபர்யந்தம் போகவேண்டாதே சப்தராசிதானே ரஸிதிருக்குமென்னுதல்.

இப்படிப்பட்ட பக்திதான் அங்கே யாச்ரயித்திருக்கும் நாங்கள் அத்தைப்பெறுகைக்கென்னென்றால் (குடிகொண்ட கோயிலிராமாநுசன்) எம்பெருமானாரே ஒருகோயிலாக அவர்திருவுள்ளத்தை ஒருக்ஷணமும் பிரியாதே இவ்விடமே குடியாக நித்யவாஸம்பண்ணியிருந்தது. [இருப்பிடம்வைகுந்தம்வேங்கடம் மாலிருஞ்சோலையென்னும் பொருப்பிடம்மாயனுக்கென்பர்நல்லோர்] ஏதத்ப்ரதிபாத்யனான பரமபுருஷனுக்கு அவையெல்லாம் கோயில்களானாப்போலே தத்ப்ரதிபாதகமான ஸ்ரீராமாயணமென்கிற பக்தி ப்ரவாஹத்துக்கு இவரும் ஒருகோயிலாகக்காணு யிருப்பது (இராமாநுசன்) அநந்தராமாவதாரத்திலே திவ்யதம்பதிகள்விஷயமாக ஸர்வவிதகைங்கர்யங்களையும்பண்ணி வயிற்றைப் பெருக்கி பக்தியினுடைய ரஸமறிந்தவரிறே எம்பெருமானாராயவதரித்தது.

(குணம்) அவருடைய கல்யாணகுணங்களை. (கூறுமன்பர்) இந்த லோகத்தாரெல்லாருக்கும் உபதேசிக்கும் ப்ரேமயுக்தர். (మూర్ధాభిషిక్తమస్మాకం తద్విద్యాముక్తాఫలం, నాయంరామానుజమునిః) என்கிறபடியே, (நவையுமநரகமுமநையந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை, கலியுங் கெடுமகண்டுகொண்மின) என்றுசலாகித்த நம்மாழ்வாரும், அவர்கொடுத்த பவிஷ்யதாசார்யவிக்ரஹத்தையே ஆராதித்துக்கொண்டு போந்த ஸ்ரீமந்நாதமுனிகளும், (ஆமுதல்வனிவன்) என்று ப்ரதிபத்திபண்ணின ஆளவந்தாருமென்றபடி. (கடிகொண்டமாமலர்த்தாள்) அவர்களுடைய பரிமள ப்ரசுரமாய் விலக்ஷணமாய் பரமபோக்யமான திருவடிகளிலே. கடி - பரிமளம். மா - மஹத்வம். யாவதாத்ம பாவியாக அநுபவித்தாலும் சரமபர்வநிஷ்டர்க்குக் குறைப்பட்டிராதே; மேன்மேலும் பெருமையுடைத்தாயிறேயிருப்பது. (மலர்) லோகத்தில்புஷ்பம்போலே ஒருக்கால் விகஸிதமாயிருக்கையன்றிக்கே ஸர்வதா விகாஸத்தோடே யிருக்குமென்றபடி. (అత్రపరత్రాపినిత్యం యదీయచరణౌశరణంమదీయమ్) (அத்ரபரத்ராபிநித்யம் யதீயசரணௌஶரணம்மதீயம்) என்னக்கடவதிறே. (தான்) (యానిశాసర్వభూతానాం తస్యాంజాగర్తిసంయమీ) (யாநிசாஸர்வபூதாநாம்தஸ்யாம்ஜாகர்த்திஸம்யமீ) என்னும்படியிருக்கிற அவர்களுடைய திருத்தாள்களிலே. (கலந்துள்ளம்) திருவுள்ளங்கலந்து.

(கனியுங்கல்லோர்)பக்வபலம்போலே ரஸித்திருக்கும்ஸம்யஜ்ஞாநத்தையுடையரானவர்கள்; - கூரத்தாழ்வானென்றபடி.

(அடிகண்டுகொண்டுகந்து) இவ்வாத்மவஸ்து அங்குத்தைக்கு சேஷமானதன்றோவென்று கொண்டு இதினுடைய படியை தர்சித்து அந்தஸம்பந்தமே ஹேதுவாக விரும்பி அங்கீகரித்து. ஒரு ராஜபுத்ரன் வழிதப்பிப்போய ஒருவேடன்கர்ஹத்திலே சேர்ந்திருக்க அந்தப்ரகாரத்தை யறிந்திருக்கும் தார்மிகரானசிலர், இருவருடையவும் ஸம்பந்தத்தையறிவிப்பித்து இருதலையையும் சேர்க்குமாப்போலே. (என்னையுமாளவர்க்காக்கினரே) (என்னையும்) அவருக்குத் தம்மைப்போலே என்னையும் எம்பெருமானார்க்கு. சக்ரவர்த்தித் திருமகன் பக்கலிலே ப்ரேமயுக்தரானவரென்று (அவர்க்கு) என்ற தச்சப்தத்தாலே தோற்றுகிறது. ஆள் ஆக்கினர் - அங்குத்தைக்கு ப்ராப்தமான ஆகாரத்தோடே கூட்டினார்கள். சேஷபூதனும்படி பண்ணினார்களென்றபடி. ஆசையாலே நான் வருத்தவிஷயமென்றறிந்து ஆச்ரயித்தேனல்லேன், எனக்குபுருஷகார பூதரான ஆழ்வான் ஆச்ரயிப்பிக்க ஆச்ரயித்தேனென்றதாய்த்து. (௩௭)

உரை — அ. —(முப்பத்தெட்டாம்பாட்டு) இப்படி ஸ்ரீவைஷ்ணவர்கள் சேர்க்கும்போதும் அத்வேஷாதிகள்வேண்டுகையாலே தத்ப்ரவர்த்தகனான ஈச்வரனிறே இப்பேற்றுக்கடியென்று நினைத்து, ( [illegible] ) (ஸாக்ஷாந்நாராயணோதேவ:) இத்யாதிப்படியே எம்பெருமானார்தம்மை ஈச்வரனாகப்ரதிபத்திபண்ணி, (இன்றென்னைப்பொருளாக்கி) என்கிறபாட்டிலே ஆழ்வாரருளிச்செய்தாப்போலே இவரும் அருளிச்செய்கிறார். அன்றிக்கே, இவர்களை முன்னிட்டுத் தம்மை அங்கீகரித்தருளினார் எம்பெருமானாராகையாலே இவர் திருமுகத்தைப்பார்த்து இத்தனைநாள் இவ்வூரிலேநான் வர்த்திக்கச்செய்தே என்னை அங்கீகரியா திருக்கைக்கும் இப்போது அங்கீகரிக்கைக்கும் ஹேதுவென்னென்று கேட்கிறாராகவுமாம்,

மூ.—ஆக்கியடிமைநிலைப்பித்தனையென்னையின்றவமே
 போக்கிப்புறத்திட்டதென்பொருளாமுன்புபுண்ணியர்தம்
 வாக்கில்பிரியாவிராமாநுசநின்னருளின்வண்ணம்
 நோக்கில்தெரிவரிதாலுரையாயிந்தநுண்பொருளே. (௩௮)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| என்னை | அநாதிகாலம் "ஈச்வரோஹம்" என்றிருந்தவென்னை, | ஆக்கி | சேஷத்வத்துக்கு இசையும்படியாக்கி, |

| பதம். | உரை. |
|---|---|
| அடிமை | அதுதன்னைத்ததியசேஷத்வகாஷ்டையளவும்செலுத்தி, |
| நிலைப்பித்தனை | ஸ்த்திரிப்பித்தருளினீர்; |
| இன்று | இன்று இப்படிசெய்யலாயிருக்கச் செய்தே, |
| முன்பு | பூர்வகாலமெல்லாம |
| அவமே | வ்யர்த்தமே, |
| போக்கி | போக்கி, |
| புறத்திட்டது | பாஹ்ய விஷயங்களிலே தள்ளிவிட்டு வைத்தது, |
| என்பொருளா | [illegible] |
| புண்ணியா | தேவரீரைஉள்ளபடியறிகைக்கிடான |

| பதம். | உரை. |
|---|---|
| | பாக்யாதிகருடைய, |
| வாக்கில்பிரியா இராமாநுசா | வாககுக்கு நித்யவிஷயமாயிருக்குமவரே, |
| நின் | தேவரீருடைய, |
| அருளின்வண்ணம் | க்ர்பாப்ரகாரம், |
| நோக்கில் | தாசிக்குமளவில், |
| தெரிவரிது | துர்ஜ்ஞேயமாயிராநின்றது; |
| இந்தநுண்பொருள் | இந்தஸூக்ஷ்மார்த்தத்தை, |
| உரைவாய் | தேவரீர்தாமேயருளிச்செய்யவேணும். |

தெரிவரிது என்றது-விவேகிக்க அரிதென்றபடி. ...(௩அ)

வ்யா.—அ.—முப்பத்தெட்டாம்பாட்டு. இப்படி ஆழ்வானையிட்டு அடியேனைத் திருத்திச்சேர்த்து சேஷத்வத்துக்கு இசைவிப்பித்து ததீயதாரதம்யஸீமாபூமியான சரமபர்வத்திலே அத்யபிநிவிஷ்டனும்படி பண்ணியருளின தேவரீர், இதுக்கு முற்காலமெல்லாம அந்தரஸத்தை அடியேனுக்கு அநுபவிப்பியாதே வ்யர்த்தமே விஷயாந்தரங்களிலே வைத்ததுக்கு மூலமேது, பாக்யவான்களுடைய வாக்கிலே இடைவிடாதே ஸர்வகாலமும் ஸ்துதிக்கப்படும் எம்பெருமானாரே!, தேவரீருடைய காபாப்ரகாரம்உள்ளபடியறியப் பார்த்தால எத்தனைதரமுடையார்க்கும் அரிதாயிருக்கும், தேவரீரே இந்த ஸூக்ஷ்மார்த்தத்தை யருளிச்செய்யவேணுமென்று நேரேகேட்கிறார்.

வ்யா.—(என்னை) அநாதிகாலமேதொடங்கி சிலநாள் தேஹமே ஆத்மாவென்று ப்ரமித்த அஜ்ஞாநத்தாலும், பின்பு தேஹாதிரிக்தமாய்க்கொண்டு ஒரு ஆத்மவஸ்துஇருக்கிறதென்று அறிந்தாலும், (ఈశ్వరోఽహమహం భోగీ సిద్ధోఽహం బలవాన్ సుఖీ) (ஈச்வரோஹமஹம் போகீஸித்தோஹம்பலவான்ஸுகீ) என்னும்படியான அந்யதாஜ்ஞாநத்தாலும், பின்பு காமநாதிகாரத்திலே விழுந்து, (కామైస్తైస్తైర్హృతజ్ఞానాః ప్రపద్యన్తేఽన్యదేవతాః) (காமைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே

ந்யதேவதா:) என்னும்படியான விபரீதஜ்ஞாநத்தாலும் திரிந்து அஸத்கல்பனாய்ப் போந்த வடியேனை (இன்று) இப்போது.

(ஆக்கி) அப்படிப்பட்டவற்றையெல்லாம் விடுவித்து,முதலிலே, (நானுமுனக்குப் பழவடியேன்) என்னும்படி பகவச்சேஷத்வத் திலே அந்வயிப்பித்து. (அடிமைநிலைப்பித்தனை) பின்பு (அடியார்க் கென்னையாள்படுத்தவிமலன) (உன்னடியார்க்காட்படுத்தாய்) என் னும்படி ஸர்வேச்வரன் உபகரித்தாப்போலே, (గురురేవపరంబ్రహ్మ) (ఆచార్యస్సహరిస్సాక్షాత్ చరరూపీనసంశయః) (குருரேவபரம்ப்ரஹ்ம) (ஆசார்யஸ்ஸஹரிஸ்ஸாக்ஷாத் சரரூபீநஸம்சய:) என்னும்படியான தேவரீர், அடியேனை சேஷத்வகாஷ்டாரூபமான ததீயசேஷத்வத் திலே நிலைநிறுத்தினீர். (முன்பு) பூர்வகாலத்திலே. (அவமேபோக்கி) வ்யர்த்தமாகப்போகட்டு. (புறத்திட்டது) அப்ராப்தவிஷயங்களிலே ப்ரவணனாகப்பண்ணினது. (என்பொருளா) என்ன ப்ரயோஜநம். மூலமேது என்றுகேட்க;-(మన్నాథద్దరతేలోకాన్) (மந்நாதுத்தரதேலோகாந்) என்கிறபடியே ஸர்வரையும் உத்தரிப்பிக்கைக்காக அவதரித்த நீரும் ஸர்வேச்வரனைப்போலே என்னை உம்முடைய க்ரீடைக்கு இவ்வளவும் விஷயமாக்கிவைத்தீரோ என்ன; இவ்வளவும் உமக்கதிகாரமில்லாமையாலே அப்படிவைத்தோமென்ன;

* அதிகாரமுண்டேலரங்கரிரங்காரோ, அதிகாரமில்லாதார்க்கன்றோ வெதிராசாநீயிரங்கவேண்டுவது; ஆனாலும் இப்போது நீர் இரங்கவேண்டுவது எந்த அதிகாரத்தைப் பார்த்தென்று முன்பு தம்மை, (அவமேபுறத்திட்டதென்பொருளா) என்னும்படியைப் பிடிக்கிறார்களும். (இன்றென்னைப்பொருளாக்கி) என்கிறபாட்டிலே ஆழ்வாரும் அவன்மடியைப்பிடித்தாரிறே. நம்முடைய க்ருபையாலே இன்று உம்மை இப்படிபண்ணினோமென்றீராகில் அந்தக்ருபையினுடைய ஸ்வபாவத்தைச் சொல்லவேணுமென்கிறார் (புண்ணியர்தம்) * மயர்வறமதிநலம் பெறுகைக்குடலான பகவந்நிர்ஹேதுகக்ருபையானபாக்யத்தையுடையவர்கள் (வாக்கில்பிரியா) அவர்களுடைய திருவாயிலே இடைவிடாதேயிருக்கிற. (పూర్వేమూర్ధన్యయస్యాస్వయముపగతాదేశికాః) (பூர்வேமூர்த்நாயஸ்யாஸ்வயமுபகதாதேசிகா:) என்னும்படியான நம்மாழ்வார்முதலானவர்கள், (பொலிகபொலிகபொலிக) என்று மங்களாசாஸநம்பண்ணினார்களிறே.

அன்றிக்கே, (గురోర్నామసదాజపేత్, గురోర్వార్తాశ్చకథయేత్) (குரோர்நாமஸதாஜபேத் । குரோர்வார்த்தாஶ்சகதயேத்) என்றிருக்கையாலே, (నిత్యంయతీన్ద్ర తవదివ్యవపుస్స్మృతౌమే సక్తంమనోభవతువాగ్గుణకీర్తనేసౌ। కృత్యఞ్చదాస్యకరణేతుకరద్వయస్యవృత్యన్తరే) (நித்யம்யதீந்த்ர தவதிவ்ய

வபுஸ்ம்ர்தௌமேஸக்தம்மநோபவது வாக்குணகீர்த்தநேஸௌ। க்ர்த்யஞ்சதாஸ்கரணேது கரத்வயஸ்ய வ்ர்த்யந்தரே) என்கிறபடியே ப்ரார்த்தித்தருளும்; (నాథాయతీన్ద్ర) మన సా వపుషా చ యుష్మ త్పాదారవిన్ద యుగళం భజతాం గురూణామ్ । కూరాధి నాథ కురుకేశ ముఖాద్యపుంసామ్) (வாசா யதீந்த்ர மநஸா வபுஷா ச யுஷ்மத் பாதாரவிந்தயுகளம் பஜதாம் குருணாம்। கூராதிநாதகுருகேசமுகாத்யபும்ஸாம்) எனனும்படி ஆழ்வான் பிள்ளான் தொடக்கமான பாகவதர்களுடைய திருவுள்ளத்தாலே ஸர்வதா அநுஸந்தாநம் பண்ணப்படுகிற.

(இராமாநுசா) எம்பெருமானாரே. (நின்னருளின் வண்ணம்) பந்தமோக்ஷங்களிரண்டுக்கும்பொதுவான அவனுடைய க்ர்பைபோலன்றிறே மோக்ஷைகஹேதுவான தேவரீருடைய க்ர்பை. வண்ணம் – அதினுடைய ப்ரகாரம்-ஸ்வபாவமென்றபடி. (நோக்கில்) அத்தை நன்றாக தர்சித்தால், அறியவேணுமென்றுபார்த்தால், தெரியவரிது - அறிகைக்கு கடிநமாயிருக்கும். இத்தனைநாளுமபலியாதேபோய் இன்று நிர்ஹேதுகமாக பலித்த ப்ரகாரமேதென்று விசாரித்தால் அந்தப்ரகார மின்னதென்று விவேகிக்க அரிதாயிருக்குமென்றபடி.. ஆல் – ஆஸ்சர்யம. ஏகாகாரமான தேவரீருடைய க்ர்பை என்னளவிலே மாத்ரம் ஆகாரத்வயத்தை பஜித்ததோவென்று ஆச்சர்யப்படுகிறார்காணும். அன்றிக்கே, ஆல்-இன்றுநிர்ஹேதுகமாக பலித்தக்ர்பை பூர்வகாலத்திலே பலியாதே, (போரவைத்தாய் புறமே) (அம்பசாரங்களவை சுவைத்தகன்றொழிந்தேன்) என்று ஆழ்வார் நிர்வேதப்பட்டாப்போலே இந்த அநுபவத்தை இழந்து விஷயப்ரவணனாய்ப்போனேனே என்று இழந்தநாளைநினைத்து நிர்வேதப்படுகிறார். (உரையாயிந்த நுண்பொருளே) இந்த ஸூக்ஷ்மார்த்தத்தை, உபயவிபூதிவ்ருத்தாந்தத்தையும் ஸாக்ஷாத்கரித்தவராகையாலே தேவரீர் அறிந்தருளுமே, ஆகையாலே தேவரீரே யருளிச்செய்யவேணும் என்றதாயத்து. ... ... (௩௮)

உரை — அ.—(முப்பத்தொன்பதாம்பாட்டு.) இப்படிகேட்டவிடத்திலும் ஒரு மறுமாற்றம் அருளிச்செய்யக் காணாமையாலே அத்தைவிட்டு, செய்தவுபகாரங்களை யநுஸந்தித்து ப்ரீதியாலே தம்திருவுள்ளத்தைப்பார்த்து, நமக்கு எம்பெருமானார் செய்யும் ரக்ஷைகள் வேறுசிலர் செய்யுமளவோவென்கிறார்.

மூ.—பொருளும்புதல்வரும்பூமியும்பூங்குழலாருமென்றே
மருள்கொண்டிளைக்கும் நமக்குநெஞ்சேமற்றுளார்தரமோ
இருள்கொண்டவெந்துயர்மாற்றித்தனீறில்பெரும்புகழே
தெருளுந்தெருள்தந்திராமாநுசன்செய்யுஞ்சேமங்களே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொருளும் | அர்த்தமும், | புகழே | கல்யாணகுணங்களையே. |
| புதல்வரும் | புத்ரர்களும், | தெருளும் | அறியும்படியான, |
| பூமியும் | க்ஷேத்ரமும், | தெருளதந்து | அறிவைத்தந்து, |
| பூங்குழலாருமென்றே | தாரங்களுமென்று இவற்றையே விரும்பி, | இராமாநுசன் | எம்பெருமானார், |
| மருள்கொண்டு | அறிவுகெட்டு, | செய்யும் சேமங்கள் | செய்யும்ரக்ஷைகள் |
| இளைக்கும் நமக்கு | அவஸந்நராய்ப்போருகிற நமக்கு | நெஞ்சே | நெஞ்சே, |
| கா | அஜ்ஞாநயுக்தமான, | மற்றுளார் தாமோ | மற்றுண்டானவர்கள்செய்யுமளவோ. |
| வெம்துயர் | க்ரூரதுக்கங்களை | | |
| மாற்றி | நீக்கி, | | |
| தன் | தம்முடைய, | | |
| ஈறில் | நித்யமாய், | | |
| பெரும் | நிரவதிகமான, | | |

பூங்குழல்-அழகியகுழல். பூவையுடைத்தான குழலென்னவுமாம். மருள்-அறிவுகேடு. க்ஷேமம்-ரக்ஷை. தாரம்-ஒப்பு. மற்றுளார்தாமோ என்றது - மற்றுளாரொப்பாமோவென்றபடி. ... (௩௯)

வ்யா.—அ.— முப்பத்தொன்பதாமபாட்டு. (உரையாயிந்த நுண்பொருளே) என்று இவர் நேர்கொடுநேர்நின்று கேட்டவிடத்திலும் எம்பெருமானார் ஒருமறுமாற்றமருளிச்செய்யக் காணாமையாலே அத்தைவிட்டு, அவர்செய்தவுபகாரங்களை அநுஸந்தித்து அவற்றைத் தம்மருகேயிருக்கிறபாகவதரோடே சொல்லவொருப்பட்டவாறே, இவ்வளவும் இவர்தாம் அவர்களைக்குறித்து எம்பெருமானாருடைய கல்யாணகுணவைபவத்தை ப்ரஸங்கித்தாராகையாலே அவர்களும் அந்த குணங்களிலே ஆழங்கால்பட்டு வித்தராய் இவர் சொல்லுமத்தைக் கேட்கவும்மாட்டாதே பரவசராயிருக்க, தம்முடையதிருவுள்ளத்தை ஸம்போதித்து, புத்ர தார காஹ க்ஷேத்ராத்யப்ராப்தவிஷயங்களிலேமண்டி நிஹீநராயப்போந்த நமக்கு அஜ்ஞாநத்துக்குடலான துக்கத்தைப்போக்கி, நித்யமாய் நிரவதிகமாயிருக்கிற தம்முடைய கல்யாணகுணஜாதமெல்லாம்தெளியும்படியான அறிவைக்கொடுத்தருளின எம்பெருமானார்செய்த ரக்ஷணங்கள் பின்னை ஒருவராலே செய்யப்போமோவென்கிறார்.

வ்யா.—(பொருளும் புதல்வருமென்றதொடங்கி) (நெஞ்சே) கீழில் பாட்டுக்களிலே தமக்கு எம்பெருமானார்க்ருபையாலேப்ராப்தமானஸம்ருத்தியையும் அவருடைய கல்யாணகுணவைபவத்தையும் ஸமீபவர்த்திகளானபாகவதர்களோடே சொல்லிக்கொண்டு போருகிறவளவிலே, அவர்கள் அவற்றில் வித்தராய் பரவசராய் ஒரு

மருமாற்றமாகிலும் அருளிச்செய்யமாட்டாதே யிருந்தவாறே தம்முடைய நெஞ்சைப்பார்த்து தாம்பெற்றபலபரம்பரையை யருளிச்செய்கிறார். (பொருளும்) ஸமஸ்தபுருஷார்த்தஸாதநமாய் ஸ்வஜநங்களோடேகூடி யாவஜ்ஜீவம் ஸுகிக்கைக்குறுப்பாயிருந்துள்ள தநகநகவஸ்துவாஹநாதிஸகலபதார்த்தங்களும். (புதல்வரும) (పుత్రోత్పత్తివినాశాభ్యాం న పరం సుఖదుఃఖయోః) (புத்ரோத்பத்தி விநாஶாப்யாம் ந பரம் ஸுகதுக்கயோ:) என்கிறபடியே இனி இதுக்கவ்வருகே ஒரு ஸுகமில்லையென்னலாம்படி நிரவதிகஸுகரூபனையும், கரணபாடவதசையிலே போஷகனையும், (పున్నామ్నో నరకాత్త్రాయేత్) (புந்நாம்நோ நரகாத்த்ராயேத) என்கிறபடியே அத்ர்ஷ்டோபகாரகனையுமிருந்துள்ள புத்ரனும. (பூமியும்) சலஸ்வபாவங்களான வஸ்துக்களைப்போலன்றிக்கே ஸ்தாவரமாகையாலே புத்ரபௌத்ராதிபர்யந்தமாக ஜீவநஹேதுவான க்ஷேத்ரமும் (பூங்குழலாரும) பரிமளப்ரசுரங்களான புஷ்பங்களாலே பரிஷ்கரிக்கப்பட்ட கபரீபந்தங்களையுடையளாய், (భార్యాసమో నాస్తి శరీరతోషణే) (பார்யாஸமோ நாஸ்தி சரீரதோஷணே) என்று ச்லாகிக்கப்பட்ட நல்லதாரமும.

(எனதேமருள்கொண்டிளைக்கும்) (క్షేత్రాణి మిత్రాణి ధనాని నాథ పుత్రాశ్చ దారాః పశవో గృహాణి । త్వత్పాదపద్మప్రవణాత్మవృత్తేర్భవన్తి సర్వే ప్రతికూలరూపాః) (க்ஷேத்ராணி மித்ராணி தநாநி நாதபுத்ராஶ்சதாரா: பஶவோ கர்ஹாணி। தவதபாதபத்ம ப்ரவணாத்மவ்ருத்தேர்ப்பவந்தி ஸர்வேப்ரதிகூலரூபா:) என்று சொல்லப்படுகிற ஆகாரத்தை மறந்து இவை தாரக போஷக போக்யங்களென்று இவற்றிலே ஸக்தனாய் ப்ரமித்து, அந்த அஜ்ஞாநத்திலே துவக்குண்டு அவஸந்நராய்ப் போந்த நமக்கு. (தாயே தந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும் நோயே பட்டொழிந்தேன்) என்றும், (పుత్రదారగృహక్షేత్రమృగతృష్ణాంబుపుష్కలే । కృత్యాకృత్యవివేకాన్ధం పరిభ్రాన్తమితస్తతః) (புத்ரதாரக்ருஹக்ஷேத்ரம்ருகத்ர்ஷ்ணாம்புபுஷ்கலே। க்ருத்யாக்ருத்யவிவேகாந்தம்பரிப்ராந்தமிதஸ்தத:) என்றும் சொல்லக்கடவதிறே.

(இருள்கொண்டவெந்துயர் மாற்றி) (అవివేకఘనాన్ధదిఙ్ముఖే బహుధా సన్తతదుఃఖవర్షిణి । భగవన్ భవదుర్దినే పథః స్ఖలితమ్) (அவிவேககநாந்ததிங்முகேபஹுதாஸந்தத துக்கவர்ஷிணி। பகவந்பவதுர்த்திநேபதஸ்கலிதம்) என்கிறபடியே அஜ்ஞாநமூலமாய்க்ரூரமா யிருக்கிற துக்கத்தை ஸவாஸநமாக நிவர்த்திப்பித்து. (தன்னீறில் பெரும்புகழ்) ஸ்வாபாவிகமாய் அவதியின்றிக்கே மேன்மேலும் பெருகிவருகிற மஹத்தான உம்முடையகல்யாணகுணஜாதத்தை. (தெருளும் தெருள்தந்து) தெளியும்படியான ஜ்ஞாநத்தைக்கொடுத்து. (இராமாநுசன் செய்யும் சேமங்களே) இப்படி எம்பெருமானார்

செய்தருளும்ரக்ஷணங்கள். (மற்றுளார்தரமோ) எத்தனை தரமுடையாராலும் செய்யசக்தரோ. (அறியாதனவறிவித்தத்தாநீசெய்தன அடியேனறியேனே) என்றாப்போலே சரமபர்வமான எம்பெருமானார்பக்கலிலே க்ருதஜ்ஞராயருளிச்செய்கிறார்.

(மற்றுளார்தரமோ) கழுத்திலே ஓலை கட்டிக்கொண்டு திரிந்தும, ஸாரதயம்பண்ணியும், பதினெட்டத்யாயம் கீதையைஉபதேசித்தும, (సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి)(ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி) என்றும, (అభయంసర్వభూతేభ్యో దదామ్యేతద్వ్రతంమమ) (அபயஂஸர்வபூதேப்யோததாம்யேதத்வ்ரதஂமம) என்றும் அநேகப்ரகாரமாக * படாதனபட்டும ஒருவனையாகிலும் ஸர்வேச்வரன்ரக்ஷித்தானல்லனே, (నారాయణేమహతిలోక గురావతస్థే కోమానుషశ్రియమవాపసనాతనీంతామ్। రామానుజేభువిమితేసకలోపిజన్తు స్సంసారదివ్యపదయోర్నహివేత్తిభేదమ్) (நாராயணேமஹதிலோககுராவதஸ்தே கோமாநுஷச்ரியமவாபஸநாதநீஂதாம் ‖ ராமாநுஜே புவிமிதேஸகலோபிஜந்துஸ் ஸஂஸாரதிவ்யபதயோர்நஹிவேத்திபேதம்) எனகிறபடியே நெஞ்சே! கண்டாயே? எமபெருமானார் நமக்குப்பண்ணின உபகார பரம்பரை வாசாமகோசரமாயத்து. (தென்னரங்கர்தமககாமோ தேவியர்கட்காமோ சேனையர்கோன் முதலான சூரியர்கட்காமோ, மன்னியசீர்மாறனருள் மாரிதனககாமோ மற்றுமுள்ளதேசிகர்கள் தங்களுக்குமாமோ, என்னுடைய பிழைபொறுக்கயாவருக்கு முடியுமெதிராசாவுனக்கன்றியாரொருவர்ககாகேன்) என்று இவ்வர்த்தத்தை ஜீயருமநுஸந்தித்தருளினாரிறே. .. ... (௩௯)

உரை.—அ.—நாற்பதாம்பாட்டு. எம்பெருமானார் தமக்குச்செய்த வுபகாரங்களை யருளிச்செய்தார் - கீழிறபாட்டில்; இப்பாட்டில் - லோகத்துக்குச்செய்த உபகாரத்தை யநுஸந்தித்து வித்தராகிறார்.

மூ.—சேமநல்வீடும்பொருளுந்தருமமுஞ்சீரியநல்
காமமுமென்றிவைநானகென்பர்நான்கினுங்கண்ணனுக்
காமதுகாமமறம்பொருள்வீடிதற்கென்றுரைத்தான் [கே
வாமநன்சீலனிராமாநுசனிந்தமண்மிசையே. (௪௦)

| பதம். | உரை. | பதம. | உரை. |
|---|---|---|---|
| வாமநன் சீலன் | இத்தலையில் அர்த்தித்வாதி நிரபேக்ஷமாகத் தாமேவந்துஉபகரிக்கைக்கு ஸ்ரீவாமநனுல்யசீலரான, | இராமாநுசன் | எம்பெருமானார், “ధర్మార్థ కామమోక్షాఖ్యాః పురుషార్థాఉదాహృతాః” (தர்மார்த்தகாமமோக்ஷாக்யாঃ புருஷார் |

| பதம். | உரை. |
| --- | --- |
| | த்தா:உதாஹ்ர்த்தா:) என்கிறபடியே, |
| சேமம் | க்ஷேமரூபமாய், |
| நல் | விலக்ஷணமா யிருந்துள்ள, |
| வீடும் | மோக்ஷமும், |
| பொருளும் | அர்த்தமும, |
| தருமமும் | தர்மமும், |
| சீரிய | இவைபோலே அங்கதயா புருஷார்த்தமா யிருக்கையன்றிக்கே ஸ்வயம புருஷார்த்தமாகையாலே சீரியதாய், |
| நல் | விலக்ஷணமா யிருந்துள்ள. |
| காமமுமென்று | காமமுமென்றுகொண்டு, |
| இவைநான்கு | இவைநாலும் புருஷார்த்தமாக, |
| என்பர் | ப்ராமாணிகர் சொல்லுவாகள்; |
| நான்கினும | இவைநாலினும், |
| காமம் | காமமாவது, |
| கண்ணனும அது | ஸர்வேச்வரன் விஷயத்திலே உண்டாமது; |
| அறம் | தர்மமும். |
| பொருள் | அர்த்தமும், |
| வீடு | மோக்ஷமுமாகிற இவற்றில, தர்மமாவது, "தர்ம்ேண பாபமபநுதத்" (தர்மேணபாப மபநுத) என்கிறபடியே ஏதத் விரோ |

| பதம். | உரை. |
| --- | --- |
| | தி பாபக்ஷயஹேதுவாகையாலும், அர்த்தம் தாநாதிமுகத்தாலே அதுக்கு உபகாரமாகையாலும், மோக்ஷம ததபிவர்த்தி ஹேதுவாகையாலும, |
| இதற்கு என்று | இவைமூன்றும் காமசப்தவாச்யமான பகவத்ஸoச்லேஷத்துக்கு சேஷமாயிருக்கு மத்தனையென்று, |
| இந்தமண்மிசை | இந்தபூமியிலே, |
| உரைத்தார் | அருளிச்செய்தார் அபேக்ஷாநிரபேக்ஷமாக இவ்வர்த்தத்தை இப்படி உபகரித்தருளுவதே! என்று கருத்து. |

"வாமநன்சீரை" என்றுபாடமானபோது-பூர்வோக்தப்ரக்ரியையாலே புருஷார்த்தத்தை நிர்ணயித்து, இப்புருஷார்த்தத்தை லபிக்க வேண்டுமிடத்தில் வருந்தவேண்டுவதில்லை, எளிதாகப் பெறலாமென்னு மிடத்தை தர்சிப்பிக்கைக்காக இத்தலையில் அபேக்ஷாநிரபேக்ஷமாகவந்து கலக்குமவன் காணுங்கோளென்று ஸ்ரீவாமநனுடைய ஸ்வபாவத்தை யருளிச்செய்தாரென்கை இதிலும் காட்டில் பூர்வயோஜனைக்கு சப்தஸ்வாரஸ்யமும் அர்த்தகௌரவமும் உண்டு. ... ... (சo)

வ்யா.—அ.—நாற்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - எம்பெருமானார் தம்மை ரக்ஷித்தபடியைச்சொல்லி ஹ்ருஷ்டராய்க்கொண்டு போந்து, இதிலே - அர்த்தித்வநிரபேக்ஷமாக ஸ்ரீவாமநாவதாரத்திலே, (தாள்பரப்பிமண்டாவியவீசனே) என்கிறபடியே ஸர்வருடையவும் சிரஸ்ஸுக்களிலே ஸ்ரீபாதத்தைவைத்து உபகரித்தாப்போலே, இவரும் அதிகாரா நதிகாரவிபாகமற எல்லார்க்கும் ஸ்வரூபாநுரூபமான அர்த்தத்தை உபகரித்தாரென்று வித்தராகிறார்.

வ்யா.—(சேமநல்வீடும்) மோக்ஷத்தைக்கொடுக்குமதாய், (తమసఃపరస్తాత్) (தமஸ:பரஸ்தாத்) என்கிறபடியே அப்ராக்ருதமாய், *அயோத்யை என்றும் *அபராஜிதை என்றும்சொல்லப்படுகிறபரமபதமும். (பொருளும்) அதுக்கங்கமாகவாதல், பரம்பரையா ஸாதநமாகவாதல், ஸாதநாநுஷ்டாநத்துக் குடலாகவாதல் விதிக்கப்படுகிற ந்யாயார்ஜித தநமும். (தருமமும்) நித்யநைமித்திகாதிரூபமாய் ஆராதநரூபமாய வர்ணாச்ரம விஹிதமாயிருக்கிற தர்மமும். (சீரிய நற்காமமும்) சாஸ்த்ரங்களிலே ச்லாகிக்கப்பட்டதாய் போக்யமாய் விஹிதமாய் ஸ்வயம்புருஷார்த்தமான காமமும.

(என்றிவை நான்கென்பர்) ஏவம்விதரூபேண நாலுவகைப்பட்டிருக்கும் புருஷார்த்தமென்று தர்மசாஸ்த்ரப்ரவர்த்தகரான வ்யாஸ பராசராதிகள் சொல்லுவர்கள். (ధర్మార్థకామమోక్షాఖ్యాః పురుషార్థాః ఉదాహృతాః) (தர்மார்த்தகாமமோக்ஷாக்யா: புருஷார்த்தா: உதாஹ்ருதா:) என்னக்கடவதிறே. இந்நாலிலும் தர்மார்த்தகாமங்கள் மூன்றும ப்ராக்ருதங்களுமாய் ஸ்வரூபாநநுரூபங்களுமாய் இஶ்ஶரீரத்தோடே அநுபவிக்கப்படுமவையாயிருக்கும்; துரீயபுருஷார்த்தமான மோக்ஷம் சேதநனுக்கு ப்ரக்ருதிவிமோசநாநந்தரம் இவனதேஹாந்தரத்தை பரிக்ரஹித்து தேசவிசேஷத்திலே சென்றநுபவிக்குமது அப்ராக்ருதமாயிருக்கும்; இது ஸாதநாந்தரபரனுக்கும் ஸ்வப்ரயோஜநமாயிருக்கும்; ஸ்வரூபஜ்ஞாநமுடைய அதிகாரிக்கு இவையெல்லாம் மாறுடியிருக்கும். எங்ஙனேயென்னில; சேதநன அசித்வத்பாரதந்த்ரனாய் தனக்கென்று ஒருப்ரயோஜநமுமின்றிக்கே பேறிழவுகள் ஸ்வாமியானவனுக்கே என்று அத்யவஸித்தவனாகையாலேயென்றபடி.

(நான்கினும்) நாலிலுமென்றபடி. புருஷார்த்தமான நாலிலும் வைத்துக்கொண்டு. (கண்ணனுக்கேயாமதுகாமம்) (నకామకలుషం చిత్తం మమ తే పాదయోస్థితమ్ । కామయే వైష్ణవత్వం తు సర్వజన్మసు కేవలమ్) என்றும், (న దేవలోకాక్రమణం నామరత్వమహం వృణే। ఐశ్వర్యం వాపి లోకానాం కామయే న త్వయా వినా) என்றும், (కామక్రోధౌ నృణాం లోకే నిరయస్యైవ కారణమ్ । హరిం సమేత్య తావేవ ముక్త్యై గోవిందురద్విషామ్) என்றும், (ప్రియో హి జ్ఞానినోఽత్యర్థ మహం స చ మమ

ప్రియః) என்றும, (యం ప్రేక్ష్య చక్షుషాం [illegible]) என்றும், ([illegible]) என்றும்சொல்லுகிறபடியே வகுத்தசேஷியாய் ஸகலபஞ்ஞ ஸர்வேச்வரனுடைய ஸம்ச்லேஷத்தை யபேக்ஷிக்கும்படியான காமம் ப்ரதாநபுருஷார்த்தமாயிருக்கும்; அதிலேஸ்வார்த்ததையாகிற அஹங்காரத்தைத் தவிர்த்து அவனுடையமுகமலர்த்தியை உத்தேசித்துபண்ணும் பகவத்ஸம்ச்லேஷமே ப்ரதாநபுருஷார்த்தமென்றபடி.

(கண்ணனுக்கே) என்கிற அவதாரணத்தாலே, (தனக்கேயாக வெனைக்கொள்ளும்) என்றும், [(உற்றோமேயாவோமுனக்கே நாமாட்செய்வோம மற்றநங்காமங்கள் மாற்று) என்கிறபடியே அத்யவஸிக்கவேணு மென்றபடி. ஆக - இந்தஅதிகாரிக்கு பகவத்காமமே ப்ரதாநபுருஷார்த்தமாயிருக்கும் ([illegible]) ([illegible] கர்ப்பாதிநிர்மமதி.) என்று பெருமாளை [illegible] விருத்தகாமத்தை [illegible] ([illegible]) ([illegible] காமமநுவர்த்ததே - [illegible]) என்று அடைவே இவர்க்[illegible]

(அறம்பொருள்[illegible]) அறம - விசேஷதர்மம். ([illegible]) ([illegible]) (துணைர்த்தாஸ்யமுபாகத,) (அஹம்ஸர்வம்கரிஷ்யாமி) (உனக்கேநாமாட்செய்வோம) என்கிறபடியே[illegible]ப்ரகாரங்களைப் [illegible] ஸாம்ஸாரிக[illegible] அசேஷவர்ந்தி[illegible]மென்றபடி.(பொருள்) தாஸ்யத்துக்கு உபயுக்தமான அமுதுபடி சாத்துப்படி முதலான வற்றுக்கு ஸாதநமாயிருக்கிற அர்த்தம. (வீடு) தாமார்த்தங்களை ஸம்பாதிக்கைக்குத் தந்தியாய அவனுடைய அபிவ்ருத்திக்குடலான ப்ராப்யதேசம. (இதற்கென்று) காமசப்தவாச்யமான இந்தபகவத்ஸம்ச்லேஷரூப ப்ரதாநபுருஷார்த்தத்துக்கு ஸஹகாரியாய சேஷமாயிருக்கும் இத்தனை யென்று. (இந்தமண்மிசையே) ஒரு தேசவிசேஷத்திலேயன்றிக்கே, பரிதர்ச்யமாநமாய் எல்லார்க்கும் அஜ்ஞாநத்தை விளைக்குமதான இந்த மஹாப்ருதிவியிலேதானே. (வாமநன்சீலன்) இதத்லையில் அர்த்தித்வாதி நிரபேக்ஷமாகத் தாமே வந்து உபகரிக்கைக்கு ஸ்ரீவாமநதுல்யசீலரான, (இராமாநுசன்) எம்பெருமானார். (உரைத்தான) ஒரு தேசவிசேஷத்தே பெறவேண்டி யிருக்குமதான இவ்வர்த்தத்தை இங்கேதானே யருளிச்செய்தார்.

(வாமநன்சீலன்) ஸ்ரீவாமநாவதாரத்திலே அர்த்தித்வாதி நிரபேக்ஷமாகத் தானே வஸிஷ்டசண்டாளாதிவிபாகமற ஸர்வ

ருடையவும் தலைகளிலே,(நல்லடிப்போது)என்னும்படியான ஸ்ரீபாதத்தை வைத்தாப்போலே, (నిదిధ్యాసితవ్యః) (நிதித்யாஸிதவ்ய:) இத்யாதிவேதாந்த சாஸ்த்ரவிஹிதமாய், (మహనీయవిషయే ప్రీతిర్భక్తిః) (மஹநீயவிஷயே ப்ரீதிர்ப்பக்தி:) என்கிறபடியே பக்திரூபமான இந்த பகவத்காமத்தை ஸ்ரீபாஷ்யமுகேந அருளிச்செய்தாராகையாலும், லோகத்தாரெல்லார்க்கும் பகவத்ஸம்ச்லேஷ ரஸம் பிறக்கும்படி அவருடைய அதிகாராநதி காரங்களைப் பாராதே உபதேசித்தாராகையாலும், அவனுடைய ஸ்வபாவமே இவர்க்கும் ஸ்வபாவமாய் அவனோடு துல்யரானாரென்றதாய்த்து. ... ... (சo)

உரை.—அ.— (நாற்பத்தோராம்பாட்டு.) இப்பாட்டில் - எம்பெருமானார் உபதேசத்தாலே லோகம் திருந்தினபடியைக் கண்டு,ஸர்வேச்வரன் அநேகாவதாரங்கள் பண்ணிதன்னைக்கண்ணுக்கிலக்காக்கினவளவிலும் காணமாட்டாத லௌகிகரெல்லாம், எம்பெருமானார்காலத்திலே யதாஜ்ஞாநம் பிறந்துபகவத்யரானார்களென்கிறார்.

மூ.—மண்மிசையோநிகள்தோறும்பிறந்தெங்கள்மாதவனே
கண்ணுறநிற்கிலுங்காணகில்லாவுலகோர்களெல்லா
மண்ணலிராமாநுசன்வந்துதோன்றியவப்பொழுதே
நண்ணருஞானந்தலைக்கொண்டுநாரணற்காயினரே (சக)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | "எந்நின்றயோநியுமாயப் பிறந்தாய என்கிறபடியே, பூமியிலே, | காணகில்லா | இவன் நமக்குசேஷியென்று தர்சிக்கமாட்டாத, |
| யோநிகள் | மநுஷ்யதிர்யகாதி | உலகோர்களெல்லாம் | லௌகிகரெல்லாரும் |
| தோறும் பிறந்து | யோநிகள் தோறும் அவதரித்து, | அண்ணல் | ஆச்ரிதருடைய இழவுபேறுகள் தம்மதாமபடியான ஸ்வாமித்வப்ராப்தியையுடையரான, |
| எங்கள் | நமக்குநாதனை, | | |
| மாதவனே | ச்ரியபதியே, | | |
| | "న మాంసచక్షురభివీక్షతే తమ్" (நமாம்ஸசக்ஷுரபிவீக்ஷதேதம்) என்கிறதன்னை, | இராமாநுசன் வந்து தோன்றிய | எம்பெருமானார் வந்து, பாஷ்யகாரனாதிகளாலே ப்ரகாசகரான |
| | | அப்பொழுதே | அக்காலத்திலே, |
| கண்ணுற நிற்கிலும் | கண்ணுக்கு விஷயமாக்கிக்கொண்டு நிற்கிலும், | நண்ணரும் | ஸ்வயத்நத்தாலே துஷ்ப்ராபமான, |

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஞானந்தலை க்கொண்டு | ஜ்ஞாநமான சயித்து, | | தோன்றல்-ப்ரகாசித்தல். அதவா, தோன்றிய வப்பொழுதே என்றது - ஆவிர்ப்பவித்த வப்பொழுதே யென்னவுமாம். அந்தப்பக்ஷத்தில், அப்பொழுதேஎன்றது-அவதரித்தருளின அக்காலத்திலே யென்றபடி. அல்லது, தத்க்ஷணத்திலேஎன்னவொண்ணாதிறே. கண்ணுறநிற்கையாவது - சக்ஷுர்விஷயமாகநிற்கை. ஞானந்தலைக்கொள்ளுகையாவது-ஜ்ஞாநமதிசயிக்கை ... ...(௪௧) |
| | ஸகலசேதநாசேதநங்களும்ப்ரகாரமாக தான் ப்ரகாரியாயிருக்கையாலே, | | |
| நாரணற்கு | நாராயண னென்னும் திருநாமத்தை யுடையவனுக்கு, | | |
| ஆயினார் | சேஷமானார்கள். | | |

வ்யா.—அ.—நாற்பத்தோராம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - எம்பெருமானார்பண்ணின உபதேச வைபவத்தைச்சொல்லி, இப்பாட்டிலே - பூலோகத்திலே ப்ரக்ருதி பரவசராயிருக்கிற சேதநரை ரக்ஷிக்கைக்காக ஸர்வேச்வரன் மநுஷ்ய திர்யகாத்யநேக தேஹ பரிக்ரஹம்பண்ணி எல்லார்க்கும ஸுலபனாய்க் கண்ணுக்கிலக்காயினாலும இவன் ஸாதுபரித்ராணார்த்தமாக அவதரித்தவனென்று அறியமாட்டாத லௌகிகர்களை!, நமக்கு பிதாவான வெம்பெருமானார் அவதரித்தபின்பு அவர்ப்ரஸாததநாலே ஸம்யக்ஜ்ஞாநநிஷ்டராய் நாராயணனே தங்களுக்கு ஸர்வப்ரகாரத்தாலும் வகுத்த சேஷியென்றுதெளிந்து அவனுக்குத் தங்களை சேஷமாக்கி வைத்தார்களென்று அருளிச்செய்கிறார்.

வ்யா.—(மண்மிசையோநிகள்தோறும்பிறந்து) * மாறிமாறிப் பலபிறப்பும்பிறந்த விச்சேதநரைப்போலே,(எந்நின்ற யோனியுமாய்ப்பிறந்தாய்) என்கிறபடியே, மநுஷ்யதிர்யக்ஸ்தாவரரூபங்களான பலயோநிகள்தோறும்ராமக்ருஷ்ணவராஹாதிரூபேண வவதரித்து. (எங்கள்மாதவனே) இத்தனை நிஹீநமான யோநிகளிலே புக்கது உங்களுடைய இழவைக்காணமாட்டாத பரமக்ருபையாலேயிறே. உங்களை ரக்ஷிக்கைக்காக வென்றபடி. (மாதவனே) க்ருபாகுணத்துக்கு உத்தமபகை பெரியபிராட்டியாராகையாலே அவளுடைய சேர்த்தியை ஸ்மரிக்கிறார். (లక్ష్మ్యా సహ హృషీకేశో దేవ్యా కారుణ్యరూపయా। రక్షకస్సర్వసిద్ధాన్తే వేదాన్తేషు చ గీయతే) (லக்ஷ்ம்யாஸஹ ஹ்ருஷீகேசோ தேவ்யாகாருண்யரூபயா-ரக்ஷகஸ்ஸர்வஸித்தாந்தே வேதாந்தேஷு-சகீயதே) என்று - ஈச்வரனுடைய ரக்ஷணமெல்லாம் பெரியபிராட்டியாரோடேகூடி ஆசரிக்கப்படுகிறதாகையாலும், அவளும் இந்த சேதநருடைய ரக்ஷணத்துக்காகவே, "அகலகில்லேன்

இறையும்” என்று ஸர்வதா அநபாயிநியா யிருக்கையாலும் அத்தைபபற்றி, (மாதவன)என்றருளிசசெய்கிறார். அந்தஸ்ரீயாலே யிட்டுகார்யங்கொள்ளுகையன்றிககே,நேர்கொடுநேரே-தானே.

(கண்ணுறநிற்கிலும்) (எதிர்சூழல்புக் கெனைத்தோர்பிறப்பும்) என்கிறபடியே ஸாவகாலத்திலும ஸர்வதேசத்திலும் ஸர்வபரகாரத்தாலும் ஸர்வருடையவும கண்ணுககு தன்னை விஷயமாக்கிசகொண்டு நிற்கிலும். (అభయం సర్వభూతేభ్యో దదామ్యేతద్వ్రతం మమ) (அபயம ஸர்வபூதேப்யோ ததாம்யேதத்வ்ரதம) என்றும், (మన్మనా భవ మద్భక్తో మద్యాజీ మాం నమస్కురు। మామేవైష్యసి సత్యం తే ప్రతిజానే ప్రియోऽసి మే) (అహం త్వా సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి మా శుచః) (மந்மநாபவமத்பக்தோ மத்யாஜீ மாம நமஸ்குரு - மாமைவைஷ்யஸிஸத்யம்தே ப்ரதிஜாநேப்ரியோஸி மே) (அஹம்த்வாஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமிமாசுச:) என்றும, (అహం స్మరామి మద్భక్తం నయామి పరమాం గతిమ్) (அஹம்ஸ்மராமிமத்பக்தம் நயாமிபரமாங்கதிம) என்றும இப்படி உபதேசித்து, படாதனபட்டு தூத்யஸாரத்யங்களை பண்ணிருலும்.

(காணகில்லா) (అవజానన్తి మాం మూఢా మానుషీం తనుమాశ్రితమ్। పరం భావమజానన్తః మమ భూతమహేశ్వరమ్) (அவஜாநந்திமாம்மூடா மாநுஷீம்தநுமாச்ரிதம - பரமபாவமஜாநந்த: மமபூதமஹேச்வரம) என்கிறபடியே - இவன் நமக்குவகுத்த சேஷியென்று அறியமாட்டாதே. (న మాం స చక్షురభివీక్షతే తమ్) (நமாம்ஸசக்ஷு ரபிவீக்ஷதேதம) என்னும்படியான அவனுடையஸ்வரூபம, அவதரித்தவிடத்திலும் அப்படியேயாய்த்தலைககட்டிறறுகையாலும (న తు మాం శక్యసే ద్రష్టుమనేనైవ స్వచక్షుషా। నాహం వేదైర్న తపసా న దానేన న చేజ్యయా॥ శక్య ఏవంవిధో ద్రష్టుమ్) (நதுமாம்சக்யஸே த்ரஷ்டுமநேநைவஸ்வசக்ஷுஷா-நாஹம்வேதைர்நதபஸா நதாநேநநசேஜ்யயா-சக்யஏவம்விதோத்ரஷ்டும) என்று அவதாரத்திலும அவன்படி யருளிசசெய்தாரிறே. (கண்கள்காண்டற்கரியனாய்) என்றாரிறே ஆழ்வாரும. இப்படி நேர்கொடுநேரே உபதேசித்தாலும திருந்தாதேபோன.

(உலகோர்களெல்லாம) லௌகிகரெல்லாரும். (அண்ணல்) (సహి విద్యాతస్తం జనయతి, తచ్ఛ్రేష్ఠం జన్మ) (ஸஹிவித்யாதஸ்தம்ஜநயதி, தச்ச்ரேஷ்டம்ஜந்ம) என்கிறபடியே அச்ரேஷ்டமாயிருக்கிற ஜந்மப்ரத்வம்விஜந்மத்தைக கொடுத்திருக்கிற. அன்றிக்கே. ஸ்வாச்ரிதருடைய இழவுபேறுகள் தம்மதாம்படியான ஸ்வாமித்வப்ராப்தியையுடையரான. (இராமாநுசன்) எம்பெருமானார். (வந்து) லோகத்தையெல்லாம் ரக்ஷிக்கைக்காக பரமபதத்திலநின்றும நிக்ஷிதராய்வந்து. (தோன்றிய வப்பொழுதே) அவதரித்தவககாலத்திலே. அன்றிக்கே (வந்துதோன்றிய வப்பொழுதே)அவதரித்து

ஸ்ரீபாஷ்யகாராறாதிகளாலே தத்வஹித புருஷார்த்த பரகாசகரான அக்காலத்திலே யென்றுமாம். தோன்றுதல் - ப்ரகாசித்தல்.

(நண்ணரு ஞானந்தலைகொண்டு) ஜ்ஞாநம்தலைக்கொள்ளுகையாவது - ஜ்ஞாநமதிசயிக்கை. ஸர்வவிலக்ஷணமாய் ஸ்வயத்நத்தாலே ப்ராபிக்கவரிதான ஸம்பந்த ஜ்ஞாநமதிசயித்தென்றபடி. (நாரணற்காயினரே) (ఆతాపితాభ్రాతానివాసశ్శరణంసుహృత్) (மாதாபிதாப்ராதாநிவாஸஶ்ஶரணம்ஸுஹ்ருத்) என்றும், (சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத்தாய்தந்தையுமவரே) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸர்வவிதபந்துவாய (అన్తర్బహిశ్చతత్సర్వంవ్యాప్య) (அந்தர்பஹிஶ்ச தத்ஸர்வம் வ்யாப்ய) என்றும், (கரந்தெங்கும்பரந்துளன்) என்றும் சொல்லுகிறபடியே அந்தர்பஹிஶ்சவ்யாபகனாய், (యస్యాత్మాశరీరమ్) (ఏష సర్వభూతాన్తరాత్మాపహతపాప్మా దివ్యోదేవ ఏకః) (யஸ்யாத்மாசரீரம) (ஏஷஸர்வபூதாந்தராத்மாபஹதபாப்மா திவ்யோதேவஏக) என்றும், (தானோருருவே தனிவித்தாய்த் தன்னிலமூவர் முதலாய, வானோர்பலரும் முனிவருமமற்றுமமற்றுமமுற்றுமமாய) என்றுஞ் சொல்லுகிறபடியே ஸகலசேதநாசேதநங்களும் ப்ரகாரமாகத் தான்ப்ரகாரியாய்க்கொண்டிருக்கிற நாராயணனுக்கே சேஷபூதரானார்கள் திருமந்த்ரதவயநிஷ்டர்களானாரென்றதாயிற்று. ... ... ... (சக)

உரை.—அ.—நாற்பத்திரண்டாமபாட்டு. பகவதவதாரங்களில் நிருந்தரதவாயமெல்லாரும எம்பெருமானாருடைய அவதாரத்தாலேதிருந்தினாரென்றார் - கீழ்; விஷயப்ரவணராய நசித்துப்போகிறவென்னை தம்முடைய பரமகாருண்யத்தாலே வந்து எடுத்தருளினாரென்று தம்மை விஷயீகரித்தபடியை அநுஸந்தித்துத் தலைசீக்கிறார் - இதில்.

மூ.—ஆயிழையாரொங்கைதங்குமக்காதலளற்றழுந்தி
மாயுமென்னாவியைவந்தெடுத்தானின்றுமாமலராள்
நாயகனெல்லாவுயிர்கட்குநாதனரங்கனென்னும்
தூயவன்றீதில்இராமாநுசன்தொல்லருள்சுரந்தே. (சஉ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஆய | ஸ்ரக்வஸ்த்ராபரணாதிகளாலே தேஹதோஷம்புறம்புதோற்றாதபடி மறைத்துசேதநரை மோஹிப்பிக்குமவர்களாகையாலே தங்களுக்கு | இழையார் | அநுரூபமாகத் தெரிந்து பூணப்பட்ட, ஆபரணங்களையுடையராய், அதுவே நிரூபகமாகவிருக்கும் ஸ்த்ரீகளுடைய, |

| பதம். | உரை. |
|---|---|
| கொங்கை தங்கும் | ஸ்தநத்துக்கு அவ்வருகு ஒன்றில் போகாததாய், |
| அக் | வாக்குக்கு நிலமல்லாதபடி கைகழிந்திருக்கிற, |
| காதல் அளறு | ப்ராவண்யமாகிற அளற்றிலே, |
| அழுந்தி | அழுந்தி, |
| மாயும் | நசித்துப்போகிற, |
| என்னாவியை | என்னாத்மாவை, |
| | அளறுபாய்ந்து முடியத் தேடுகிறவர்களை விரகறியும் தார்மிகர் வந்தெடுக்குமாப்போலே, |
| மாமலராள் நாயகன் | ச்ரியபதியான, |
| அரங்கன் | பெரியபெருமாளை, |
| எல்லாவுயிர்கட்கும் | ஸகலாத்மாக்களுக்கும், |
| நாதன் என்னும் | சேஷியென்று உபதேசியாநின்றுள்ள, |
| தூயவன் | ஜ்ஞாநசுத்தியையுடையராய, இப்படி உபதேசிக்குமிடத்தில், |
| தீதில் | க்யாதி லாபாதி அபேக்ஷாரூப தோஷரஹிதரான, |
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| தொல்அருள் | தம்முடைய ஸ்வாபாவிககர்பையை, |
| சுரந்து | கிளர்ந்து, |
| வந்து | அந்த க்ர்பாப்ரேரிதராய் வந்து, |
| இன்றுஎடுத்தான் | இன்று எடுத்தருளினார். |
| | இப்படி செய்தருளுவதே! யென்று கருத்து. |

ஆய்தல் - தெரிதல். இழை - ஆபரணம். அக்காதலென்று - அதினுடைய ஹேயதையைச் சொல்லிற்றாகவுமாம். மாயதல் - நசித்தல. ... ... (சஉ)

---

வ்யா.—அ.—நாற்பத்திரண்டாம்பாட்டு. கீழில்பாட்டிலே-ஈசவரனவதரித்து உபதேசித்தவிடத்திலும் திருந்தாத லௌகிகர், எம்பெருமானாரவதரித்தபின்பு திருந்தி விலக்ஷணராய் பகவதீயரானார்களென்கிறார்; இப்பாட்டிலே-ஆபாதரமணீயவேஷைகளான தருணீஜநங்களுடைய ஸ்தநங்களிலே பத்தமான ப்ரீதியாலே ஆழங்கால்பட்டு நசித்துப்போகிற என்னாத்மாவை ச்ரியஃபதியான திருவரங்கச்செல்வனாரே ஸகலாத்மாக்களுக்கும் வகுத்த சேஷியென்று உபதேசிக்கும்படியான ஜ்ஞாநவைசத்யத்தை யுடையராய நிர்த்துஷ்டரான எம்பெருமானார், இப்போது அந்தலௌகிகரெல்லாரிடத்திலேயும் பண்ணின தம்முடைய ஸ்வாபாவிக க்ர்பையை அடியேனொருவனிடத்திலும் கட்டடங்கப்ரவஹித்து விஷயாந்தர ப்ராவண்யத்தில் கர்த்தத்தில் நின்றும் உத்தரித்தார் கண்டாயே! யென்று தலைசிய்க்கிறார்.

வ்யா.—(ஆயிழையார்) (చర్మాసృఙ్మాంసమేదోస్థిమజ్జాశుక్లాదిసంయుతే। దేహే చేత్ ప్రీతిమాన్ మూఢో) (சர்மாஸ்ருங்மாம்ஸமேதோஸ்த்தி மஜ்ஜாசுக்லாதிஸம்யுதே। தேஹே சேத்ப்ரீதிமாந்மூடோ) என்றும், (క్రిమిజన్తుసఙ్కులమ్) (க்ரிமிஜந்துஸங்குலம்) என்றும், (స్వభావదుర్గన్ధమశౌచమధ్రువం కళేబరం మూత్రపురీషభాజనమ్) (ஸ்வபாவதுர்க்கந்தமசௌசமத்ருவம் களேபரம் மூத்ரபுரீஷபாஜநம்) என்றும், (முடைத்தலையூன்) என்றும் சொல்லுகிறபடியே - அதிஹேயமாயிருக்கிற தேஹத்தினுடைய ஹேயதை தெரியாதபடி, ஸ்ரக்வஸ்த்ராபரணங்கராகாதிகளாலே அலங்கரித்துக்கொண்டு ஆபாதரமணீயைகளான தருணீஜநங்களுடைய. ஆய்தல் - தெரிதல். இழை - ஆபரணம். இழையார்-ஸ்த்ரீகள். அகவாயில் தோஷமொன்றும்தோற்றாதபடி கைப்பாணியிட்டாப்போலே காணும் இவர்கள் தம்மை அலங்கரித்துக்கொண்டிருப்பது. (கொங்கைதங்கும்) (స్తనౌ మాంసగ్రన్థీ) (ஸ்தநௌ மாம்ஸக்ரந்தீ) என்கிறபடியே * மாம்ஸாஸ்ருங்மயமான ஸ்தநங்களிலே ஸக்தனாய், அவற்றின் தோஷத்தைத் தெரியமாட்டாதே போக்யதாபுத்தியைப்பண்ணி அவற்றுக்கு அவ்வருகுபோக அசக்தனாய், த்ருஷார்த்தனானவன் தண்ணீர்ப்பந்தலிலே விழுந்துகிடக்குமாப்போலே அவற்றிலே தானே நித்யவாஸம்பண்ணும்படியான.

(அக்காதலளற்றழுந்தி) அந்தவிஷயம்போலே அதிஹேயமான வ்யாமோஹமென்கிற அள்ளல்தறையிலே மக்னனாய். அன்றிக்கே, (அக்காதல்) வாக்குக்கு நிலமல்லாதபடி கைகழிந்தகாதலென்னவுமாம் (மாயும) நசித்துப்போந்த. (என்னுவியை) கீழே லௌகிகரெல்லாரையு முத்தரித்தபடி யருளிச்செய்தீர், இது உமக்குத்தெரிந்தபடியென், கர்ணகர்ணியாய்க் கேட்டிருந்தீராகில் இது நமக்கு விச்வஸநீயமாயிருக்குமோ வென்ன; அப்படிகேட்டுச்சொன்னேனல்லேன், இதுக்கு நான் ஸாக்ஷியென்று தம்மைக்காட்டுகிறார் (என்னுவியை) என்னுத்மாவை. இவ்வளவும் (అసన్నేవ) (அஸந்நேவ) என்னும்படியாய்ப் போந்த என்னுத்மாவை. ஒரு கைம்முதலில்லாத என்னுத்மாவை.

(மாமலராள்நாயகன்) மாமலர் என்று-ஸமஸ்தபுஷ்பஜாதிக்கும் உத்க்ருஷ்டமாய் ச்லாக்யமாயிருந்ததாகையாலே கமலத்தைச்சொல்லுகிறது. அந்தகமலந்தான் தன்னுடைய கரசரணநேத்ராதிகளுக்கு ஒருபடிபோலியாயிருக்கையாலும், பரிமளப்ரசுரமாகையாலே போக்யதமமாகையாலும் அதிலே உத்பந்நையாய் அங்கே நித்யவாஸம் பண்ணுகையாலே (மாமலராள்) என்கிறார். (மாமலராள்நாயகன்) ப்ரஹ்மசாரி யெம்பெருமானுலல் பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாய் தண்டதரனாயிருக்கவேண்டியிருக்கை

யாலே, (వైషమ్యనైర్ఘృణ్యేనసాపేక్షత్వాత్ కృతప్రయత్నాపేక్షస్తువిహితప్రతిషిద్ధావైయర్థ్యాదిభ్యః) (வைஷம்யநைர்க்ர்ண்யே நஸாபேக்ஷத்வாத க்ர்தப்ரயத்நாபேக்ஷஸ்துவிஹிதப்ரதிஷித்தாவை யதார்த்திப்ய꞉) என்கிறபடியே-ஸகலசேதநர்களுடையவும் யோக்யதாயோக்யதைகளை அடைவே கடாக்ஷித்து தததநுரூபமாக பலத்தைக்கொடுப்பனென்று பயப்படவேண்டாதபடி, (సహధర్మచరీంశౌరే స్సమ్మన్త్రితజగద్ధితామ్। అనుగ్రహమయీంవన్దే నిత్యమజ్ఞాననిగ్రహామ్) (ஸஹதர்மசரீ௦சௌரேஸ்ஸம்மந்த்ரிதஜகத்திதாம் । அநுக்ரஹமயீ௦வந்தே நித்யமஜ்ஞாநநிக்ரஹாம்) என்கிறபடியே-தானும் அஜ்ஞாதநிக்ரஹையாய் அநுக்ரஹமயியாய், ஜகத்தினுடைய ஹிதத்தை ஸர்வேச்வரனுக்கு அறிவிப்பாளாய், கண்ணைப்புரட்டுதல், கச்சைநெகிழ்க்குதல் முதலான தன்னுடைய ப்ரூவிலாஸசேஷ்டிதங்களாலே அவனை வசீகரித்துத் தனக்குக் கையாளாகப்பண்ணிக்கொண்டு, தானும், (இறையும் - அகலகில்லேன்) என்று அநபாயிநியாயிருந்துள்ள பெரியபிராட்டியார்க்குவல்லபனானவன். இவள்தான் (నకశ్చిన్నాపరాధ్యతి) (நகஶ்சிந்நாபராத்யதி) என்றவளிறே.

(எல்லாவுயிர்கட்கும் நாதன்) (పతింవిశ్వస్య) (பதி௦விசவஸ்ய) என்கிறபடியே ஸகலாத்மாக்களுக்கும் பாலகனை. வகுத்தசேஷியென்றபடி. ஆனால், (ఇతిచసనాదిన్యాయతోన్తరహస్యమ్) (யிதிசிவஸநகாத்யையாத்யாதுமத்யந்ததூரம்) என்கிறபடியே நமக்கு எட்டாத நிலத்திலேயிருந்தானென்னவேண்டா (அரங்கனை) நாமிருந்தவிடந்தேடி ஸந்நிஹிதனாய்க்கொண்டு, (అభయంసర్వభూతేభ్యోదదామి) (அபய௦ஸர்வபூதேபயோததாமி) என்கிறபடியே இருந்தவனன்றோ. (என்னும்) இப்படி உபதேசம்பண்ணும்படியான. (நாயவன்) (నహిజ్ఞానేనసదృశంపవిత్రమిహవిద్యతే) (நஹிஜ்ஞாநேநஸதாச௦பவித்ரமிஹவித்யதே) என்கிறபடியே தத்வயாதாத்ம்யஜ்ஞாந பூர்த்தியாலே என்போலபதிதரையும் பாவநராம்படிபண்ணுகிறார்.

ஆனால் நீர் அநுவர்த்தநம்பண்ணாதே விஷயாந்தரப்ரவணராயிருந்தீரேயென்ன (தீதில்) அப்படி யித்தலையில் அதிகாரத்தைப் பார்க்கையாகிற தோஷரஹிதர். உபதேசிக்குமிடத்தில் கயாதிலாப பூஜாத்யபேக்ஷாரூப தோஷரஹிதரென்றுமாம். (இராமாநுசன்) இப்படிப்பட்ட எம்பெருமானார். (இன்று) அதுவும் காலாந்தரத்திலேயோ. (இன்று-வந்து) ஸகலஜநத்துக்கும் ப்ரத்யக்ஷமாகவே இப்போதுவந்து. (தொல்லருள்சுரந்து) உமக்கொருவர்க்கும் ஒரு காலவிசேஷத்திலே க்ர்பைபண்ணினார், அவர்க்கெப்போதுமுண்டோவென்ன (தொல்) அந்தக்ர்பை அவருக்கு ஸ்வாபாவிகம், (அருள்சுரந்து) அப்படிப்பட்ட க்ர்பைகிளர்ந்து. மேன்மேலும்

என்னுடைய துர்வாஸனையெல்லாம் அடிமாண்டுபோம்படி ([illegible]) (த்ரிபாவநாரேணுநிவாரணோதகம்) என்கிறபடியே அவஸரித்து மேகம்வர்ஷித்தாப்போலே பண்ணியருளி. (எடுத்தான்) ஆற்றுவெள்ளத்திலே பாய்ந்துபோகிறவனை விரகறியும்தார்மிகர் வந்தெடுத்து ரக்ஷிக்குமாப்போலேயும், * கூபத்தில்வீழுங்குழவியுடன்குதித்து அவ்வாபத்தை நீக்கு மந்தவன்னைபோலவும் அத்யந்தகாபாப்ரேரிதராய்க்கொண்டுவந்தெடுத்தருளினார். ... (சஉ)

உரை.—அ.—நாற்பத்துமூன்றாம்பாட்டு. இப்படி தம்மை விஷயீகரிக்கையால்வந்த ப்ரீதியாலே லௌகிகரைப்பார்த்து எல்லாரும் எம்பெருமானார்திருநாமத்தைச் சொல்லுங்கோள், உங்களுக்கு எல்லாநன்மையு முண்டாமெனகிறார்.

மூ.—சுரக்குந்திருவுமுணர்வுஞ்சொலப்புகில்வாயமுதம்
பரக்குமிருவினைபற்றறவோடும்படியிலுள்ளீர்!
உரைக்கின்றனனுமக்கியானறஞ்சீறுமுறுகலியைத்
துரக்கும்பெருமையிராமாநுசனென்றுசொல்லுமினே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| படியிலுள்ளீர் | எம்பெருமானார் திருவவதரித்தருளுகையாலே, "[illegible]" (விசும்பரா புண்யவதீ) என்கிறபடியே பாக்யவதியாயிருக்கிற பூமிக்குட்பட்டவர்களே, | துரக்கும் | தம்முடைய ஸம்பந்தமுள்ள விடத்திலே நில்லாதபடி, ஓட்டிவிடும், |
| யான் | நிஸ்சிதமாக அநுபவத்தாலே கைகண்டயான, | பெருமை | ப்ரபாவத்தையுடையரான, |
| உமக்கு | இதிலே வாசியறியாமல் இழந்திருக்கிற உங்களுக்கு, | இராமாநுசனென்று சொல்லுமின் | எம்பெருமானாருடைய திருநாமோச்சாரணத்தைப்பண்ணுங்கோள்; |
| உரைக்கின்றனன் | சொல்லுகிறேன்; | திருவும் | பக்தியாகிற ஸம்பத்தும், |
| அறம் சீறும் | தாமமென்பதொன்றுதான் நடையாடஸஹியாதே, | உணர்வும் | ஜ்ஞாநமும், |
| உறுகலியை | தானே ப்ரபலமாயுறைந்து நிற்கிற கலியை, | சுரக்கும் | மேன்மேலும் வர்த்திக்கும்; "என்றக்காலண்ணிக்கு மமுதூறும்" என்னுமளவன்றிக்கே, |
|  |  | சொலப்புகில் | சொல்லத் தொடங்கினபோதே, |

ஸ்வரூபஜ்ஞானமும்மேன்மேலென வர்த்திக்கும். (அடியாரடியார்தம் மடியாரடியார் தமக்கடியாரடியார் தம்மடியாரடியோங்களே) என்கிறபடியே பக்தியாகிற ஸமுத்ரத்தும், அதில்நின்றும் ததீயபர்யந்தமாயிருக்கிற ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞானமும், ஸஹ்யத்தில்நின்றும் காவேரிபிறந்தாப்போலே சுரக்குமென்றபடி.

(சொலப்புகில்வாயமுதம்பரக்கும்) தேவஜாதியெல்லாந்திரண்டு அநேகஸாமக்ரியைகொண்டு நெடுங்காலம் * பட்டதனபட்டபின்பிறே இந்த உப்புச்சாறுபிறந்தது, பிறப்பேபிடித்து போஜநரஸமறியாதவர்களாகையாலே அத்தை அம்ருதமென்று பேரிட்டார்கள் அதுபோலன்றிக்கே, (தென்குருகூர்நம்பி யென்றக்காலண்ணிக்குமமுதூறுமென்னாவுக்கே) என்கிறபடியே ஆழ்வாருடைய திருநாமத்தைத் தாமநுஸந்தித்தபின்பிறே ஸ்ரீமதுரகவிகளுடைய நாவுக்கு யதார்த்தமான அம்ருதம்பிறந்தது அதின்படியையுமன்றிக்கே, இந்த சதுரையான சதுரக்ஷரியை யநுஸந்திக்கவேணுமென்றுஉத்யோகிக்கவே அவர்களுடைய திருப்பவளத்துக்குஸ்வரூபோஜ்ஜீவநமான அம்ருதம் ஊற்றுப்போலே சுரவாநிற்கும். (இருவினைபற்றறவோடும்) (తథా విద్వాన్ పుణ్యపాపే విధూయ) (ததாவித்வாந் புண்யபாபேவிதூய) என்கிறபடியே அநுபவத்தாலும் ப்ராயச்சித்தாதிகளாலும் நிவர்த்திப்பிக்க வரிதான மஹாபாபங்களெல்லாம வாஸனையோடேகூடப் பிரிகதிர்படாதேவிட்டோடும். வேதாந்த விரோதம்வாராமைக்காக:- (సుహృదస్సాధుకృత్యాం, ద్విషన్తః పాపకృత్యామ్) (ஸுஹ்ருதஸ்ஸாதுக்ருத்யாம் த்விஷந்த:பாபக்ருத்யாம) என்கிற படியேஅசல்பிளந்தேறிட்டு இந்த அதிகாரிகளை நிர்மலராகப்பண்ணுமென்றதாய்த்து. ... ... ... .. ... (சரு)

உரை.—அ.—நாற்பத்துநாலாம்பாட்டு. இப்படி உபதேசித்தவிடத்திலும் ஒருவரும இதில் மூளாமையாலே அவர்களுடைய படியை அநுஸந்தித்து இனாதாகிறார்.

மூ.—சொல்லார்தமிழொருமூன்றுஞ்சுருதிகள்நான்குமெல்லை
இல்லாவறநெறியாவுந்தெரிந்தவனெண்ணருஞ்சீர்
நல்லார்பரவுமிராமாநுசன்திருநாமம்நம்பிக்
கல்லாரகலிடத்தோரெதுபேறென்றுகாமிப்பரே. (சச)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| அகலிடத்தோர் | விஸ்தீர்ணயானபூமியிலுள்ளார், | சொல்ஆர் | சொல் நிரப்பத்தையுடைத்தாய், |
| பேறுஎது என்று | புருஷார்த்தம் எதுவென்று, | ஒரு | அத்விதீயமாய, |
| காமிப்பர் | இச்சியா நிற்பர்கள்; | | இயல்இசை நாடக ஸமயந்தத்தாலே |

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| மூன்றுதமிழும் | மூன்றுவகைப்பட்டிருந்துள்ள தமிழும, | பரவும் | ப்ரீதிப்ரகர்ஷத்தாலே அடைவுகெட ஏத்தும்படியிருக்கிற, |
| சுருதிகள் நான்குமா | ரிகாதி சதுர்வேதங்களும், | ராமாநுசன் திருநாமம் | எமபெருமானருடைய திருநாமத்தை, |
| எல்லையில்லா | அஸங்க்யேயமான | நம்பி | நான்சொன்ன வார்த்தையை விச்வஸித்து, |
| அறநெறியாவும | தர்மமார்க்கங்களான ஸகலமும், | கல்லார் | கற்கிலர்கள்; ஐயோ- இவர்களை யிருந்தபடி யென்னென்று கருத்து. |
| தெரிந்தவன் | அலகலகாக ஆராய்ந்திருக்குமவராய், | | |
| | எண்ணப்புக்கால், | | |
| எண்ணரும் | எண்ணித்தலைக்கடடவரிதான, | | |
| சீர் | கல்யாண குணங்களையுடையராய், | | |
| நல்லார் | ஸத்துககளுடைய, | | |

எண்ணருஞ்சீர் என்கிறவிது- நல்லார்கரு விசேஷணமாகவுமாம்; நம்புதல்-விருப்பமுமாம்.

வ்யா.—அ.— நாற்பத்துநாலாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே லோகத்தாரெல்லார்ககும் அவர்களுடைய அதிகாராநதிகார விபாகம் பாராதே அத்யந்தவிலக்ஷணமான உபாயத்தை உபதேசித்தாலும் அதனை அத்யவஸிகக மாட்டாதே புருஷார்த்த மேதென்று ஸநதேஹியாநினறுகொண்டு,சிக்ஷிதமானசபதராசியாலேநிறையபபட்டதாய் அத்விதீயமாய் இயலும இசையும் ஸந்தர்ப்பமுங்கூடிவிலக்ஷணமான இப்ப்ரபந்தமும், ரிகாதிவேதசதுஷ்டயமும, அபரிமிதமாயததுபப்ர்ஹமணமானதர்மசாஸ்த்ரமாகிறஇவற்றை அடைவேஆராயந்திருக்குமவராய்,ஸத்துககளாலேஅடைவுகெடஸ்துதிககுமபடியாயிருககிற எம்பெருமானருடையதிருநாமததை அபயவஸியாதேபோனர்களென்று இனனுதாகிறா.

வ்யா.—(அகலிடத்தோர்)(அநந்தா)என்றும்(விபுலா)என்றும் பேரையுடைத்தானஇந்தமஹாப்ர்திவியிலுள்ளசேதநர்கள். (எதுபேறென்றுகாமிப்பர்)நான்இவர்களுடைய'இழவைக்கண்டுபொறுக்கமாட்டாதே, (మన్త్రం యత్నేనగోపయేత్)(மந்த்ரம்யத்நேநகோபயேத்) என்கிற சாஸ்த்ரத்தையும் அதிக்ரமித்து அத்யந்தஸுலபமாய், (గురోర్నామసదాజపేత్) (குரோர்நாமஸதாஜபேத்) என்கிறபடியே- ததீயசேஷதைகரஸஸ்வரூபாநுரூபமாய் பரமபோக்யமான சதுராக்ஷரியை உபதேசித்தாலும் அதிலே நிஷ்டராகமாட்டாதே அறிவுகெட்டு,பின்னையும்நமக்கோர் சரணமேதென்று இங்குமங்கும்நாடி

அந்த இச்சையோடே காலமெல்லாம் இப்படியே வ்யர்த்தமாகப்போக்குகிறார்கள், ஐயோ! இவர்கள்ப்ராரப்தத்தினுடைய க்ரௌர்யம் இங்ஙனேயாய்த்தலைக்கட்டிற்றென்று இன்னாதாகிறார்.

ஆனால் அத்யயநம் பண்ணுவிக்குமவர்கள் மந்தமதிகளுக்கு பின்னையும் ஒருசந்தையைச்சொல்லி அவர்கள் தரிக்குமளவும் க்ர்ஷிபண்ணுவர்களிறே, அப்படி நீரும்செய்யவேண்டாவோவென்ன; (యచ్చ కించిజ్జగత్సర్వం దృశ్యతే శ్రూయతేపివా, అన్తర్బహిశ్చ తత్సర్వం వ్యాప్య నారాయణః స్థితః) (யச்சகிஞ்சிஜ்ஜகத்ஸர்வம்த்ர்ச்யதே ச்ரூயதேபிவா। அந்தர்பஹிச்சதத்ஸர்வம்வ்யாப்ய நாராயணஸ்ஸ்தித:) என்றும், (எண்பெருக்கந்நலத்தொண்பொருளீறில, வண்புகழ்நாரணன் திண்கழல்சேரே) என்றும் ப்ரபாவ புரஸ்ஸரமாக அம்மந்த்ரத்தை உபதேசித்தாப்போலே இவரும் தாம் முன்பருளிச்செய்த சதுரக்ஷரிமந்த்ரத்தை எதிரிட்டு ப்ரபாவவர்ணந பூர்வகமாக அருளிச்செய்கிறார் (சொல்லார் தமிழொரு மூன்றும்) (சீர்த்தொடையாயிரம்) என்றும், (శఠకోపవాఙ్మయమ్) (சடகோபவாங்மயம்) என்றுஞ்சொல்லுகிறபடியே - கோமளங்களாய் தத்வார்த்தநிஸ்சாயகங்களான சப்தங்களாலே நிறையப்பட்ட தமிழென்று- திருவாய்மொழி ஒருஎன்றபதம், காகாக்ஷிந்யாயேந பூர்வோத்தர பதங்களிலே அந்வயிக்கும்; லோகத்திலும்வேதத்திலும் அதுக்கு ஸத்ருசமான ப்ரமாணமில்லையென்றபடி. (மூன்றும்) அதுக்கு மூன்றுப்ரகாரமாகக் கணிசிக்கத் தக்கதாய் அத்விதீயமான மற்றமூவாயிரப்ரபந்தமும் இப்படி ஆழ்வார்பதின்மராலும் அருளிச்செய்யப்பட்ட ஸமஸ்ததிவ்யப்ரபந்தங்களும். அன்றிக்கே, ஒருமூன்றென்றது - திருவிருத்தமும், திருவாசிரியமும், பெரிய திருவந்தாதியும் பொருளாகவுமாம்.

அன்றிக்கே, (சொல்லார்தமிழொருமூன்று) சொல் நிரப்பத்தையுடைத்தாய், அத்விதீயமாய், இயல் இசை நாடக ஸம்பந்தத்தாலே மூன்று வகைப்பட்டிருந்துள்ள தமிழென்னவுமாம். (சுருதிகள்நான்கும்) ப்ரமாணாந்தரங்களைப்போலே அநித்யமாயும் ஸாபேக்ஷமாயுமிருக்கையன்றிக்கே, (వాచా విరూప నిత్యయా) (வாசாவிரூபநித்யயா) என்கிறபடியே நித்யமாய் அபௌருஷேயமாய ஸ்வத ப்ரமாணமாய புஸ்தக நிரீக்ஷணாதி ஸாத்யமன்றிக்கே, (స్వాధ్యాయో ధ్యేతవ్యః) (ஸ்வாத்யாயோத்யேதவ்ய:) என்கிறபடியே - ஆசார்யோச்சாரணாநூச்சாரணைகஸாத்யமாய், (ఋచో యజూంషి సామాని తథైవాథర్వణాని చ) (ரிசோயஜூம்ஷிஸாமாநி ததைவாதர்வணாநிச) என்னும்படியான பேர்களையுடைத்தாய்க்கொண்டு நாலுவகைப்பட்டிருக்கிற வேதங்களும். (எல்லையில்லாவறநெறி) அந்தவேதங்களுடைய அர்த்தப்ரகாசகங்களாய் தொகையிட்டுச் சொல்ல

லொன்றுதபடி அநந்தமான தர்மமார்க்கங்களை. (யாவுந்தெரிந்தவன்) வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யரோபயவேதாந்தாசார்யராகையாலே இவையெல்லாவற்றையும் அலகலகாக ஆராய்ந்திருக்குமவராய்.

(எண்ணருஞ்சீர்) இவர் பாவதவதாரமாகையாலே, ([illegible]) (ஸங்க்யாதும்நைவசக்யந்தேகுணா:) என்னும்படி அநந்தகல்யாணகுணராய ([illegible]) (நதஸ்யேயேஹகஸ்சந்தஸ்யாகாமமாஹாத்ம்யம்.) என்னும்படியான அவனுடைய கீர்த்தியை பரிச்சேதிக்கிலும் இவருடைய கீர்த்தியை பரிச்சேதிக்கவொண்ணாதாகிலும். அதிர்க்கே, (எண்ணருஞ்சீர்) என்றது - (நல்லோர்) என்றபதத்துக்கு விசேஷணமாகவுமாம். அப்போது, ([illegible]) (வாசாமகோசரமஹாகுணதேசிகாக்ர்யகூராதிநாத) என்கிறபடியே எண்ணிறந்த நல்ல கல்யாண குணங்களையுடையரான ஆழ்வான், பிள்ளான், எம்பார் தொடக்கமானவர் என்றபடி. (நல்லார்பரவும்) ([illegible]) (ஜயதிஸகலவித்யாவாஹிநீஜந்மசைலோ) இத்யாதியாலும், ([illegible]) (காதாதாதாகதாநாம்) இத்யாதியாலும், (வாழிஎதிராசன) இத்யாதியாலும் அந்த ஸத்துக்களுடைய பரிக்ராஹகத்தாலே அடைவுகெட ஏத்தும்படியிருக்கிற.

(இராமாநுசன் திருநாமம்) எம்பெருமானாருடைய திருநாமம். ராமாநுசன் என்கிற இத்திருநாமத்தை. (நம்பிக்கல்லார்) இவருடைய ப்ரபாவத்தையறிந்து விச்வஸித்து இவருக்குத் திருநாமமான சதுர்யக்ஷரிமந்த்ரத்தை அப்யஸியாதேபோனார்கள். ([illegible] విభీషణ [illegible] ‖ [illegible] |  [illegible]) என்கிறபடியே குரங்குகளும் மஹாராஜர், ப்ரத்யயம் பண்ணினபின்பு விச்வஸித்தாரிறே; இவர்கள் ஸத்ஸத்விவேசநம் பண்ணுகைக்கு யோக்யரான மநுஷ்யராயிருந்தும் நம்மை எம்பெருமானார்விஷயீகரித்தபடியைத் தெளிவித்து ப்ரத்யயம் பண்ணிக்கொடுத்தாலும் இவர்கள் விச்வஸிக்கமாட்டாதேபோனார்கள், இவர்கள் அபாக்யத்தின்க்ரௌர்யமென்னென்று இன்னாதாகிறார். ... (சச)

உரை.—அ.—நாற்பத்தஞ்சாம்பாட்டு. இப்படி விமுகராயிருந்த சேதநரிலே அந்யதமராயிருந்த தம்மை நிர்ஹேதுகமாக அங்கீகரித்து தம்முடைய ப்ராப்யமும் ப்ராபகமுமென்று விசுவஸிக்கும்படி பண்ணின உபகாரத்தை யநுஸந்தித்து, தேவரீர் செய்தருளின உபகாரம் வாசகமிட்டுச்சொல்லவொண்ணா தென்கிறார்.

மூ.—பேறொன்று மற்றில்லை நின் சரணன்றி யப்பேறளித்தற்
காறொன்று மில்லை மற்றச் சரணன்றி யென்றிப்பொருளைத்
தேறுமவர்க்கு மெனக்கு முனைத்தந்த செம்மை சொல்லால்
கூறும் பரமன்றிராமாநுச மெய்ம்மை கூறிடிலே. (சரு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இராமாநுச | உடையவரே, | எனக்கும் | அதில் விச்வாஸமில்லாத வெனக்கும் ஒருவாசிபாராதே, தேவரீரை, |
| நின் சரணன்றி | தேவரீர் திருவடிகளையொழிய, | தந்த | உபகரித்தருளின, |
| மற்றுப் பேறு | வேறு ப்ராப்யம், | செம்மை | நேர், |
| ஒன்றில்லை | ஒன்றுமில்லை; | மெய்ம்மை கூறிடில் | உண்மை சொல்லில், |
| அப்பேறு | அந்த ப்ராப்யத்தை, | சொல்லால் கூறும் பரமன்று | வாசா வ்யவஹாரிகைக்கு சக்யமாகிறதில்லை. அநுபவித்துக் கும்பிட்டுப் போமத்தனையொழிய க்கூடாது. |
| அளித்தற்கு | தருகைக்கு, | | |
| அச்சரணன்றி | அத்திருவடிகளையொழிய, | | |
| மற்று ஆறு | வேறு உபாயம், | | |
| ஒன்றுமில்லையென்று | ஒன்றுமில்லையென்று, | | |
| இப்பொருளை | இவ்வர்த்த தத்வத்தை, | | |
| தேறுமவர்க்கும் | யாதாதம்ய ஜ்ஞாநத்தாலே விச்வஸித்தபடி பரிக்ரஹித்திருக்குமவர்களுக்கும், | | |

சொல்லாற்கூறும்பரமன்று என்றது - வாசகமிட்டுச் சொல்லுகைக்கு நிலமன்றென்கை. செம்மை - செவ்வை. தேறுதல் - விச்வஸித்தல். ... ... (சரு)

வ்யா.—அ.—நாற்பத்தஞ்சாம்பாட்டு. கீழில்பாட்டிலே - அஜ்ஞராய்ப்போருகிற மநுஷ்யர் படியைச்சொல்லி விஷண்ணராய், இதிலே - அப்படிப்பட்ட அஜ்ஞரிலே அந்யதமராய்ப்போந்த நம்மை நிர்ஹேதுகமாக விஷயீகரித்து, தம்முடைய திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமென்று விச்வஸித்திருக்கும்படி பண்ணின உபகாரத்தை யநுஸந்தித்து, அப்படிப்பட்ட ப்ரபாவத்தைக்கொண்டாடுகிறேனென்று சொல்லவொருப்பட்டால் அதுவே நமக்கு வாசாமகோசரமாயிருந்ததென்கிறார்.

வ்யா.—(பேறொன்றுமற்றில்லை நின்சரணன்றி) (ఆనన్దో బ్రహ్మ) (ఆనన్దోబ్రహ్మ) (ஆநந்தோப்ரஹ்ம) (ரஸோவைஸ:) இத்யாதிகளாலே ஸர்வேச்வரனே யென்றும் ப்ராப்யம் என்று சொல்லுகையாலும், (ఆచార్యదేవోభవ) (గురురేవ పరంబ్రహ్మ) (పాదమూలం గమిష్యామి యానహం

సర్వ్యాచారిషమ్) இத்யாதிகளாலே ஸர்வேச்வரனே ஆச்ரயணீயனென்று நிஷ்கர்ஷிக்கப்படுகையாலும், (బాతినాన్యత్ర) (பாதிநாந்யத்ர) என்கையாலே - ஆசார்யத்வம் எம்பெருமானாரிடத்திலேதானே வ்யவஸ்திதமாயிருக்கையாலும், அவருடைய திருவடிகளே ப்ராப்யமென்று நிஷ்கர்ஷித்தருளினார்.

(பேறொன்றுமற்றில்லைநின்சரணன்றி)(నగురోరపరస్త్రాతా)(நகுரோரபரஸ்த்ராதா) என்கிறபடியே வகுத்தசேஷியான தேவரீருடைய திருவடிகளே புருஷார்த்தமென்றிருக்கிற நமக்கு அத்திருவடிகளை யொழிய வேறொருப்ராப்யமில்லை. (బ్రహ్మవేదబ్రహ్మైవభవతి) (సఏనాన్బ్రహ్మగమయతి) (రసంహ్యేవాయంలబ్ధ్వానన్దీభవతి) (ப்ரஹ்மவேதப்ரஹ்மைவபவதி) (ஸஏநாந்ப்ரஹ்மகமயதி) (ரஸஂஹ்யேவாயஂலப்த்வாநந்தீபவதி) இத்யாதிகளாலே ப்ரதிபாதிககப்பட்ட ப்ரதமபர்வத்துககும, (గురురేవపరంబ్రహ్మ) (ఉపాయోపాయభావేనతమేవశరణంవ్రజేత్) (குருரேவபரஂப்ரஹ்ம) (உபாயோபேயபாவேந தமேவசரணஂ வ்ரஜேத்) இத்யாதிகளாலே ப்ரதிபாதிக்கப்பட்ட சரமபர்வத்துககுண்டான வாசியறியாதவர்களுககிறே ப்ரதமபர்வம் ப்ராப்யமாகிறது; (అత్రపరత్రచాపినిత్యంయదీయచరణౌశరణం మదీయమ్)(அதாபரத்ரசாபி நித்யஂயதீயசரணௌஶரணஂமதீயம்) என்றிறே ஆளவந்தார் சந்தையும். ஸர்வத்ர அவதாரணததாலே இந்த அதிகாரிக்கு ஆசார்யன் திருவடிகளே ப்ராப்யமென்றதாய்த்து.

(அப்பேறளித்தற்காறென்றுமில்லைமற்றச்சரணன்றி) (ఉపాయోపాయభావేనతమేవశరణంవ్రజేత్) (உபாயோபாயபாவேந தமேவசரணஂவ்ரஜேத) என்றும், (రామానుజస్యచరణౌశరణంప్రపద్యే) (ராமாநுஜஸ்யசரணௌசரணஂப்ரபத்யே) என்றும் நிஷ்கர்ஷிததபடியே அந்தப்ராப்யத்தைபபெறுகைக்கு அந்ததிருவடிகளையொழிய வேறொரு உபாயமில்லை. (నగురోరపరస్త్రాతా) (గురోరన్యంనభావయేత్) (நகுரோரபரஸ்த்ராதா) (குரோரந்யஂநபாவயேத்) என்கிறபடியே வேறொருப்ராபகாந்தரமிலலை. எம்பெருமானார் திருவடிகளைக் கண்டுகொண்ட நமககு, (எம்மாவீடு) என்கிறபடியே எத்தனைவிலக்ஷணமானாலும பரமபதமும் ப்ராப்யமன்று, (భజనసుఖమేకస్యవిపులమ్) (பஜநஸுகமேகஸ்யவிபுலம்) என்கிறபக்தியோகமும் உபாயமன்று, (సిద్ధిర్భవతివానేతి సంశయోచ్యుతసేవినామ్) (ஸித்திர்ப்பவதிவாநேதி ஸஂஶயோச்யுதஸேவிநாம்) என்று ஸஂசயிக்கவேண்டும்படியான பகவத்ப்ரபத்தியும் உபாயமன்று. (வேதமொருநான்கினுட் பொதிந்த மெய்ப்பொருளும், கோதில் மநுமுதல் கூறுவதும், தீதில், சரணாகதிதந்த தன்னிறைவன்றாளே, அரணாகமன்னுமது) என்னுமிவ்வர்த்தத்தை அருளாளப் பெருமாளெம்பெருமானாரும் அருளிச்

செய்தாரிறே. (కాలత్రయేపి) (காலத்ரயேபி) இத்யாதியாலே இது தன்னை ஜீயரு மநுஸந்தித்தருளினாரிறே.

(என்றிப்பொருளைத்தேறுமவர்க்கும்) எம்பெருமானார் திருவடிகளே ப்ராப்யமும் ப்ராபகமுமெனகிற இவவர்த்தத்தையை, (నసంశయస్తు తద్భక్తపరిచర్యారతాత్మనామ్) (நஸம்ஶயஸ்து தத்பக்தபரிசர்யாரதாத்மநாம்) என்கிறபடியே ஸம்சயவிபர்யய நிரஸநபூர்வகமாகக்கொண்டு தத்வயாதாத்ம்யஜ்ஞாநத்தாலே விச்வஸித் திருக்குமவருக்கும். (వాచాయతీన్ద్ర) (வாசாயதீந்த்ர) இதயாதியாலே சொலலப்பட்ட அப்ரதிமப்ரபாவரான ஆழ்வான் பிள்ளான்தொடக்கமானவர்களுக்கு மென்றபடி. தேறுதல் - விச்வஸித்தல். (எனக்கும) (వ్రత్యాపహా:) இத்யாதிப்படியே அதிபாபிஷ்டனாய் அதிலேலவிசவாஸலேசமில்லாத அடியேனுக்கும். (இராமாநுசா) எம்பெருமானாரே.

(உனைத்தந்தசெம்மை) உன்னைத்தந்தசெம்மை. ஜ்ஞாநாதிகரானவர்களுக்கும் அஜ்ஞனான எனக்குமுண்டான வாசிபாராதே, ஒருவஸ்துவைக்கொடுக்குமிடத்தில ததீயமாயிருபபதொரு வஸ்தவந்தரத்தைக் கொடுக்கையன்றிக்கே தேவரீர தம்மையே கொடுத்தருளினீர் (బ్రహ్మణేత్వామహస ఓమిత్యాత్మానంయుఞ్జీత) என்றும, (స్వాత్మ నఖ్యనివేదనే) என்றும் சொல்லுகிறபடியே நான் ஸ்வரூபஸமர்ப்பணம் பண்ணவேண்டியிருகக தேவரீர்தம்மை அடியோங்களுககாக்கின விது அதரோத்தரமாய்த்து. (లోకనాథః పురాభూత్వా సుగ్రీవం నాథమిచ్ఛతి) (லோகநாதꞋபுராபூத்வா ஸுக்ரீவம் நாதமிச்சதி) என்னுமாப்போலேயாய்த்து. (ఏష సర్వస్వభూతో మే పరిష్వఙ్గో హనూమతః) (ஏஷஸர்வஸ்வபூதோமே பரிஷ்வங்கோ ஹநூமதꞋ) என்று பெருமாள், திருவடிக்குஸர்வஸ்வதாநம் பண்ணினாப்போலே நமக்கு இவரும் அப்படியே ஸர்வஸ்வதாநம்பண்ணுகிறார்காணும். (உனைத்தந்தசெம்மை) இப்படி ஸர்வஸ்வதாநம்பண்ணுகைக்குடலான ஆர்ஜவகுணத்தை. (மெய்ம்மை கூறிடிலே) ஸத்யமாகச்சொல்லப்புக்கால். உள்ளபடி பேசப்புக்கால். (சொல்லால்கூறும்பரமன்று) ஒருவாசக சப்தத்தையிட்டு உள்ளபடி சொல்லவரிதாயிருக்கும். வாசாவ்யவஹரிக்கசக்யமாகிறதில்லை, அநுபவித்துக் குமிழ்நீருண்டுபோமித்தனையென்றதாய்த்து. ... ... ... ... ... (சரு)

உரை.—அ.—நாற்பத்தாறும்பாட்டு. எம்பெருமானார் செய்தருளின உபகாரத்தை யநுஸந்தித்து அதுக்குத்தோற்றுத் திருவடிகளிலே வணங்குகிறார்.

மூ.—கூறுஞ்சமயங்களாறுங்குலையக்குவலயத்தே
மாறன்பணித்தமறையுணர்ந்தோனைமதியிலியேன்
தேறும்படியென்மநம்புகுந்தானைத்திசையனைத்தும்
ஏறுங்குணனையிராமாநுசனையிறைஞ்சினமே. . . (௪௬)

| பதம். | உரை. |
|---|---|
| கூறும் | (விளம்புமாறு சமயமும்) என்கிறபடியே சிலவற்றைச் சொல்லாநின்றால் தாங்களும் சில தர்க்கங்களைச்சொல்லாநிற்கு மத்தனைபோக்கி ப்ரமாணாநுகூலதர்க்கமல்லாமையாலே கேவலம் உக்திஸாரமாயிருக்கிற, |
| சமயங்கள் | பாஹ்ய ஸமயங்கள் |
| ஆறும் | ஆறும், |
| குலைய | சிதிலமாய்ப்போம்படியாக, |
| குவலயத்தே | அவ்வவ ஸமயங்கள் தன்னரசாக நடந்த இத்தேசத்திலே, |
| மாறன்பணித்த | ஆழ்வாரருளிச்செய்த, |
| மறை | த்ராவிட வேதமான திருவாய்மொழியை, |
| உணர்ந்தோனை | ஸாக்ஷாத்கரித்தருளினவராய், |
| | ப்ரமாண கதிகளாலே தர்சித்து விச்வஸிக்கைக்குறுப்பான, |
| மதியிலியேன் | ஜ்ஞாநமில்லாத நான், |
| தேறும்படி | கீழ்ப்பாட்டில் சொன்னபடியே ப்ராப்யப்ராபகங்களிரண்டும் தாமேயென்று விச்வஸித்திருக்கும்படி, |
| என் | என்னுடைய, |
| மநம் | ஹ்ருதயத்திலே, |
| புகுந்தானை | வந்துபுகுந்தருளினவராய், |
| | இப்படிகளாலே, |
| திசையனைத்தும் | ஸர்வ திக்குக்களிலும், |
| ஏறும் | பரவிதமான, |
| குணனை | கல்யாணகுணங்களையுடையரான, |
| இராமாநுசனை | எம்பெருமானாரை, |
| | இவ்வுபகாரத்துக்குத்தோற்று, |
| இறைஞ்சினம் | வணங்கினோம். |

வ்யா—அ.—நாற்பத்தாறும்பாட்டு. கீழ்ப்பாட்டில் சொல்லுகிறபடியே ஸமஸ்தகல்யாண குணாத்மகரானவர், தம்மை இவர்க்கு முற்றூட்டாகக் கொடுக்கையாலே அந்த உபகாரத்தை யநுஸந்தித்து விஸ்ரப்த்தராய்க்கொண்டு துஸ்தர்க்கங்களாய் கேவலம் உக்திமாத்ரஸாரங்களாயிருக்கிற பாஹ்யஸமயங்களாறும் குத்ருஷ்டி ஸமயங்களாறும் அடியோடே நசிக்கும்படி பூலோகத்திலே நம்மாழ்வார்

ரருளிச்செய்த த்ராமிட வேதத்தை ஸார்த்தமாக அறிந்தவராய், ஸகல திக்வ்யாபையான ப்ரஜ்ஞையையுடையராய், அறிவுகேடனான நான் விச்வஸிக்கும்படி என்னுடைய மநஸ்ஸிலே ஸ்த்தாவரப்ரதிஷ்டையாகப் புகுந்தருளின எம்பெருமானாரை ஆச்ரயிக்கிறோமென்கிறார்.

வ்யா.—(கூறுஞ்சமயங்களாறுங்குலைய) தேஹமே ஆத்மாவென்றும், தேஹபரிமாணமே ஆத்மாவென்றும், க்ஷணிகவிஜ்ஞாநமே ஆத்மாவென்றும், ஜ்ஞாநமொன்றுமே உள்ளது என்றும், சூந்யமே தத்வமென்றும், ப்ரஹ்மம நிர்க்குணமென்றும, நிராகாரமென்றும், அத்விதீயமென்றும, அவிபூதிகமென்றும், நிஸ்ஸ்ரீகமென்றும், விக்ரஹகுணங்களெல்லாம ஸ்வரூபவிகாரமென்றும், ப்ரஹ்மவ்யதிரிக்தமெல்லாம் மித்யை யென்றும், ருத்ரன ஸர்வஸ்மாத்பரனென்றும், இப்படி பரமாண தர்க்காநுக்ருஹீதங்களன்றிக்கே ஸ்வஸ்வாஉஜ்ஞாந விஜ்ரம்பிதங்களான ப்ரலாபங்களை அநேகப்ரகாரமாகக்கொண்டு போருகிறபாஹ்யகுத்ருஷ்டிஷட்ஸமயங்களும்சிதிலமாய்நசித்துப்போமபடி.

(குவலயத்தே) (కలౌ ఖలు భవిష్యన్తి నారాయణపరాయణాః। క్వచిత్ క్వచిత్ మహాభాగా ద్రామిడేషు చ భూరిశః॥ తామ్రపర్ణీ నదీ యత్ర కృతమాలా పయస్వినీ। కావేరీ చ మహాభాగా ప్రతీచీ చ మహానదీ) (கலௌகலுபவிஷ்யந்தி நாராயணபராயணாஃ। க்வசித்க்வசித்மஹாபாகா த்ராமிடேஷுசபூரிசஃ॥ தாமரபர்ணீநதீயத்ரக்ருதமாலாபயஸ்விநீ - காவேரீசமஹாபாகா ப்ரதீசீசமஹாநதீ) என்றும், (జాయతే) (ஜாயதே) என்றும் கொண்டாடும்படி* மயர்வறமதிநல மருளப்பெற்றஆழ்வார்களுடையதிருவவதாரப்ரதேசமான பூலோகத்திலே கலியுகத்திலேயென்றபடி.

(மாறன்பணித்த) (உயர்வறவுயர்நலமுடையவன், அயர்வறுமமரர்களதிபதி) (உளன்சுடர் மிகுசுருதியுள்) (நான்முகன்றனொடு தேவருலகோடுயிர்படைத்தான்) (நாடிநீரவணங்குந் தெய்வமும் உம்மையு முன்படைத்தான) (அகலகில்லே னிறையுமென்று அலர்மேல்மங்கை யுறைமார்பா) (அவாவிலந்தாதிஇப்பத்தறிந்தார்பிறந்தாருயர்ந்தே) என்று இப்படி நம்மாழ்வாராலே அருளிச்செய்யப்பட்ட. (மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும, தக்கநெறியும் தடையாகித் தொக்கியலும், ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங்குருகையர்கோன், யாழினிசைவேதத்தியல்) என்கிறபடியே ஆழ்வாராலே அருளிச்செய்யப்பட்டதாய் அர்த்தபஞ்சகத்தையும அடைவே ப்ரதிபாதிக்கிற திருவாய்மொழியென்றபடி. (மறையுணர்ந்தோனை) இப்படிப்பட்ட திருவாய்மொழியாகிற த்ரமிடவேதத்தை ஸார்த்தமாகத்தெளிந்துகொண்டிருக்கையாகிற பரிபூர்ண ஜ்ஞாநத்தையுடையராய்,

(திசையனைத்து மேறுங்குணனை) (திக்குற்றகீர்த்தி யிராமாநுசன) இத்யாதிகளிலும, (పాపణ్ణద్రుమషణ్ణదావదహనః) (பாஷண்டத்ருமஷண்டதாவதஹநː) இத்யாதிகளிலும, (కాదాతాదాగతానాం) (காதாதாதாகதாநாம்) இத்யாதிகளிலும சொல்லுகிறபடியே திகந்தரங்களிலே வயாப்தையான கீர்த்தியை யுடையராய். (மதியிலியேன் தேறுமபடி என்மநம புகுந்தானை) ப்ரமாணகதிகளாலே தர்சிதது விச்வஸிக்கைககுடலான ஸ்வரூபயாதாதம்ய ஜ்ஞாநசூந்யனாய ஈஷசஹ்ாதயனாய அவிவேகியாயப போந்தவடியேன, கீழ்ச்சொன்ன ப்ரபாவததைதத தெளிந்து விச்வஸிக்குமபடி அடியேனுடையமநஸ்ஸிலே ப்ரவேசிதது எனக்குவருகதசேஷியான. (இராமாநுசனை) எம்பெருமானாரை. (இறைஞ்சினமே) அவ்வுபகாரததுக்குததோறறு வணஙகிறேனம. அவருடையவுதகர்ஷாராய்கொண்டுகாணும இவா அவர்திருவடிகளிலேவணஙகுவது.

உரை.—அ — (நாறபததேழாம்பாட்டு) (மதியிலியேன் தேறும்படி யெனமநமபுகுநதான) என்றார்-கீழ்; லோகத்திலுள்ளவர்களுக்கு தத்வஸ்திதியை யருளிச்செய்து பகவத்ஸமாச்ரயணருசியை ஜநிப்பிக்குமவர், தம்மளவில்பண்ணின விசேஷவிஷயீகாரத்தை யநுஸந்தித்து, இப்படி விஷயீகரிக்கப்பெற்ற வெனக்கு ஸத்ருசரில்லையென்கிறார்-இதில.

மூ.—இறைஞசபபடுமபரனீசனரங்கமென்றிவ்வுலகத்
தறஞ்செபபுமண்ணலிராமாநுசனென்னருவினையின்
திறஞ்செறறிரவுமபகலுமவிடாதென்றன்சிந்தையுள்ளே
நிறைநதொப்பறவிருநதானெனக்காருமநிகரில்லையே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இறைஞ்ச | ஸர்வஸமாச்ரயணீயனாக, | இவ்வுலகத்து | அதர்மாநுஸாரியான இந்தலோகத்திலே, |
| படும் | வேதாந்த ப்ரஸித்தனான, | அறம் | ஸாக்ஷாத்தர்மத்தை |
| பரன் | ஸர்வஸ்மாத்பரன், | செப்பும் | அருளிச்செய்யுமவராய், |
| ஈசன் | அநந்தசாயித்வாதிகளாலே ஈச்வரத்வம் தோற்றவந்து, | அண்ணல் | ஆச்ரிதரிழவுபேறுகள் தம்மதாம்படியான ஸம்பந்தத்தையுடையராயிருக்கிற, |
| அரங்கமென்று | கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளென்று, | இராமாநுசன் | எம்பெருமானார், |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| என் | என்னுடைய, | என்றன்சிந் தையுள்ளே | என்ஹ்ருதயத்திலுள்ளே, |
| அரு | அநுபவத்தாலும் ப்ராயஶ்சித்தத்தாலும்போக்கவரிய, | நிறைந்து | பூர்ணராய்க்கொண்டு, |
| வினையின் திறம் | கர்மஸமூஹத்தை, | ஒப்பற | இவ்விருப்புக்குஸத்ருசமில்லையென்னும்படி, |
| செறு | நிரஸித்து, | இருந்தான் | எழுந்தருளியிருந்தார்; |
| | “அல்லுநன்பகலுமிடை வீடின்றி” எனகிறபடியே, | எனக்கு | ஈதர்சவிஷயீகாரபாத்ரனானவெனக்கு, |
| பகலும் இரவும் | திவாராத்ரவிபாகமற, | அருமநிகரில்லை | ஒருவரும்ஸத்ருசரில்லை |
| விடாது | இடைவிடாதே, | | திறம் - ஸமூஹம். நிகர் - ஒப்பு. ... ... ...(௪௭) |

வ்யா.—அ —(நாறபத்தேழாம்பாட்டு)கீழ்ப்பாட்டிலே - எமபெருமானார், தமமுடையதிருவுள்ளத்திலே ப்ரகாசித்து உஜ்வலராக அவரைவணங்கினேனென்று சொல்லி, இதிலே-லோகத்தாரெல்லாரையும் குறித்து ஸர்வஸமாச்ரயணீயனான ஸர்வேச்வரன கோயிலிலே ஸந்நிஹிதனாயிருந்தான், அவனை ஆச்ரயியுங்கோளென்று பரமதாமதனை உபதேசித்த உபகாரகரான எம்பெருமானார், என்னுடைய ஆர்தராபராதஙகளை நசிப்பித்து திவாராத்ரவிபாகமற என்னுடைய ஹ்ருதயத்திலே ஸுப்ரதிஷ்டிதராய் இவ்விருப்புக்கு ஸத்ருசமொன்றுமில்லையெனனும்படி யெழுந்தருளியிருந்தார்; இப்படியானபின்பு நமக்கு ஸதர்சரொருவருமிலலையெனகிறார்.

வ்யா —(இறைஞ்சப்படும்) (సంసారార్ణవమగ్నానాం విషయాక్రాన్తచేతసామ్। విష్ణుపోతం వినా నాన్యత్ కిఞ్చిదస్తి పరాయణమ్)(సర్వలోకశరణ్యాయ)(శరణ్యశ్శరణం సుహృత్) (శరణ్యస్సర్వలోకానాం పితా మాతా చ మాధవః) என்றும், (எழுவார்விடைகொள்வாரீன்றுழாயானை,வழுவாவகைநினைந்து வைகலதொழுவார்) என்றும (முழுவேழுலகுக்கும் நாதன்) என்றும சொல்லுகிறபடியே ஸர்வஸமாச்ரயணீயனாய்க்கொண்டு ப்ரஸித்தனாய். (பரன்) (పరాత్పరాణామ్) (பராத்பராணாம்) என்கிறபடியே ஸர்வஸ்மாத்பரனான. (ஈசன்) ஸர்வேச்வரன். (அரங்கனென்று)அநந்தசாயித்வாதிகளாலே கோயிலிலேகண்வளர்ந்தருளுகிறபெரியபெருமாளென்று. அன்றிக்கே, (இறைஞ்சப்படும்)ஸர்வஸமாச்ரயணீயன்.(ஈசன்) ஸர்வஸ்மாத்பரன். (ஈசன்)(స్వాభావికానవధికాతిశయేశితృత్వం నారాయణత్వయి న మృష్యతి) (ஸ்வாபாவிகாநவதிகாதிசயேசித்ர்த்வம்நாரா

யணத்வயிநம்ர்ஷ்யதி) என்கிறபடியே ஸர்வஸ்வாமியானவன். இந் தமஹிமாவான் ஆரென்னில் (அரங்கன்) அப்படிப்பட்டவன் எட்டாநிலத்திலேயிராதே இன்று ஸங்கிஹிதனாய் ஸுலபனாய்க் கோயிலிலே யெழுந்தருளியிருக்கிற திருவரங்கச்செல்வனார். (என்று) இப்படிப்பட்டவரென்று. (இவ்வுலகத்து) அதர்மாநுஸாரியான இந்தலோகத்திலே. அதர்மபூதமான * இருள்தருமாஞாலத்திலேயிருந்துள்ளஜநங்களுக்கு. (அறஞ்செப்பும்) ஸாக்ஷாத் தர்மத்தை அருளிச்செய்யும். அன்றிக்கே, அப்படிப்பட்டவனை ஆச்ரயியுங்கோளென்று ஸம்ஸாரநிஸ்தரணோபாயத்தை உபதேசித்தருளும்.

அன்றிக்கே, (இறைஞ்சப்படும்) தேவஜாதிக்கு ஒருஉபத்ரவம்வந்தால் அவர்களெல்லாருந் திரண்டு ப்ரஹ்மாவோடே கூடிப்போய்க் கூப்பிடும்கூப்பீடு கேட்கைக்காக வ்யூஹஸ்தாநமான திருப்பாற்கடலிலே கண்வளர்ந்து அவர்களாலே ஸேவிக்கப்படுமவன். இத்தால் - வ்யூஹத்தைச்சொன்னபடி. (பரன்) * அயர்வறுமமரர்களதிபதியான பரன். (ஈசன்) (అన్తఃప్రవిష్టశ్శాస్తా జనానామ్) (அந்தஃப்ரவிஷ்டஶ்ஶாஸ்தாஜநாநாம்) என்கிறபடியே ஸர்வரையும் நியமிக்கைக்காக ஸர்வாந்தர்யாமியாயிருக்குமவன். இத்தால்-அந்தர்யாமித்வத்தைச்சொன்னபடி. (அரங்கன்) (అర్చ్యస్సర్వసహిష్ణు రర్చకపరాధీనాఖిలాత్మస్థితిః) (அர்ச்யஸ்ஸர்வ ஸஹிஷ்ணு ரர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி:) என்னும்படியான அர்ச்சாவதாரங்களிலே வைத்துக்கொண்டு ப்ரதாநனாயிருக்குமவன். இத்தால் - அர்ச்சாவதாரத்தைச்சொன்னபடி.

(என்றிவ்வுலகத்தறஞ் செப்பும்) (அறம) (రామో విగ్రహవాన్ ధర్మః) (ராமோவிக்ரஹவாந்தர்ம:) (యేచ వేదవిదో విప్రాః యేచాధ్యాత్మవిదో జనాః। తేవదన్తి మహాత్మానం కృష్ణం ధర్మం సనాతనమ్) (யேச வேதவிதோவிப்ரா: யேசாத்யாத்மவிதோஜநா:। தேவதந்திமஹாத்மாநம் க்ருஷ்ணம்தர்மம்ஸநாதநம்) என்கிறபடியே அவதாரங்களிலே ப்ரதாநமான விபவம் (என்று) என்கிறத்தை இத்தோடே அந்வயித்தபடி. அஞ்சுவகைப்பட்டிருக்கும் நாராயணனை ப்ராப்யமும் ப்ராபகமுமென்று அருளிச்செய்யுமென்னவுமாம். (அண்ணல்) (సహి విద్యాతస్తం జనయతి తచ్ఛ్రేష్ఠం జన్మ) (ஸஹிவித்யாதஸ்தம்ஜநயதிதச்ச்ரேஷ்டம் ஜந்ம) என்றும், (గురుర్మాతా గురుః పితా) (குருர்மாதாகுருஃபிதா:) என்றுஞ் சொல்லுகிறபடியே இவ்வுபதேசமுகேந சேதநருக்கு ஸர்வவிதபந்துவுமாய் அவர்களுடைய இழவுபேறுகள் தம்மதாம்படியான ஸம்பந்தத்தினுறைப்பையுடையராயிருக்கிற. (இராமாநுசன்) எம்பெருமானார்.

(என்னருவினையின்திறஞ்செற்று) (అహమస్మ్యపరాధానామాలయః) (அஹமஸ்ம்யபராதாநாமாலய:) என்றும், (అమర్యాదః క్షుద్రశ్చలమతిః)

(அமர்யாதக்ஷுத்ரஶ்சலமதிः) என்றும, (పాపానాం ప్రథమోస్మ్యహమ్) (பாபாநாம்ப்ரதமோஸ்ம்யஹம்) என்றும், (న నిన్దితం కర్మ తదస్తి లోకే సహస్రశో యన్న మయా వ్యధాయి) (நநிந்திதம்கர்ம ததஸ்திலோகே ஸஹஸ்ரஶோ யந்நமயாவ்யதாயி) என்றும்,(అహమస్మ్యపరాధచక్రవర్తీ)( அஹமஸ்ம்யபராதசக்ரவர்த்தி) என்றும், (యావచ్చ యచ్చ దురితం సకలస్య జన్తోః తావచ్చ తత్తదధికఞ్చ మమాస్తి సత్యమ్) (யாவச்சயச்சதுரிதம் ஸகலஸ்யஜந்தோः தாவச்சதத்ததிகஞ்சமமாஸ்திஸத்யம்) என்றுஞ்சொல்லு கிறபடியே என்னாலே திரக்கழியச்செய்யப்பட்டதாய் அநுபவத்தாலும் ப்ராயஶ்சித்தத்தாலும் போக்கவரிதான பாபஸமூஹத்தை, (வாளேறுமறிகடலோ) என்னும்படி நசிப்பித்து. திறம் - ஸமூஹம்.

(இரவும்பகலும்விடாது) (அலலும்பகலுமிடைவீடின்றி) என்கிறபடியே - திவாராத்ரவிபாகமற இடைவிடாதே. (என்றன சிந்தையுள்ளே) பண்டெல்லாம் ஆசாபரனாய்ப்போந்து இப்போது இவ்விஷயீகாரத்தைப்பெற்ற என்னுடைய ஹ்ருதயத்தினுள்ளே. (நிறைந்து) ஸ்ப்ர்ஷ்டாஸ்ப்ர்ஷ்டிமாத்ரமன்றிக்கே குணங்களோடும் விக்ரஹத்தோடும விதிப்போடுங் கூட அதிலே பூர்ணனாய்ப் புகுந்து. அணுவான ஆத்மாவினுள்ளே விபுவான ஈச்வரன் ஸ்வரூபரூபகுணங்களோடே அஸங்குசிதமாக வ்யாபித்து நிற்குமாப்போலேகாணும்-எம்பெருமானாரும் அதிஸூக்ஷ்மமான இவருடைய திருவுளளத்திலே அஸங்குசிதமாக வ்யாபித்து நிற்கிறபடி. (ஒப்பறவிருந்தான) இவ்வாத்ஸல்யத்துக்கு ஸத்ர்சமில்லாதபடி யிருந்தார். அதிலேதானேஸுப்ரதிஷ்டிதராய எழுந்தருளி யிருந்தாரென்றபடி. ஒப்பு - ஸாத்ர்ச்யம்.

(எனக்கு) இப்படி எம்பெருமானாருடைய விஷயீகாரத்தைப் பெற்ற வெனக்கு. (ஆரும்நிகரில்லையே) எத்தனைதரமுடையாருண்டானாலும் ஸத்ர்சராகமாட்டார்கள். (అవిద్యాన్తర్గతాస్సర్వే తేహి సంసారగోచరాః) (அவித்யாந்தர்க்கதாஸ்ஸர்வே தேஹிஸம்ஸாரகோசராः) என்று சொல்லப்படுகிறவர்கள் ஸத்ர்சராவர்களோ. நிகர் - ஒப்பு. (తృణీకృతవిరిఞ్చ్యాది నిరఙ్కుశవిభూతయః। రామానుజపదామ్భోజ సమాశ్రయణశాలినః) (த்ர்ணீக்ர்தவிரிஞ்சாதிநிரங்குசவிபூதயः । ராமாநுஜபதாம போஜ ஸமாச்ரயணசாலிநः) என்னககடவதிறே. ... (௬௭)

உரை.—அ —நாற்பத்தெட்டாம்பாட்டு. (எனக்காரும் நிகரில்லை) என்று இவர்சொன்னவாறே எம்பெருமானார் இவரைப்பார்த்து, நீர் நம்மைவிட்டு வேறொருவிஷயத்தை அவலம்பித்தல், நாம் உம்மைவிட்டு வேறொருவிஷயத்தை விரும்புதல் செய்யில் இந்தஹர்ஷம் உமக்கு நிலைநிற்கமாட்டாதே யென்ன ; என்னுடைய நைச்யத்துக்கு தேவரீர்க்ர்பையும் அர்தக்ர்பைக்கு என்னு

டைய நைச்யமுமொழியப் புகலில்லையாயிருக்க வ்யர்த்தமே நாம் இனி அகலுகைக்கு காரணமெனனெனன்கிருர்.

மூ.—நிகரின்றிநின்றவென்னீசதைக்குன்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லையருட்குமஃதேபுகல்புன்மையிலோர்
பகரும்பெருமையிராமாநுசாவினிநாம்பழுதே
அகலுமபொருளெனபயனிருவோமுக்குமானபின்னே. ()

| பதம். | உரை. |
| --- | --- |
| நிகரின்றி நின்ற | இந்தவிபூதியில் ஆதமகுண ராஹித்யத்தாலும அநாதமகுண பாஹுள்யத்தாலும் வந்ததண்மையையுடையவர்களை தனிததனியே ஆராயந்து பாாத்தால் எனனைப்போலே ஆதமகுணலவலேசரஹிதராய அநாதமகுணபரிபூர்ணராயிருப்பார் ஒருவருமில்லாமையாலே உபமாநரஹிதமாய்க்கொண்டுநின்ற, |
| என நீசதைககு | என்னுடைய நீசதைககு, |
| உன | அநீசதை தானே பசசையாக வங்கீகரிக்கும் தேவரீருடைய, |
| அருளின கணன்றி | காபையினின்றொழிய, |
| புகலொன்றுமில்லை | ஒதுங்க நிழலொன்றுமில்லை, |

| பதம். | உரை. |
| --- | --- |
| அஃதே | எத்தனையேனுந்தண்ணியரே, |
| புகல | அநுத்தமமான பாத்ரம்; ஆகையாலே என்னுடையநீசதையொழிய புகலில்லை; |
| புன்மையிலோராய கரும் | அஸ்ப்ராஷ்ட தோஷகந்தரான வர்களபேச்சுக்கு விஷயமான, |
| பெருமை | ப்ரபாவத்தையுடைய, |
| இராமாநுசா | உடையவரே, |
| | எனக்கு ஸ்வரூபலாபமாய் தேவரீருக்கு குணலாபமாய், இபபடி, |
| இருவோமுக்கு | நமக்கிருவர்க்கும், |
| பயனான பின் | ப்ரயோஜநமானபின்பு, |
| நாம் | இதழிந்திருக்கிறநாம் |
| இனி | மேலுள்ளகாலம், |
| பழுதே அகலும் | வ்யாத்தமே அகலுகைக்கு, |
| பொருளென் | காரணமென். |
| [ம், | அகலுகைக்கு ஹேதுவில்லை |

அருட்கும் அந்தகர்பை தனககுயொன்று கருத்து. ... (சஅ)

வ்யா.—அ.—நாற்பத்தெட்டாம்பாட்டு. (இராமாநுசன் இரவும்பகலும்விடாதென்றன் சிந்தையுள்ளே நிறைந்தொப்பற விருந்

தான் எனக்காரும் நிகரில்லை) என்று இவர் சொன்னவாறே எம்பெருமானார் இவரைப்பார்த்து நீர், நம்மைவிட்டுகாலாந்தரத்திலே வேறொருவிஷயத்தை விரும்புதல், நாம உம்மைவிட்டு வேறொரு விஷயத்தை யாதரித்தல் செய்யில் இந்த ஹர்ஷம் நிலைநிற்கமாட்டாதேயென்ன; என்னுடைய நைச்யத்துக்கு தேவரீருடைய க்ர்பையும் அந்தக்ர்பைக்கு என்னுடைய நைச்யமுமே யொழியப் புகலில்லையாயிருக்க வ்யர்த்தமே நாம் அந்யபரராகைக்குக் காரணமென்னென்கிறார்.

வ்யா.—(நிகரின்றிநின்றவென்நீசதைக்கு) (நீசனேன் நிறைவொன்றுமிலேன்) (అహమస్మ్యపరాధానామాలయః) (అద్యాపి వఞ్చనపరః) (அஹமஸ்ம்யபராதாநாமாலய:) (அத்யாபிவஂசநபர:) இத்யாதிப்படியே ஆத்மகுணராஹித்யத்தாலும் அநாத்மகுண பாஹுள்யத்தாலும் வந்ததண்மையையுடையவர்களை இந்தவிபூதியில் தனித்தனியே ஆராய்ந்துபார்த்தாலும எனனைப்போலே ஆத்மகுண லவலேசரஹிதனாய் அநாதமகுண பரிபூர்ணனாயிருப்பாரொருவராகிலும் கிடையாமையாலே (కోన్యోస్తి సదృశో మయా) (கோந்யோஸ்தி ஸத்ர்சோமயா) என்கிறபடியே உபமாநரஹிதனாய்க்கொண்டிருக்கிற என்னுடைய நீசபாவத்துககு. (உன்னருளின்கணன்றி) (వ్యసనేషు మనుష్యాణాం భృశం భవతి దుఃఖితః) (வ்யஸநேஷுமநுஷ்யாணாம்ப்ர்சம் பவதிது:கித:)என்கிறபடியேபரதுக்கதுக்கிதவநிராசிகீர்ஷத்வாஉஸஹிஷ்ணுத்வாதிலக்ஷணமான தேவரீருடைய காபாகுணமொழிய.

(புகலொன்றுமில்லை) வேறொருபுகலிடமில்லை. அந்தநீசதைதானே பச்சையாக அங்கீகரிககும் தேவரீருடைய க்ர்பையினிடத்திலொழிய ஒதுங்கநிழலொன்றுமில்லையென்றபடி. கண்-இடம். (అపరాధగణైరపూర్ణకుక్షిః కమలాకాన్తదయే సదం బవిత్రీ) (அபராதகணைரபூர்ணகுக்ஷி: கமலாகாந்ததயே சதம்பவித்ரீ) என்னுமாப்போலே இவரும் வயிறுநிரம்புகைக்காக எப்போதும பூர்ணதோஷத்தை தேடித்திரியு மவராகையாலும், ஸர்வேச்வரன் ஆர்த்ராபராதியான காகாஸுரனை சிக்ஷித்ததுவும், (యదివా రావణస్స్వయమ్) (யதிவாராவணஸ்ஸ்வயம்) என்றும் சொன்னதுவும் பாபிஷ்டரை ரக்ஷித்தால் யசஸ்ஸு அதிசயிதகிருககுமெனறத்தைப் பற்றவாகையாலும், சேஷபூதனுடையதோஷங்களெல்லாம் சேஷியினுடைய க்ர்பாகுணத்துக்கு லக்ஷயங்களாயிறேயிருப்பது. ஆகதமமுடைய நீசதைக்கு எம்பெருமானாருடைய க்ர்பாகுணமொழிய வேறொருபுகலிடமில்லையென்று அருளிச்செய்யத்தட்டிலையிறே. (அருட்கு மஃதேபுகல்) தேவரீருடைய க்ர்பாகுணத்துக்கு அடியேனுடைய துஷ்டபாவதையே லக்ஷயமாயிருக்கும். தோஷரஹிதரானவர்கள்

பக்கலிலே க்ர்பாகுணத்துக்கு ப்ரயோஜநமில்லாமையாலே எத்தனையேனும் தண்ணியரே அதுக்கு பாத்ரமாகையாலும் எனக்குஸத்ரசரான பாபிஷ்டர் ஒருவராகிலு மில்லாமையாலே என்னுடையநைச்யமே அதுக்குப் புகலிடமென்றபடி.

(నిమజ్జతోఽనన్తభవార్ణవాన్తశ్చిరాయ మే కూలమివాసి లబ్ధః। త్వయాపి లబ్ధం భగవన్నిదానీమనుత్తమం పాత్రమిదం దయాయాః) [త్వయాపి-த்வயாபி] இப்படி நமக்குக்கைப்பட்ட தேவரீருக்கும். [ఇదానీమ్-இதாநீம்] இத்தனைநாளைக்கு இப்போது. [భగవన్-பகவந்] ஸர்வஜ்ஞரா யிருந்தாயே, நான் சொல்லவேணுமோ. [దయాయాః-தயாயா:] தேவரீருடைய க்ர்பைக்கு. [అనుత్తమం పాత్రమిదమ్-அநுத்தமம் பாத்ரமிதம்] (మయి స్థితిమర్హతాం ప్రధానే మయి దోషానితరాన్ వ్యపోహ్య తత్స్వమ్। అపరాధగణైరపూర్ణకుక్షిః కమలాకాన్త దయైకధామ భవత్రీ) என்றும், (అపరాధచక్రవర్తి) (పాపానాం ప్రథమోఽస్మ్యహమ్) என்கிறபடியே பூர்ணபாத்ரமானநானும. [లబ్ధమ్-லப்தம்] தேவரீருக்குப் பெறுபேறாக லபித்தேன.

[అనన్తభవార్ణవాన్తః-அநந்தபவார்ணவாந்த:]ப்ரஸித்தார்ணவத்துக்கு பரிகணநமுண்டு, என்னுடைய ஸம்ஸாரமாகிற அர்ணவத்துக்கு அந்தமில்லை. காலமும் அநாதியாய் ஜந்மங்களும் பலவாய் கர்மங்களும் விசித்ரங்களாய் பஹுவாயிருக்கையாலேஇந்தஅர்ணவம அநந்தமாயிருககும்; இப்படிபபட்ட பவார்ணவததினுடைய அகாதஜலத்திலே.[నిమజ్జతః-நிமஜ்ஜத:]அழுந்திககிடப்பன்.[చిరాయ-சிராய]( కేవలం స్వేచ్ఛయైవాహం ప్రేక్షే కఞ్చిత్కదాచన)(கேவலஂஸ்வேச்சயைவாஹஂப்ரேக்ஷே(ரி)க்கதாசந) எனகிறபடியே அநந்தமானகாலத்துககு. [మే-மே] அடியேனுக்கு. [కూలమివ - கூலமிவ] கரைபோலே. [లబ్ధోఽసి - லப்தோஸி]ப்ரஸிததார்ணவததிலே விழுந்து அழுந்தினசேதநன அப்போதே முடிய, முஹூர்த்த மாத்ரத்திலே அந்தப்பிணத்தைக கொண்டுவந்து கரையிலே தள்ளிவிடுமென்று ஸாவஜநப்ரஸிதநம்; இந்தஸமஸாரத்திலே யழுந்தி, (அஸந்நேவ) என்கிறபடியே யிருந்தவென்னை சிரகாலத்துககு ஸத்தையுண்டாக்கி அந்த ஆணவத்துககு பாரமாய்க் கைப்பட்டாய். (கண்டுகொண்டென்னைக் காரிமாறபபிரான், பண்டை வல்வினைபாற்றியருளினான்) என்று - இருவர்க்கும ப்ரயோஜநமா யிருந்ததென்று அபியுக்தரு மருளிசசெய்தாரிறே.(அந்தோவடியே னுனபாதமகலகில்லேனிறையுமே) என்றும், (புகலொன்றில்லாவடியே னுன்னடிக்கீழமாந்து புகுந்தேனே) என்றுமருளிச் செய்தாரிறே-நம்மாழ்வாரும். (పరమకారుణికో న భవత్పరః పరమశోచ్యతమో న హి మత్పరః) (பரமகாருணிகோநபவத்பர: பரமசோச்யதமோநஹிமத்பர:) என்னக்கடவதிறே.

(புன்மை) தோஷங்களுக்கு ஆகரமான ஸம்ஸாரம். அநாத்ய வித்யாகர்மவாஸநாருசிப்ரக்ருதி ஸம்பந்தரூபமான ஸம்ஸாரமென்றபடி. (இலோர்) ஸாம்ஸாரிகமான பந்தத்தைப் பூண்கட்டிக்கொண்டு நிற்கையாலே அவர்களை இங்கே சொல்லவொண்ணாதிறே; முமுக்ஷுக்கள், சிறிதுகாலம் ஸம்ஸாரத்தைப் பூண்கட்டிக்கொண்டு திரிந்து, பின்னை, "கரைகண்டோர்" என்னும்படி அத்தை ஸவாஸநமாகப் போகட்டு பகவத்குணாநுபவத்திலே ஆழங்கால் பட்டிருந்தார்களேயாகிலும் நிருபபதமாகச் சொல்லுகையாலே அவர்களையும் இங்கே சொல்லக்கூடாதிறே. இனி, ([illegible]) (యత్రపూర్వేసాధ్యాస్సన్తిదేవాః) (తద్విప్రాసోవిపన్యవోజాగృవాంసస్సమిన్ధతే) என்கிறபடியே அஸ்ப்ருஷ்ட ஸம்ஸாரகந்தரான நித்யஸூரிகளையாயத்து (இலோர்) என்றருளிச்செய்தது.

(பகரும் பெருமை) ஏகதேசாவஸ்தாநத்தாலும் ஏகவிஷயாநுபவத்தாலும் அடியேபிடித்து இவருடைய ப்ரபாவத்தை அடைவேயறியுமவர்கள் — நித்யஸூரிகளாகையாலே அவர்களாலே ஸ்தோத்ரம்பண்ணப்பட்ட ப்ரபாவத்தையுடையரான. (இராமாநுசா) எம்பெருமானாரே. (பயன் இருவோமுக்குமானபின்னே) தேவரீரும் அடியேனுமாகிற இருவருக்கும் ஸ்வரூபலாபமும் குணலாபமுமாகிற பரமப்ரயோஜநம் ஸித்தித்தபின்பு. இப்படி இருவர்க்கும் ப்ரயோஜநமாயிருக்க (இனி நாம் பழுதே யகலும்பொருளென்) இத்தை ஸிரித்துக்கிற நாம் மேலுள்ள காலம் வ்யர்த்தமே அகலுகைக்குக் காரணமென். நாம் என்றது — தம்மையும் எம்பெருமானாரையும். அன்றிக்கே, நாம் என்று பஹுவசநப்ரயோகம் பண்ணுகையாலே — எம்பெருமானாரும் இவருடைய ஸம்பந்தஸம்பந்திகளுமான எல்லாருமென்று பொருளாகவுமாம்.

(நாம் பழுதே யகலும்பொருளென்) (பொருளல்லாதவென்னைப் பொருளாக்கி யடிமைகொண்டாய) (என்னைத் தீமனங்கெடுத்தாய்) (மருவித்தொழும் மனமேதந்தாய்) (அறியாதன வறிவித்தத்தா நீசெய்தன வடியேனறியேன்) என்கிறபடியே நாம் க்ருதஜ்ஞராய்ப்போமதொழிய நமக்கு அகலுகையென்று ஒரு ப்ரயோஜநமுண்டோ. (பாவத்தால் யான் பிறப்பேனேலும் இனி எந்தை யெதிராசன் தான்பிறக்குமென்னையுய்யப்பதா) என்கிறபடியே ஸங்கிடுகை அவர்க்கு அவஶ்யமாய்த் தலைக்கட்டக்கடவதாகையாலும், பெறுப்பேறாக அடியோங்களை தேவரீர் விஷயீகரித்துக் கொள்ளுகையாலும், * நிழலுமடிதாறும்போலே அடியோங்களை அநந்யார்ஹராம்படி அங்கீகரித்திருக்கையொழிய தேவரீருக்கு அகலுகையென்று ஒருப்ரயோஜநமுண்டோவென்றதாய்த்து. ()

உரை.—அ.—நாற்பத்தொன்பதாம்பாட்டு. எம்பெருமானார், விரோதிகளை நிரஸித்துக்கொண்டு தம்திருவுள்ளத்திலுள்ளே நிரந்தரவாஸம் பண்ணியருளுகிற மஹோபகாராநுஸந்தாநத்தால் வந்த ப்ரீதியையும், அந்தப்ரீதியினுடைய அஸ்தைர்ய ஹேது இல்லாமையையும் அருளிச்செய்தார் - கீழ் இரண்டுபாட்டாலே; இதில் - அவர் திருவவதரித்தருளினபின்பு லோகத்துக்குண்டான ஸம்ருத்தியை அநுஸந்தித்து இனியராகிறார்.

மூ.—ஆனதுசெம்மையறநெறிபொய்ம்மையறுசமயம்
போனதுபொன்றியிறந்ததுவெங்கலிபூங்கமலத்
தேனதிபாய்வயல்தென்னரங்கன்கழல்சென்னிவைத்துத்
தானதில்மன்னுமிராமாநுசனித்தலத்துதித்தே. (௪௯)

| பதம். | உரை. |
|---|---|
| பூ | அழகிய, |
| கமலம் | தாமரைப்பூக்களிலுண்டான, |
| தேன் நதி | தேனாகிறஆறு, |
| பாய | விளைநீராகப் பாயாநின்றுள்ள, |
| வயல் | வயல்களையுடைத்தாய் திருச்சோலைகளும் திருமதிள்களும் திருக்கோபுரங்களும் திருமாளிகைகளுமான ஸமுதாய சோபையாலே |
| தென் | தர்சநீயமாயிருக்கிற, |
| அரங்கன் | கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாளுடைய, |
| கழல் | திருவடிகளை, |
| சென்னி வைத்து | சிரஸாவஹித்துக் கொண்டு |
| தானதில்மன்னும் | தாம்அதிலே நித்யஸம்ச்லேஷம் பண்ணாநின்றுள்ள, |

| பதம். | உரை. |
|---|---|
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| இத்தலத்து | இந்தஸ்தலத்திலே, |
| உதித்து | அவதரித்தருளி, |
| செம்மை | வைதிகமாகையாலேசெவ்விதாயிருந்துள்ள, |
| அறநெறி | தர்மமார்க்கம், |
| ஆனது | முன்பு அழிந்துகிடந்ததுமீண்டும் உண்டாயிற்று; |
| பொய்ம்மை | வேதபாஹ்யமாகையாலேஅயதாவான, |
| அறுசமயம் | ஷட்ஸமயமும், |
| பொன்றிப்போனது | முடிந்து போயிற்று, |
| | வைதிகதர்மம் தலைசாய்ந்து பாஹ்யஸமயமே மேலிடுகைக்குடலான, |
| வெங்கலி | க்ரூரமான கலியுகமானது, |
| இறந்தது | "கலியும்கெடும்" என்கிறபடியே நசித்தது. |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இவர் அவதரித்தருளின பின்பு லோகத்துக்குண்டான ஸம்ருத்தி இருந்தபடி யென்னென்று கருத்து. பொன்றுதல்-முடிதல். | | "பொன்மையறுசமயம்" என்று பாடமானபோது-வேதபாஹ்யத்வேநபொல்லாதாயிருக்கிற ஷட்ஸமயமென்றபடி. ... (சகூ) | |

வ்யா.—அ.—நாற்பதொன்பதாம்பாட்டு. எம்பெருமானார், தம்முடைய ப்ராப்திப்ரதிபந்தகங்களையெல்லாம் போக்கித் தம் திருவுள்ளத்திலே நிரந்தரவாஸம்பண்ணுகிற மஹோபகாரத்தால் வந்த ப்ரீதிப்ரகர்ஷத்தையும், அந்தப்ரீதி எப்போதுமுண்டாகக் கூடுமோவென்று அதிசங்கைபண்ணினவனைக்குறித்து அதினுடையசாஞ்சல்யஹேதுவில்லாமையையும்,கீழிரண்டுபாட்டுக்களாலே அருளிச்செய்து, இதிலே - எம்பெருமானார் திருவவதரித்தருளின பின்பு வேதத்துக்குண்டான ஸம்ருத்தியையும், துர்மதங்களுக்கும் கலிதோஷத்துக்குமுண்டான விநாசத்தையு மநுஸந்தித்து இனியராகிறார்.

வ்யா.—(பூங்கமலத் தேன்நதிபாய்வயல்) அழகியதாமரைப் பூக்களிலுண்டான தேனாகிற ஆறுவினாநீராகப்பாயாநின்றுள்ள வயலாலே சூழப்பட்ட. (தென்னரங்கன்) திருமதிள்களும் திருக்கோபுரங்களும் திருச்சோலைகளுமான ஸமுதாயசோபையாலே தர்சநீயமான கோயிலை இருப்பிடமாக விருக்கிற பெரியபெருமாளுடைய. (கழல்சென்னிவைத்து) திருவடிகளைத் தம்முடைய சிரஸ்ஸிலேவைத்துக்கொண்டு. கொக்குவாயும் படுகண்ணியும் இசைந்தாப்போலே யாய்த்துத் திருவடிகளும் திருமுடியும் சேர்ந்தபடி. அன்றிக்கே, ராஜாக்கள் ஸிம்ஹாஸநத்திலே ஆரோஹிக்கும்போது ஆதிராஜ்யஸூசகமான அபிஷேகத்தைத் தந்தாமுடைய சிரஸ்ஸுக்களிலேவைத்துக்கொண்டாப்போலே, (உன்னடிக்கீழமர்ந்து புகுந்தேன்) என்னும்படி பரமப்ராப்யமான அவர்திருவடிகளை தம்முடைய உபயவிபூத்யைச்வர்ய ஸூசகமாம்படி திருமுடியிலே வைத்துக்கொண்டாரென்னவுமாம். (தானதில்மன்னும) தாமும் அதேநிஷ்டையிலே ஸுப்ரதிஷ்டிதராய திருவடிகளிலே நித்ய ஸம்ச்லேஷம் பண்ணுநின்றுள்ள. (இராமாநுசன)எம்பெருமானார். (இத்தலத்துதித்தே) வேதோக்த தர்மங்களுக்கெல்லாம ஸாங்கர்யம்வரும்படி வேதவிருத்தங்களான ஷட்ஸமயங்களும் வ்யாபித்து கலியானது ஸாம்ராஜ்யம் பண்ணிக்கொண்டுபோருகிற இந்தமஹாப்ருதிவியிலே திருவவதரிக்கவே.

(ஆனதுசெம்மையறநெறி)அறநெறிசெம்மையானது-முன்பு அழிந்துபோன வேதோக்தமான ஸமீசீந கர்மமார்க்கம்மீண்டுண்

டானது. (యతిపురన్దరస్యోక్తయః) (చిరన్తనసరస్వతీచికురబన్ధసైరన్ధ్రికాః) (అవరో పితవాఙ్ముఖశ్రుతిరప్యార్థాఙ్ ననురామానుజవరజస్సప్రభూయః) என்கிறபடியே அல்பச்ருதராலே ப்ரதாரணம்பண்ணப்பட்ட வேதமெல்லாம் இவராலே ருஜுவாகத் திருந்தி ததுக்திதர்மபரமானது ஸமீசீநமாய் ப்ரதிஷ்டிதமா யிராநின்றது. ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யரிறே யிவர். (பொய்ம்மையறுசமயம் போனதுபொன்றி) வேதபாஹ்யமாகையாலே அயதாவான ஷட்ஸமயமும் முடிந்துபோய்த்து. பொன்றுதல் - முடிதல். "பொன்மையறுசமயம்" என்று பாடமானபோது - (తామసానాం మోహనార్థం మోహశాస్త్రాణి కారయ) என்கிறபடியே பகவதாஜ்ஞாஉதிலங்கநம்பண்ணினவர்களை ப்ரமப்ரமாதங்களாலே நசிப்பிக்கக் கடவதான அபஸித்தாந்தமென்றபடி. (இறந்ததுவெங்கலி) கீழ்ச்சொன்னபடியே அஜ்ஞாநத்தை விளைவிக்குமதாகையாலே அதிக்ரூரமானது நசித்துப்போய்த்து. (கலியுகங்கெடும்கண்டுகொண்மின்) என்றருளிச்செய்தாரிறே நம்மாழ்வாரும். (ఆచినోతిహి శాస్త్రార్థాన్ ఆచారే స్థాపయత్యపి। స్వయమాచరతేయస్తు సఆచార్యఉదాహృతః) (ஆசிநோதிஹி சாஸ்த்ரார்த்தான் ஆசாராந்ஸ்த்தாபயத்ய । ஸ்வயமாசரதேயஸ்து ஸஆசார்யஉதாஹ்ருத:) என்றிறே ஆசார்யலக்ஷணமிருப்பது; அது இவரிடத்திலேகாணும் நிறம்பெற்றது. (పుణ్యామ్భోజవికాసాయ పాపధ్వాన్తక్షయాయచ। శ్రీమానావిరభూద్భూమౌ రామానుజదివాకరః) (புண்யாம்போஜவிகாஸாயபாபத்வாந்தக்ஷயாயச । ஸ்ரீமாநாவிரபூத்பூமௌ ராமாநுஜதிவாகர:) என்னக்கடவதிறே. ... ... ... ... ... (௪௯)

உரை.—அ.—ஐம்பதாம்பாட்டு. (தென்னரங்கன் கழல் சென்னிவைத்துததானதில் மன்னும்) என்று எம்பெருமானாருக்கு பெரியபெருமாள் திருவடிகளிலுண்டான ப்ராவண்யாதிசயத்தை யநுஸந்தித்தார்-கீழ்,அந்தப்ரஸங்கத்திலே,நமக்குஉத்தேச்யமான எம்பெருமானார்திருவடிகளை அநுஸந்தித்து தத்ஸ்வபாவாநுஸந்தாநத்தாலே விதரராகிறார்-இதில.

மூ.—உதிப்பனவுத்தமர்சிந்தையுளொன்றலர்நெஞ்சமஞ்சிக்
கொதித்திடமாறிநடப்பனகொள்ளைவன்குற்றமெல்லாம்
பதித்தவென்புன்கவிபாவினம்பூண்டனபாவுதொல்சீர்
எதித்தலைநாதனிராமாநுசன்றனிணையடியே. (௫0)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பாவு | "திசையனைத்து மேறுங்குணன்" என்கிறபடியே ஸர்வதிக்கிலும் பரவியிருப்பதாய், | தொல் | ஸ்வரூபாநுபந்தியாகையாலே பழையதாயிருந்துள்ள. |
| | | சீர் | கல்யாணகுணங்களையுடையராய், |

| பதம். | உரை. |
|---|---|
| எதி | யதிகளுக்கு, |
| தலை | தலைவராய், |
| நாதன் | நாதபூதராயிருக்கும |
| இராமாநுசன்றன் | எம்பெருமானாருடைய, |
| இணை | சேர்த்தியழகை யுடைத்தாயிருந்துள்ள, |
| அடி | திருவடிகளானவை, |
| உத்தமர் | அநந்ய ப்ரயோஜநராய் அநந்யஸாதநராய்க்கும் உத்தமாதிகாரிகளுடைய, |
| சிந்தையுள் | திருவுள்ளங்களிலே, |
| உதிப்பன | "எல்லையில் சீர்ளநாயிறிரண்டுபோல்" என்கிறபடியே ஆதித்ய னுதித்தாப்போலே ப்ரகாசியாநிற்கும் தன்மையையுடையன; |
| ஒன்றலர் | பாஹ்ய குத்ருஷ்டிகளானப்ரதிபக்ஷபூதருடைய, |

| பதம். | உரை. |
|---|---|
| நெஞ்சம் | ஹ்ருதயமானது, |
| அஞ்சி | பீதமாய், |
| கொதித்திட | அந்தபயாக்நியாலே பரிதபிக்கும்படி, |
| மாறி | பரஸ்பரம்மாறியிட்டு, |
| நடப்பன | நடவாநிற்கும் தன்மையையுடையன; |
| கொள்ளை | ஸமர்த்தமாய, |
| வன் | ப்ரபலமாயிருந்துள்ள, |
| குற்றமெல்லாம் | தோஷங்களெல்லாம், |
| பதித்த | சேர அழுத்தினைச்சப்பட்ட, |
| என் | என்னுடைய, |
| புன்கவி | புல்லிய கவிகளாகிற |
| பாவினம் | சந்தஸ்ஸமூஹத்தை |
| பூண்டன | அணிந்துகொண்டன |

இவற்றினுடைய தன்மையிருக்கும்படி யென்னென்று கருத்து. இனத்தின்வகையான கவித்துறையாகையாலே பாவினமென்கிறாகவுமாம். ஒன்றலா-சத்ருக்கள். பாவுதல-பரம்புதல். (ருo)

---

வ்யா.—அ.—ஐம்பதாமபாட்டு. ((தென்னரங்கன் கழல் சென்னிவைத்துத்தானதில்மன்னும்) என்று-எம்பெருமானார்க்கு பெரியபெருமாள்திருவடிகளிலுண்டான ப்ராவண்யத்தை யநுஸந்தித்தார்-கீழ்; இதில-அந்தப்ரஸங்கத்திலே நமக்கு உத்தேச்யரான எம்பெருமானார்திருவடிகளை யதுஸந்தித்து அவற்றினுடைய ஸ்வரூபஸ்வபாவங்களை அடைவேயருளிச்செய்து கொண்டு வித்தராகிறார்.

வ்யா.—(பாவுதொல்சீர்) பாவுகை - பரம்புகை (திசையனைத்தி மேறுங்குணன்) என்று இவர்தாமருளிச்செய்தபடியே ஸகல திக்குக்களிலும் வ்யாப்த்தங்களாய வந்தேறியன்றிக்கே ஸ்வாபா

விகங்களாயிருந்துள்ள கல்யாணகுணங்களையுடையராய். (எதித்தலைநாதன்) அருளாளப்பெருமாளெம்பெருமானார், எம்பார் தொடக்கமான எழுநூறு ஜீயர்களுக்கும் வகுத்த சேஷியாய், அவர்களுக்கு ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களை தத்யாதாத்மயபர்யந்தமாக உபதேசித்தருளி அவ்வழியாலே அவர்களுக்குத் தலைவராய், நாதபூதராயிருந்துள்ள. (இராமாநுசன) எம்பெருமானார். (தன்னிணையடியே) இஸ்ஸம்ஸாரிசேதநரை அதிலநின்றும் நிவர்த்திப்பிக்கைக்கும், அநுபாவ்யமாய்க்கொண்டு ரக்ஷிப்பிக்கைக்கும், இத்திருவடிகளோடொத்திருப்பாருண்டோ வென்று ஆராய்ந்துபார்த்தால், (రసో వై సః, రసం హ్యేవాయం లబ్ధ్వానందీ భవతి, కో హ్యేవాన్యాత్ కః ప్రాణ్యాత్, యదేష ఆకాశ ఆనందో న స్యాత్) (అభయం ప్రతిష్ఠాం విన్దతే అథ సోఽభయం గతో భవతి) (అహం త్వా సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి) என்று வேதபுருஷனாலும் தன்னாலும் சொல்லப்பட்ட பரபாவத்தையுடையனான ஸர்வேச்வரனும், (సిద్ధ్యత్వేన న సంశయాయుక్తస్యాత్) என்கிறபடியே ப்ராப்யமுண்டோவில்லையோவென்று ஸம்சயிக்கவேண்டும்படி பண்ணக்கடவனாகையாலும், ஸ்ரீபராதாழ்வானுக்கு இரங்காதே போனபடியாலும், இவ்வுபாயத்துக்கு ஒப்பாகமாட்டாது. (సంశయస్తు తథా యుక్తః పరిచర్యారతా త్మనామ్) (గురుర్దేవో గతిః । గురుర్దేవో...) (ఉపాయోపాయభావేన తమేవ శరణం వ్రజేత్) என்று நிஸ்ஸம்சயப்ரதிபாதகமாய அந்யயோகவ்யவச்சேதகமாயிருந்துள்ள ப்ரமாணபலத்தாலே இவ்வுபாயம் அதிலும் சிரேஷ்டமாயாயிருப்பது. ஆகையாலே அந்த அதிசயத்துக்கு, ஒன்றுக்கொன்று ஸதாசமாயிருக்கிற இரண்டுதிருவடிகளுமென்றபடி.

(உதிப்பன உத்தமர்சிந்தையுள்) உத்தமராவார் - அதம மத்யமரான வேதபாஹ்யருக்கும், வைதிகராயக்கொண்டு ஸாமாந்ய தாமதத்திலேதானே மண்டியிருக்குமவர்களுக்கும், அவர்களுடைய நிஷ்டைக்கும் ப்ரதிபடராய பரமவைதிகரான விசேஷசாஸ்த்ரைக நிஷ்டராய முமுக்ஷுக்களாயிருக்குமவர்கள். உத்க்ருஷ்டராய் அநந்யஸாதநராய அநந்யப்ரயோஜநராயிருக்கும் உத்தமாதிகாரிகளென்றபடி. அன்றிக்கே, இது சரமபாவப்ரதிபாதகசாஸ்த்ரமாகையாலும், முமுக்ஷுக்களிலும் ஏகாந்திகளிலும் பரமைகாந்திகளிலும் வைத்துக்கொண்டு உத்தமா பரமைகாந்திகளாகையாலும், இவ்விடத்திலே (உத்தமர்) என்றது-பரமைகாந்திகளைச் சொன்னபடியென்னவுமாம். (சிந்தையுள்) அவர்களுடைய திருவுள்ளங்களிலே. (உதிப்பன) (எல்லையில்சீரினாயிறிரண்டுபோல) என்கிறபடியே சக்ரவாளபர்வதத்திலே இரண்டாதித்யர்கள் சேர வுதித்தாப்போலே ஸத்துக்களுடைய திருவுள்ளங்களிலே எம்பெருமானாருடைய திருவடிகளிரண்டும் எப்போதுமுதித்து ப்ரகாசியாநிற்கும் தன்மையையுடையன.

கீழ்ச் சொல்லப்பட்ட அத்யவஸாயரஹிதர்க்கு ஒருக்காலாகி லும் ப்ரகாசிக்கிறனவல்ல. இப்படிப்பட்ட ப்ராவண்யாதி சயமு டையவர்களுக்கே ப்ரகாசிக்குமென்றபடி. (యతీన్ద్రనాథ శిష్టాగ్రగణ్యజన సేవ్యభవత్పదాబ్జే) (யதீந்த்ரநாத । சிஷ்டாக்ரகண்யஜநஸேவ்ய பவத் பதாப்ஜே) என்றிறே ஜீயருமருளிச்செய்தது. (అజ్ఞాతసూర్యోదయం యతి రాజచన్ద్రమ్)(அஜ்ஞாதஸூர்யோதயம் யதிராஜசந்த்ரம) என்று அபியுக்தரு மருளிச்செய்தாரிறே.

(ஒன்றலர்நெஞ்ச மஞ்சிக்கொதித்திடமாறிநடப்பன) ஒன்ற லர் என்றது - பாஹ்யகுத்ருஷ்டிகள் தொடக்கமான ப்ரதிபக்ஷிக ளோ. அவர்களுடைய ஹ்ருதயமானது ஸூர்யோதயத்தாலே திவா பீதங்கள் பயப்படுமாப்போலே, (క్షిప్తప్రత్యర్థిదృప్తిః) (க்ஷிப்தப்ரத்யர் த்திதர்ப்தி:) என்னும்படியான அவர் திருவடிகளுதயத்தா லே பீதமாய, ஆதித்யனுடைய தேஜஸ்ஸாலே அவை பரிதபிக்கு மாப்போலே ஸ்வதேஜஸ்ஸாலே பரிதபிக்கும்படி ஆதித்யன இவற றுக்குப்ரதிபடனாய்க்கொண்டு உத்தராயண தக்ஷிணாயநங்கள்தோறு ம் மாறிமாறி ஸஞ்சரிக்குமாப்போலே அதுக்கு ப்ரதிபடங்களாய்க் கொண்டு ஸர்வதிக்குக்களிலும் பரஸ்பரம் மாறிநடவாநிற்கும் தன் மையை யுடையன. இத்தால் - பாஹ்யகுத்ருஷ்டிகளை நிரஸிக்கை க்காக வேங்கடாசலத்துக்கும் யாதவாசலத்துக்கும் சாரதாபீடம் முதலான ஸ்தலங்களுக்கும் இவர் எழுந்தருளினபடியை அருளிச் செய்தாராய்த்து.

(கொள்ளைவன்குற்றமெல்லாம்பதித்த)(సర్వాపరాధనిలయ ... శాయమయావ్యథాయి) என்றும, (తాపత్రయాధికాంక్షా ... కరాళే) என்றும், (యావన్తి ... సర్వదా ...సంసృష్టుమ్) என்றும் சொல்லுகிறபடியே ஸர்வதா ஸர்வப்ரகாரத் தாலும பண்ணப்பட்டவை யாகையாலே ஸம்ருத்தங்களாய் ப்ர பலங்களாயிருந்துள்ள தோஷங்களெல்லாம திரட்டி ஒருகுப்ப லாகவைக்கப்பட்ட. (என்புன்கவிபாவினம) கவிபாடுகைக்குத் தகு தியான ஜ்ஞாநமும் காவ்யலக்ஷணபரிஜ்ஞாநமு மில்லாத வென்னு டையகவியாகையாலே புல்லியதாய் அஸமீசீநமான கவியாகிற சந்தஸ்ஸமூஹத்தை;பாட்டுக்களை யென்றபடி. அன்றிக்கே,அநேக சந்தஸ்ஸுக்களோடேகூடின கலித்துறையாகையாலே "பாவி னம்" என்கிறாராகவுமாம். (பூண்டன) இவனுடைய அஜ்ஞாநத் தாலே சொன்ன சொல்லுக்களன்றோ விவையென்று அவற்றில் ஒரு குறைகளும் பாராதே கலம்பகன் மாலையை அலங்கரித்துக் கொள்ளுவாரைப்போலே இவற்றை யலங்கரித்துக்கொண்டன. இவற்றினுடைய தன்மை யிருக்கும்படி யென்னென்று வித்த ராகிறார்காணும். (௬0)

உரை.—அ.—ஐம்பத்தோராம்பாட்டு. எம்பெருமானார் இந்த லோகத்தில் அவதரித் தருளிற்று என்னை அடிமை கொள்ளுகைக் காக, வேறொரு ஹேதுவு மில்லையென்கிறார்.

மூ.—அடியைத்தொடர்ந்தெழுமைவர்கட்காவன்றுபாரதப்போர்
முடியப்பரிநெடுந்தேர்விடுங்கோனைமுழுதுணர்ந்த
வடியர்க்கமுதமிராமாநுசனென்னையாளவந்திப்
படியிற்பிறந்ததுமற்றில்லைகாரணம்பார்த்திடிலே. (௬௧)

| பதம். | உரை | பதம். | உரை. |
|---|---|---|---|
| அடியைத் தொடர்ந்து | "க்ருஷ்ணாச்ரயா: க்ருஷ்ணபலா: க்ருஷ்ணநாதாச்ச பாண்டவா:" "கர்ஷ்ணாஶ்ரயா: கர்ஷ்ணபலா: கர்ஷ்ணநாதாஶ்சபாண்டவா:" என்கிறபடியே திருவடிகளைப் பின்சென்று, | கோனை | ஸர்வேச்வரனை, |
| | | முழுது | ஆச்ரித பக்ஷபாதம், ஆச்ரித பாரதந்த்ர்யம், ஆச்ரித விரோதிநிரஸநம் முதலான ஸர்வஸ்வ பாவங்களையும், |
| | | உணர்ந்த | அறிந்து |
| எழும் | ஸர்வோத்தரராயிருக்கிற, | அடியார்க்கு | அவ்வவ ஸ்வபாவங்களுக்குத் தோற்று எழுதிக்கொடுத்திருக்கு மவர்களுக்கு, |
| ஐவர்கட்கா | பாண்டவர்களுக்காக, | | |
| | ஸர்வர்க்குமடைய அங்கே இரண்டு இவர்கள தனிமைப்பட்டு, | அமுதம் | போக்யபூதரா யிருக்கும், |
| | | இராமாநுசன் | எம்பெருமானார், |
| அன்று | தன்னையொழிய வேறுதுணையற்றிருக்கிறவன்று, | இப்படியில் | இந்த பூமியிலே, |
| | | வந்துபிறந்தது | வந்தவதரித்தது, |
| பாரதப் போர் | பாரதஸமரத்திலே, | என்னை ஆள | என்னை ஆளுகைக்காக; |
| முடிய | அவர்கள்ப்ரதிபக்ஷம் முடியும்படி, "ஆடிய மாநெடுந் தேர்" என்கிறபடியே, | பார்த்திடில் | ஆராயில், |
| | | மற்றுக்காரணமில்லை | வேறொரு காரணமில்லை. |
| பரி | குதிரைபூண்ட, | | |
| நெடும் | நெடிய, | | |
| தேர்விடும் | தேரைநடத்தின, | | |

எழுச்சி - கிளப்பம். அதாவது-நாம் "க்ர்ஷ்ணாச்ரயர்" என்கிறஔன்னத்யம். படி-பூமி. (௬௧)

வ்யா—அ.—ஐம்பத்தோராம்பாட்டு. பால்யமேபிடித்து மாதுலேயனென்றுநினையாதே ரக்ஷகனென்று அத்யவஸித்திருக்கிற பஞ்சபாண்டவர்களுக்கு ப்ரதிபக்ஷமழியும்படி ஸாரத்யம் பண்ணின க்ர்ஷ்ணனுடைய ஆனந்த தொழில்களெல்லாந் தெளிந்த ஸ்வரூபஜ்ஞாநமுடைய ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ஆராவமுதாயிருக்கும் எம்பெருமானார், இந்த பாபப்ரசுரமான பூலோகத்திலே அவதரித்தது ஆராய்ந்து பார்த்தால் என்னை யாளுகைக்காகவென்றே நிஸ்சிதமாயத் தித்தனையொழிய வேறொரு ஹேதுவில்லையென்கிறார்.

வ்யா.—(அடியைத் தொடாந்தெழும) பால்யமே பிடித்து வ்யாஸர், குந்தி, மார்க்கண்டேயன் முதலானவர்களுடைய உக்தி விசேஷங்களாலும், ஆபத்து வந்தபோதெல்லாம உதவி ரக்ஷித்தபடியாலும க்ர்ஷ்ணனை மாதுலேயனென்று நினைக்கை யன்றிக்கே தங்களை ரக்ஷிக்கும்பரதத்வமென்று அத்யவஸித்து, (కృష్ణాశ్రయాః కృష్ణ బలాః కృష్ణనాథాశ్చ పాణ్డవాః) (க்ர்ஷ்ணாச்ரயா: க்ர்ஷ்ணபலா:, க்ர்ஷ்ணநாதாஸ்சபாண்டவா:) என்கிறபடியே அவனதிருவடிகளை ஆச்ரயித்து ருத்ரேந்த்ராதிகளை வென்று காலகேய ஹிடிமப ஜராஸந்தாதிகளை ஸம்ஹரித்து லோகத்திலே தங்களுக்கு ஒருவரும ஸத்ருசரில்லையென்று கர்வோத்தராயிருக்கிற ஔத்தத்யம. (ஐவர்கட்கா) தர்ம பீமார்ஜுந நகுலஸஹதேவரென்று ஐவரென்ற பஞ்ச பாண்டவர்களுக்காக. (அன்று) துர்யோதநனிடத்தில பக்ஷபாதத்தாலே கர்ணசல்யாதி துர்வாக்கமெல்லாமதிரண்டு இந்தபாண்டவர்களும்தனிமைப்பட்டு தன்னையொழிய வேறொருதுணையின்றிக்கேயிருக்கிற ஸமயத்தில.

(பாரதப்போர்முடிய)உபய ஸேனையிலும்பரதவம்சத்தாரிலபரிமிதராலும்துர்வாக்யங்கள இந்த உபயஸேனையிலும அந்வயித்து யுத்தம்பண்ணினாகளாகையாலே அந்த யுத்தத்துக்கு "பாரதயுத்தம்" என்றுபேராயிருக்கிறது; அப்படிப்பட்ட உபயஸேனையிலும் திரண்டிருக்கிற பதினெட்ட க்ஷௌஹிணி பலத்துக்குமாக பாண்டவர்களைவரும்சேஷித்து அவாகளுக்கு ப்ரதிபக்ஷபூதரானமற்றப்பேரெல்லாரும் முடியும்படி. (பரிநெடுந் தேர்விடுங்கோனை) (ஆடிய மாநெடுந்தேர்) என்கிறபடியே - ச்வேதாசவங்களாலே பூணப்பட்டு ஸர்வாலங்க்ர்தமாய், தேவதா ப்ரஸாதத்தாலே வந்த தாகையாலேதிவ்யமாய் மஹத்தானதிருத்தேரை தான்ஸாரதியாய் நடத்தி, தன்னுடைய ஸர்வ ஸ்வாமித்வம் ஸாவருக்கும் தெரியும்படி யிருக்கிற க்ர்ஷ்ணனை. (తత్రపాణ్డవానాం కురూణాఞ్చయుద్ధే ప్రారబ్ధే భగవాన్ పురుషోత్తమః । సర్వేశ్వరః జగదుపకృతిమర్త్యః ఆశ్రితవాత్సల్యవివశః పార్థం

రథినఃఆత్మానఞ్చసారథిం సర్వలోకసాక్షికం చకార) (தத்ர பாண்டவாநாம் குருணாஞ்சயுத்தே ப்ராரப்தே பகவாந் புருஷோத்தம:, ஸர்வேஸ்வர:, ஜகது பகர்திமர்த்ய:, ஆச்ரிதவாத்ஸல்யவிவஶ: பார்த்தம ரதிநம ஆத்மாநஞ்சஸாரதிம் ஸர்வலோக ஸாக்ஷிகம் சகார) என்று – கீதாபாஷ்யத்திலே இவ்வர்த்தத்தை எம்பெருமானார் அருளிச் செய்தாரிறே. இந்த க்ருஷ்ணன் யதுகுலத்திலே யவதரித்தாலும் ஸ்ரீருக்மிணிப் பிராட்டியினுடைய ஸ்வயம்வரத்துக்காக குண்டிநபுரத்துக்கு கேறவெழுந்தருளின போது, இந்த்ரன், தேவ ஜாதியிலே ஒரு ஸிம்ஹாஸநத்தை யனுப்புவித்து க்ருஷ்ணனை ராஜாவாம்படி அந்த ஸிம்ஹாஸநத்திலே எழுந்தருளப் பண்ணுவித்துத் திருவபிஷேகம பண்ணுவித்தானென்று ப்ரஸித்தமிறே. ஆக, ராஜாவென்னக் குறையிலலை; இப்படிப்பட்டவனை.

(முழுதுணர்ந்த வடியர்க்கு) ஸ்வரூபரூபகுணவிபூதிகளையும், (ఏష నారాయణః శ్రీమాన్ క్షీరార్ణవనికేతనః। నాగపర్యంకముత్సృజ్య హ్యాగతో మధురాంపురీమ్)(ஏஷ நாராயண: ஸ்ரீமாந் க்ஷீரார்ணவநிகேதந:, நாகபர்யங்கமுத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம்புரீம்) என்கிறபடியே-ஸர்வஸ்மாத்பரனும் அஜஹத்ஸ்வபாவனுமவந்தவதரித்து, (ఉపసంహర సర్వాత్మన్ రూపమేతచ్చతుర్భుజం)(உபஸம்ஹர ஸர்வாத்மந் ரூபமேதச்சதுர்ப்புஜம்) என்று-பிதாவானவன் ப்ரார்த்தித்தவாறே ப்ராக்ருதரைப் போலே யிருந்தபடியையும், யமுநாநதியைக் கால்நடையாகப் பண்ணினதும, உரலோடேயிலே கட்டுண்டடியுண்டதும், பூதநா சகட யமளார்ஜுநாரிஷ்ட ப்ரலம்ப தேநுக காளிய கேசி குவலயாபீட சாணூர முஷ்டிக கம்ஸாதிகளாகிற ஆச்ரித விரோதிகளைக் கொன்றதும், அக்ரூர மாலாகாராதிகளை அநுகரஹித்ததும், கோவர்த்தநோத்தரணாத்யதிமாநுஷ திவ்ய சேஷ்டிதங்களைப்பண்ணினதும, பாண்டவர்களுக்கு பரதந்த்ரனாய்க் கழுத்திலே ஓலை கட்டிக்கொண்டு சென்று தூத்யம பண்ணினதும், காலாலே ஏவிக் காரியங் கொள்ளும்படியான ஸாரத்யத்தைச் செய்ததும், விச்வரூபத்தைத் தர்சிப்பித்ததும், அர்ஜுநவ்யாஜேநலோகோபகாரார்த்தமாக அத்யாத்மசாஸ்த்ரத்தை வெளியிட்டதும் முதலானவற்றையும அறிந்தவர்களாய அவ்வவஸ்வபாவங்களுக்குத் தோற்றுத் தங்களை எழுதிக்கொடுத்து சேஷத்வ ஸ்வரூபத்திலே நிஷ்டரான ஆழ்வான், ஆண்டான் பிள்ளான், எம்பார் முதலானவர்களுக்கு. (அமுதம) ஸ்வரூபோஜ்ஜீவநத்தைப் பண்ணுமவராகையாலே நித்யாபூர்வராய் ரஸிக்குமவரான.

(இராமாநுசன்) எம்பெருமானார். (என்னை யாளவந்து) பரமபதத்திலே பரிபூர்ணாநுபவம நடவாநிற்க அத்தைக் காற்கடைக்

கொண்டு அதில் நின்றும் அடியேனை அடிமை கொள்ளுகைக் காகவே எழுந்தருளி. (இப்படியில்) (భగవత్స్వరూపతిరోధానకరీం విపరీతజ్ఞానజననీం స్వవిషయాయాశ్చభోగ్యబుద్ధేర్జననీమ్) (பகவத்ஸ்வரூப திரோதாநகரீ0 விபரீதஜ்ஞாந ஜநநீ0 ஸ்வவிஷயாயாஶ்ச போக்ய புத்தேர்ஜநநீம்) என்னும்படியான ப்ராக்ருத பூமியிலே. (பிறந்தது) (శ్రీమానావిరభూద్భూమౌ) (ஸ்ரீமாநாவிரபூத்பூமௌ) என்கிற படியே அவதரித்தருளினது. (என்னையாள) (అహమస్మ్యపరాధచక్రవర్తి) (పాపానాంప్రథమోస్మ్యహమ్) (அஹமஸ்ம்யபராத சக்ரவர்த்தி) (பாபாநா0ப்ரதமோஸ்ம்யஹம்) என்னும்படியான அடியேனை ரக்ஷிக்கவே யாய்த்து. (மற்றில்லை காரணம் பார்த்திடிலே) பின்னையும் இவ் வவதாரத்துக்கு மூலமேதென்று ஆராய்ந்துபார்த்தால் வேறொரு காரணமில்லையென்று அருளிச்செயதாராயிற்று. ... (ருக)

உரை.—அ.—ஐம்பத்திரண்டாம்பாட்டு. (என்னை யாளவந்திப்படியில் பிறந்தது) ஒருவராலும் ஆளவரியனான வென்னை ஆளுகைக்காக வந்து அவதரித்தானென்றீர், அவர் தாம் இப்படி அகடிதகடநாஸமர்த்தரோவென்ன; அவர் செய்த அகடிதகடநங்களை யருளிச்செய்கிறார்.

மூ.—பார்த்தானறுசமயங்களபதைப்பவிப்பார்முழுதும்
போர்த்தான்புகழ்கொண்டுபுன்மையினேனிடைத்தான்புகுந்
தீர்த்தானிருவினைதீர்த்தரங்கன்செய்யதாளிணையோ [டு
டார்த்தானிவையெம்மிராமாநுசன்செய்யுமற்புதமே. (ருஉ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அறுசமயங்கள் | வேதபாஹ்யங்களான ஷட்ஸமயங்களும், | | ரன்னுடைய ஆத்தித்வாதி நிரபேக்ஷமாக, |
| பதைப்பப் பார்த்தான | நடுங்கும்படியாகக் கண்டார்; | தான்புகுந்து | தாமே வந்து புகுந்து, |
| இப்பார்முழுதும் | இந்த பூமியெங்கும், | | "యద్బ్రహ్మకల్పనియుతానుభవేప్యనాశ్యమ్" "யத்ப்ரஹ்ம கல்பநியுதாநுபவேப்யநாஶ்ய" |
| புகழ்கொண்டு | தம்முடைய திவ்ய கீர்த்தியாலே, | | எனும்படியே காலதத்வமுள்ளதனையும் அநுபவித்தாலும் தொலையாது என்னும்படியான, |
| போர்த்தான் | மூடிவிட்டார்; | | |
| புன்மையினேனிடை | அநாத்மகுணங்களை நிரூபகமாக வுடையனாயிருக்கிற என்பக்கலிலே, | | |

| பதம். | உரை. |
|---|---|
| இருவினைதீர்த்தான் | மஹாபாபங்களைப் போக்கினார்; |
| தீர்த்து | இப்படிபாபங்களைப் போக்கி, |
| அரங்கன் | பெரிய பெருமாளுடைய, |
| செய்ய | அழகிய, |
| தாளிணையோடு | திருவடிகளோடே, |
| ஆர்த்தான் | ஸம்பந்திப்பித்தார்; |

| பதம். | உரை. |
|---|---|
| எம்மிராமாநுசன் | எங்களுக்கு நாதரான எம்பெருமானார், |
| செய்யும் அற்புதம் இவை | செய்யும் ஆஸ்சர்யங்கள் இவை. |

அற்புதம்-அத்புதம். அதாவது அகடிதகடநாபாயுக்தமான ஆஸ்சர்யம. பதைத்தல-துடித்தல். போர்த்தல்-மூடுதல். இருமை-பெருமை ஆர்த்தல-பந்தித்தல்.

வ்யா.—அ.—ஐம்பதிரண்டாம்பாட்டு. (என்னையாளவந்திப் படியில பிறந்தது) என்று ஒருவராலும் ஆளவரியவென்னை ஆளவந்தவதரித்தாரென்று அவரைக்கொண்டாடாநின்றீர், இந்த அவதாரத்திலே உம்மையொருவரையே ஆளாநின்றாரோவென்ன; முதல்முன்னம்உத்தேசித்தவதரித்தது என்னையாளுகைக்காகவே; ஆகிலும்,இவர்அவதரித்தருளி,அவைதிகஸமயங்களாலேநசித்துப் போனலோகங்களையெல்லாங்கண்டு ஸஹிக்கமாட்டாதே அந்த அவைதிகஸமயங்களைநசிப்பித்துத்தம்முடைய கீர்த்தியாலேலோகங்களெல்லாவற்றிலும் வ்யாபித்து, க்ரூரபாபியானவென்பக்கலிலே ப்ரவேசித்து, என்னுடைய பாபங்களெல்லாம் நசித்துப்போம்படி பண்ணி, பின்பு பெரியபெருமாளுடைய அழகிய திருவடிகளோடே ஸம்பந்திப்பித்தார்; இப்படி ஒருகார்யத்தை உத்தேசித்து அநேககார்யங்களைச் செய்தார். இப்படி இந்தஎம்பெருமானார்செய்தருளும் ஆஸ்சர்யங்களைக்கண்டீரே! என்று வித்தராகிறார்.

வ்யா.—(பார்த்தானறுசமயங்கள்பதைப்ப) (அறுசமயங்கள்) பௌத்த சார்வாக சாக்ய ஔலூக்ய பாசுபத காணாபத்யங்களென்கிறவேதபாஹ்யஸமயங்களாறென்னுதல்; அன்றிக்கே அநுஷ்டாநதசையிலே அத்யந்த துஃகரூபங்களானவை யென்னுதல். (பதைப்பப்பார்த்தான) இப்படிப்பட்ட வேதபாஹ்ய ஸமயங்களெல்லாம் நிர்மூலமாய்ப்போம்படி அவற்றை கடாக்ஷித்தார். பதைத்தல்-துடித்தல். (దిక్సౌధాబద్ధజైత్రధ్వజపటపవనస్ఫాతినిర్ధూతతత్తత్సిద్ధాన్తస్తోమతూలస్తబకవిగమనవ్యక్తసద్వర్తనికా) (திக்ஸௌதாபத்தஜைத்ரத்வஜபடபவநஸ்பாதிநிர்த்தூததத்தத்ஸித்தாந்த ஸ்தோமதூலஸ்தபகவிகமநவ்யக்தஸத்வர்த்தநீகா) என்று அபியுக்தரும் அருளிச்செய்தாரிறே. (இப்பார்முழுதும் போர்த்தான் புகழ்கொண்டு)லோகமெல்லாம் நிஸ்ஸபத்நமாகப்பண்ண வேதமக்குளெல்லாம் கைவசமாய்த்து. இப்படிப்பட்ட

பூமியெங்கும் பண்டிதபாமரஸாதாரணமாகத் தம்மைக்கொண்டாடும்படி தம்முடைய கீர்த்தியை ஸர்வதிக்கிலும் வ்யாபிப்பித்தார். போர்த்தல் - மூடுதல்.

(புன்மையினேனிடை) வந்தேறியான பாபங்களொன்றுமின்றிக்கே, "வேம்பு முற்றக்கைப்பு மிகுவதுபோல" என்கிறபடியே நாள்தோறும் என்னாலே நிரக்ஷரிக்கச் செய்யப்பட்டவையாய், (పాపానాంవా) (பாபாநாம்வா) என்றும், (తేత్వఘంభుంజతేపాపాః) (தேத்வகம்புஞ்ஜதேபாபா) என்றும் சொல்லுகிறபடியே அந்த பாபங்களையே ஒருவடிவாகவுடையனாகையாலே அத்யந்தபாபியானவென்னிடத்திலே (தான்புகுந்து) அடியேன் ஒரு ஸாதநாநுஷ்டாநம் பண்ணாதே யிருக்கச்செய்தேயும், அர்த்தியாதே யிருக்கச்செய்தேயும், தத்துபயநிரபேக்ஷமாகத் தாமே நிர்ஹேதுகமாகவந்து ப்ரவேசித்து.

(இருவினை) இரண்டு வகைப்பட்டவினை; புண்யபாபங்களென்றபடி. அன்றிக்கே, (இருவினை) இருமை-பெருமையாய், (యద్బ్రహ్మకల్పనియుతానుభవేప్యనాశ్యంతత్కిల్బిషంసృజతిజంతురిహక్షణార్ధే) (పాపానాంప్రథమోస్మ్యహమ్) (మయితిష్ఠతిదుష్కృతాంప్రధానే) (అహమస్మ్యపరాధచక్రవర్తి) (யத் ப்ரஹ்மகல்பநியுதாநுபவேப்யநாச்யம் தத்கில்பிஷம்ஸ்ருஜதிஜந்துரிஹக்ஷணார்த்தே) (பாபாநாம்ப்ரதமோஸ்ம்யஹம்) (மயிதிஷ்டதிதுஷ்க்ருதாம்ப்ரதாநே) (அஹமஸம்யபராதசக்ரவர்த்தி) என்கிறபடியே அநுபவப்ராயச்சித்தங்களாலும் எத்தனையேனும் தாமுடையவராலும் நிவர்த்திப்பிக்கவரிதான என்னுடைய மஹாபாபங்களையென்றபடி. (தீர்த்தான்) இவற்றை அநாயாஸேந மணலிலேயெழுதின எழுத்தைத் துடைப்பாரைப்போலே துடைத்தார் (வாரேறுமறிகடலோ மாருதமோ தீயகமோ காரேறுமொருங்கிறுக கண்டிலமால்) என்றும், (சுமமெனாதேகைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே) என்றும் சொல்லுகிறபடியே வாஸனையோடே போகின்றனபடி.

(தீர்த்து) அந்தப்படி ரக்ஷணம்பண்ணி ஆறிக்கைவாங்கியிருக்கையன்றிக்கே இப்படி பாபங்களையெல்லாம் போக்கி. (அரங்கன்) எட்டாநிலமான பரமபதத்திலேபோய் ஆச்ரயி என்றும், யோகமார்க்கத்தாலே அந்தர்யாமியை ஆச்ரயியென்றும், இப்படி அநேகங்களானவற்றை உபதேசித்துப் போருகையன்றிக்கே அத்யந்த ஸுலபராய்க்கொண்டு நானிருந்தவிடத்திலே யிருக்கிற பெரிய பெருமாளுடைய. (செய்யதாளிணையோடார்த்தான்) (அரங்கத்தம்மான் திருக்கமலபாதம்) என்கிறபடியே தர்சநீயமாய பாவநத்வ போக்யத்வங்களுக்கு பரஸ்பரஸத்ர்சமான திருவடிகளோடே

ஸம்பந்திப்பித்தார். சேஷசேஷிபாவஸம்பந்தத்தை அறிவிப்பித்தாரென்றபடி. ஆர்த்தல் - பந்தித்தல்.

(இவை யெம்மிராமாநுசன்செய்யுமற்புதமே) இவ்வளவும் சொன்னவையெல்லாம் எங்களுக்காக அவதரித்தருளின எம்பெருமானார் செய்தருளும் அத்புதகார்யங்கள். அற்புதம் - அத்புதம். பித்ருவாக்ய பரிபாலநம் பண்ணவேணுமென்று காட்டுக்குப்போய் அவ்வளவிலே நில்லாதே ராக்ஷஸரையெல்லாம் ஸம்ஹரித்துத் திருவணைகட்டுவித்து மஹாராஜருக்கும் ஸ்ரீவிபீஷணாழ்வானுக்கும் ஸ்வஸ்வராஜ்யங்களைக் கொடுத்தும் போந்த சக்ரவர்த்தித்திருமகனைப் போலே, ஒன்றுசெய்யவென்றுவொருப்பட்டு அநேகமான அதிமாநுஷ சேஷ்டிதங்களைப்பண்ணியருளினார் காணும் இவரும். இப்படியிறே மஹாபுருஷர்களபடியிருப்பது. காபுருஷர்களானால் * உபகாரமதிலே அநேகப்ரகல்பநங்களைச்சொல்லி காரியஸமயம்வந்தவாறே வருந்தியும் அல்பமாகிலும் செய்யமாட்டார்களென்றதாயத்து ()

உரை.—அ.—ஐம்பத்துமூன்றாம்பாட்டு. "பார்த்தானறுசமயங்களைப்பதைப்ப" என்று பாஹ்யஸமயங்களைக் குலையப்பண்ணி இவ்விபூதியில் இவர்ஸ்தாபித்தவர்த்தமேதென்ன; ஸகலசேதநாசேதநங்களும் ஸர்வேச்வரனுக்கே சேஷமென்கிற விலக்ஷணமான அர்த்தத்தை ஸ்தாபித்தருளினார்.

மூ.—அற்புதன்செம்மையிராமாநுசனென்னையாளவந்த
கற்பகங்கற்றவர்காமுறுசீலன்கருதரிய
பற்பல்லுயிர்களும்பல்லுலகியாவும்பரனதென்னும்
நற்பொருடன்னையிந்நானிலத்தேவந்துநாட்டினனே. ()

| பதம். | உரை. |
|---|---|
| என்னை ஆள | என்னை அடிமைகொள்ளுகைக்காக, |
| வந்த | நான் கிடந்தவிடம் தேடிவந்த, |
| கற்பகம் | பரமோதாரராய், |
| கற்றவர் | அறிவுடையார், |
| காமுறு | ஆசைப்படும்படியான, |
| சீலன் | ஸௌசீல்யத்தை யுடையராய், அதிமாநுஷ மான செயல்களைச் செய்கையாலே, |

| பதம். | உரை. |
|---|---|
| அற்புதம் | ஆச்சர்யபூதராய், |
| செம்மை | ஆச்ரிதருடையகௌடில்யத்தைப்பார்த்துக் கைவிடாதே, நீரோடுமேடுகளிலே விரகாலே நீரேற்றுவாரைப் போலே தம்மை அவர்களுக்கீடாக அமைத்துப் பரிமாறும் ஆர்ஜவ குணயுக்தரான, |

| பதம். | உரை. |
| --- | --- |
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| கருதரிய | நினைக்கப் புக்கால் ட்டவரிதாம்படி, |
| பற்பல்உயிர்களும் | அஸங்க்யாதமான ஆத்மாக்களும், |
| பல்லுலகியாவும் | அவர்களுக்குவாஸஸ்தாநமாய அஸங்க்யாதமாயிருக்கிற ஸகலலோகங்களும், [குசேஷம், |
| பரனது | ஸர்வஸ்மாத்பரனுக் |
| என்னும் | என்கிற, |
| நல்பொருள்தன்னை | சீரிய அர்த்தத்தை, |
| )ந்நாநிலத்தே | இந்தலோகத்திலே, |
| வந்து | ஒருவரபேக்ஷியாதிருக்கத் தாமேவந்து, |

| பதம். | உரை |
| --- | --- |
| நாட்டினன் | ஸ்தாபித்தருளினார். |

கல்பகத்திற் காட்டில் இவர்க்கு விசேஷம் - அடிமை கொள்ளுகையும், இருந்தவிடம்தேடிவருகையும். காமுறுதல - விரும்புதல. பற்பலவுயிர்கள்-பலபலவாவுயிர்கள்; அஸங்க்யாதமான உயிர்களென்றபடி. "பல்லுலகில் யாவும்" என்றும பாடம் சொல்லுவர்கள், எழுத்தேற்றம் வருகையால் அது சேராது. ஆனால், "பல்லுலகியாவும" என்றால எழுத்தேற்றம் வாராதோ வென்னில்; "உரைகின்றனனுமக்கியான்" என்கிறவிடத்திற் போலவே, "பல்லுலகியாவும்" என்கிறவிடத்தில் இகரமும குற்றியலிகரமாய் வண்ணம கெடாமைக்குக் கழியுண்கையாலே எழுத்தேற்றமவாராது. நாட்டுதல - ஸ்தாபித்தல். (௫௩)

வ்யா.—அ—ஐம்பத்துமூன்றும்பாட்டு. "பாதத்தானுசமயங்கள்பதைப்ப" என்று - பாஹ்யஸமயங்களைக குலையப்பண்ணினாரென்றும், "அரங்கன்செய்யதாளிணையோடார்த்தான்" என்று - பரமபுருஷார்த்த ஸாம்ராஜ்யத்தைக கொடுத்தாரென்றும் சொன்னீர், அம்மாத்ரமேயோ அவர்செய்ததென்னில்; அவ்வளவேயன்று, ஸகலாபேக்ஷிதங்களையும், அபேக்ஷாநிரபேக்ஷமாக கல்பகம் போலே கொடுக்குமவராய ஸௌசீல்யத்தையுடையராய் அத்யாஶ்சர்யபூதராய் ஆர்ஜவகுணயுக்தரான எம்பெருமானார், ஸகலலோகங்களிலுமிருந்துள்ள ஸகலாத்மாக்களுமஸர்வஸ்மாத பரனுக்கே சேஷபூதரென்று இந்தலோகத்திலே ப்ரதிஷ்டிப்பித்தருளினார்.

வ்யா.—(என்னையாள) ஸ்ரீயஃபதியினுடையதிவ்யாஜ்ஞையினாலே ஸகலலோகோஜ்ஜீவந விஷயமாக வவதரித்தாரேயாகிலும், (எதிர்சூழல்புக்குஎனைத்தோர்பிறப்புமெனக்கேயருள்கள் செய்ய) என்கிறபடியே லோகத்தாரெல்லாரிலும், (நீசனேன்நிறைவொன்றுமிலேன்) என்கிறபடியே அத்யந்த நிஹீநனானவென்னிடத்திலே க்ருபைபண்ணி யருளி அடியேனை அடிமை கொள்ளுகைக்காக.

(வந்தகற்பகம்)தம்மையொருவரைரக்ஷிக்கைக்காக அவதரித்தாரெ ன்றுகாணுமஇவருடையதிருவுள்ளத்திலோடுகிறது. (வந்தகற்ப கம்) நித்யவிபூதியில்நின்றும் லீலாவிபூதிக்கு எழுந்தருளின கல்ப கம்.கலபகம்போலேஅபீஷ்டார்த்தப்ரதரானவர் ஜடமாய் ஸ்தாவர மாய் ஐஹிகபுருஷார்த்தமாத்ரப்ரதமாய் ஒருதேசவிசேஷத்திலே தானேபயதமாயிறேஅந்தகல்பகமிருப்பது; இந்தகல்பகம் அதில் நி ன்றும் அதிவிலக்ஷணமாய்அப்ராகர்தமாய்,(ஐஹாமுஷ்மிகபுருஷார்த்தப்ரதம்) (அஜஹ்ருத்ரிவர்ககமபவர்ககவைபவம) (நலமந்தமில்லதோர்நாடு புகுவீர்)(நல்லபதத்தால் மனைவாழ்வர்கொண்ட பெண்டிர்மக்கள்) என்கிறபடியே - ஐஹிகாமுஷ்மிக ஸமஸ்த புருஷார்த்தங்களையும் கொடுக்ககவல ஔதார்யத்தையுடைத்தாய உபய விபூதியிலும் வ்யாபித்ரூபபதாய் நித்யமாய் நிற்பதொன்றிறே. ஆகையாலே, (வந்தகற்பகம) என்று - சாகாசந்த்ரந்யாயேநபுத்த்யாரோபத்து க்காகச்சொன்னாரித்தனை. நானிருந்தவிடம் தேடிவந்து விஷயீக ரித்தவிது மஹோதாரமன்றே' என்றுவித்தராய்க்காணும (வந்த கற்பகம) என்கிறார்.

(கற்றவர் காமுறு சீலன்) ஸகல சாஸ்த்ரங்களையும் அப்யஸி த்தத்தாலே ஜ்ஞாநாதிகராய, (உன்னையொழிய வொருதெய்வம் மற்றறியா, மன்னுபுகழ்சேர் வடுகநம்பி) என்றுகொண்டாடப்படு கிற வடுகநம்பி, கிடாம்பியாச்சான் முதலான முதலிகள், வ்யாமுக் த்தராய் ஆசைப்படும்படியான ஸ்வபாவத்தையும் ஸத்வ்ருத்தியையு முடையராய, அன்றிகே, பெரியவன் தாழ்ந்தவருடனே புரை யறக்கலந்து பரிமாறுகையாகிற சீலகுணத்தை யுடையவரென்று மாம். காமுறுதல் - விரும்புதல். எம்பெருமானார் கோயிலிலே வாழுகிறகாலத்திலே ஒருநாள்மத்யாஹ்ந ஸமயத்திலேதிருக்காவே ரியிலே நீராடித் திருமபவும எழுந்தருளுகிற வளவிலே வழியிலே திருக்கோட்டியூர்நம்பி எதிரே எழுந்தருள, எம்பெருமானாரும் அந்தமணலிலே ஸாஷ்டாங்கமாக தண்டனிட்டு நிற்க, நம்பியும் அவரைக்கடாக்ஷித்து "எழுந்திரும்" என்றருளிச் செய்யாதே வெறுமனே யிருந்தவாறே, அசசேர்த்தியைக் கிடாம்பியாச் சான் கடாக்ஷித்தருளி, "நம்பி! இவரைக்கொல்ல நினைத்தீரோ" என்று சீறுபாறுசெய்து, மணலிலே ஸாஷ்டாங்கமாக விழுந்திருக்கிற எம்பெருமானாரை வாரியெடுத்துக் கொண்டார் என்று நம்முதலி கள கோஷ்டியிலே ப்ரஸித்தமிறே.

(அற்புதம்செம்மை) அதிமாநுஷங்களான சேஷ்டிதங்களைப் பண்ணுகையாலே அத்புதராய் ஆச்ரிதருடைய கௌடில்யத்தைப் பார்த்துக்கைவிடாதேநேரேமுமேடுகளிலேவிரகாலே நேரேற்றுமாப்

போலே தம்மை அவர்களுக்கீடாக அமைத்துப்பரிமாறும் ஆர்ஜவ குணத்தையுடையரான. (இராமாநுசன்) எம்பெருமானார். (கருதரிய) நினைக்கப்புக்கால் நினைத்து த்தலைகட்டவரிதாம்படி. (பற்பலவுயிர்களும்) பலபடியான. பல்பலென்கையாலே-ஒருஜாதியே அஸங்க்யாதமாய் அப்படிப்பட்ட ஜாதிகுலங்களும அஸங்கயாதங்களாய், (எண்பெருக்கந்நலத்தொண்பொருள்) எனகிறபடியே எண்ணிறந்த ஆத்மாககளும. (பல்லுலகியாவும்) அந்த ஆதமாககளுக்கு ஆவாஸஸ்த்தாநமாய அஸங்கயாதமாயிருககிறஸகலலோகங்களும். (பரனதென்னும்) (పరంపరాణాం) (பரம்பராணாம்) எனகிறபடியேப்ரஹ்மருத்ராதிகளுக்கும பரனாய் ஸ்ரீயஃபதியானவனுககே சேஷபூதமென்றும், (ஸர்வேஷாமபி ஸநாதநாகிலஜகத் வ்யாப்தாவபோதாமலாநந்தாகார யுதேதய்யநந்தஸத்குணஸ் ஸாவாதமநாம ஸாஸிதா - தேஹீதாரணஸாஸநேஸநமுகை, ஸ்வாதீநநித்யஸ்திதி: ஸ்வாமீ நித்யமநோகயமங்களவபு: ஸ்ரீபூமிநீளாதிப:) (సర్వేషామపి సనాతనాఖిలజగద్వ్యాప్తావబోధామలానన్దాకారయుతోప్యనన్తసుగుణస్సర్వాత్మనాం శాసితా। దేహీం ధారణ శాసనేశనముఖైః స్వాధీననిత్యస్థితిః స్వామీనిత్యమనోజ్ఞమఙ్గళవపుః శ్రీభూమినీళాధిపః) என்கிறபடியே - போகயபோகோபகரணபோகஸ்த்தாந போகத்ருத்வங்களெல்லாம் ஸர்வஸ்மாத்பரனான நாராயணனுககே சேஷபூதமென்கிறது.

(நம்பொருள்தன்னை) யதாவஸ்திதிதனமிச நஜ்ஞாநதனை. அன்றிக்கே, இப்படிப்பட்ட சீரியவாதததனை. (இங்ஙனிலத்தேவந்து) இந்தலோகமெல்லா முஜ்ஜீவிககைககாக தாமேவந்தவதரித்தருளி. (நாட்டினனே) ஒருவரும அபேக்ஷியாதிருககச்செய்தே நிர்ஹேதுகமாகவே பரதிஷ்டிபபித்தருளினா. நாட்டுதல-ஸ்தாபித்தல. சிலர்கரு ஒருகாலத்திலே உபதேசித்துப்போனமாத்ரமேயன்றிககேலோகத்தாரெல்லாருமஸாவகாலமுமநுபவித்து உஜ்ஜீவிக்கும்படியாக ஸ்ரீபாஷ்யாதிமுகேந ப்ரதிஷ்டாபநம பண்ணியருளினாரென்றதாய்த்து. (యదణ్డమణ్డాన్తరగోచరం చ యద్దశోత్తరాణ్యావరణాని యాని చ। గుణాః ప్రధానం పురుషః పరం పదం పరాత్పరం బ్రహ్మ చ తే విభూతయః) (யதண்டமண்டாந்தரகோசரஞ்சயத்தஸோத்தராணயாவரணாநியாநிச - குணாஃப்ரதாநம்புருஷ:பரம்பதம் பராதபரம்ப்ரஹ்மசதே விபூதய:) என்று ஆளவந்தாருமருளிச்செய்தாரிறே.

**கல்பகத்தைக் காட்டில் இவருக்கு விசேஷம் - அடிமை கொள்ளுகையும் இருந்தவிடத்தே வருகையும். "பல்லுலகில்யாவும்" என்றும் பாடம சொல்லுவர்கள். எழுத்து ஏற்றமாகையாலே அது சேராது; ஆனால் "பல்லுலகியாவும்" என்றால் எழுத்தேற்றம் வாராதோ வென்னில்; "உரைக்கின்றனனுமக்கியான"**

-த்திலேபோலவே, "பல்லுலகியாவும்" என்கிறவிடத்திலே இகரம் குற்றியலிகரமாய்வண்ணங்கெடாமைக்குக் கழியுண்கையாலே எழுத்தேற்றமவாராதென்று ஜீயரு மருளிச்செய்தாரிறே. ... ... ... ... ... (ருரு)

உரை.—அ.—ஐம்பத்துநாலாம்பாட்டு. இப்படி எம்பெருமானார், யதார்த்தஸ்த்தாபநம்பண்ணியருளின ஸ்வபாவத்தைக்கண்டு, பாஹ்யஸமயங்களுக்கும், வேதத்துக்கும் திருவாய்மொழிக்கு முண்டான ஆகாரங்களை யருளிச்செய்கிறார்.

மூ.—நாட்டியநீசசமயங்கள்மாண்டன;நாரணனைக்
காட்டியவேதங்களிப்புற்றது;தென்குருகைவள்ளல்
வாட்டமிலாவண்டமிழ்மறைவாழ்ந்தது;மண்ணுலகில்
ஈட்டியசீலத்திராமாநுசன்றனியல்வுகண்டே. (ருச)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | க்ஷுத்ரரான சேதநர்களோடே தமபெருமையையும் அவர்கள சிறுமையையும பாராதே கலந்து பரிமாறி, | | வேதபாஹ்யங்களாகையாலே தண்ணிதான, |
| | | சமயங்கள் மாண்டன | சமயங்கள் நசித்தன; |
| மண்ணுலகில | பூலோகத்திலே, | | பூர்வபாகம் ஆராதந ஸ்வரூபத்தையும், உத்தரபாகம் ஆராத்ய ஸ்வரூபத்தையும சொல்லுகையாலே, |
| ஈட்டிய | மேனமேலும் திரட்டிக்கொண்ட, | | |
| சீலத்து | சீலகுணத்தையுடையரான, | நாரணனை | "వేదైశ్చ సర్వైరహమేవవేద్యః" "வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" என்கிறபடியே உபயவிபூதி யுக்தனான ஸர்வேச்வரனை, |
| இராமாநுசன்றன் | எம்பெருமானாருடைய, | | |
| இயலவுகண்டு | ஸ்வபாவத்தைக் கண்டு, ஆதித்ய தர்சநத்திலே அந்தகாரம் நசித்து *அம்புஜாதங்கள் அலருமாப்போலே, | காட்டிய | ப்ரகாசிப்பித்த வேதமானது, |
| | | வேதம் களிப்புற்றது | நமக்கு இனியொரு குறையில்லையென்று கர்வித்தது; |
| நாட்டிய | ஸ்வயுக்தி ஸ்த்தாபிதங்களாய. | | |

* "அம்பு ஜாதிகள் அலருமாபபோலே" என்றும் பாடம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| தென் | ஸர்வப்ரகாரவிலக்ஷணமான, | வாட்டமிலா | ஒருகுறையின்றிக்கேயிருப்பதாய, |
| குருகை | திருநகரியைத் தமக்கு வாஸஸ்த்தாநமாகவுடையராய, பக்வ தநுபவபரீவாஹரூபமான ஸ்வோகதிகளாலே லோகத்துக்குஉபகரித்தருளின, | வண் | ஜ்ஞாநப்ரப்ருதி மோக்ஷாந்தமான ஸகல பலங்களையுமகொடுக்கும், ஔதார்யத்தையுடைத்தாயிருக்கிற, |
| | | தமிழ்மறை | த்ராவிடவேதமான திருவாய்மொழி, |
| வள்ளல் | பரமோதாரரான ஆழ்வாரருளிச்செய்ததாய், பாஹ்ய குத்ருஷ்டிகளால் அவிசால்யமாகையாலே, | வாழ்ந்தது | பராபவதைசவாயமாயத்து. |

களிப்புறுதல - கர்வித்தல. வாட்டம்-ஸங்கோசம்.ஈட்டுதல்-திரட்டுதல். இயல்வு-ஸ்வபாவம். (ருச)

வ்யா.—அ.—ஐம்பத்துநாலாமபாட்டு. கீழெல்லாம - எம்பெருமானார் துர்மதநிரஸநம்பண்ணினாரென்றும, வேதோத்தாரணம பண்ணினாரென்றும் ஆழ்வாருடைய திவ்யஸூக்திகளிலேதானே அவகாஹித்தாரென்றும சொன்னீர, ஆன பின்பு அததால துர்மதங்களுக்கும் வேதங்களுக்கும் ஆழ்வாருடைய அருளிச்செயல்களுக்கு முண்டான ஆகாரத்தைச சொல்லவேண்டாவோ வென்ன; துர்மதங்க ளடங்கலும் வேரோடேகூட நசித்துப்போந்தன, வேதமானது பூலோகத்திலே "எனக்காரும நிகரில்லை" என்று கர்வித்திருந்தது, அருளிச்செயல்களெல்லாம அனைவரும் உஜ்ஜீவிக்கும்படி நித்யாபிவ்ருத்தங்களாய்க கொண்டிருந்தனவென்கிறார்.

வ்யா.—(நாட்டியநீசச் சமயங்கள் என்று தொடங்கி) (மண்ணுலகில்) அஜ்ஞாநத்துக்கு விளைநிலமான பூலோகத்திலே. (ஈட்டியசீலத்து) உபயவிபூதயைச்வர்யத்தைப் பெற்ற தம்முடைய மாஹாத்ம்யத்தையும் லௌகிகருடைய சிறுமையையும்பாராதே திருக்கோட்டியூரிலே பாலவ்ர்த்தவிபாகமற எல்லார்க்கும், குஹ்யதமமாகத் தாம்பெற்ற சரமசலோகார்த்தத்தை வெளியிட்டு, கொங்கில் பிராட்டியையும், இரட்டைத் திருப்பதியிலே மாடுமேய்க்கிற பெண்பிள்ளையையும், மேல் நாட்டுக்கெழுந்தருளுகிறபோது காட்டிலே ஒருஇடையனையும், மற்றும்ஊமைமுதலானவர்களையும,

நிர்ஹேதுகமாக விஷயீகரித்துக் கலந்து பரிமாறி மேல்மேல னத் திரட்டிக்கொண்ட ஸௌசீல்யத்தையுடையரான. ஈட்டுதல் - திரட்டுகை. (இராமாநுசன்றன்) எம்பெருமானாருடைய. (இயல்வு கண்டு) ப்ரதிபக்ஷப்ரதிக்ஷேபகத்வ தாமமார்க்கப்ரதிஷ்டாபகத்வாதி ஸ்வபாவங்களைக்கண்டு. இயல்வு - ஸ்வபாவம்.

(நாட்டியநீசச் சமயங்கள் மாண்டன) சோழமண்டலத்திலேயிருக்கிற திவ்ய தேசங்களில்கோயில்களெல்லாம் நைஷ்டிகபரான பாஷண்டிகள் பிடுங்கிப் பொகட்டுச் சிவாலயங்களைக் கட்டுவிக்கும்போது திருமங்கைமன்னன் திருவவதரித்தருளி அந்த பாஷண்டிகளுடனே ப்ரஸங்கித்து அவர்களைவென்று திவ்ய தேசங்களைக் கட்டடங்க நிர்வஹித்தார்; ஆளவந்தார், சோழன் ஸபையிலே ருத்ரபக்ஷ பாதிகளோடே ப்ரஸங்கித்து அவர்களை வென்று அந்தராஜாவாலே அர்த்தராஜ்யத்தைப் பெற்றார்; இங்கு அப்படியன்றிக்கே இவர் தம்முடைய காலத்திலே தானே அவ்ய யபதேசிய னென்பானொருவன் "சிவாத்பரதரம்நாஸ்தி" என்று சாஸநத்தையெழுதி இந்த பூமண்டலத்திலே ஸ்தாபிப்பதாக அநேக பகவத்பாகவதத்ரோஹங்களைப் பண்ணிக்கொண்டுபோந்து "நீசரும மாண்டனர்" என்கிறபடியே இவருடையயத்நமின்றிக்கே இவர் தம்முடைய அப்ரதிமப்ரபாவத்தைக் கண்டபோதே கழுத்திலே புண்பட்டு க்ருமிகண்டனாய் நசித்தான் என்றும், காளஹஸ்தியில் நின்றும் சைவர்கள் திரண்டுவந்து திருவேங்கடமுடையானைத் தங்களுடைய கந்தநாயனார் என்று வழக்குப்பிடித்து அக்காலத்திலே ராஜாவான யாதவராயனையும் பரிஹரிக்கவரிதாம்படி திருமலையை ஆக்ரமிக்க; அப்போது திருவேங்கடமுடையானுடைய விஷயீகாரத்தாலே எம்பெருமானாரெழுந்தருளி அவர்களை பராஜிதராக்கினவாறே அவர்களெல்லாரும் தலையறுப்புண்டுபோனார்களென்றும், மேல் நாட்டிலே பௌத்த ஸமயத்தார் ப்ரபலராய் அவ்விடத்தில் ராஜாவும் அவர்களுடைய சிஷ்யனாய் அத்தேசத்திலே தத்வ்யதிரிக்தர் இருக்கவுங் கூட வரிதாய்ப்போந்திருந்தகாலத்திலே இவரும் யாத்ர்ச்சிகமாக அத்தேசத்திலே சில நாளெழுந்தருளியிருக்க, அந்தராஜாவும் இவருடைய வைபவத்தை ஸேவித்து அந்த பௌத்தர்க்கும் எம்பெருமானார்க்கும் ப்ரஸங்கம் பண்ணுவித்து அவர்களுடைய குதர்ஷ்டி கல்பநத்தையும், எம்பெருமானாருடைய ஸமீசீந கல்பநத்தையும் கண்டு வித்தனாய் இவர்திருவடிகளிலே ஆச்ரயித்து, பட்டாசார்யன் காலத்திலும் நசியாதே வேர்பாய்ந் திருக்கிற பௌத்தருடைவும் ஜைநருடையவும் தலைகளை யறுப்பித்து அத்தேசத்திலே அப்படிப்பட்ட நீசஸமயங்கள் நடையாடாதபடி பண்ணினாரென்றும் ப்ரஸித்தமிறே.

(நாட்டியவித்யாதி) ஆதித்யதர்சநத்தில் அந்தகாரம் நசிக்குமாப்போலே இவருடைய வைபவங்களைக்கண்டு ப்ரமாணதர்க்கங்களன்றிக்கே ஸ்வயுக்திஸ்த்தாபிதங்களாய், எத்தனைதரமுடையவராலும் நிவர்த்திப்பிக்க அசக்யங்களாய, வேதபாஹ்யங்களாகையாலே அதிநீசங்களாயிருக்கிற அவைதிகஸமயங்களெல்லாம் நிர்மூலமாய்ப்போயின. (நாரணனைக்காட்டிய வேதமகளிப்புற்றது) (నారాయణః పరం బ్రహ్మ తత్త్వం నారాయణః పరః, నారాయణః పరో జ్యోతిరాత్మా నారాయణః పరః, యచ్చ కించిజ్జగత్యస్మిన్ దృశ్యతే శ్రూయతేఽపి వా, అన్తర్బహిశ్చ తత్సర్వం వ్యాప్య నారాయణః స్థితః) (நாராயணபரம்பரஹ்மதத்வம் நாராயணபர:, நாராயணபரோஜ்யோதிராத்மா நாராயணபர:, யச்சகிஞ்சிஜ்ஜகத்யஸ்மிந் த்ருச்யதேச்ரூயதேபிவா, அந்தர்ப்பஹிஸ்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ்திதஃ) என்றும், (నారాయణాద్బ్రహ్మా జాయతే) (நாராயணாத் ப்ரஹ்மாஜாயதே) என்றுதொடங்கி, (నారాయణ ఏవేదం సర్వం, యద్భూతం యచ్చ భవ్యం, నిష్కలో నిరఞ్జనో నిర్వికల్పో నిరాఖ్యాతః శుద్ధో దేవ ఏకో నారాయణః, న ద్వితీయోఽస్తి కశ్చిత్, య ఏవం వేద, స విష్ణురేవ భవతి) என்றும், (ఏష సర్వభూతాన్తరాత్మాఽపహతపాప్మా దివ్యో దేవ ఏకో నారాయణః) என்றும், (హ్రీశ్చ తే లక్ష్మీశ్చ పత్న్యౌ) என்றும் „ நாராயணபரத்வத்தைக் காட்டுகிற வேதமானது பூர்வோத்தரபாகங்களிரண்டிலும் வைத்துக்கொண்டு, பூர்வபாகம் ஆராதநகாமஸ்வரூப ப்ரதிபாதகமாகையாலும், உத்தரபாகம் ஆராத்யப்ரஹ்மஸ்வரூபோபாய புருஷார்த்தப்ரதிபாதகமாகையாலும், இரண்டுக்கும் ஏகசாஸ்த்ரத்வத்தை இவ்வெம்பெருமானார் ஸமர்த்தித்து ஆஸேதுஹிமாசல ப்ரதிஷ்டையைபண்ணுகையாலே இனி நமக்கொருகுறைகளுமில்லையென்று தேஜிஷ்டமாய கோயில்சாந்து பூசிக்கொண்டு இந்தலோகத்திலே நாவலிட்டு ஸஞ்சரியாநின்றது. களித்தல - கர்விததல்.

(தென்குருகைவள்ளல் வாட்டமிலாவண்டமிழ் மறைவாழ்ந்தது) (திருவழுதிநாடென்றும் தென்குருகூரென்றும்) என்னும்படி தென்தேசத்துக்கெல்லாம் அலங்காரபூதமாய் தர்சநீயமான திருநகரியைத்தமக்குத்திருவவதாரஸ்த்தலமாகவுடையாராய் பகவத்ஸ்வரூபரூபகுண விபூதிகளை யநுபவிக்கஅநுபவிக்க உள்ளடங்காமேதத்தநுபவபரீவாஹரூபங்களாய்,"மொழிபட்டோடும் கவியமுதின் நுகர்ச்சி யுறுமோமுழுதுமே" என்று-தம்மாலே ச்லாகிக்கப்படுமவையான ஸ்வஸூக்திகளை லோகத்தாரெல்லார்க்கும் ஸர்வாதிகாரமாம்படி உபகரித்தருளும் பரமோதாரரான நம்மாழ்வாராலே அருளிச்செய்யப்பட்டதாய் பாஹ்யகுத்ருஷ்டிகளால் அவிசால்யமாகையாலே ஒருகுறையுமின்றிக்கே யிருப்பதாய், "நல்லபதத்தால் மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே" என்கிறபடியே - ஐஹிகபுருஷார்த்தத்தையும், "திரளிறையாயிரத்து

இவைபத்தும்வீடே'' "இவைபத்தும் பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்துபெரியவானுள்நிலாவுவரே'' "அவாவிலந்தாதிப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே'' என்கிறபடியே ஆமுஷ்மிகமான பரமபுருஷார்த்தத்தையும கொடுக்கக்கடவதான ஔதார்யத்தை யுடைத்தாயிருக்கிற த்ராவிடவேதமான திருவாயமொழியானது,"சடகோபன் தண்டமிழ்நூலவாழ'' என்கிறபடியே - ஸமஸ்தப்ரபந்நஜநங்களும் மங்களாசாஸநமபண்ணும்படி உஜ்வலமாய்த்து. வாடடம் - ஸங்கோசம்.... ... ... ... ... (ருச)

உரை.—அ.—ஐம்பத்தஞ்சாம்பாட்டு எம்பெருமானார்ஸ்வபாவத்தைக கண்டு வேதம் க்ருதார்த்தமாயிற் றென்றார் - கீழ்; இப்படி ஒருவா அபேக்ஷியாதிருக்கத் தாமே, ஸகலவேதங்களும பூமியிலே நிஷ்கண்டகமாக நடக்கும்படி பண்ணின ஔதார்யத்திலே யீடுபட்டு அவரை ஆச்ரயித்திருக்கும குடி எங்களை ஆளவுரிய குடியென்கிறார் - இதில்.

மூ.—கண்டவர்சிந்தைகவருங்கடிபொழில்தென்னரங்கன்
தொண்டர்குலாவுமிராமாநுசனைதொகையிறந்த
பண்டருவேதங்கள்பார்மேல்நிலவிடப்பார்த்தருளும்
கொண்டலைமேவிதொழுங்குடியாமெங்கள்கோக்குலமே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தொகையிறந்த | (அநந்தா வை வேதா:) (அநந்தாவை வேதா:) என்கிற படியே ஒரு தொகையில்லாதபடி அநந்தமாய, | கடி | பரிமளத்தை யுடைத்தாய, |
| | | பொழில் | திருச் சோலைகளையுடைத்தாய், |
| | | தென் அரங்கன் | தர்சநீயமான கோயிலிலே நித்யவாஸம் பண்ணுகிறபெரியபெருமாள்திருவடிகளுக்கு சேஷபூதரானவர்கள், |
| பண்தரு வேதங்கள் | உதாத்தாதியான ஸ்வரங்களுக்கு பரகாசகங்களாயிருக்கிற வேதங்களானவை, | தொண்டர் | |
| பார்மேல் நிலவிட | பூமியிலே வாத்திக்குமபடி, | குலாவும் | அந்த ஸ்வபாவத்துக்குத்தோற்றுக் கொண்டாடும் படி யிருக்கிற, |
| பார்த்தருளும | பண்ணியருளின, | இராமாநுசனை | எம்பெருமானாரை, |
| கொண்ட | பரமோதாரராய், | மேவி | தத்ஸ்வபாவத்திலே யீடுபட்டு |
| கண்டவர் சிந்தை | கண்டவர்கள் நெஞ்சை, | தொழும் | விஷயாந்தர விமுகராயாச்ரயித் திருக்கும்குலம், |
| கவரும் | அபஹரியா நிற்பதாய. | குடி | |

| பதம். | உரை. |
|---|---|
| எங்கள் கோக்குலமாம் | தத்ஸம்பந்திகளை உத்தேச்யரென்றிருக்குமெங்களை ஆளவுரிய குலமாயிருக்கும். |

எங்கள் கோக்குடி யென்றது-எங்களுக்குக்கோவானகுடி என்றபடி. கண்டவர் சிந்தைகவரும் என்றவிது-பெரியபெருமாளுக்கு விசேஷணமாகவுமாம். கடி-மணம். குலாவுதல்-கொண்டாட்டம். நவலுதல்-வாத்திதல். பண்டருவேதங்கள்என்கிறவிடத்தில பண்டேயுள்ளதாய அரிதாயிருந்துள்ள வேதங்களென்று, வேதங்களினுடைய அநாதித்வத்தையும அலப்யத்வத்தையும் சொல்லுகிறதாகலோவெனனில்; (பண்டையருவேதம்)என்றுபாடமாயிற்றாகில் அப்படிபொருள் சொல்லலாம்; பண்டுஎன்கிறசப்தம-பூர்வகாலத்துக்கு வாசகமாமித்தனையல்லது பூர்வகாலீநமானதுக்குவாசகமாகாமையாலே அப்படி சொல்லப்போகாது; (பண்டை நான்மறை)(பண்டைக்குலம)(பண்டையோமல்லமோம்) என்றும, (பண்டுநூற்றுவர்) (பண்டுமின்றும்) (பண்டொருநாளாலினிலைவளர்ந்த) என்றுமித்யாதிஸ்தலங்களிலே இந்தவிபாகம கண்டு கொளவது. ... ... ... ... (ருரு)

---

வ்யா.—அ.—ஐமபத்தஞ்சாமபாட்டு. கீழ்ப்பாட்டிலே - வேதமானது எமபெருமானாருடைய வைபவத்தைககண்டுகர்வித்து,தனக்கு ஒருவரும் லக்ஷ்யமாகமாட்டார்களென்று பூலோகத்திலே ஸஞ்சரியாநின்றதென்றார்; இதிலே-அப்படி அந்தவேதங்களை ஒருவர்அபேக்ஷியாதேயிருக்கத் தாமே நிஷ்கண்டகமாக ப்ரவர்த்திப்பித்த ஔதார்யத்தையுடையராய ஸகலஜநமநோஹரமாய, பரிமளத்தையுடைய திவ்யோத்யாநங்களாலே சூழப்பட்டு தர்சநீயமான கோயிலுக்கு ஸ்வாமியான பெரியபெருமாளுடைய அடியாரான ஆழ்வார்களைக்கொண்டாடுகிற எம்பெருமானாருடைய இந்த ஸ்வபாவங்களிலே யீடுபட்டு ஆச்ரயித்திருக்குமவர்களுடைய குலத்தார், எங்களை ஆளக்கடவ ஸ்வாம்த்வத்தையுடைய குலத்தாரென்கிறார்.

வ்யா.—(தொகையிறந்த) வேதங்களை எண்ணப்புக்கால், "அநந்தா வை வேதா:" "அநந்தாவைவேதா:" என்கையாலே எண்ணித்தலைக்கட்டப்போகாதிறே. தொகை - ஸங்க்யை. இப்படி ஒருதொகையிலடங்காதபடி அநந்தமாய். (பண்தருவேதங்கள்) பண் என்று - காநமாய், அதுதானும் இங்கு உதாத்தாநுதாத்த ஸ்வரிதப்ரசயாத்மகமாய், அந்தஸ்வரங்களும் சாகாபேதேந பஹுவிதங்களாய், அவற்றுக்குப்ரகாசகமானவேதங்களென்னுதல்;எல்லார்க்கும்அவ்வவஸ்வரபரிஜ்ஞாநத்தைக் கொடுக்கவல்ல வேதங்களென்னுதல்.

(సమస్తాన్ జ్ఞాతవ్యార్థాంశ్చ వేదయతీతి వేదః) (ஸமஸ்தாந்ஜ்ஞாதவ்யார்த்தாம்ஸ்சவேதயதீதிவேதஃ) என்று ஆராதநாராத்யோபயாத்மகமான அர்த்தத்தை அபேக்ஷித்தவர்களுக்கு அடைவே யறிவிப்பிக்கும் தாகையாலே வேதமென்று பேராயிருக்கிறது.

(பண்டருவேதங்கள்) என்கிறவிடத்தில், பண்டென்று-பூர்வ காலீநமாய், அரு என்று-தெரியவரிதாயிருக்கும் வேதங்களென்று பொருளானாலோவென்னில்; பண்டு என்று - காலமாத்ரவாசக மாகையாலே காலீநத்தைச்சொல்லமாட்டாது, பண்டை என்றால் காலீநத்தைச்சொல்லலாம்; - (பண்டைநான்மறை) (பண்டைக் குலம்) (பண்டையோமல்லோம்) என்று - இவை காலீநத்துக்கு உதாஹரணங்கள். (பண்டுநூற்றுவர்) (பண்டொருநாள்) என்று இவை பூர்வகாலவாசகத்துக்கு உதாஹரணங்கள். ஆகையாலே, பண்டு என்று பதமபண்ணிலும் காலபரமாய்ப்போமித்தனை யொழிய காலீநபரமாகமாட்டாது. ஆக பண்தரு என்றுபதச் சேதமபண்ணிலும்தான் ஸுஸங்கதமென்று உரையிலேஜீயருமரு ளிசசெய்தாரிறே. இப்படி யிருந்துள்ள ரிக்யஜுஸ்ஸாமாதர்வண ரூப சதுர்வேதங்களும், பராசர பாராஸர்ய ப்ராசேதஸாதி பரம ரிஷிகளாலே அவகாஹிக்கப்பட்ட வேதாந்தங்களும. (பார்மேல்) மஹாப்ருதிவியிலே. (நிலவிடபபார்த்தருளும்) ஜைநபௌத்தாதி பாஹ்யரை வேரோடேமுடிவித்து வேதங்களை ஆஸேதுஹிமாச லம வ்யாபிக்கும்படி பண்ணி யருளின. நிலவுதல் - வர்த்தித்தல். இவர்தாம வேதமார்க்கப்ரதிஷ்டாபநாசார்யரிறே.(கொண்டலை) ஜலஸ்த்தல விபாகமற வர்ஷிக்கும மேகமென்னலாம்படி வதாந்ய ராய.

(கண்டவர சிந்தைகவரும)ஸ்ரீகண்டத்வயஸாரஸ்நிகத்தநீ ரோபகண்டாயமாவிரமோத ஸ்திப்தஹுதாநாதிதப்ரஹ்மகோஷா ம,மார்கமாக்கேபதிகிவஹ்ருசயமாநபவர்ககாம்பாடிஸ்ய ந்தாம்புநராபிபுரீம்ஸ்ரீமத்ரங்கநாமந:)(శ్రీకణ్ఠద్వయసారసస్నిగ్ధనీరోపకణ్ఠా మామోదస్తిమితహుతాశనాదిబ్రహ్మఘోషామ్, మార్గేమార్గేపథికనివహైరుఞ్ఛ్యమానా పవర్గాం పశ్యేయం తాంపునరపిపురీంశ్రీమతీంరఙ్గధామ్నః) என்கிறபடியே தன்னைப் பார்க்கிறவர்களுடைய மநஸ்ஸை அபஹரித்துத் தன்வசமாக்கி, பாராதபோது "இரும்பவும்காண்கிறதெப்போதோ" என்றுஆகாங் க்ஷிக்குமபடி நிற்பதாய. கவருகை-க்ரஹிக்கை. (கடிபொழில தென் னரங்கன) பரிமள ப்ரசுரங்களான சோலைகளாலே சூழப்பட்டும், விமாந மண்டப கோபுர ப்ராகார உத்யாநங்களாலே நிபிடமா யும, தவஜ பதாகாதிகளாலே அலங்கர்தமாயு மிருக்கையாலே தர்ஸநீயமாயிருக்கிற கோயிலிலே நித்யவாஸம்பண்ணி அதுவே நிரூபகமாம்படி யிருக்கிற திருவரங்கச் செல்வனுருடைய. கடி - பரிமளம.

"கண்டவர் சிந்தைகவரும் கடி" என்று - பரிமளத்துக்கு விசேஷணமாகச் சொல்லவுமாம். அன்றிக்கே, (கண்டவர் சிந்தை கவரும் - தென்னரங்கன்) என்று - பெரியபெருமாளுக்கு விசேஷணமாகச் சொல்லவுமாம். (సర్వగన్ధః) (ஸர்வகந்த:) என்று சொல்லப்படுகிற அவரோட்டை ஸ்பர்ஶத்தாலே காணும் அவ்விடத்தே யிருந்த திருச்சோலைகளுக்கு (கடிபொழில்) என்று நிரூபிக்கும்படி பரிமளமுண்டாவது. (தொண்டர்குலாவும்) (கண்டேன் திருவரங்கமேயான்திசை) என்றும், (இனியறிந்தேன் தென்னரங்கத் தெந்தை) என்றும், (தேனார்திருவரங்கம்) என்றும், (பண்டரங்க மேயதுவும) என்றும, (திடகொடி மதிள்சூழ் திருவரங்கத்தாய்) என்றும், (அரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் கடலவிளங்கு கருமேனியம்மானறனைக் கண்ணாரக்கண்டு) என்றும், (அணியரங்கத்தேகிடந்தாய்) என்றும், (அரங்கத்தம்மா) என்றும், (அண்டர்கோனணியரங்க னென்னமுதினைக்கண்டகண்கள் மற்றொன்றினைக்காணாவே) என்றும், (நின்னடியிணையடைந்தேன் அணிபொழில் திருவரங்கத்தம்மானே) என்றும் - அவருடைய போக்யதையிலே யீடுபட்டிருக்கிற பொய்கையார் தொடக்கமான ஆழ்வார்கள் பத்துப்பேரையும், (அனறெரித்த திருவிளக்கைத் தன திருவுள்ளத்தேயிருத்தும்) இதயாதிகளில சொல்லுகிறபடியே கொண்டாடிநிற்கிற. அவர்கள் பக்கலிலே எப்போதும ப்ரதிபத்தி பண்ணிக் கொண்டு போராநிற்கிறவென்றபடி. குலாவுதல - கொண்டாட்டம்.

(இராமாநுசனை) எம்பெருமானாரை. (மேவித்தொழுங்குடி) அவருடைய ஸ்வபாவங்களிலே அதயப்ரிவிஷ்டசித்தராய விஷயாந்தரவிமுகராய ஆச்ரயித்திருக்குமவர்களுடைய திருவம்சத்தாரடங்கலும். (ஆமெங்கள் கோக்குடியே) தத்ஸம்பந்திகளே உத்தேச்யரென்றிருக்கும் எங்களை அடிமைகொள்ள வல்லவருடைய திருவம்சத்தாரானவர். தமக்கு ஒருவருக்குமேயன்று, தமமுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளுக்கும் இக்குடியொன்றுமே வகுத்த சேஷியென்றுகாணும் இவருடைய ப்ரதிபத்தி யிருக்குமபடி. அன்றிக்கே, எம்பெருமானார் திருவடிகளிலே ஆச்ரயித்தவர்கள் எந்தக் குலத்திலே அவதரித்தாலும அந்தக்குலமேஎங்களை யெழுதிக்கொள்ளவல்லஸ்வாமியரமென்று யோஜிக்கவுமாம். (త్వద్దాసదాసగణనాచరమావధౌ యస్తద్దాసతైకరసతావిరతామమాస్తు) (த்வத்தாஸதாஸகணநாசரமாவதௌ யஸ்தத்தாஸதைகரஸதாவிரதாமமாஸ்து) என்று இவ்வர்த்தத்தையே யிறேஜீயரும் ப்ரார்த்தித்தருளினது. (సారజ్ఞో యది కశ్చిదస్తి భువనే నాథస్స యూథస్య నః) (ஸாரஜ்ஞோயதிகஶ்சிதஸ்திபுவநேநாதஸ்ஸயூதஸ்யந:) என்று அபியுக்தரும் அருளிச்செய்தாரிறே. (குலந்தாங்குசாதிகள்

நாலினுங்கீழிழிந்தெத்தனே, நலந்தானிலாத சண்டாளசண்டாளர்களாகிலும், வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணர்க்காளென்றுள், கலந்தார் அடியார் தம்மடியாரெம்மடிகளே) என்றுப் போலே அருளிச்செய்தாராய்த்து. ... ... ... ... ...(ருரு)

உரை.—அ.— ஐம்பத்தாறும்பாட்டு. "கொண்டலைமேவித் தொழுங்குடியாமெங்கள் கோக்குலம்" என்று இவர் சொன்னவாறே, முன்பும் ஒரோவிஷயங்களிலநின்றுல் இப்படியன்றோ நீர் சொலலுவது, இதுவும் அப்படியனறோவெனன; எம்பெருமானுனை ஆச்ரயிததபின்பு எனவாங்மநஸ்ஸுக்கள் இனி வேறொரு விஷயமறியாதென்கிறார்.

மூ.—கோககுலமனனைமூவெழுகாலொருகூர்மழுவால்
போக்கியதேவனைப்போற்றும்புனிதனபுவநமெங்கு
மாக்கியகீர்த்தியிராமாநுசனையடைந்தபினென்
வாககுரையாதெனமநமநினையாதினிமறறொனறையே. ()

| பதம். | உரை. |
|---|---|
| கோக்குல மன்னரை | ஐசவர்யததாலே ராஜகுலததை ப்ராபிகைகயனறிககே க்ஷதரியகுலோதப்பவரானராஜாககளை, |
| மூவெழு கால் | "இருபத்தொரு காலரசுகளை கட்ட" எனகிறபடியே இருபதொருகால், |
| ஒரு | அதவிதீயமாய், |
| கூர | கூரியதாயிருக்கிற, |
| மழுவால் போககிய | மழுவாலே நிரஸித்த, |
| தேவனை | விரோதிநிரஸநப்ரயுகதமான ஔஜ்ஜ்வல்யததை யுடைய ஸர்வேச்வரனை, |
| போறறும் | அநதகுண ஜிதராய்க்கொணடு ஏத்தாநிறபாராய், |
| புனிதன் | ஸ்வ ஸம்பந்தத்தாலே அசுத்தரையும் சுத்தராக்கவல்ல பரமபாவநபூதராய், |

| பதம். | உரை. |
|---|---|
| | 'இப்பார் முழுதும் போர்த்தான புகழ்கொண்டு" எனகிறபடியே, |
| புவநமெங்கும | லோகமெங்கும், |
| ஆககிய | வ்யாபிக்கும் படியண்ணின, |
| கீர்த்தி | கீர்த்தியையுடைய, |
| இராமாநுசனை | எம்பெருமானரை, |
| அடைந்த பின் | ஆச்ரயிததபின்பு, |
| இனி | மேலுள்ள காலமெல்லாம், |
| மற்றொன்றை | வேறொரு விஷயத்தை, |
| என்வாக்கு | என்னுடையவாக்கானது, |
| உரையாது | கீர்த்தியாது; |
| என்மநம் | என்னுடைய மநஸ்ஸானது, |
| நினையாது | ஸ்மரியாது. |

| பதம். | உரை. |
| --- | --- |

போற்றுதல்-புகழுதல். புனிதன்-சுத்தன் கரணங்களுக்கு விஷயத்தில் அநந்யார்ஹாரம்படியிலிலாந்தப்ராவண்யத்தைக்கண்டப்ரீத்யதிசயத்தாலே, "என்வாக்கு, என்மநம்" என்றுதனித்தனியே ச்லாகித்தருளிச்செய்கிறார். "அடைந்ததறபின வாககுறையாது, என்மநம்நினையாது" என்றும பாடம் சொல்லுவர்கள். பரசுராமாவதாரம் அஹங்கார யுக்தஜீவனை அதிஷ்டித்து நிற்கையாலே முமுக்ஷுக்களுக்கு அநுபாஸ்யமன்றோ, "போக்கிய தேவனைப்

| பதம். | உரை. |
| --- | --- |

போற்றும் புனிதன்" என்பானென்னென்னில; அதுககுக் குறையில்லை; விரோதி நிரஸநம் பண்ணின உபகாரத்துககுத் தோற்று ஸ்துதிககிற மாத்ரமொழிய தத்உபாஸந மல்லாமையாலே, "மன்னடங்கமழுவலங்கைக் கொண்ட விராம நமபி" என்றும, "வென்றிமாமழுவேந்தி முன் மண்மிசை மன்னரைமூவெழுகால்கொன்றதேவா" என்றும, ஆழவார்கள் அருளிச்செய்ததும விரோதிநிரஸநஸ்வபாவத்துககுத தோற்றுத துதித்ததத்தனையிறே. ... (நகூ)

வ்யா.—அ.—ஐம்பத்தாறுமபாட்டு. "கொண்டலைமேவித் தொழுங்குடியாமெங்கள் கோககுடி" என்றுசொன்னவாறே, நீர் இப்போது எம்பெருமானுடைய கல்யாணகுணங்களை யநுபவித்துவித்தராய்ச்சொனனீர், நீரவிஷயாந்தரஙகளைவிரும்பினபோது முற்காலத்தில் அப்படியேயன்றோ சொல்லுவது, ஆகையாலே உமக்கு இது ஸ்வபாவமாயவிட்டபின்பு இவனையே பற்றியிருக்கிறேனென்ற விது நிலைநிற்கக்கடவதோவென்று சிலர் ஆக்ஷேபிக்க; அவர்களைக்குறித்து நான் துர்வாஸனையாலே விஷயாந்தரஙகளை விரும்புவதாக யத்நித்தேனுகிலும என்னுடைய வாககும் மநஸ்ஸும் அவற்றைவிரும்ப இசையாதேயிருநதனெனகிறார.

வ்யா.—(கோககுலமன்னரை) த்ரேதாயுகததிலே கார்த்தவீர்யார்ஜுநனென்பானொருராஜா மஹாபலபராக்ரமசாலியாய ஒருவரும் எதிரின்றிக்கே திரியாநிற்கிறகாலததிலே ஒருநாள ஜமதகநி மஹாரிஷியினுடைய ஆச்ரமத்திலேசென்று ப்ரஸங்காத ராஜ்ய கர்வத்தாலே அவனை ஹிம்ஸித்துப்போக; அந்தரிஷிபுத்ரனான ஸ்ரீபரசுராமாழ்வான் அச்செய்தியைக் கேட்டு மிகவும குபிதனாய தத்க்ஷணத்திலே தானே அநதராஜாவைக கொன்றும் பித்ர்வத ஜந்யமான கோபம் சமியாமையாலே "ராஜகுலத்தையெல்லாம் நிக்ஷத்ரமாகப் பண்ணக்கடவோம" என்று ஸங்கல்பித்து பூமியிலுள்ள ராஜாக்களையெல்லாம் ஸம்ஹரித்து சிறிதுநாள்தபஸ்ஸு பண்ணிக்கொண்டுபோந்து பின்னையும் க்ஷத்ரியகுலம் உத்பந்நமாய்க் கொழுந்துவிட்டுப் படர்ந்தவாறே அத்தைக்கண்டு திரியட்டும் முன்புபோலே நிக்ஷத்ரமாகப் பண்ணி, இப்படி

இருபத்தொருதலைமுறை க்ஷத்ரியராஜாக்களையெல்லாம் ஸம்ஹரித்து அவர்களுடைய ரக்தத்தாலே திலதர்ப்பணம் பண்ணினா ரென்று ப்ரஸித்தமிறே. அப்படி ரோஷாவிஷ்டனாய் நின்றபோது வேறொரு குலத்திலே பிறந்தார் ராஜ்யம் பண்ணிக்கொண் டிருந்தாலும் அவர்கள்வழிபோகாதே க்ஷத்ரிய குலமாத்ரத்தையே ஸம்ஹரித்தபடியை யருளிச்செய்கிறார்.

(கோககுலமன்னரை) வேறொருகுலத்தில் பிறந்து ஐச்வர்யத்தாலே ராஜகுலத்தை ப்ராபிக்கையன்றிக்கே ஸாக்ஷாத்க்ஷத்ரிய குலோத்பவரான ராஜாக்களை. (மூவெழுகால) மூவெழுதரம் "இருபத்தொருகாலரசுகளைகட்ட" என்கிறபடியே - இருபத்தொருதலைமுறையென்றபடி. (ஒருகூரமழுவால) ஆவேசாவதாரமான ஸ்ரீ பரசுராமாழ்வானுக்கு நிரூபகமா யிருக்கையாலே அத்விதீயமாய் இருபத்தொரு பர்யாயம க்ஷத்ரியரை ஸம்ஹரிக்கத் தக்கதான கூர்மையையுடையபரசுவாலே. (போக்கியதேவனை) விரோதிநிரஸநப்ரயுக்தமான ஔஜ்வல்யத்தையுடைய ஸாவேசவரனை யென்றபடி. இப்படிப்பட்ட தொழில்களெல்லாம் அந்த அவதாரத்தில் பண்ணின க்ரீடையாகையாலே ஏவம்ப்ரகாரமான க்ரீடாயுக்தனை யென்றுதல். (போற்றும்) ஆச்ரயித்திருக்கிற; மங்களாசாஸநம பண்ணிக்கொண்டிருக்கிற. போற்றுதல்-புகழ்தல். (விநாஸாய ச துஷ்க்ருதாம்) (விநாசாயசதுஷ்காதாம்) என்கிறபடியே ஆச்ரிதவிரோதி நிரஸநசீலமாகிற குணத்திலே தோற்று ஏத்தாநின்றார்கள்காணும். மஹாபாரத பாஞ்சராத்ராதிகளாலும், நமமுடையபூர்வாசார்யர்களாலும, ப்ரஹ்மருத்ராராஜ-நவ்யாஸகுதஸ்த ஜாமதக்ந்யாதிகள அநுபாஸ்யரென்று பஹுமுகமாகச் சொல்லியிருக்க, எம பெருமானார் பரசுராமாழ்வானை ஏத்துகிற விது சேருமோவென்னில்; அந்த அவதாரம் எமபெருமானுடை அஹங்காரயுக்த ஜீவாவேச மாகையாலே அவனாலே செய்யும் அம்சத்துக்கு எம் பெருமானார் ஈடுபட்டு ஸ்துதித்தாரென்று சொன்னனே னித்தனை யொழிய ததுபாஸநம பண்ணுகிறாரென்று சொல்லாமையாலே விரோதமில்லை. (மன்னடங்கமழுவலங்கைக் கொண்டவிராமநமபி)ன்றும், (வெனறிமாமழுவேந்தி முன்மண் மிசை மன்னரை மூவெழுகால கொன்றதேவா) என்றும, * மயர் வறமதிநலமருளப்பெற்றவர் அருளிச்செய்ததும் விரோதிநிரஸந ஸ்வ பாவத்துக்குத் தோற்று. (புனிதன்) பகவந்மங்களாசாஸநத்தாலே பரிசுத்தஸ்வபாவராய், தம்மை ஆச்ரயித்தவர்களையும், (ஆத்மஸாம்யாவஹத்வாத்) (ஆத்மஸாம்யாவஹத்வாத்) என்று சொல்லப்பட்ட ஸ்வஸாம்யத்தை யுடையராம்படி பண்ணவல்லபாவநதமர். புனிதன்-சுத்தன். (புவநமெங்குமாக்கியகீர்த்தி) "இப்பார்

முழுதும் போர்த்தான் புகழ்கொண்டு” என்கிறபடியே - இந்த லோகமெங்கும்வ்யாபிக்கும்படிபண்ணின கீர்த்தியையுடையரான. (இராமாநுசனை) எம்பெருமானாரை. (அடைந்தபின்) ஆச்ரயித்த பின்பு. இங்கே, “அடைந்ததற்பின்” என்றும பாடம்சொல்லுவர்கள். ஆகிலும்அர்த்தபேதமில்லை. (இனிமற்றொன்றை) மேலுள்ள காலமெல்லாம் வேறொரு விஷயத்தை. (என்வாக்குரையாது, என் மநம் நினையாது) முறகாலமெலலாம் அஸத்யபாஷணத்தையும் அஸத்கீர்த்தநத்தையும பண்ணிககொண்டு போந்தவென்னுடைய வாக்கானது எம்பெருமானாரை ஆச்ரயித்தபின்பு அவருடைய திவ்ய குணங்களையே கீர்த்தியாநிற்கு மிததனையொழிய வேறொன்றைக் கீர்த்திக்கமாட்டாது முற்காலமெலலாம் பாபசிந்தையைத் தானே பண்ணிககொண்டு போந்த என்மநஸ்ஸானது அவரை ஆச்ரயித்த பினபு அவருடைய திவ்ய குணங்களிலே யீடுபட்டு ஸர்வதா அவைதன்னை மநநம பண்ணிக்கொண்டிருககு மிததனை யொழிய வேறொன்றை ஸ்மரிககமாடடாதெனறு அருளிச்செய்தாராய்த்து. (తృణీకృతవిరిఞ్చాదినిరఙ్కుశవిభూతయః। రామానుజపదామ్భోజసమాశ్ర యణశాలినః) (த்ர்ணீக்ர்தவிரிஞ்சாதி நிரங்குஶ விபூதய:-ராமாநுஜ பதாம்போஜஸமாஶ்ரயண ஶாலிந:) என்னககடவதிறே. (ருக)

உரை.—அ.— ஐம்பத்தேழாம்பாட்டு. “இனியென்வாககுரையாது, எனமநம் நினையாது” எனபானென, விபூதி இதுவாகையாலே அஜ்ஞாநம்வரிலோவெனன; எம்பெருமானாரை இந்த லோகத்திலே லபித்தபின்பு, விவேகமின்றியே கண்டதொன்றை விரும்பககடவ பேதைத்தநம் ஒன்றுமறியேனெனகிறார்.

மூ.—மற்றொருபேறுமதியாதரங்கன்மலரடிககா
ளுற்றவரேதனக்குற்றவராககொள்ளுமுத்தமனை
நற்றவர்போற்றுமிராமாநுசனையிந்நானிலத்தே
பெற்றனன்பெற்றபினமற்றறியேனொருபேதைமையே.

| பதம். | உரை. | பதம. | உரை. |
|---|---|---|---|
| மற்றொரு பேறு | வேறொரு ப்ரயோஜநங்களை, | தனக்குற்றவராக | தமக்கு பந்துபூதராக, |
| மதியாது | ஒன்றாக நினையாதே, | கொள்ளும் | அங்கீகரிக்கும், |
| அரங்கன் | பெரிய பெருமாளுடைய, | உத்தமனை | உத்தமாதிகாரிகளாய், ஸௌஶீல்ய அவிளம்பபலப்ரதத்வ ஸ்வரூபாநுரூபதவாதிகளாலே ஸர்வதபஸ்ஸுகளிலும வைத்துக் கொண்டு, |
| மலர் | நிரதிசயபோக்யமான, | | |
| அடிக்கு | திருவடிகளுக்கு, | | |
| ஆள்உற்றவரே | அடிமையே புருஷார்த்தமென்று அதிலே ஊன்றியிருக்குமவர்களையே, | | |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நல்தவர் | விலக்ஷண தபஸ்ஸான ஶரணாகதி தர்மத்திலே நிஷ்டரானவர்கள், | பெற்றனன் | லபித்தேன்; |
| போற்றும் | தம்முடைய வைபவத்தையே சொல்லிப் புகழும் படியான, | பெற்றபின் | லபித்ததற்குப்பின்பு, |
| இராமாநுசனை | எம்பெருமானாரை, | மற்று | இத்தையொழிய, |
| இந்நானிலத்தே | இந்தலோகத்திலே, | ஒருபேறை | ப்ராப்தாப்ராப்த |
| | | மை அறியேன் | விவேகம் பண்ணாதே கண்டதொன்றிலே மேல் விழுகைக் குறுப்பான அஜ்ஞானம் கண்டிலேன். |
| | | | ஆகலால் மேலும் உண்டாகக் கூடாதென்று கருத்து.... (ருஎ) |

வ்யா.—அ.—ஐம்பத்தேழாம்பாட்டு. "இனியென்வாக்குரையாது, என்மனம் நினையாதுமற்றொன்றையே" என்றீர், * இருள் தருமாஞாலத்திலேஇந்நாளிலேஇந்த்ரியமம் நிலைநிற்குமோ, "చఞ్చలంహిమనః" (சஞ்சலம்ஹிமந:) என்று - மநஸ்ஸு ஒருவிஷயத்தில் தானே ஸர்வகாலமும் நிற்கமாட்டாதிறே; ஆகையாலே மற்றொரு காலத்திலே மநஸ்ஸுவ்யபிசரித்து அஜ்ஞானத்தை விளைக்கா லோ என்று ஆக்ஷேபித்தவர்களைக்குறித்து, நீங்கள் சொன்னதே ஸத்யம், ஆகிலும் நான் கீழே இழந்துபோன நாள்போலே யன்று இந்நாள், இப்போது தந்தாமுடைய பாரமைகாந்த்யத் தாலே ஸ்ரீரங்கநாதனுடைய பரம போக்யமான திருவடிகளுக்கு அடிமைப்படுகையே பரமபுருஷார்த்தமென்று அத்யவஸித்திருக் குமவர்களையே தமக்கு பந்துபூதராக அங்கீகரித்துக்கொண்டு, ப்ரபந்நகுலோத்தேச்யராய ஸர்வதபஸ்ஸுக்களிலும் வைத்துக் கொண்டு விலக்ஷணதபஸ்ஸான ஶரணாகதி தர்மத்திலே நிஷ்டரா னவர்கள் தம்முடையவைபவத்தைச்சொல்லிப் புகழும்படியான எம்பெருமானாரை இந்தலோகத்திலே லபித்தேன், ஆனபின்பு, ப்ராப்தாப்ராப்த விவேகமின்றிக்கே கண்டதொன்றை விரும்பக் கடவதான அஜ்ஞானமானது என்னிடத்திலே சேரக்கண்டிலே னென்கிறார்.

வ்யா.—(மற்றொருபேறுமதியாது) "నమాందుష్కృతినోమూఢాః ప్రపద్యన్తేనరాధమాః। మాయయాపహృతజ్ఞానాఃఆసురంభావమాశ్రితాః॥ కిం జగత్పతింవిష్ణుం సర్వస్రష్టారమీశ్వరమ్। నార్చయిష్యన్తి మైత్రేయ పాపణ్డోపహతాజనాః। కామైస్తైస్తైర్హృతజ్ఞానాః ప్రపద్యన్తేన్యదేవతాః" (நமாம்துஷ்க்ருதிநோமூடா: ப்ரபத்யந்தே நராதமா:- மாயயாபஹ்ருதஜ்ஞாநா: ஆஸுரம் பாவமாச்ரிதா:-

கலௌஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வஸ்ரஷ்டாரமீஶ்வரம், நார்ச்சயிஷ்யந்தி மைத்ரேய பாஷண்டோபஹதாஜநா: - காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தேந்யதேவதா:) என்று நிஷேதித்தபடியே ஸத்துக்களுடைய உபதேசாதிகளாலே தெளிந்துகொண்டு, "అనన్యశ్చిన్తయన్తో మామ్" "వ్యవసాయాత్మికా బుద్ధిరేకేహ కురునన్దన | మయి చానన్యయోగేన భక్తిరవ్యభిచారిణీ" "அநந்யாஶ் சிந்தயந்தோமாம்" "வ்யவஸாயாத்மிகாபுத்திரேகேஹ குருநந்தந - மயிசாநந்யயோகேநபக்திரவ்யபிசாரிணீ" என்கிறபடியே ததேகநிஷ்டராய், "ఏకాన్తినస్సదా బ్రహ్మ ధ్యాయినో యోగినో హి యే | తేషాం తత్పరమం స్థానం యద్వై పశ్యన్తి సూరయః" "ஏகாந்திநுவிநிஶ்சித்யதேவதாவிஷயாந்தரா:- பக்த்யுபாயம்ஸமம் க்ர்ஷ்ணப்ராப்தௌ க்ர்ஷ்ணைகஸாதந:" என்னும்படி தேவதாந்தர மந்த்ராந்தர ப்ரயோஜநாந்தரங்களை ஸ்மரியாத பாரமைகாந்த்யத்தாலே. மதிக்கை-விரும்புகை.

(அரங்கன்மலரடிக்கு) ("రఙ్గం రఙ్గమితి బ్రూయాత్ క్షుత్తృట్ప్రస్ఖలనాదిషు | ముచ్యతే సర్వపాపేభ్యో విష్ణులోకం స గచ్ఛతి" "ఇదం హి రఙ్గం త్యజతామిహాఙ్గమ్" (ரங்கம் ரங்கமிதி ப்ரூயாதயோஜநாநாம் ஶதைரபி-முச்யதே ஸர்வபாபேப்யோவிஷ்ணுலோகம்ஸகச்சதி - இதம்ஹிரங்கம்த்யஜதாமிஹாங்கம்) என்னும்படி ப்ரஸித்ததமமான ஸ்ரீரங்கநகரத்தைத் தனக்கு இருப்பிடமாகவுடையனாய அதுவே நிரூபகமாம்படி எழுந்தருளியிருக்கிற ஸ்ரீரங்கநாதனுடைய. "సర్వే వేదా యత్పదమామనన్తి" "విష్ణోః పదే పరమే మధ్వ ఉత్సః" "ஸர்வேவேதாயத்பதமாமநந்தி", "விஷ்ணோ:பதே பரமேமத்வ உத்ஸ:" என்றும், "కదా పునశ్శఙ్ఖరథాఙ్గకల్పకధ్వజారవిన్దాఙ్కుశవజ్రలాఞ్ఛనమ్ | త్రివిక్రమ త్వచ్చరణామ్బుజద్వయం మదీయమూర్ధానమలఙ్కరిష్యతి" "కదాహం భగవత్పాదామ్బుజద్వయం శిరసా సఙ్గ్రహీష్యామి" "கதாபுநஶ்ஶங்கரதாங்க கல்பகத்வஜாரவிந்தாங்குஶவஜ்ரலாஞ்சநம்-த்ரிவிக்ரமத்வச்சரணாம்புஜத்வயம் மதீயமூர்த்தாநமலங்கரிஷ்யதி" "கதாஹம்பகவத்பாதாம்புஜத்வயம்ஶிரஸாஸங்க்ரஹிஷ்யாமி" என்னும் சொல்லுகிறபடியே வேதாந்தவாக்ய ஸாவஸ்வமாய், நித்ய நிரதிஶயபோக்யமாய், ஸர்வலக்ஷணோபேதமாய், அத்யந்த ப்ராரத்தநீயமாய், புஷ்பஹாஸஸுகுமாரமாய், ஸேவித்தவர்களை அநந்யார்ஹமாம்படி பண்ணக்கடவதான திருவடிகளுக்கு.

(ஆளுற்றவரே) "దాసోహం వాసుదేవస్య" "శ్రీమద్రఙ్గనాథస్య దాసస్య దాసః" "தாஸோஹம்வாஸுதேவஸ்ய" "லக்ஷ்மீபர்த்துர் நரஹரிதநோர்தாஸதாஸஸ்யதாஸ:" என்றும், "பொன்னாழிக்கை யென்னம்மான் நீக்கமில்லாவடியார்" என்னும் சொல்லுகிறபடியே * வழுவிலாவடிமைகளிலே அந்வயித்து, "முகில்வண்ணனடியை யடைந்தருள்சூடி யுய்ந்தவன்" என்றும், "ஆகலால்வந்துன்னடி

யிணையடைந்தே னணிபொழில் திருவரங்கத்தம்மானே'' என்றும் அதுவே பரமபுருஷார்த்தமென்றத்யவஸித்திருக்கிறபராங்குஶ பரகாலாதிகளை (தனக்குற்றவராகக்கொள்ளும்) “బాన్ధవా విష్ణుభక్తాశ్చ'' “பாந்தவாவிஷ்ணுபக்தாஶ்ச'' என்றும், “మాతాపితాయువతయస్తనయావిభూతిస్సర్వం'' “மாதாபிதாயுவதயஸ்தநயாவிபூதிஸ் ஸர்வம்'' என்றும் சொல்லுகிறபடியே மாதாபிதர்ப்ரப்ருதியான ஸர்வவித பந்துக்களாக அநுஸந்தித்திருக்குமவராய். (உத்தமனை) கீழ்ச்சொன்ன அதிகாரிகளெல்லாரிலுமவைத்துக்கொண்டு உத்தமாதிகாரியாய். ஆசார்யரா யென்றபடி.

(நற்றவாபோற்றும) தவம்-தபஸ்ஸு. நல்தவம்-விலக்ஷணமானதபஸ்ஸு. “తస్మాన్న్యాసమేషాంతపసామతిరిక్తమాహుః'' “தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹுஃ'' என்றும், “సత్కర్మనిరతాశ్శుద్ధాః సాంఖ్యయోగవిదస్తథా। నార్హన్తిశరణస్థస్య కలాంకోటితమీమపి'' “ஸத்கர்மநிரதாஶ்ஶுத்தாஃ ஸாங்க்யயோகவிதஸ்ததா - நார்ஹந்திஶரணஸ்தஸ்யகலாம் கோடிதமீமபி'' என்றும் ச்ருதிஸ்ம்ருதிகளாலே ப்ரஶம்ஸிக்கப்பட்டதாய் அர்ஜுநனுக்கு மோக்ஷோபாயங்களை உபதேசிக்குமிடத்தில் முந்துறமுன்னம் கர்மயோக ஜ்ஞாநயோக பக்தியோக அவதாரரஹஸ்ய புருஷோத்தமவித்யா நாமஸங்கீர்த்தநரூப இதரோபாயங்களை உபதேசித்தவாறே அவற்றைக்கேட்டு சோகாவிஷ்டனானவனைக் குறித்து அவனுடைய சோகாபநோதநார்த்தமாக உபதேசிக்கப்பட்ட அர்த்தமாய அதஏவஸாரகமாய அவிலம்பபலப்ரதமாய ஸ்வரூபாநுரூபமாய அத்யந்த விலக்ஷணமான ஶரணாகதி தர்மத்திலே அத்யபிநிவிஷ்டரான ஆழ்வான், ஆண்டான், பிள்ளான், எம்பார், கிடாம்பியாச்சான் முதலான முதலிகளையும் லோகத்தாரையும் உத்தரிப்பிக்கைக்காக அவதரித்தவருடைய வைபவத்தையறிந்து, “నచేద్రామానుజేత్యేషా చతురా చతురక్షరీ। కామవస్థాంప్రపద్యన్తే జన్తవోహన్తమాదృశః'' “நசேத்ராமாநுஜேத்யேஷா சதுரா சதுரக்ஷரீ, காமவஸ்தாம் ப்ரபத்யந்தே ஜந்தவோஹந்தமாத்ருஶஃ'' “పుణ్యామ్భోజవికాసాయ పాపధ్వాన్తక్షయాయచ। శ్రీమానావిరభూద్భూమౌ రామానుజదివాకరః'' “புண்யாம்போஜவிகாஸாய பாபத்வாந்தக்ஷயாய ச, ஸ்ரீமாநாவிரபூத்பூமௌ ராமாநுஜதிவாகரஃ'' “తృణీకృతవిరిఞ్చ్యాది నిరఙ్కుశవిభూతయః। రామానుజపదామ్భోజ సమాశ్రయణశాలినః'' “த்ருணீக்ருதவிரிஞ்சாதி நிரங்குஶ விபூதயஃ - ராமாநுஜபதாம்போஜஸமாச்ரயணஶாலிநஃ'' என்றும், “సత్యంసత్యంపునస్సత్యంయతిరాజోజగద్గురుః। సఏవ సర్వలోకానా ముద్ధర్తానాత్రసంశయః'' “ஸத்யம் ஸத்யம் புநஸ்ஸத்யம் யதிராஜோ ஜகத்குருஃ - ஸஏவ ஸர்வலோகாநா முத்தர்த்தாநாத்ர ஸம்ஶயஃ'' என்றும், “కుదృష్టికుహనాముఖేనిపతతఃపరబ్రహ్మణః కరగ్రహవిచక్షణో

ఉదయాల తృణో యంమునిః'' "குத்ர்ஷ்டிகுஹநாமுகே நிபதித: பரப்ரஹ்மண: காக்ரஹவிசக்ஷணோ ஜயதிலக்ஷ்மணோயம்முனி:'' என்றும், "శ్రుత్యగ్రవేద్యనిజదివ్యగుణస్వరూపప్రత్యక్షతాముపగతస్త్విహరఙ్గరాజః। వశ్యస్సదా భవతి తేయతిరాజతస్మాచ్ఛక్తస్స్వకీయజనపాపవిమోచనేత్వమ్'' "ச்ருத்யக்ரவேத்ய நிஜ திவ்ய குணஸ்வரூபப்ரத்யக்ஷதாமுபகதஸ்த்விஹரங்கராஜ:-வச்யஸ்ஸதாபவதிதேயதிராஜ தஸ்மாச்சகதஸ்ஸ்வகீயஜநபாபவிமோசநேத்வம்'' என்றும், "வாழியெதிராசன்வாழியெதிராசன்'' என்றும்·சொல்லிப் புகழும்படி எழுந்தருளியிருக்கிற.

(இராமாநுசனை)எம்பெருமானாரை. (இந்நாணிலத்தே) இந்த * இருள்தருமாஞாலத்திலே. (பெற்றனன்) ஆச்ரயித்தேன. நிழலும் நீருமில்லாத மருகாந்தாரத்திலே தண்ணீர்ப்பந்தல்பெற்றவன் ஹர்ஷடனுமாப்போலே இந்தலோகஸ்வபாவத்தை யழியமாறி என்னை உஜ்ஜீவிப்பிக்கும விஷயத்தைப் பெற்றேனென்று ஹர்ஷடாகிறார்காணும். (பெற்றபின் மற்றறியேனொருபேதைமையே) எம்பெருமானாரை ஆசரயித்தபின்பு, முனபு அநாதிகாலமே தொடங்கி * ஆவிர்ப்பூதமாயிருக்கிற என்னுடைய தேஹாத்மப்ரமமும்,ஸ்வஸ்வாதந்த்ர்யப்ரமமும்,அந்யசேஷத்வப்ரமமும,அநுபாயேஉபாயத்வப்ரமமும்எங்கேசென்றறறது,கண்டிலேன். (மற்றறியேனொரு பேதைமையே) அஜ்ஞாநமானது மநஸ்ஸுக்குத்தோற்றுகிறதில்லை ;ப்ரத்யக்ஷமாகக காணப்படுகிறதில்லை. ப்ராப்தாப்ராப்தவிவேகம்பண்ணுதே கண்டதொன்றிலே மேல்விழுந்து மண்டுகைக்குறுப்பான அஜ்ஞாநம்வாஸனையோடேபோயத்தென்றபடி. "'త్యజభటదూరవర్తినస్తానపాపాన్'' "த்யஜபட தூராதபோண தாநபாபாந்'' என்றாப்போலே அஜ்ஞாநமடங்கலும் தூரதோநிரஸ்தமென்றதாய்த்து. ... ... ... ... ... (ருஎ)

உரை.—அ.—ஐம்பத்தெட்டாமபாட்டு. கீழ்-பலவிடங்களிலும், எம்பெருமானார பாஹ்யமத நிரஸநம பண்ணின ஸ்வபாவத்தை யநுஸந்தித்து வித்தரானார; குத்ர்ஷ்டி நிரஸநம்பண்ணின படியையநுஸந்தித்து வித்தராகிறா—இதில.

மூ—பேதையர்வேதப்பொருளிதெனறுன்னிப்பிரமநன்றெ
ரேதிமற்றெல்லாவுயிருமஃதென்றுயிர்கள்மெய்விட்
டாதிப்பரனொடொன்றாமென்றுசொல்லுமவ்வல்லலெல்லாம்
வாதில்வென்றானெம்மிராமாநுசன் மெய்ம்மதிக்கடலே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| பேதையர் | வேதாப்ராமாண்ய விரோதிக ளான பாஹ்யரைப்போலன்றிக்கேவேதத்தைப்ரமாணமாக | | அங்கீகரித்து வைத்து தகர்த்த தர்ஸநத்தில் குத்ர்ஷ்டிகளா யிருக்கிற அஜ்ஞர், |

* " அவிர்பூதமா யிருக்கிற " எனறும் பாடம்.

| பதம். | உரை. |
| --- | --- |
| வேதப்பொருளிதென்று | வேதத்தினுடைய அர்த்தம் இதுவென்று, |
| உன்னி | நிரூபித்து, |
| பிரமம் | ப்ரஹ்மம், |
| நன்றென்று | விலக்ஷணமென்று, |
| ஓதி | ப்ரதிபா |
| மற்றெல்லாவுயிரும் | தத்வ்யதிரிக்த ஸமஸ்தஜீவவர்க்கங்களும், |
| அஃதென்று | அந்த ப்ரஹ்மந்தானேயென்று, இப்படி தத்வநிர்ணயத்தைப் பண்ணி மோக்ஷ நிர்ணயம் பண்ணுகிறவளவிலும், |
| உயிர்கள் | ஜீவவர்க்கம், |
| மெய்விட்டு | தேஹாத்யுபாதிவிநிர்முக்தமானவாறே |
| ஆதி | காரணபூதனான, |
| பரனோடு | ஸர்வஸ்மாத் பரனோடே, |
| ஒன்றாமென்றுசொல்லும் | ஏகீபவிக்குமென்று இப்படி சொல்லுகிற, |

| பதம். | உரை. |
| --- | --- |
| அவ்வல்லலெல்லாம் | அந்த கோஷத்தையெல்லாம், |
| மெய்ம்மதிக்கடல | தத்த்வஜ்ஞாநஸாகரமாய, |
| எம் | நம்முடைய நாதரான |
| இராமாநுசன | எம்பெருமானார், |
| வாதில்வென்றான் | லோகரக்ஷகமாக வாதம்பண்ணி ஜயித்தருளினார். இப்படிச் செய்தருளுவதே! என்று கருத்து. |

ஆதிப்பரன் என்றது-ஸ்வபக்ஷத்தாலே; அல்லாதவர்கள் இப்படி சொல்லார்களிறே. ப்ரஹ்மாம்ஸமான ஜீவவர்க்கம் தேஹாத்யுபாதிவிநிர்முக்தமானவாறே ப்ரஹ்மைக்யத்தை ப்ராபிக்குமென்றிறே அவர்கள் சொல்லுவது. அல்லல் - ஆரவாரம். அதாவது-கோஷம். (௫௮)

வ்யா.—அ.—ஐம்பத்தெட்டாம்பாட்டு. கீழ் - பலவிடங்களிலும் வேதபாஹ்ய ஸமயங்கள் பூலோகத்திலே நடையாடாதபடி எம்பெருமானார் சாஸ்த்ரமுகத்தாலே அவர்களோடே ப்ரஸங்கித்து அவர்களை ஸவாஸநமாக நிரஸித்த வைபவத்தைக்கொண்டாடினார்; இதில்- * கட்டப்பொருளை மறைப்பொருளென்று சொல்லுகிற குத்ருஷ்டிகளை வேதாந்த வாக்யங்களாலே ப்ரஸங்கம்பண்ணி ஜயித்தவருடையவைபவத்தைக் கொண்டாடுகிறார்.

வ்யா —(பேதையர் என்றுதொடங்கி) (பேதையர்) வேதத்தைப்ரமாணமென்ன இசையாத சார்வாகாதிகளுடைய ஸமயஸ்தரான பாஹ்யரைப்போலன்றிக்கே, வேதத்தை ப்ரமாணமாக அங்கீகரித்துவைத்தும் அந்த அர்த்தநிரூபணம் பண்ணுகிறவேளையிலே, * அநாதிபாபவாஸநாதூஷிதாசேஷசேமுஷீகராய்க் கொண்டு வேதத்துக்குத் தந்தாமுடைய குத்ருஷ்டிகல்பநங்களான

அபார்த்தங்களைச் சொல்லி. "అథయావత్ ప్రజానాంబుద్ధిస్సా పార్థతామసీ" "அதயாவத்ப்ரஜாநாந்புத்திஸ்ஸாபார்த்ததாமஸீ" என்கிறபடியே தமஃப்ரசுரராய்ப் போருகிற ஸம்கரபாஸ்கரயாதவாதிகளை, "பேதையர்" என்று நிர்த்தேசிக்கிறார். பேதையர்-அஜ்ஞர். (வேதப்பொருளிதென்றுன்னி) வேதாந்தங்களினுடைய தாத்பர்யார்த்தம் இதுவேயென்று நிரூபித்து. உன்னுதல்-நிரூபித்தல்.

(பிரமம் நன்றென்றோதி) ப்ரஹ்மமே ஸமஸ்த ப்ரபஞ்சவிலக்ஷணமென்று அந்தவேதவாக்யங்களாலே ப்ரதிபாதித்து. "సర్వంఖల్విదంబ్రహ్మ" "సదేవసోమ్యేదమగ్రఆసీత్" "ఏకమేవాద్వితీయమ్" "యత్రత్వస్యసర్వమాత్మైవాభూత్" "ஸர்வம்கல்விதம்ப்ரஹ்ம" "ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்" "ஏகமேவாத்விதீயம்" "யத்ரத்வஸ்ய ஸர்வமாத்மைவாபவத்" என்கிற விசிஷ்டைகய ப்ரதிபாதகங்களான ச்ருதிவாக்யங்களுக்கு குத்ருஷ்டிகல்பநமாக, "అశేషవిశేషప్రత్యనీకచిన్మాత్రంబ్రహ్మైవపరమార్థః" "அசேஷவிசேஷப்ரத்ய நீகசிந்மாத்ரம் ப்ரஹ்மைவபரமார்த்தஃ" என்று அபார்த்தங்களைச்சொல்லி யென்றபடி. (மற்றெல்லாவுயிருமஃதென்று) ப்ரஹ்மாதிரிக்தமான ஜீவவர்க்கங்களடங்கலும் அந்தப்ரஹ்மத்தினுடைய ப்ரதிபிம்பபூதமாயிருக்கும், ஸ்வாஜ்ஞாநத்தாலே பர்தஃபூதமாயத் தோறறுகிற தித்தனையென்று, "ததிரோகி நாநாவிதஜ்ஞாத்ருஜ்ஞேயதத்தத்க்ருதஜ்ஞாந பேதாதி ஸர்வம் தஸ்மிந்நேவ பரிகல்பிதம் மித்யாபூதம" என்றும், "நிர்விசேஷசிந்மாத்ரம்ப்ரஹ்மைவஸத்யம்" என றும்தத்வநிர்ணயந்தைப்பணணி என்றபடி.

(உயிர்கள்மெய்விட்டாதிப் பரனோடொன்றாமென்று சொல்லும்) மோக்ஷநிர்ணயம பண்ணுகிறவளவிலும் அப்படிப்பட்ட ஜீவவர்க்கங்களடங்கலும் தேஹாத்யுபாதிவிநிர்முக்தமானவாறே, "బ్రహ్మవేదబ్రహ్మైవభవతి" "పరంజ్యోతిరుపసమ్పద్యస్వేనరూపేణాభినిష్పద్యతే" "பரஹ்மவேத பரஹ்மைவபவதி" "பரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேநரூபேணாபிநிஷ்பத்யதே" இத்யாதிசருதிகளுடையதாதபர்யத்தையறியமாட்டாதே அவற்றுக்குக்காரணபூதனான ஸர்வஸ்மாதபரனோடே ஏகீபவித் திருக்குமென்கிற அபார்த்தத்தைச் சொல்லும்.

(அவ்வலலெல்லாம்) இப்படிசொல்லுகிற குத்ருஷ்டிகளுடைய ஶுஷ்கதர்க்கங்களுடையதோஷங்களையெல்லாம். அல்லல்-ஆரவாரம், அதாவது-கோஷம். "ஆதிப்பரனோடு" என்று-குத்ருஷ்டிகளுடைய பக்ஷத்தைப் பார்த்துச்சொன்னவார்த்தை யன்று, ஒருஜகத்தையும் அதுக்கு அவனுடைய காரணத்வத்தையும் ஸர்வமும் பரார்த்தபூதமாய் அவற்றுக்கெல்லாம் பரனு யிருப்பா

னென்னு மத்தையும் அந்தபக்ஷத்தார் இசையாநிறே. ஆக, ஸ்வஸி த்தாந்தாபி ப்ராயத்தாலே அருளிச்செய்தாரித்தனே (வாதில்வென் றன்) லோக ரக்ஷணார்த்தமாக வாதம்பண்ணி ஜயித்தருளினார். "సర్వంఖల్విదంబ్రహ్మ" (ஸர்வംகல்விதംப்ரஹ்ம) என்கிற ச்ருதிக்கு-ப்ரஹ்மஶப்தம்ஸமஸ்தகல்யாணகுணாத்மகமான வஸ்துவையும், இதംஶபதமும் ஸர்வஶப்தமும், பரித்ருஶ்யமாநமாயிருக்கிற போக்யபோகோபகரணபோகஸ்தாந போகத்ர்வர்க்கத்தைவிஷயத்தையும்ப்ரதிபாதிக்கக்கடவதாயிருக்கையாலே, "ப்ரஹ்மமொன்றுமே ஸத்யம், தத்வ்யதிரிக்தமெல்லாம்மித்யாபூதம்" என்கிற ஶாப்தார்த்தைதம் ஷித்தியாதே சரீரபூதமாயிருக்கிற சேதநாசேதநவர்க்கத்துக்கும ஶரீரியான ப்ரஹ்மத்துக்கும் சரீர சரீரிபாவ நிபந்தநமாக ஐக்யம் ஷித்திக்கையாலே விசிஷ்டைகயமே அர்த்தமென்று சொல்லியும், "సదేవసోమ్యేదమగ్ర ఆసీత్, ఏకమేవాద్వితీయమ్" "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத், ஏகமேவாத்விதீயம்" என்கிற ச்ருதிக்கு, "అవ్యక్తమక్షరేలీయతే, అక్షరంతమసిలీయతే, తమఃపరేదేవఏకీభవతి" "அவ்யக்தமக்ஷரேலீயதே, அக்ஷரம்தமஸிலீயதே,தமஃபரேதேவஏகீபவதி" எனகிறபடியே கல்பாதியிலேஸூக்ஷமசிதசிச்சரீரகனாய் ஒருவனே யிருந்தானென்றும், காரணமதத்திலே ஒருகார்யத்தைக்குறித்து அநேககாரணங்களுண்டாயிருக்கிறாப்போலே இந்த ஜகத்ரூபகார்யத்துக்கும அவிதனை யொழிய வேறொரு காரணாந்தரம் வேண்டாதபடி தானேஸர்வவித காரணங்களுமாயிருக்கையாலே அபிந்நநிமித்தகோபாதாந காரணமாயிருக்குமென்றும், அக்ஷரார்த்தத்தைப்ரதிபாதித்தும், "యత్రత్వస్యసర్వమాత్మైవాభూత్" "யத்ரத்வஸ்ய ஸர்வமாத்மைவாத்" என்கிற ச்ருதிக்கு-ஜகத்துக்கு தாரகனும் வ்யாபகனும் நியந்தாவாயும அந்தர்யாமியாயும் ஸ்வாமியாயும் சேஷியாயு மிருக்கையாலே எல்லாம் அந்த பரஹ்மமேயா யிருக்குமென்று அர்த்தவர்ணநம்பண்ணியும், இன்னமும் அவர்கள் ஸ்வாஜ்ஞாநத்தாலே அபார்த்தங்களைச் சொல்லியும், உதாஹ்ருதங்களான, "తత్త్వమసి" "தத்த்வமஸி" இத்யாதி ச்ருதிகளுக்கெல்லாம் அயதாவஸ்த்தித பதார்த்தங்களைச சொல்லியும், தாம சொன்ன அர்த்தங்களுக்கெல்லாம் அநுகூலமாயிருந்துள்ள, "భోక్తాభోగ్యంప్రేరితారఞ్చమత్వా, జుష్టస్తతస్తేనామృతత్వమేతి, పృథగాత్మానంప్రేరితారఞ్చమత్వా" "ద్వాసుపర్ణాసయుజాసఖాయాసమానంవృక్షం పరిషస్వజాతే, తయోరన్యఃపిప్పలంస్వాద్వత్తిఅనశ్నన్నన్యోఅభిచాకశీతి" "నిత్యోనిత్యానాంచేతనశ్చేతనానామేకోబహూనాంయోవిదధాతికామాన్" "போக்தாபோ்க்யம்ப்ரேரிதாரம்சமத்வா ஜுஷ்டஸ்ததஸ்தே நாம்ர்தத்வமேதி, ப்ர்தகாத்மாநம்ப்ரேரிதாரம்சமத்வா" "த்வாஸுபர்ணாஸயுஜாஸகாயாஸமாநம் வ்ர்க்ஷம்பரிஷஸ்வஜாதே, தயோரந்யஃபிப்பலம்ஸாத்வத்தி அநஶ்

கக்கக்யோ அபிசாகயீதி" "நித்யோநித்யாநாம் சேதநஸ்சேதநாநாம் ஏகோபஹூநாம் யோவிததாதிகாமாந்" இத்யாதியான ஜீவப்ராஹ்மணோரத்யந்த பேதப்ரதிபாதக ஸ்ருதிகளையும், "యస్యాత్మా శరీరమ్" "యః పృథివీమన్తరోయమయతి" "యస్య పృథివీ శరీరమ్" "ఏష సర్వభూతాన్తరాత్మాపహతపాప్మా దివ్యో దేవ ఏకో నారాయణః" "யப்ருதிவ்யாம் திஷ்டந்" "யஸ்யப்ருதிவீஸரீரம்" "ஏஷஸர்வ பூதாந்தராத்மாஉபஹதபாப்மா திவ்யோதேவஏகோநாராயண:" இத்யாதி கடகச்ருதிகளையும் உபந்யஸித்து, இனி ப்ரபஞ்சமித்யாத்வ ப்ரதிபாதநத்துக்கு பௌத்தார்த்த ஸாரங்களானகேவல துஸ்தர்க்கங்களை யொழிய ஸமீசீந ப்ரமாண மொன்றுமில்லை யென்று அத்தை நிரஸித்து "బ్రహ్మవేద బ్రహ్మైవ భవతి, సయో హ వై తత్ బ్రహ్మ గమయతి" "స్వేన రూపేణాభినిష్పద్యతే" "ப்ராஹ்மவேத ப்ராஹ்மைவபவதி, "ஸஏநாந்ப்ராஹ்மகமயதி" "ஸ்வேநரூபேணாபி நிஷ்பத்யதே" இதயாதிச்ருதிகளுக்குமுக்திவேளையில் ஐகயத்தை ப்ரதிபாதிக்கை அர்த்தமென்று சொன்ஞல்; "ఇమాం లోకాన్ కామాన్నీ కామరూప్యనుసఞ్చరన్, ఏతత్సామగాయన్నాస్తే" "స ఖల్వేవం వర్తయన్ యావదాయుషం బ్రహ్మలోకమభిసమ్పద్యతే, న చ పునరావర్తతే న చ పునరావర్తతే" "నిరఞ్జనః పరమం సామ్యముపైతి" "మమ సాధర్మ్యమాగతాః" "భోగమాత్రసామ్యలిఙ్గాచ్చ" "இமாநலோகாந்காமாந்நீகாமரூப்யநுஸஞ்சரன், ஏதத்ஸாமகாயந்நாஸ்தே" "ஸகல்வேவம்வர்த்தயந் யாவதாயுஷம் ப்ராஹ்மலோக மபிஸம்பத்யதே, நசபுநராவர்த்ததே நசபுநராவர்த்ததே" "நிரஞ்ஜந:பரமம்ஸாம்யமுபைதி" "மமஸாதர்ம்யமாகதா:" "போகமாத்ரஸாம்ய லிங்காச்ச" இத்யாத்யநேகச்ருதிஸ்ம்ருதி ஸூத்ரவிரோதம்வரக்கடவதாகையாலே, "బ్రహ్మభూతః ప్రసన్నాత్మా న శోచతి న కాఙ్క్షతి" "ப்ராஹ்மபூதப்ரஸந்நாத்மா நஸோசதி நகாங்க்ஷதி" என்கிறபடியே ப்ராஹ்மஸாம்யாபந்நராய் ப்ராஹ்மப்ரகார பூதராய், "సర్వగత్వాదనన్తస్య స ఏవాహమవస్థితః" "ஸர்வகத்வாதநந்தஸ்யஸஏவாஹமுபஸ்த்தித:" என்கிறபடியே யிருக்கிறார்களென்றும், அந்தச்ருதிகளுக்கு அர்த்த நிர்ணயம்பண்ணி பஹுமுகமாக ப்ரஸங்கித்தருளி அவர்களை ஐயித்தாரென்றபடி. "கூறுமாகுருமதத்தொடோங்கிய குமாரிலன் மதமவற்றின்மேல், கொடிய தர்க்கசரம்விட்டபின்குறுகி மாயவாதியரை வென்றிட, மீறிவாதில்வரு பாற்கரன்மதவிலக்கடிக கொடி யெறிந்துபோய மிக்க யாதவர்மதத்தைமாய்த்தபெருவீரர் நாளுமிக வாழியே" என்று இந்த ஆனைத் தொழில்களிலே ஈடுபட்டு ஜீயரும் மங்களாசாஸநம் பண்ணினாரிறே.

(எம்மிராமாநுசன்) இப்படிப்பட்ட ஆனைத்தொழில்களைச் செய்தருளினாராகையாலும், அத்யந்த ப்ரதிகூலனாய் விமுகனாய் அநாதியான ஸம்ஸாரத்திலே அழுந்திக்கிடக்கிறவென்னை உத்தரிக்

கைக்காக அவதரித்தருளின எம்பெருமானாருடைய (மெய்ம் மதிக்கடல்) யதார்த்தஜ்ஞாநம் கடல்போலே அவிச்சிந்நமா யிருக்குமென்றபடி. அன்றிக்கே, தத்த்வஜ்ஞாந ஸாகரமாய் நம்முடைய நாதராயிருக்கிற எம்பெருமானார் லோகரக்ஷணார்த்தமாக குத்ர்ஷ்டிகளோடே ப்ரஸங்கம் பண்ணி அவர்களை ஜயித்தருளினாரென்று இங்ஙனே அந்வயிக்கவுமாம். இவர்தாமே "வாதியர்காளுங்கள் வாழ்வற்றதே" என்றருளிச் செய்தாரிறே. "ఆత్మైక్యం దేవతైక్యం త్రికసమధిగతాతుల్యతైక్యం త్రయాణామన్యత్త్రైశ్వర్య మిత్యాద్యనిపుణఫణితీరాద్రియన్తేన సన్తః । త్రయ్యన్తైరేకకణ్ఠైస్తదనుగుణమనువ్యాసముఖ్యోక్తిభిశ్చ శ్రీమాన్ నారాయణో నః పతిరఖిలతనుర్ముక్తిదో ముక్తిభోగ్యః" என்று இவ்வர்த்தத்தை அபியுக்தரு மருளிச் செய்தாரிறே. ... ... ... (ருஅ)

உரை.—அ.—ஐமபத்தொன்பதாம்பாட்டு. இவர் இப்படி வித்தராகிற இத்தைக் கண்டவர்கள், இவர் இதுசெய்திலராகிலும் சேதநர் ப்ரமாணங்களைக்கொண்டு நிரூபித்து, "ஈச்வரன் சேஷி" என்று அறியார்களோ வென்ன; கலியுக ப்ரயுக்தமான அஜ்ஞாநாந்தகாரத்தை எம்பெருமானார் போகடிற்றிலராகில் ஆத்மாவுக்கு சேஷி யீச்வரனேயென்று நிரூபித்து ஒருவரு மறிவாரில்லை யென்கிறார்.

மூ·—கடலளவாயதிசையெட்டினுள்ளுங்கலியிருளே
மிடைதருகாலத்திராமாநுசன்மிக்கநான்மறையின்
சுடரொளியாலவ்விருளைத்துரந்திலனேலுயிரை
யுடையவன்நாரணனென்றறிவாரில்லையுற்றுணர்ந்தே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கடலளவாய | சதுஸ்ஸாகர பர்யந்தமான | நான்மறையின் | சதுர்வேதத்தினுடைய, |
| திசையெட்டினுள்ளும் | ஸர்வ திக்குக்களினும், | சுடரொளியால் | நிரவதிக தேஜஸ்ஸாலே |
| கலிஇருளே | கலிப்ரயுக்தமான அஜ்ஞாநரூப தமஸ்ஸே, | அவ்விருளை | அந்ததமஸ்ஸை, |
| மிடைதரு காலத்து | நெருங்கி வர்த்திக்கிற காலத்திலே, | துரந்திலனேல் | ஓட்டிற்றிலராகில், |
| இராமாநுசன் | எம்பெருமானார், | உயிரையுடையவன் | ஆத்மாவுக்கு சேஷியானவன், தன்னை யொழிந்த தட்ங்கலும்தனக்குப்ரகாரமாக தான் ப்ரகாரியாயிருக்கையாலே, |
| மிக்க | ஸர்வ ப்ரமாணேச்ரேஷ்டமான, | | |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நாரணனென்று | நாராயணசப்தவாச்யனானவனென்று கொண்டு, | அறிவாரில்லை | அறியத்தக்காரில்லை. |
| உற்றுணர்ந்து | உற்று அநுஸந்தித்து, | | |

மிடைதல் - நெருங்குதல். சுடரென்றும் ஒளியென்றும் பர்யாயமாய் - மீமிசைச்சொல்லாய் மிக்கவொளியென்றபடி. துரத்தல் - ஓட்டுதல். ... (௫௧)

---

வ்யா.—அ.—ஐம்பத்தொன்பதாம்பாட்டு. எம்பெருமானார், வேதோத்தாரணம் பண்ணியருளினா ரென்றும் ததர்தோத்தாரணம் பண்ணியருளினாரென்றும் கீழெல்லாம் பலபடியாகச்சொன்னீர், அவர் இப்படி செய்திலராகிலும் ப்ரமாதாக்களானசேதநரும் நித்யராய், ப்ரமாணங்களான வேதங்களும்நித்யமாயிருக்கையாலே அவர்கள் அந்தவேதத்தை அடைவே யோதி தத்ப்ரதிபாத்யனான நாராயணனே ஆத்மாக்களுக்கு சேஷியென்று தெளிந்து உஜ்ஜீவிக்க லாகாதோவென்று சொன்னவர்களைக்குறித்து, கலியிருளானது லோகமெல்லாம் வ்யாபித்து தத்வயாதாத்ம்யஜ்ஞாநத்துக்கு ப்ரதிபந்தகமா யிருக்கையாலே எம்பெருமானார் திருவவதரித்து ஸகல சாஸ்த்ரங்களையும் அதிகரித்து அவற்றினுடைய நிரவதிக தேஜஸ்ஸாலே அந்த கலிப்ரயுக்தமான அஜ்ஞாநாந்தகாரத்தை ஓட்டிற்றிலராகில் நாராயணன் ஸர்வசேஷியென்று இந்த ஜகத்திலுள்ளா ரொருவரும் அறியக் கடவாரில்லை யென்கிறார்.

வ்யா.—(கடலளவாயதிசை யெட்டினுள்ளும்) சதுஸ்ஸாகர பர்யந்தமான அஷ்ட திக்குக்களினுடைய ஆந்தரமான ப்ரதேசமெல்லாம். சதுஸ்ஸமுத்ரமுத்ரிதமான பூமிப்பரப்பெல்லாமென்றபடி. (கலியிருளே மிடைதருகாலத்து) "[Sanskrit]" "கலேர்த்தோஷநிதே:" என்னும்படியான கலிபுருஷன் தன்னுடைய ஸ்வபாவத்தாலே லோகத்தா ரெல்லார்க்கும் ஜ்ஞாநப்ரமோஹத்தைப் பண்ணுவித்தும், ஸந்மார்க்கத்தை மூலையடியே நடப்பித்தும் போருகையாலும் தத்ப்ரயுக்தமான அஜ்ஞாநாந்தகாரமே நெருங்கி எங்குமொக்க வ்யாபித்துக்கொண்டு வர்த்திக்கும் காலத்திலே, கலி, ஸாம்ராஜ்யம் பண்ணுகிற காலத்திலே யென்றபடி. மிடைதல் - நெருங்குதல்.

(இராமாநுசன்) விண்ணின் தலைநின்றும் மண்ணின் தலத்துதித்த வெம்பெருமானார். (மிக்கநான்மறையின்) "மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள்" என்றும், "சுடர்மிகு சுருதியுள்" என்றும் சொல்லுகிறபடியே - ஸர்வ ப்ரமாணோத்க்ருஷ்டமாய் ஸர்வேச்வரனுடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளை அடைவே ப்ரகாசிப்

பிக்கக்கடவதாய் அபௌருஷேயமாய் நித்ய நிர்த்தோஷமாய், ரிக்யஜுஸ்ஸாமாதர்வணரூபேண நாலுவகைப்பட்டிருக்கிறவேதத்தினுடைய.(சுடரொளியால்) * சுடர்மிகு சுருதியாகையாலே அந்த வேதத்தினுடைய சுடர்வளர்ந்து அவைதிகஸமயங்களையெல்லாம் நிர்மூலமாக்கி, பின்னையும் மேல்மேலன ஒளிநெருங்கிவருகையாலே, "சுடரொளி" என்று ப்ரயோகிக்கிறார். அப்படிப்பட்ட நிரவதிகதேஜஸ்ஸாலே.

(அவ்விருளை) "అజ్ఞానతిమిరాన్ధస్య" "అజ్ఞానధ్వాన్తరోధాత్" "அஜ்ஞாநதிமிராந்தஸ்ய" "அஜ்ஞாநத்வாந்தரோதாத்" என்கிறபடியே கலிபுருஷனாலே ப்ரவர்த்திப்பிக்கப்பட்டபாபங்களாலேயுண்டாயிருக்கிற அஜ்ஞாநாந்தகாரத்தை. (துரந்திலனேல்) ப்ரமாணமும் அநாதியாய் நித்யமாய் ப்ரமாதாக்களும் அநாதியாய் நித்யராய் காலமும் அநாதியாய் நித்யமாய்க்கொண்டிருந்தாலும் ஒருத்தராகிலும் வேதார்த்தத்தைஸ்வயமாகவேதெளிந்து உஜ்ஜீவித்தாரென்று ஒரு சாஸ்த்ரம் சொல்லக் கேட்டதில்லை. "యస్యదేవేపరాభక్తిర్యథాదేవేతథాగురౌ। తస్యైతేకథితాహ్యర్థాః ప్రకాశన్తే మహాత్మనః" "జ్ఞానాఞ్జనశలాకయా" "చక్షురున్మీలితంయేనతస్మైశ్రీగురవేనమః। నారాయణోఽపివికృతింయాతిగురోః ప్రచ్యుతస్యదుర్బుద్ధేః। కమలంజలాదపేతం శోషయతిరవిర్నతోషయతి" "யஸ்யதேவேபராபக்திர்யதாதேவேததாகுரௌ, தஸ்யைதேகதிதாஹ்யர்த்தா: ப்ரகாஶந்தேமஹாத்மந:" "ஜ்ஞாநாஞ்ஜநஶலாகயா" "சக்ஷுருந்மீலிதம்யேநதஸ்மைஶ்ரீகுரவேநம:, நாராயணோபிவிக்ருதிம்யாதிகுரோ:ப்ரச்யுதஸ்ய துர்புத்தே: - கமலம்ஜலாதபேதம்ஶோஷயதிரவிர்நதோஷயதி" என்று ச்ருதிஸ்ம்ருத்யாதிகளிலே சொல்லப் படுகையாலும், "என்றுமனைத்துயிர்க்கு ஈரஞ்செய் நாரணனும், அன்றுந் தன்னாரியன் பாலன் பொழியில், நிறை, புனல்பிரிந்த பங்கயத்தைப்பொங்குசுடர்வெய்யோன், அனலுமிழ்ந்து தானுலர்த்தியற்று" என்று அருளாளப் பெருமாளெம்பெருமானார் அருளிச்செய்கையாலும், "ஸ்வாபிமாநத்தாலே ஈச்வராபிமாநத்தைக் குலைத்துக்கொண்ட இவனுக்கு ஆசார்யாபிமாநமொழிய கதியில்லையென்று பிள்ளை பலகாலும் அருளிச்செய்யக் கேட்டிருக்கையாயிருக்கும்" என்கையாலும், "சும்மெனாதே கைவிட்டோடித் தூறுகள் பாய்ந்தன" என்கிறபடியே ஓடிப் போம்படி பண்ணுகை யன்றிக்கே "அவரவர்விதிவழி யடையநின்றனரே" என்று தடஸ்த்தனாயிருந்து கொண்டு அந்த அஜ்ஞாநாந்தகாரத்தைப் போக்குகைக்கு, க்ருஷிபண்ணாதே யொழிந்தால். துரத்தல்-ஓட்டுதல்.

(உயிரையுடையவன் நாரணனென்று) "పరంవిశ్వస్య[illegible]" "యచ్చకిఞ్చిజ్జగత్యస్మిన్ దృశ్యతే శ్రూయతేఽపి వా, అన్తర్బహిశ్చ తత్సర్వం వ్యాప్య[illegible]"

ஸ்திதஃ” “பதிம்விச்வஸ்யாத்மேச்வரம்” “யச்சகிஞ்சிஜ்ஜகத்யஸ்மிந் த்ருச்யதேச்ருயதேபிவா, அந்தர்ப்பஹிச்ச தத்ஸர்வம்வ்யாப்ய நாராயணஸ்ஸ்திதஃ” என்றும், “సర్వేశ్వరస్సర్వభృత్ సర్వవేత్తా” “நிகரில் புகழா யுலகமூன்றுடையாய்” என்றும், “యదండమండాంతరగోచరంచ యద్దశోత్తరాణ్యావరణానియానిచ। గుణాః ప్రధానంపురుషః పరంపదంపరాత్పరంబ్రహ్మచతే విభూతయః” “யதண்டமண்டாந்தரகோசரம் சயத்தசோத்தராண்யாவரணாநியாநிச, குணாஃப்ரதாநம் புருஷஃபரம்பதம்பராத்பரம்ப்ரஹ்மசதேவிபூதயஃ” என்றும் சொல்லுகிறபடியே தன்னை யொழிந்த தடங்கலும் ப்ரகாரமாகத் தான் ப்ரகாரியா யிருக்கையாலே நாராயண சப்த வாச்யனான ஸர்வேச்வரன் இந்த த்ரிவிதசேதந வர்க்கத்தையும் தனக்குசேஷமாகவுடையனாயிருப்பானென்று.

(உற்று) அத்யவஸித்து. விஸதமாகத் தெளிந்துகொண்டு. (அறிவாறில்லை) அறியத்தக்காரில்லை. “[illegible]” “பிபேத்யல்பச்ருதாத்வேதோமாமயம்ப்ரதரிஷ்யதி” என்கையாலே அத்தாலும் ஸ்வரூப நாசமே ஸித்திக்கு மித்தனையொழிய ஸ்வரூபஸித்தியில்லை யென்றறுத்து “[illegible] । [illegible]” “நிராலோகே லோகே நிரவதிபரஸ்நேஹபரிதோ யதிக்ஷ்மாபர்த்தீபோயதிநகலு ஜாஜ்வல்யதஇஹ - அஹங்காரத்வாந்தம் விஜயதுகதம்காரமநகா; க்ருதஸ்தத்வ்யாளோளகம்குமதிமதபாதாளகுஹரம்” என்று இவ்வர்த்தத்தை அபியுக்தருமருளிச்செய்தாரிறே. ... (௫௯)

உரை.—அ.—அறுபதாம்பாட்டு. இப்படி எம்பெருமானாருடைய ஜ்ஞாநவைபவத்தை இவரருளிச்செய்யக் கேட்டவர்கள் அவர்தம்முடைய பக்திவைபவமிருக்கும்படி யென்னென்ன; பகவத்பாகவத விஷயங்களிலும் ததுபயவைபவ ப்ரதிபாதகமான திருவாய்மொழியிலும் இவர்க்குண்டான ப்ரேமமிருக்கும்படியையருளிச்செய்கிறார்.

மூ.—உணர்ந்தமெய்ஞ்ஞாநியர்யோகந்தொறுந் திருவாய்மொழி
மணந்தருமின்னிசைமன்னுமிடந்தொறுமாமலராள் [மின்
புணர்ந்தபொன்மார்வன்பொருந்தும்பதிதொறும்புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்டலிராமாநுசனெங்குலக்கொழுந்தே. (௬௦)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| குணந்தி கழ் | ஆத்மகுணௗங் வல்ய யுக்தராய் | | வுபகரித் தருளும் பரமோதாரராய், |
| கொண்டல் | அக் குணங்கள் தன்னை ஸர்வவிஷயமாக | எம்குலம் கொழுந்து | எங்கள்குலத்துக்கு, தலைவரான, |

| பதம் | உரை. |
| --- | --- |
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| உணர்ந்த | ஜ்ஞாதவ்யார்த்தங்களறிந் திருக்கும், |
| மெய்ஞ்ஞாநியர் | யதார்ஜ்ஞாந யுக்தரானவர்களுடைய, |
| யோகந்தொறும் | கூட்டரவு தோறும், |
| திருவாய்மொழியின் | திருவாய்மொழியினுடைய, |
| மணந்தரும் | பரிமளிதமாய், |
| இன்இசை | விலக்ஷணமான இசை, |
| மன்னும் | நிரந்தரமாக நடக்கும், |
| இடந்தொறும் | ஸ்தலங்கள் தோறும, |
| மாமலராள் | பெரிய பிராட்டியாராலே, |
| புணர்ந்த | நித்யவாஸம்பண்ணபபட்ட, |
| பொன் | அழகிய, |
| மார்வன் | திருமார்பை யுடையவன், |
| பொருந்தும் | உகந்தருளி வர்த்திக்கும், |
| பதிதொறும் | திருப்பதிகள் தோறும், |
| புக்கு | அவற்றை அநுபவிக்கையி லுண்டான ஆசையாலே புக்கு, |
| நிற்கும் | அவற்றிலே ஆழங்காற்பட்டு நிற்பர். இது அவருடைய பக்திவைபவமிருக்கும்படி யென்று கருத்து. |

அன்றிக்கே, எம்பெருமானாருடைய ஜ்ஞாந வைபவத்தைப் பேசின அநந்தரம் அவருடைய பக்தி வைபவத்தைத் தாமே பநுஸந்தித்து, ஏவம்பூத குணோஜ்வலராய், இந்த ப்ரேமத்தை எல்லார்க்கும் உபகரிக்கும் பரமோதாரரான எமபெருமானார் எங்குலக்கொழுந்து என்கிறு ராகவுமாம். யோகம்-கூட்டரவு. இத்தால்-கூட்டத்தைச்சொன்னபடி. கொழுந்து-தலை. அதவா, எங்குலக்கொழுந்துஎன்றது - எங்கள் குலவேராய் தாம் கொழுந்தாய்க்கொண்டு, வேரிலே வெக்கை தட்டினுல் கொழுந்து முற்பட வாடுமாப்போலேஇக்குலத்துக்கு ஒரு தீங்குவரில் முற்படத் தம்முகம் வாடியிருககு மதென்னவுமாம். இசை மணந்தருகை யாவது-செவ்விப் பாட்டையுடைத்தா யிருக்கை. ... (கூ௦)

வ்யா.—அ.—அறுபதாம்பாட்டு. கீழெல்லாம்-எம்பெருமானாருடைய வேதமார்க்கப்ரதிஷ்டாபநத்தையும்,பாஹ்யமத நிரஸந ஸாமர்த்த்யத்தையும், வேதாந்தார்த்த பரிஜ்ஞாநத்தையும், அந்தஜ்ஞாநத்தை லோகத்தார்க்கெல்லாம் உபதேசித்தபடியையு மருளிச்

ராகிறார்காணும். "சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே" என்றும், "வானோ மறிகடலோ மாருதமோ தீயகமோ, கானோவொருங்கிற்றுக் கண்டிலமால்" என்றுஞ் சொல்லுகிறபடியே பண்ணியருளினாரென்றபடி. "இப்படி யனைத்து மேய்ந்தவண்கீர்த்தியினார்" என்று பாடமானபோது- பூமியிலே எங்குமொக்க வ்யாபித்துநிற்பதாய் ஸகல புருஷார்த்த ப்ரதத்வரூப ஔதார்யத்தையுடைத்தான கீர்த்தியாலே என்னுடைய துஷ்கர்மங்களை வாஸனையோடே யோட்டினாரென்று பொருளாகக்கடவது. அதாவது-இவரோடு அந்வயமுடையானொருவனன்றோ இவனென்று துஷ்கர்மங்களெல்லாம் தன்னடையேவிட்டுப்போகை.

(வண்மையிராமாநுசற்கென்கருத்தினியே) இப்படிப்பட்ட பரமோதாரரான எம்பெருமானார்க்கு இன்னம் தந்திருவுள்ளத்திலோடுகிறதேதோ, அடியேனுக்கு இன்னம் எந்த விசேஷார்த்தத்தைக் கொடுப்பதாக நினைப்பிட்டிருக்கிறாரோ, அவரைப்பார்த்தால் இன்னம் சில எனக்குக் கொடுக்கவேணுமென்று நினைத்துக்கொண்டிருக்கிறாப்போலேயிருக்கிறதுகாணும் என்று வித்தரிக்கிறார். "உன் மநத்தாலென் நினைந்திருந்தாய்" என்னும்படியாய்த்து. ... ... ... ... (எஎ)

உரை.—அ.—எழுபத்தெட்டாம்பாட்டு. இப்படி செய்தவுபகாரங்களை அநுஸந்தித்தவநந்தரம, தம்மைத் திருத்துகைக்காக அவர்பட்ட வருத்தங்களைச்சொல்லி, இப்படி என்னைத் திருத்தி தேவரீர் உத்தேச்யவிஷயத்துக்கு உறுப்பாக்கினபின்பு வேறொரு அயதார்த்தங்கள் என்னெஞ்சுக்கு இசையாதென்கிறார்.

மூ—கருத்தில்புகுந்துள்ளில்கள்ளங்கழற்றிக்கருதரிய
வருத்தத்தினல்மிகவஞ்சித்துநீயிந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள்கேள்வனுக்காக்கியபின்னென்னெஞ்சில்
பொருத்தப்படாதிராமாநுசாமற்றோர்பொய்ப்பொருளே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கருத்தில் புகுந்து | நெடுங்கை நீட்டாகவிருக்கில் இவன் நெஞ்சைத் திருத்தப் போகாதென்று நெஞ்சு தன்னிலே வந்து புகுந்து, குடியிருக்குமவர்கள் செடியறுக்குமாப்போலே, | உள்ளில் | உள்ளுண்டான, |
| | | கள்ளம் கழற்றி | ஆத்மாபஹாரத்தைப்போக்கி, |
| | | கருதரிய | வேறுசிலர்க்கு நெஞ்சால் நினைக்கவுங் கூட அரிதாயிருந்துள்ள, |
| | | வருத்தத்தினல் | வருத்தத்தாலே, நானறியில்செய்[illegible] விதன்னையும் அறி[illegible] |

| பதம். | உரை. |
|---|---|
| | த்துக் கொள்வேனென்று எனக்கொன்றும் தெரியாதபடி, |
| மிகவஞ்சித்து | மிகவும்மறைத்து, |
| நீ | தேவரீர்தாம் அறிந்ததாகயத்நித்து, |
| திருத்தி | தரிசுகிடந்த நிலத்தை செய்காலாம்படி திருத்து வாரைப்போலே திருத்தி, |
| இந்தமண்ணகத்தே | இந்தலோகத்திலே, |
| திருமகள் கேள்வனுக்கு | தேவரீர்க்கு உத்தேஸ்ய விஷயமான ஸ்ரீயஃபதிக்கு, |
| ஆக்கியபின் | அந்தஃபுர விநியோகத்துக்கு ஆளாமபடி பண்ணின பின்பு, |

| பதம். | உரை. |
|---|---|
| என்னெஞ்சில் | இப்படி தேவரீர் திருத்தத்திருந்தின என்மநஸ்ஸிலே, |
| | தேவரீர் அறிவித்த யதார்த்த மொழிய, |
| மற்றோர் பொய்ப்பொருள் | அதுக்குப்புறம்பாயிருப்பதொரு அயதார்த்தம், |
| பொருத்தப்படாது | வலியப் பொருத்திலும் பொருந்தாது. |

இந்தமண்ணகத்தே திருத்தி என்று-* இருள்தருமாஞாலமான இந்தலோகத்திலே திருத்துகையிலுண்டான அருமையைச் சொல்லிற்றாகவுமாம். கருத்தென்று-மநோவ்ருத்திவாசியான சப்தத்தாலே மநஸ்ஸைச் சொல்லுகிறது. "சிந்தை" என்னுமாப்போலே. வருத்தம்-ஆயாஸம். பொருத்துதல்-இசைத்தல். (எஅ)

---

வ்யா.—அ.—எழுபத்தெட்டாம் பாட்டு. கீழ்ப்பாட்டிலே - லோகத்தையெல்லாம ப்ரமிப்பித்தழித்தகுத்ருஷ்டிகளை ப்ரபல ப்ரமாணங்களாலே நிரஸித்துத்தம்முடைய பாபங்களையெல்லாம் போக்கி இன்னும் அதுக்குமேலே சிறிது கொடுக்கவேணுமென்று நினைத்திருந்தாரென்று எம்பெருமானார் செய்த உபகார பரம்பரையை அடைவே அநுஸந்தித்து, இதிலே-தரிசுகிடந்ததறையைச் செய்காலாம்படி திருத்தும் விரகரைப்போலே இவ்வளவும் விஷயாந்தர ப்ரவணனாய்ப்போந்த வென்னைத் திருத்துகைக்காக * படாதனபட்டு அரியனசெய்து திருத்தி தேவரீர்க்கு வகுத்த விஷயமான ஸ்ரீயஃபதிக் காளாம்படி பண்ணியருளின பின்பு வேறே சில அயதார்த்தங்கள் என்னுடைய மநஸ்ஸிலே வலியப்பொருத்திலும் பொருந்தாதேயிருப்பன வென்கிறார்.

வ்யா.—(கருத்தில்புகுந்துள்ளில் கள்ளங்கழற்றி) తేషామేవాను కంపార్థ మహమజ్ఞానజం తమః। నాశయామ్యాత్మభావస్థో జ్ఞానదీపేన భాస్వతా" தேஷாமேவாநுகம்பார்த்த மஹமஜ்ஞாநஜந்தம:, நாஶயாம்யா

த்மபாவஸ்த்தோ ஜ்ஞாநதீபேநபாஸ்வதா" என்றும், (என்னைத் தீமனங்கெடுத்தாய்) என்றும் சொல்லுகிறபடியே நெடுங்கைநீட்டாகவிருக்கில் இவன்நெஞ்சைத்திருத்தப் பணிப்படுமென்று கொண்டு நெஞ்சுதன்னிலே தானேவந்து புகுந்து, குடியிருக்கிறவர்கள் அங்கிருக்கிற செடிகளை யறுக்குமாப்போலே, உள்ளிலுண்டான அஜ்ஞாநாந்யதாஜ்ஞாந விபரீத ஜ்ஞாநரூபமான தோஷங்களையெல்லாம் வாஸனையோடே துடைத்து. "కిం తేన న కృతం పాపం చోరేణాత్మాపహారిణా" "கிம்தேநநக்ர்தம்பாபம் சோரேணாத்மாபஹாரிணா" என்னும்படியான ஆத்மாபஹாராதி தோஷங்களைக் கட்டடங்கப் போக்கி யென்றபடி. கருதது என்று - மநோவ்ர்த்தி வாசியான சப்ததாலே ப்ரகரணாநுகுண்யத்துக்காக மநஸ்ஸைச் சொல்லுகிறது. "சிந்தை" என்னுமாப்போலே.

(கருதரிய வருத்தத்தினுல) வேறுசிலர்க்கு நெஞ்சில் நினைக்கவுங்கூட அரிதாயிருநதுள்ள வருத்தத்தாலே. வருத்தம் - ப்ரயாஸம். (மிகவஞ்சித்து) நான் அறியில் செய்தக்ஷிதன்னையும் அழித்துக்கொள்வனென்று இராமடமூட்டுவாரைப்போலே எனக்கு ஒன்றுந் தெரியாதபடி மிகவும மறைத்து. (நீ இந்த மண்ணகத்தே திருத்தி) தேவரீா தாம் அறிந்ததாக யத்நிதது, இவ்வளவும் நித்ய ஸம்ஸாரியாய விஷயாநதரங்களிலே மண்டி விமுகனாய்க்கொண்டு * இருளதருமா ஞாலததிலே ஸ்வைரமாக அபதப்ரவர்த்தனாய்ப் போநதேனுகையாலே கருநதறையான என்னை * செயல்நன்றாகத் திருத்தி. "తేషాం సతతయుక్తానాం భజతాం ప్రీతిపూర్వకమ్। దదామి బుద్ధియోగం తం యేన మాముపయాన్తి తే" "தேஷாம்ஸததயுக்தாநாம்பஜதாம்ப்ரீதிபூர்வகம்-ததாமிபுத்தியோகம்தம் யேநமா முபயாநதிதே" என்கிறபடியே ஒரு அதிகாரததைப்பார்த்துத திருத்துகையன்றிக்கே நிர்ஹேதுகமாகததிருததினையென்றபடி. திருததுகையாவது - இவ்வாத்மவஸ்து சேஷியானஸ்ரியபதிக்கு சேஷமென்னும் இவ்வர்த்தத்தை நெஞ்சிலே படும்படி உபதேசிக்கை.

(திருமகள கேள்வனுக்காகியபின்) * நலமந்தமில்லதோர் நாடுபுகுநதபின்பு வரககடவதான இந்த சேஷத்வ ஜ்ஞாநத்தை இந்த மண்ணகத்தே எனக்கு உபகரித்து தத்பலமாகக்கொண்டு, "பூமகளார்தனிக்கேள்வன்" என்கிறபடியே ஸ்ரீதேவியாகிற பெரியபிராட்டியாக்கு வல்லபனான ஸர்வேச்வரனுக்கு அந்தபுர விநியோகத்துக்கு ஆளாமபடி பண்ணினபின்பு. எனக்கு ஜ்ஞாநத்தைப்பிறப்பித்தவனுக்கு என்னுயிரை அறவிலைசெய்துஎழுதிக்கொடுத்தபின்பு. "மருவித்தொழும் மநமேதந்தாய்" என்கிறபடியே-ஜ்ஞாநத்தை எனக்கு உபகரித்தருளி என்னை பகவ ததநயார்ஹ சேஷபூதனும்படிகடாக்ஷித்தருளினபின்பென்றபடி. (என்னெஞ்சில்

பொருத்தப்பட்டாது) இப்படிதேவரீர் * படாதனபட்டுத் திருத்தத் திருந்தின வென் மநஸ்ஸிலே இசையாது.

(எம்மிராமாநுசா) "అస్మద్గురోః" "அஸ்மத்குரோ:" என்கிற படியே எனக்கு அஜ்ஞாதஜ்ஞாபநம் பண்ணி உபகரித்தருளின எம்பெருமானாரே!. (மற்றோர்பொய்ப்பொருள்)தேவரீர் அறிவித்த யதார்த்தஜ்ஞாநமொழிய அதுக்குப் புறம்பாயிருப்பதொரு அயதார்த்தமான அர்த்தத்தையும். (பொருத்தப்படாது) வலியப் பொருத்திலும் பொருந்தாது. பொருநதுதல்-இசைத்தல. "இந்த மண்ணகத்தே திருத்தி" என்று-* இருள்தருமா ஞாலமான இந்த லோகத்திலே திருத்துகையிலுண்டான அருமையைச் சொலலிற்றாகவுமாம். தீபம் வ்யாபித்தவிடத்தில் திமிரவ்யாப்திககு வழியில்லாதாப்போலே ஜ்ஞாநம் புக்க விடததில் அஜ்ஞாநம் புகுர வழியில்லையென்றதாய்த்து. "జ్ఞానాగ్నిస్సర్వకర్మాణి భస్మసాత్కురుతేఽర్జున" "ஜ்ஞாநாக்நிஸ்ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதேர்ஜுந" என்னக் கடவதிறே. ... ... ... ... ... (எஅ)

உரை.—அ.—எழுபத்தொன்பதாம்பாட்டு. எம்பெருமானார் யதார்த்தஜ்ஞாநத்தைக் கொடுக்கையாலே அயதார்த்தங்கள் தமக்குப் பொருநதாதபடியாயத் தென்று ஸ்வநிஷ்டையை யருளிச்செய்தார்-கீழ்; உஜ்ஜீவநருசியுமுண்டாயிருக்க அருமந்தஜ்ஞாநத்தை யிழந்து இவ்விஷயத்துககு அசலாய்ப்போருகிற லௌகிகர் படியையநுஸந்தித்து இன்னாதாகிறார் - இதில்.

மூ.—பொய்யைச்சுரக்கும்பொருளைத்துரந்திந்தப்பூதலத்தே
மெய்யைப்புரக்குமிராமாநுசனிற்கவேறுநமமை
உய்யக்கொளளவல்லதெயவமிங்கியாதெனறுலர்ந்தவமே
ஐயப்படாநிற்பர்வையத்துள்ளோர்நல்லறிவிழந்தே. ( )

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பொய்யை | ஆத்மாவினுடைய தேஹபரிமாணத்வ க்ஷணிகஜ்ஞாநரூபத்வ ஜடத்வாதிகளென்ன, ப்ரஹ்மத்தினுடைய மாயாசபளிதத்வ உபாதி மிச்ரத்வ விகாரித்வாதிகளென்ன சுத்தாஸத்யமாயிருப்பதொன்றை, | சுரக்கும் | மேன்மேலும் உபபாதியா நிற்கும், |
| | | பொருளை | பாஹ்ய குத்ருஷ்டி மதார்த்தத்தை, |
| | | துரந்து | ஓட்டி, |
| | | இந்தப்பூதலத்தே | இந்தபூமியிலே, |
| | | மெய்யை | யதார்த்தத்தை, |
| | | புரக்கும் | பரிபாலித்தருளும், |
| | | இராமாநுசன் | எம்பெருமானார், |

| பதம். | உரை. |
| --- | --- |
| நிற்க | ஆரொருவர் வருவாரென்று வழிபார்த்து நிற்கச்செய்தே, ஸஜாதிய புத்தியாலே இவரை உபேக்ஷித்து, |
| வேறு | வேறே, |
| நம்மை | நம்மை, |
| உய்யக்கொள்ளவல்ல | உஜ்ஜீவிப்பிக்க வல்ல, |
| தெய்வம் | தேவதை, |
| இங்கியாதென்று | இங்கே ஏதென்று தேடி, |
| உலர்ந்து | மநக்லேஶத்தாலே உடம்புலர்ந்து, |
| நல்லறிவு | இவ்விஷயமே நமக்குத் தேஶ்யமென்றுபற்றி உஜ்ஜீவித்துப் போகைக்குறுப்பானயதார்த்தஜ்ஞாநத்தை, |
| இழந்து | லபிக்கப்பெறாதே, உங்களுக்கு உஜ்ஜீவநகரம இவ்விஷயமேயென்றாலும், |
| வையத்துள்ளோர் | பூமியிலுள்ளார், |

| பதம். | உரை. |
| --- | --- |
| அவமே | வ்யர்த்தமே, |
| ஐயப்படா நிற்பர் | ஸம்ஶயப்படா நின்றார்கள்; ஐயோ! இவர்கள் நிலையிருந்தபடி யென்னென்று கருத்து. |

பொய்யைச்சுரக்கும் இத்யாதிக்கு - உத்பத்திவிநாசாதியோகத்தாலே அஸத்யஶப்த வாச்யமான தேஹத்தை ஜந்மபரம்பரையாலே மேன்மேலுண்டாக்கும தேஹாத்மாபிமாநஸ்வஸ்வாதந்த்ர்யாதயர்த்தங்களை ஸ்வோபதேசத்தாலே ஓட்டிவிட்டு இந்த பூதலத்திலே * ஸதைகரூபதயா ஸத்யஶப்தவாசயமான ஆத்மாவைரக்ஷித்தருளும்எம்பெருமானை நிற்களென்றுபொருளாகவுமாம். துரத்தல்-ஓடடுதல். புரத்தல்-காத்தல். ஐயம்-ஸம்ஶயம். "தெய்வமங்கியாது" என்ற விடத்தில் இகரமும குற்றியலிகரமாகையாலே, "உமக்கியான்" என்கிறவிடத்திற்சொன்ன ந்யாயத்தாலே கழிதது பூர்வாபரபாதங்களுக்கு ஒக்கப் பதினறெழுத்தாகஎண்ணக்கடவது ... ... (எகூ)

---

வ்யா.—அ.—எழுபததொனபதாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே எம்பெருமானை என்னுடைய மநோதோஷத்தைப் போக்கி அதுதனைத் திருத்தி ஸம்யஜ்ஞாநத்தைப் பிறப்பித்து ஸ்ரியஃபதிக்கு சேஷமாக்கினபின்பு என்னுடைய மநஸ்ஸு வேறொருவரைத் தேடிப்போமோவென்று தம்முடைய அத்யவஸாய தார்ட்யத்தையருளிச்செய்து, இதிலே - அந்தப்படியே ஸம்ஸாரி சேதநருக்கும் அத்யவஸிக்க ப்ராப்தமாயிருக்க அதுசெய்யாதே, ஆத்மாவினுடைய தேஹபரிமாணத்வம், க்ஷணிகத்வம் தொடக்கமான வேதாந்த விருத்தார்த்தங்களை வாய்வந்தபடி ப்ரலாபிக்கிற பாஹ்யகுத்ர்

ஷ்டிகளுடைய மதப்ரமேயத்தை வாஸனையோடே ஓட்டிவிட்டு, முன்பு அந்த மறைக்குறும்பாலே வ்யாப்தமான பூலோகத்திலே ஸத்யமான அர்த்தத்தை, எம்பெருமானுரிருக்கச்செய்தேயும் ஸஜாதீயபுத்தியாலே அவனைவிட்டகன்று வேறொரு தேவதை நம்மை ரக்ஷிக்கக்கடவதுண்டோவென்னும் உள்வெதுப்பாலே சுஷ்கித்துப்போய் வ்யர்த்தமே ஸம்ஸயாத்மாக்களாய் நசித்துப போகிறவர்கள் படியைக் கண்டு இன்னுதாகிறார்.

வ்யா—(பொய்யைச்சுரக்கும்பொருளைத்துரந்து) பொய்யென்று-அஸத்யம். (சுரக்கும்பொருளை) இத்தையே மேன்மேலும் உபபாதியாநிற்கிற பாஹ்யகுத்ருஷ்டிகளுடைய மதப்ரக்ரியையை. "అసన్నేవసభవతి, అసద్బ్రహ్మేతివేదచేత్" (அஸந்நேவஸபவதி, அஸத்ப்ரஹ்மேதிவேதசேத்) என்கிறபடியே அஜ்ஞாநாந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாந விஷயங்களை யென்றபடி. அவையாவன-ஆத்மாவினுடைய தேஹபரிமாணத்வ க்ஷணிகத்வ விஜ்ஞாநரூபத்வ ஜடத்வாதிகளும், ப்ரஹ்மத்தினுடையமாயாஸபளிதத்வ உபாதிமிச்ரத்வ விகாரத்வாதிகளும், ஜகத்தினுடைய மித்யாத்வ அவித்யாகார்யத்வாதிகளும், இப்படி அஸத்யங்களாய வேதவிருத்தங்களான அர்த்தங்களையென்றபடி.

அன்றிக்கே, (பொய்யைச்சுரக்கும்பொருளை) (నాసతోవిద్యతేభావః) (நாஸதோவித்யதேபாவ:) என்கிறபடியே உத்பத்திவிநாஸாதியோகத்தாலே அஸச்சப்த வாச்யமான தேஹத்தை ஜந்மபரம்பரையாலே மேன்மேலுண்டாக்கும் தேஹாத்மாபிமாநம் ஸ்வஸ்வாதந்த்ரயம் தொடக்கமான அர்த்தங்களையென்றுமாம். (பொருளைத்துரந்து) இப்படிப்பட்ட அஸத்யமான அர்த்தங்களைத் திருநாராயணபுரத்திலும், ஸரஸ்வதிபண்டாரத்திலும், "కోవాచక్షురితఃక్షుయేదపిపురస్సాటోపతర్కచ్ఛటాశస్త్రాశస్త్రివిహారసమ్భ్రతరాజుస్వాదేషువాదేషునః" "கோவாசக்ஷுரிதஜசயேதபிபுரஸ்ஸாடோபதாக்கச்சடா ஸஸ்த்ராஸஸ்த்ரிவிஹாரஸம்ப்ரதராஜுஸ்வாதேஷு வாதேஷுந:" என்கிறபடியேகாகட்டாக்காவேரிபோலேதடையறப்பெருகிவருகிற ஸத்தர்க்கங்களாலேபாஹ்யகுத்ருஷ்டிகளுக்குககண்விழிக்கவொண்ணுதபடி அவர்களோடே பஹுமுகமாக ப்ரஸங்கித்து, ஸரீரமே ஆத்மாவாகில் ம்ருதஸரீரத்திலும் சைதந்யமுண்டாக வேண்டிவரும் என்றும், ஆத்மா க்ஷணிகமாகில் பூர்வக்ஷணாநுபூதங்களான ஸுகதுகங்களுககு உத்தரக்ஷணத்தில ப்ரதிஸந்தாநம வாராமல் போகவேண்டி வரும் என்றும, ஜ்ஞாநமே ஆத்மாவாகில நானறிவென்றிருக்க வேணுமித்தனையொழிய நானறிந்தேனென்று ஜ்ஞாதர்த்வேந ப்ரதிஸந்தாநங்கூடாதென்றும்,

ஆத்மா ஜடமென்றால் "ఏతద్యోవేత్తితంప్రాహుః క్షేత్రజ్ఞ ఇతితద్విదః" "ஏதத்யோவேத்திதம்ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித:" என்கிற

படியே - பாதேமேவேதநா, ஶிரஸிமேஸூகம் என்றும், "విజ్ఞానఘనః" "விஜ்ஞாநகந:" என்று ஜ்ஞாநஸ்வரூபமாகச் சொல்லக் கூடாது என்றும், ப்ரஹ்மம் மாயாசபளிதமானாலும், "నిష్కళం నిష్క్రియం శాన్తం నిరవద్యం నిరఞ్జనమ్" "நிஷ்களம் நிஷ்க்ரியம் ஶாந்தம் நிரவத்யம் நிரஞ்ஜநம்" என்கிறபடியே நிர்மலாநந்தைக ஸ்வரூபமாகையாலே நான் ஜீவனென்றும் ஈச்வரனென்றும் ப்ரமிக்கக் கூடாதென்றும், அப்படி ப்ரமித்தால, "ఏకో దేవస్సర్వభూతేషు గూఢః" "ஏகோ தேவஸ்ஸர்வபூதேஷு கூட:" என்கிறபடியே - அத்விதீயனானவனுக்கு ப்ரம நிவர்த்தகரில்லாமையாலே ஸர்வதா ப்ரமித்தே போகவேண்டி வரும் என்றும, ப்ரஹ்மம் விகாரியென்றால் நிர்விகாரியென்கிற ச்ருதியோடே விரோதம் ப்ரஸங்கிக்குமென்றும், அவர்களைக் குறித்து பஹுமுகமாக ப்ரதிகூலதர்க்கங்களைச் சொல்லி அவர்களை சிக்ஷித்து பராஜிதராக்கி இந்த மஹா ப்ருதிவியிலே யிருக்கக் கூடாமல் கடலிலே புகும்படி ஓட்டிவிட்டு. துரத்தல் - ஓட்டுதல். (இந்தப்பூதலத்தே மெய்ம்மையைப்புரக்கும்) யதாஜ்ஞாநத்தை இந்த பூதலத்திலே பரிபாலித்தருளும். சுஷ்கதர்க்கவாதிகளை ஓட்டிவிட்டு. "ప్రమాణం వేదాశ్చ" "ப்ரமாணம் வேதாஶ்ச" என்றும், "ఆదౌ వేదాః ప్రమాణమ్" (ஆதௌ வேதா: ப்ரமாணம்) என்றும் சொல்லுகிறபடியே ஸகல ப்ரமாணமான வேதத்திலே வைத்துக்கொண்டு, "సత్యం జ్ఞానమనన్తం బ్రహ్మ" (ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம) என்கையாலே - ஸர்வேச்வரன ஸ்வரூபவிகாரத்வஜடத்வத்ரிவிதபரிச்சேதரஹிதனென்றும், "కప్యాసం పుణ్డరీకమేవమక్షిణీ" "கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ" "విష్ణోః పదే పరమే మధ్వ ఉత్సః" "விஷ்ணோ: பதே பரமே மத்வ உத்ஸ:" என்கையாலே - சுபாச்ரய திவ்யரூபனென்றும், "పరాస్య శక్తిర్వివిధైవ శ్రూయతే, స్వాభావికీ జ్ఞానబలక్రియా చ" "பராஸ்ய ஶக்திர்விவிதைவ ஶ்ரூயதே, ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச" என்கையாலே - ஸமஸ்தகல்யாண குணாத்மகனென்றும், "పాదోస్య విశ్వా భూతాని, త్రిపాదస్యామృతం దివి" "பாதோஸ்ய விஶ்வா பூதாநி, த்ரிபாதஸ்யாம்ருதம் திவி" என்கையாலே - உபயவிபூதிநாதனென்றும், "హ్రీశ్చ తే లక్ష్మీశ్చ పత్న్యౌ" (ஹ்ரீஶ்ச தே லக்ஷ்மீஶ்ச பத்ந்யௌ) என்கையாலே - திவ்யமஹிஷீவல்லபனென்றும், "యత్ర పూర్వే సాధ్యాస్సన్తి దేవాః" "యత్రర్షయః ప్రథమజా యే పురాణాః" "ఏతత్సామ గాయన్నాస్తే" (யத்ர பூர்வே ஸாத்யாஸ்ஸந்தி தேவா:) (யத்ர ருஷய: ப்ரதமஜா யே புராணா:) (ஏதத்ஸாம காயந்நாஸ்தே) என்கையாலே - ஸூரிப்ருந்த பரிசர்யமாணனென்றும்.

"తదైక్షత బహుస్యాం ప్రజాయేయేతి" "తత్సృష్ట్వా, తదేవానుప్రావిశత్, తదనుప్రవిశ్య, సచ్చ త్యచ్చాభవత్" (ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி) (தத்ஸ்ருஷ்ட்வா, ததேவாநுப்ராவிஶத், ததநுப்ரவிஶ்ய, ஸச்ச த்யச்

சாபவத்) என்கையாலே - ஸூக்ஷ்மசிதசித்விஶிஷ்டனாய்க்கொண்டு ஜகத்காரணபூதனென்றும், "ఏష సర్వభూతాన్తరాత్మా ఉపహతపాప్మా దివ్యోదేవ ఏకో నారాయణః" (ஏஷஸர்வபூதாந்தராத்மாபஹதபாப்மா திவ்யோதேவஏகோநாராயண:) என்கையாலே-ஸர்வாந்தர்யாமியென்றும், "అమ్భస్యపారే భువనస్య మధ్యే నాకస్య పృష్ఠే మహతో మహీయాన్" (அம்பஸ்யபாரேபுவநஸ்யமத்யே நாகஸ்யப்ருஷ்டேமஹதோமஹீயாந்) என்கையாலே - வ்யூஹரூபேணாவஸ்திதனென்றும், "బ్రహ్మణ్యో దేవకీపుత్రో బ్రహ్మణ్యో మధుసూదనోమ్" "అజాయమానో బహుధా విజాయతే" (ப்ராஹ்மண்யோதேவகீபுத்ரோப்ராஹ்மண்யோமதுஸூதநோம்) (அஜாயமாநோபஹுதாவிஜாயதே) என்கையாலே - அநந்தாவதாரகந்தனென்றும்,

"సయశ్చాయం పురుషే, యశ్చాసావాదిత్యే" "య ఏషోన్తరాదిత్యే హిరణ్మయః పురుషః" (ஸயஶ்சாயம்புருஷே, யஶ்சாஸாவாதித்யே) (யஏஷோந்தராதித்யேஹிரண்மய:புருஷ:) என்கையாலே - ஸமஸ்த திவ்யதேஶநிலயனென்றும், "నారాయణాయ విద్మహే వాసుదేవాయ ధీమహి, తన్నో విష్ణుః ప్రచోదయాత్" (நாராயணாயவித்மஹே வாஸுதேவாயதீமஹி, தந்நோவிஷ்ணு:ப்ரசோதயாத்) என்கையாலே - விஷ்ணு நாராயண வாஸுதேவாதிஶப்தவாச்யனென்றும், 'పరాత్పరం పురుషముపైతి దివ్యమ్' (பராத்பரம்புருஷமுபைதிதிவ்யம்) என்கையாலே-ஸர்வஸ்மாத்பரனென்றும், "ఏషోణురాత్మా చేతసా వేదితవ్యః" "ఆరాగ్రమాత్రో హ్యవరోపి దృష్టః" (ஏஷோணுராத்மாசேதஸாவேதிதவ்ய:) (ஆராக்ரமாத்ரோஹ்யவரோபித்ருஷ்ட:) என்கையாலே-ப்ரத்யகாத்மா அணுவாயிருப்பானென்றும், "నిత్యానాం-చేతనానామ్" ("நித்யாநாம்-சேதநாநாம்) என்கையாலே - நித்யனாயிருப்பானென்றும், "భోక్తా భోగ్యం ప్రేరితారఞ్చ మత్వా" (போக்தாபோக்யம்ப்ரேரிதாரஞ்சமத்வா) என்கையாலே-போக்தாவென்றும், "పృథగాత్మానం ప్రేరితారఞ్చ మత్వా" (ப்ருதகாத்மாநம்ப்ரேரிதாரஞ்சமத்வா) என்கையாலே - ஸர்வேஶ்வரனில் வேறுபட்டிருப்பானென்றும்,

"తయోరన్యః పిప్పలం స్వాద్వత్తి" (தயோரந்ய:பிப்பலம்ஸ்வாத்வத்தி) என்கையாலே - கர்மபலபோக்தாவென்றும், "బ్రహ్మణేత్వా మహస ఓమిత్యాత్మానం యుఞ్జీత" (ப்ராஹ்மணேத்வாமஹஸ ஓமித்யாத்மாநம்யுஞ்ஜீத) என்கையாலே-பகவதநந்யார்ஹஶேஷபூதனென்றும், "తమేవం విద్వానమృత ఇహ భవతి" "தமேவம்வித்வாநம்ருதஇஹபவதி) என்கையாலே - தாத்ருஶஜ்ஞாநத்தைக்கொண்டு பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷத்தைப்பெறக்கடவனென்றும், "సమానే వృక్షే పరిషస్వజాతే" (ஸமாநம்வ்ருக்ஷம்பரிஷஸ்வஜாதே) என்கையாலே - அசித்து ஈஶ்வரனுக்குக் க்ரீடாபரிகரமாயிருக்குமென்றும், "ఆకాశాద్వాయుః, వాయో

ர்ஸ்பு, பர்தோபஃ, அத்ப்யப்ருதிவீ" (ஆகாஶாத்வாயு:, வாயோரக்நி:, அக்நோராப:, அத்ப்யப்ருதிவீ) என்கையாலே- சதுர்விம்ஶதிதத்வாத்மகமாய் பரிணமிக்குமென்றும், "ம்ருத்திகேத்யேவஸத்யம்" (ம்ருத்திகேத்யேவஸத்யம்) என்கையாலே - துச்சவ்யாவர்த்தமாயிருக்குமென்றும், இப்படிதத்வத்ரயத்தினுடையவும் ஸ்வரூபஸ்வபாவாதிகளை இந்த அஜ்ஞாநவர்த்தகமான பூலோகத்திலே யதாவாக உபதேசித்து உபகரித்தவென்றபடி. புரத்தல்-காத்தல். அன்றிக்கே,இரண்டாம் யோஜனைக்கு அநுகுணமாக, "பொருளைத் துரந்திந்தப்பூதலத்தே மெய்யைப் புரக்கும்" என்றதுக்கு - ஸ்வஸ்வாதந்த்ர்யாதிகளை ஸ்வோபதேசத்தாலே ஓட்டிவிட்டு இந்த பூலோகத்திலே ஸைதக்ரூபனாய்ஸத்யஶப்தவாச்யனான ஆத்மாவை ரக்ஷித்தருளினாரென்று பொருளாகக்கடவது.

(இராமாநுசன்நிற்க) எம்பெருமானார் வேதமார்க்கப்ரதிஷ்டாபநாசார்யோபய வேதாந்தாசார்யராய்த் திருத்துறைக்கு ஆராகிலும் ஆளுண்டோவென்று * எதிர் சூழல் புக்கு வழிபார்த்துக்கொண்டு நிற்கச்செயதே. (வேறு நம்மை யுய்யக்கொள்ள வல்லதெய்வம்) அநாதி பாபவாஸநாதூஷிதாசேஷசேமுஷீகராய் அவர்பக்கல் ஸஜாதீய புத்தியைப்பண்ணி அவருபதேஶத்துக்கு இசையாதே எங்களைஉஜ்ஜீவிப்பிக்கைக்கு ஸமர்த்தமான வேறொரு தைவம். (இங்கியாதெனறு லர்ந்து) இந்த பூமியிலே ஏதோவென்று தேடிததேடித் தடுமாறி, அப்படிப்பட்ட தைவததை லபியாதே மிகவும் உடம்புலர்ந்து க்லேசித்து.(அவமேஐயப்படாநிற்பர்) இவ்விஷயம் எனக்கு உத்தேச்யமென்று பற்றி உஜ்ஜீவித்துப் போகைக்குறுப்பானயதாஜ்ஞாநததைலபிக்கப்பெறாத உங்களுக்கு உஜ்ஜீவநகாரமில்லையென்று சொன்னாலும் வ்யர்த்தமே இனி நமக்கு ரக்ஷகராவா ரொருவருமில்லை யென்று ஸம்ஶயப்படாநின்றார்கள். ஐயம்-ஸம்ஶயம். (வையததுள்ளோர்நல்லறிவிழந்தே) பூலோகத்திலே யிருக்கிற சேதநர்கள நலல பரிசுத்தஜ்ஞாநத்தை யிழந்து போனார்களே, அத்தாலே நம்முடைய உபதேசமும் வெறிதே தலைக் கட்டிற்று. "ஸம்ஶயாத்மா விநஶ்யதி" (ஸம்ஶயாத்மா விநஶ்யதி) என்று இவர்கள் நஶித்துப்போனார்களே ஐயோ! என்று ஸர்வபூத ஸுஹார்த்தாகையாலே அவர்களுக்காக அமுதனார் அவஸாதப் படுகிறார்காணும். ... ... ... ... (எக)

உரை.—அ.—எண்பதாம்பாட்டு. இவ்விஷயத்தை ஆச்ரயிக்க இசையாத ஸம்ஸாரிகள் நிலையைக்கண்டு இழவுபட்டார்- கீழ்; உம்முடையநிஷ்டைதானிருக்கும்படியென்னென்ன; இவ்விஷயமே உத்தேஶ்யமென்றிருப்பாரை உத்தேஶ்யமென் றிருக்குமவர்களு

க்கே * ஒழிவில்காலத்திப்படியே நான் அடிமை செய்வேனென்கிறார்-இதில்.

மூ.—நல்லார்பரவுமிராமாநுசன்திருநாமமநம்ப
வல்லார்திறத்தைமறவாதவர்களயவரவர்க்கே
எல்லாவிடத்திலுமென்றுமெப்போதிலுமெத்தொழும்பும்
சொல்லால்மநத்தால்கருமத்திநல்செய்வன்சோர்வின்றியே

| பதம். | உரை. |
| --- | --- |
| நல்லார் | "நல்லார்நவில் குருகூர் நகரான்" என்னுமாப்போலே ஸத்துக்களடங்கலும், |
| பரவும் | இருந்த விடங்களிலே ப்ரேமபரவசரா யேத்தும்படியான, |
| இராமாநுசன் | எம்பெருமானாருடைய, |
| திருநாமம் | திருநாமத்தை, "సచేద్రామానుజేత్యేషా చతురా చతురక్షరీ। కామపస్థాం ప్రపద్యన్తేజన్తవో హన్త మాదృశః" (நசேத் ராமாநுஜேத்யேஷா சதுராசதுரக்ஷ: - காமவஸ்தாம் ப்ரபத்யந்தே ஜந்தவோஹந்த மாத்ர்ஶா:) என்கிறபடியே, |
| நம்பவல்லார்திறத்தை | தங்களுக்குத் தஞ்சமாக விச்வஸிக்கம் வல்லவர்களுடைய ப்ரகாரத்தை, |

| பதம. | உரை. |
| --- | --- |
| மறவாதவர்கள் | அநவரதாநுஸந்தாநம் பண்ணியிருக்குமவர்கள் |
| யாவர் | யாவா சிலர், |
| அவர்க்கே | அவர்களுக்கே, |
| எல்லாவிடத்திலும் | ஸர்வதேசத்திலும், |
| என்றும் | ஸாவகாலத்திலும், |
| எப்போதிலும் | ஸர்வாவஸ்தைகளிலும், |
| எத்தொழும்பும் | ஸாவசேஷவ்ர்த்திகளும, |
| சொல்லால் | வாககாலும், |
| மநத்தால் | மநஸ்ஸாலும, |
| கருமத்திநல் | காயத்தாலும், "தனகசேயாக" எனகிறபடியே, |
| சோர்வின்றிச்செய்வன் | ப்ாதக்ரல மறச்செயவேன். |

"வல்லார்திறத்தை மதியாதவர்கள்" என்று பாடமானபோது, மதித்தல-அளவிடுதலாய், அவர்கள்படியை பரிச்சேதியாதவர்களென்று பொருளாகக்கடவது. நம்புதல் - விச்வஸித்தல; விரும்புதலுமாம். திறம்-ப்ரகாரம். தொழும்பு - அடிமை. சொல், கருமம் என்கிறவிவற்றால்- தத்தத்காரணங்களான வாக்காயங்களை லக்ஷிக்கிறது. சோர்வு - பிரிவு. (௮0)

வ்யா.—அ.—என்பதாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - 'எம்பெருமானார் துர்மத நிரஸநம்பண்ணியும் ப்ராமாணிகமாக வேதமார்க்க ப்ரதிஷ்டாபநமபண்ணியுமிருக்கச்செய்தே அஜ்ஞாநப்ரசுரமான இந்தபூலோகத்திலே யிருந்துள்ள சேதநர் அவரை ஆச்ரயிக்க இசையாதே வேறொரு ரக்ஷகாந்தரமுண்டோவென்று தேடித் தடுமாறித்திரிந்து அவஸந்நராய்விட்டார்களென்று அவர்கள்படியைச்சொல்லி, இதிலே - அவர்களைப்போலன்றிக்கே அவர்களிற்காட்டில அத்யந்தவிலக்ஷணராய் எம்பெருமானார்திருநாமத்தையே விச்வஸித்திருக்கும் மஹாத்மாக்களிடத்திலே பத்தஸ்நேஹராய் ஒருகாலமும அவர்களைவிஸ்மரியாதே யிருக்குமவர்கள யாவர்சிலர் அந்த ததியர்க்கே ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்த்தைகளிலும் ஸர்வவித கைங்கர்யங்களையும ஸர்வகரணங்களாலும் ஸர்வருமறியும்படி பண்ணக்கடவேனென்று தமமுடைய நிஷ்டையைச் சொல்லுகிறார.

வ்யா.—(நல்லாரபரவு மிராமாநுசன்) "நல்லார் நவில் குருகூர்நகரான" என்று-திருநகரியிலே வர்த்திக்கிற ஸத்துக்களாலே விரும்பப்படும் நம்மாழ்வாரைப்போலே, "கலியுங்கெடுங்கண்டு கொண்மின்" என்று அவர்தம்மாலும், "மேவினேனவன் பொன்னடி" என்று அவர்க்கு அந்தரங்கரான ஸ்ரீமதுரகவிகளாலும், அவர் தம்முடையப்ரஸாதத்தாலே பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தைப் பெற்றுத்தந்தருளின ஸ்ரீமந்நாதமுனிகளாலும், "ஆமுதல்வன்" என்று தத்வம்சயரான ஆளவந்தாராலும் விரும்பப்பட்ட எம்பெருமானாருடைய. இவர்களெல்லாரும் இப்புடைகளாலே எம்பெருமானாருடைய வைபவத்தை முந்துறமுன்னம், "இந்நானிலத்தே வந்து நாட்டினரை" என்று வெளியிட்டபின்பு அத்தைக் கண்டு தெளிந்திறே ஆழ்வான் ஆண்டான் தொடக்கமானார் அவர்தம்மைப் பரவத்தொடங்கிற்று. "అనన్తః ప్రథమం రూపం లక్ష్మణస్తు తతః పరమ్। బలభద్రస్తృతీయస్తు కలౌ రామానుజస్స్మృతః" "அநந்தப்ரதமம ரூபம் லக்ஷ்மணஸ்துததபரம - பலபத்ரஸ்த்ருதீயஸ்துகலௌராமாநுஜஸ்ஸ்ம்ருதஃ) என்றநாரதபுராணோக்தவசநத்தை ஸத்துக்கள் வாசித்துக்கொண்டு போருவர்களிறே. "ఆర్వాఞ్చో యత్పదసరసిజద్వన్ద్వమాశ్రిత్య పూర్వే మూర్ధ్నా యస్యాన్వయముపగతా దేశికా ముక్తిమాపుః। సోయం రామానుజమునిరపి" (அர்வாஞ்சோயத்பதஸரஸிஜத்வந்த்வமாச்ரித்யபூர்வே மூர்த்நாயஸ்யாந்வயமுபகதாதேசிகா முக்திமாபுஃ - ஸோயம் ராமாநுஜமுநிரபி) என்கிறபடியே ஸத்துக்களடங்கலும், இருந்தவிடங்களிலே ப்ரேம பரவசராய்க் கொண்டு ஏத்தும்படியான எம்பெருமானாருடைய.

யோத" என்கிறபடியே - ப்ரபந்நர்களுக்கெல்லாம் நித்யாபிஜப்ய மாம்படி க்ரந்தீகரித்தும் பேறுகைக்குறுப்பான இவ்வதிகார முண்டாம்படி கருந்தரையான வென்னைத் திருத்தியருளின ஆழ்வான்போல்வாரென்றபடி. "நம்பவல்லார் திறத்தை மதியாதவர்கள்" என்றுபாடமானபோது - மதித்தல் - விடுதலாய-அவர்கள் படியை பரிச்சேதியாதவர்களென்று பொருளாகக்கடவது.

(அவர்க்கே) அவர்களுக்கு முகமலர்த்தியுண்டென்றும் எனக்கு உஜ்ஜீவநமுண்டென்றும இருவர்க்குங்கூடப் பொதுவாகப் பண்ணுகை தவிர்ந்து, "தனக்கேயாகவெனைக்கொள்ளும்" என்கிறபடியே, அவர்களுடைய முகமலர்த்தியே புருஷார்த்தமென்று அத்யவஸித்துகிறார். "அவர்க்கே" என்கிற அவதாரணத்தாலே-இவர்தம் பேறாறுகிறதிறே (எல்லாவிடத்திலுமென்று மெப்போதிலும) "సర్వేషు దేశకాలేషు సర్వావస్థాసు చాచ్యుత। కింకరోஸ్మి" (ஸர்வேஷு தேசகாலேஷு ஸர்வாவஸ்தாஸு சாச்யுத-கிம்கரோஸ்மி) என்றும, (ஒழிவில்காலமெல்லாமுடனாய்மன்னி) என்றும, "కాలం సకలమపి సర్వత్ర సకలాస్వవస్థాస్వావిస్స్యా మమ" (காலம்ஸகலமபிஸர்வத்ர ஸகலாஸ்வவஸ்தாஸ்வாவிஸ்யாமம) என்றுஞ் சொல்லுகிறபடியே - பரமசேஷிபட்டர் விஷயத்திலே ஈடுபட்டாப்போலே, "తస్మాన్మద్భక్తభక్తాశ్చ పూజనీయా విశేషతః" "మద్భక్తైస్సహసంవాసః" (தஸ்மாத் மத்பக்தபக்தாஸ்ச பூஜநீயா விசேஷத:- மத்பக்தைஸ்ஸஹஸம்வாஸ:) என்றும, "తస్మై దేయం తతో గ్రాహ్యం స చ పూజ్యో యథా హ్యహమ్" (தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதாஹ்யஹம) என்றும் அவன் றானே அருளிச்செய்தானுகையாலே ஸர்வதேச ஸர்வகாலஸர்வாவஸ்தைகளிலும (எல்லாவிடத்திலும) ஸர்வதேசங்களிலும். இடம்-தேசம். (என்றும) காலோபலக்ஷிதமாயிருந்துள்ள ஸகலாவஸ்தைகளிலுமென்றபடி. (எப்போதிலும) ஸகலகாலங்களிலும்.

(சொல்லால் மனத்தால் கருமத்தினால்) இம்மூன்றிலும். மனோவாக்காயங்களென்கிற மூன்றிலும். "சொல்லாலகருமத்தினால்" என்கிற இவற்றால்- தத்தத்கரணங்களானவாக்காயங்களைலக்ஷிக்கிறது. (எதுதொழும்பும்) ஸர்வப்ரகாரதாஸ்யமும. தொழும்பு - அடிமை. எப்பேர்ப்பட்ட வென்றபடி. (சோர்வின்றியே) "வழுவிலாவடிமை செய்யவேண்டுநாம" என்றப்ரார்த்தித்தபடியே அவிச்சிந்நமாக. சோர்வு-பிரிவு. செய்வன்-செய்யக்கடவன். அம்மூன்றிலும் வைத்துக்கொண்டு ஒவ்வொன்றிலேதானே ஸர்வகரணங்களாலும் ஸர்வவிதகைங்கர்யங்களையும் பண்ணக்கடவேனென்கிறார். "వాచా యతీన్ద్ర మనసా వపుషా చ యుష్మత్పాదారవిన్దయుగళం భజతాం గురూణామ్। కూరాధినాథకురుకేశముఖాద్యపుంసాం పాదానుచిన్తనపరస్సతతం భవేయమ్" (வாசாயதீந்த்ர மநஸா வபுஷாசயுஷ்மத்பாதாரவிந்தயுகளம் பஜதாங்குரூணாம் - கூராதி

நாதகுருகேஸமுகாத்யபுஸாம பாதாநுசிந்தநபரஸ் ஸததம்பவே யம்) என்று ஜீயரும் ப்ரார்த்தித்தருளினாரிறே. (நன்றுந்திருவுடையோம் நானிலத்திலெவ்வுயிர்க்கு - மொன்றுங் குறையில்லையோதினோம், குன்ற - மெடுத்தானடிசே ரிராமாநுசன்றன - பிடித்தார் பிடித்தாரைப்பற்றி) என்றுமபடியான ஸ்வாத்யவஸாயத்தை வெளியிட்டருளினாராயத்து. ... ... ... ... (அ0)

உரை.—அ.—எண்பத்தோராம்பாட்டு. எம்பெருமானார் ஸம்பந்திஸம்பந்திகளுக்கே ஸர்வசேஷ வ்ருத்திகளும் பண்ணக் கடவேனென்றார் - கீழ்; இந்நிலைக்கு முன்பு இசையாத தமக்கு இந்தருசியுண்டாயிற்றது எம்பெருமானார் ப்ரஸாதத்தாலே யாகையாலே தமக்கு அவர்செய்த வுபகாரத்தை அவர் தமமையுகந்தருளி த்து விண்ணப்பஞ்செய்து, தேவரீருடைய காருணைக்கு ஒப்பில்லை யென்கிறார்.

மூ —சோர்வின்றியுன்றன் றுணையடிக்கீழ் தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்றவெனக்கரங்கன்செய்யதாளிணைகள் [ல
பேர்வின்றியின்றுபெறுத்தும் இராமாநுசவினியுன்
சீரொன்றியகருணைக்கில்லைமாறு தெரிவுறிலே (அக)

| பதம். | உரை. |
|---|---|
| சோர்வின்றி | வேறொருவிஷயத்திலே மநஸ்ஸு பிரிவின்றிக்கே, |
| உன்றன் | தேவரீருடைய, |
| துணை | சேர்த்தியழகையுடைத்தான, |
| அடிக்கீழ் | திருவடிகளின்கீழே. |
| தொண்டுபட்டவர்பால் | * நிழலு மடிதாறும் போலே சேஷமாயிருக்குமவர்கள் |
| சார்வின்றி நின்ற | ஒருபொருத்தமின்றிக்கே நின்ற, |
| எனக்கு | எனக்கு, |
|  | அவர்களுக்கே அநந்யார்ஹ சேஷமென்னும் நினைவைப் பிறப்பிக்கையாலே "அடியார்க் |

| பதம். | உரை. |
|---|---|
|  | தென்னையாட்படுத்தவிமலன்" என்றும், "அடியார்க் காட்படுத்தாய்" என்றுஞ் சொல்லுகிறபடியே தாம் உகந்தாரை ஸ்வாமியானவிலே சேர்க்கும் ஸ்வபாவராய் பாகவதசேஷத்வ நிஷ்டராக கொழுந்த தம் திருவடிகளை விட்டுப் போராத நிலையாம்படியிருக்கும், |
| அரங்கன் | பெரிய பெருமாளுடைய |
| செய்ய | திருமேனி நிறத்துக்கு பரபாகமான சிவப்பையும், |

| பதம். | உரை. |
| --- | --- |
| இணை | சேர்த்தியையுடைய |
| தாள்கள் | திருவடிகளை, |
| சோர்வின்றி | ஒருகாலமும் விட்டுநீங்காதபடியாக, |
| இன்று | இன்று, |
| பெறுத்து | பெறுவித்தருளின |
| இராமாநுச | உடையவரே! |
| இனி | இப்படியானபின்பு, |
| உன | தேவரீருடைய, |
| சீரொன்றிய | கௌரவயுக்தையாயிருந்துள்ள, |
| கருணைக்கு | க்ருபைக்கு, |
| தெரிவுறில் | ஆராயுமளவில், |
| மாறில்லை | ஒப்பில்லை. |

அதவா, "சோர்வின்றி" இத்யாதிக்கு அந்வயஞ்செய்யுந்தா

| பதம். | உரை. |
| --- | --- |

முளிணைகள் - சோர்வின்றி - உன்றன் துணையடிக்கீழ் தொண்டுபட்டவர்பால - இன்று பெறுத்து இராமாநுச என்றநவயித்து - பகவச்சேஷத்வத்துக்கிசைகையாலே பெரியபெருமாள் திருவடிகளை விடாமல உறைகைக்கப்பற்று துர்மாநத்தாலேபாகவத சேஷத்வத்துக்கு இசையாமையால் தேவரீர் திருவடிகளுக்கு சேஷமாயிருப்பார் பக்கல் சேராமலிருக்கிற வெனக்கு அத்தை இன்று லபிப்பித்தருளின தேவரீர் க்ருபைக்கு ஒப்பில்லையென்னவுமாம். போதல்-நீங்குதல். சீர்-கநம்; அழகாகவுமாம். ஒன்றுதல்-கூடுதல். மாறு-ஒப்பு. தெரிவுறுதல் - ஆராய்தல். (அக)

வ்யா.—அ.—எண்பத்தோராம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - ஸர்வோத்தமரான எம்பெருமானாருடைய ஸம்பந்திஸம்பந்திகளுக்கே ஸர்வதேசஸர்வகாலஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வகரணங்களாலும் ஸர்வவிதகைங்கர்யங்களும் செய்யக்கடவேனென்று அவர்கள் பக்கலிலே தமக்குண்டான ஸௌஹார்த்தத்தைச்சொல்லி, இதிலே - எம்பெருமானார் திருமுகமண்டலத்தைப்பார்த்து இவ்வளவும் தேவரீர்க்கு சேஷபூதராயிருக்கிறவர்கள் திறத்திலே அடிமைத்தொழில் செய்ய இசையாதவென்னை, தாமுகந்தாரைத் தமக்கு அந்தரங்கபரிகரமாக்குமவர்கள் விஷயத்திலே அடிமைப்படுத்துகைக்கு உபதேசிக்கலாய், தன்னடியார்க்கடிமைப்படாதே யிருக்கிறவர்களுக்கு அந்தத்திருவடிகளைக் கொடுக்க இசையாதே யிருக்கிற பெரியபெருமாளுடைய திருவடிகளிலே சேர்த்தருளின தேவரீருடைய பரமகாருணிகைக்கு ஒப்பில்லையென்கிறார்.

வ்யா.—(சோர்வின்றியுன்றன் துணையடிக்கீழ்) "మయిచానన్యయోగేన భక్తిరవ్యభిచారిణీ" (மயிசாநந்யயோகேநபக்திரவ்யபிசாரிணீ) என்று - கீதாசார்யனருளிச்செய்தபடியே - வேறொருவிஷயத்திலும் மநஸ்ஸு-பிரிந்துபோகையன்றிக்கே, "కృత్వామర్త్యమయీం తనుం । మగ్నానుద్ధరతే లోకాన్ కారుణ్యాచ్ఛాస్త్రపాణినా" (க்ர்த்வாமர்த்யமயீம்தநும்-மக்நாநுத்தரதேலோகாந்காருண்யாச்சாஸ்த்ரபாணிநா) என்று -

ஸர்வேச்வரரான தேவரீருடைய சேர்த்தியழகையுடைத்தான திருவடிகளின்கீழே (தொண்டுபட்டவர்பால்) * நிழலுமடிதாறும்போலே சேஷமாயிருக்குமவர்பக்கலிலே. "[illegible]" (யுஷ்மத்பாதாரவிந்தயுகளபஜநாம் தருணாம - கூராதிநாதகுருசேஷமுகாத்யபும்ஸாம) என்று சொல்லப்பட்ட மஹாத்மாக்கள விஷயத்திலே யென்றபடி.

(சார்வின்றி நின்ற) சேருதலின்றிக்கேயிருக்கிற. (எனக்கு) அநாதிகாலமே தொடங்கி எம்பெருமானாரை ஆச்ரயிக்குமளவும், "([illegible])" (தஸ்மாத்மதபாதபக்தா ஸ்ஸபூஜநீயாவிசேஷத.) என்கிறவர்த்தத்தையறியாதே "[illegible]" (நநமேயம) என்று ப்ரதிகூலனாய்ப்போந்த அடியேனுக்கு. (அரங்கன்செய்யதாளிணைகள்) ஜீவநஹேதுவாயபோக்யருமாயிருக்கிற சோற்றிலே ரோகோல்பண்ணதாலே அருசிபிறந்தவனுக்கு ஔஷதத்தைக்கொடுத்து அதனைப் போக்கடிக்கும விரகனான வைத்யன்கையிலே காட்டிக்கொடுக்கும மாதாவைப்போலே, "[illegible]" (மமமதபகதபக்தேஷு ப்ரீதிரப்யதிகாபவேத்) என்றும, (அடியார்க்கென்னை யாட்படுத்த விமலன்) என்றும, (உன்னடியார்க்காட்படுத்தாய்) என்றும் சொல்லுகிறபடியேஸ்வாமிதாபக்கலிலே அதிவ்யாமுகத்தராய, தாம உகந்தாரைத் தமமடியார்க்கு * ஏழாளகால அடிமைப்படுத்தும் பரிமாற்ற மறியும் விரகராய, (செடியாரவினைகள் தீரமருந்தே) என்றும், (மருந்தே நங்கள்போகமகிழ்ச்சிக்கு) என்றும் சொல்லுகிறபடியே - பகவச்சேஷத்வத்துக்கும பாகவதசேஷத்வத்துக்கும இசையாதொழிகையாகிற துஷ்கர்மங்களடங்கலும தீருமபடி கடாக்ஷித்தருளும பெரியபெருமாளுடைய திருமேனி நிறத்துக்கு பரபாகமாய், சிவப்பையும் சேர்த்தியழகையுமுடையதிருவடிகளை. காட்டிக் கொடுத்தவறறை.

(போவின்றி) ஒருகாலமும விட்டு நீங்காதபடியாக. பேருதல்- நீங்குதல். (இன்றுபெறுத்துமம) இப்போது * நிழலுமடிதாறும்போலே சேஷபூதனாயிருக்கையாகிற இந்த மஹாபலத்தைப் பெறுவித்த- பலிப்பித்தருளின. (இராமாநுசா) எம்பெருமானாரே. (இனியுன் சீரொன்றியகருணைக்கு) "[illegible]" (உபாயோபேய பச்சகயசந்தச்சக்யபராக்ரமை:) என்னும்படி விரகாலே "[illegible]" (த்வத்தாஸதாஸகணநாசரமாவதௌய ஸ்தத்தாஸதைகரஸதா விரதாமமாஸ்து) என்று - அத்யந்தப்ரார்த்தநீயமான சரமபர்வநிஷ்டர்க்கு ஊற்றுவாயான ப்ரதமபர்வத்திலே நிற்கும்படி திரு

த்தியருளினபின்பு. இப்படிக்ரஷிபண்ணியருளின தேவரீருடைய மஹாப்ரபாவவஷியாயிருக்கிற கர்மைக்கு. சீர் - அழகும், மஹத்வமும். ஒன்றுதல் - கூடுதல். தெரிவுறில் - ஆராய்ந்து பார்க்குமளவில். தெரிதல் - ஆராய்தல். (மாறு - இல்லை) ஒப்பில்லை. "[illegible]" (ஷிதஷிரப்பவஷிவாநேஷிஸம்ஸயோச்யுதஸேவிநாம்) என்கையாலே - * தென்னரங்கர் சீருளும் இது தனக்கு ஒப்பாகமாட்டாதென்றுகாணும் இவருடைய திருவுள்ளத்திலோடுகிறது. "[illegible]"(நஸம்ஸயஸ்து தத்பக்த பரிசாயாரதாத்மநாம) என்று சொல்லுகையாலே. இவ்வர்த்தம் ஸம்ப்ரதிபந்நமிறே. மாறு - ஒப்பு.

அனறிக்கே, அரஙகனசெயயதாளிணைகள் - பேர்வின்றி - சோர்வினறி யுன்றன்துணையடிககிழ தொண்டுபட்டவர்பால சார்வின்றி நின்ற வெனக்கு - இனறு பெறுகது மிராமாநுசா - உன் சீரோன்றியகருணைக்கு - தெரிவுறில - மாறு இல்லை என்று அந்வயிதது-பகவச்சேஷத்வத்துக் கிசைகையாலே பெரியபெருமாள் திருவடிகளிலே ஸங்கஞய அந்தகாலத்தாலேததீயருடையப்ரபாவத்தை அறியப்பெறுதே தேவரீர திருவடிகளுக்கு சேஷமாயிருப்பார் பககல் சேராதொழிந்த வெனககு அத்தை இனறு லபிப்பித்தருளின தேவரீருடைய அபரிமிதப்ரபாவவஷியான கர்மைக்கு, ஆராயந்து பாாககில ஒருவரும் ஸதாமரில்லையென்று பொருள் சொல்லவுமாம. ... .. ... ... ... (அக)

உரை.—அ.—எண்பத்திரண்டாமபாட்டு. "அரஙகன்செய்ய தாளிணைகள பேர்வின்றி யின்று பெறுததும" என்று கீழ்ச்சொன்னபேற்றுக்குடலாகததமககுப்பண்ணின உபதேசத்தை அநுஸந்தித்துவித்தராய எமபெருமானர் எனனதாரமிகரோவென்கிறுர்.

மூ.—தெரிவுற்றஞாநஞ்செறியப்பெறுதுவெந்தீவினையால்
உருவற்றஞாநத்துழல்கின்றவென்னையொருபொழுதில்
பொருவற்றகேள்வியனாக்கினன்றென்னபுண்ணியனே
தெரிவுற்றகீர்த்திஇராமாநுசனென்னுஞ்சீர்முகிலே. (அஉ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| தெரிவுற்ற | ஸதஸத் விவேகத்திலஹாயத்தையுடைத்தாயிருக்கும், | உருவற்ற | ஒருவஸ்து பூதமாய்க்கொண்டு வடிவு பட்டிராத, |
| | ஜ்ஞாநத்தை, | ஞாநத்து | ஜ்ஞாநத்தைப்பற்றி, |
| செறியப் பெறுது | சேரப்பெறுதே, | உழல்கின்றவென்னை | ஒன்றிலும் ஒருநிலையற்றுத் தட்டித்திரிவென்னை, |
| வெம்தீவினையால் | அதிக்ரூரமான கர்மத்தாலே, | | சிரகாலம்கூடியன்றிக்கே, |

| பதம் | உரை. |
|---|---|
| ஒருபொழுதில் | ஒரு க்ஷணகாலத்திலே, |
| பொருவற்ற | உபமாந ரஹிதமான, |
| கேள்வியனாக்கி | ச்ருதத்தையுடையேனாம்படி பண்ணி, |
| நின்றான் | பூமியிலே வந்து அவதரித்தருளினார்; 'திக்குற்ற கீர்த்தி'' என்கிறபடியே விசேஷஜ்ஞ அவிசேஷஜ்ஞர் என்னும் விபாகமற எல்லார்க்கும், |
| தெரிவுற்ற | ப்ரகாசித்திருந்துள்ள, |
| கீர்த்தி | குணவத்தா ப்ரதையை யுடையராய், ''குணமந்தமு கொண்டல்'' என்கிறபடியே, |
| சீர்முகிலென்னும் | பரமோதாரரான, |
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| என்னபுண்ணியனோ | என்ன தார்மிகரோ |

''உருவற்ற ஞானத்து'' என்று பாடமானபோது, உருவென்று - அழகாய், அதாவது - நன்மையாய், அது அறுகையாவது - இன்றிக்கே யொழிகையாய், நன்மை யென்பதொன்றுமில்லாத ஜகத்திலே யென்கை. அப்போது 'தெரிவுற்ற ஞானம்'' இத்யாதிக்கு - ஸதஸத்விவேகத்தில் ஊற்றமுடையஜ்ஞானத்தை ப்ராபிக்கப்பெறாதே ப்ரபல கர்மத்தாலே ஒரு நன்மையின்றிக்கேஹேயமாயிருந்துள்ளஜகத்திலே, ''ஈண்டு பல்யோநிகள் தோறுழல்வோம்'' என்கிறபடியே நாநாவிதயோநிகளிலே ஜநிப்பது மரிப்பதாய்த் தட்டித்திரிகிறவென்னை என்றுபொருளாகக்கடவது. தெரிவு-விவேகம். உறுதல் - ஊற்றம். அன்றிக்கே, தெரிவுற்ற ஞானம் என்று-ப்ரகாசயுக்தமான ஜ்ஞாநமென்றாய் தத்வஸ்திதியை யதாதர்சநம்பண்ணுகைக்குறுப்பான விசதஜ்ஞாநமெனவுமாம். தெரிவுற்ற கீர்த்தி - ப்ரகாசயுக்தையான கீர்த்தி. சீர்முகில் சீரியமுகில்; அழகிய முகிலெனவுமாம். ()

வ்யா— அ.—(எண்பத்திரண்டாம்பாட்டு.) ''அரங்கன் செய்ய தாளிணைகள் பேர்வின்றி யின்று பெறுத்துமிராமாநுசா'' என்று-கீழ்ப்ரஸ்துதமான பரமபுருஷார்த்தத்துக்கு குறுப்பாக ஸாம்ஸாரிக ப்ரவ்ருத்திகளிலே மண்டியிருந்து ஸம்யஜ்ஜ்ஞாநத்தைப் பெறமாட்டாதே அதிக்ரூரமான துஷ்கர்மத்தாலே தேஹாத்மாபிமானியாய்க்கொண்டு ஒன்றிலும் ஒருநிலையின்றிக்கே தட்டித்திரிகிற வென்னை, ''ஆண்டுகள் நாள்திங்கள்'' என்றாப்போலே சிரகாலம் கூடியன்றிக்கே ஒருக்ஷணமாத்ரத்திலே தானே நிஸ்ஸம்ஸயமாக தத்த்வஹித புருஷார்த்தங்களை தத்யாதாத்ம்யத்தளவு முபதேசித்து,

உபமாநரஹிதமான ஶ்ருதத்தையுடையேனும்படிபண்ணி ஸர்வ விஷயமாக வர்ஷிக்கும் வர்ஷுகவலாஹகமென்னலாம்படி பரமோதாரரானஎம்பெருமானார்என்னைதார்மிகரோவென்று அநுஸந்தித்துவித்தராகிறார்.

வ்யா.—(தெரிவுற்றஞாநம்செறியப்பெறாது) தெரிவு - விவேகம். அதாவது - ஆத்மாநாத்மவிஷயமா யிருந்துள்ள புத்தி விசேஷம். ஆத்மவஸ்து உபாதேயமென்றும், அநாத்மாவான அசித்வஸ்து த்யாஜ்யமென்றும் விவேகிக்கையென்றபடி. (உற்ற ஞாநம்) அதிலே ஊற்றத்தையுடைத்தாயிருக்கும் ஜ்ஞாநம். உறுதல் - ஊற்றம். "అస్తిబ్రహ్మేతిచేద్వేద" (அஸ்திப்ரஹ்மேதிசேத்வேத) என்று ச்ருதியும்சொல்லிற்றிறே. "అమానిత్వమదమ్భిత్వ మహింసాక్షాన్తిరార్జవమ్। ఆచార్యోపాసనంశౌచం స్థైర్యమాత్మవినిగ్రహః॥ ఇన్ద్రియార్థేషువైరాగ్య మనహఙ్కారఏవచ। జన్మమృత్యుజరావ్యాధి దుఃఖదోషానుదర్శనమ్॥ అసక్తిరనభిష్వఙ్గః పుత్రదారగృహాదిషు। నిత్యఞ్చసమచిత్తత్వం ఇష్టానిష్టోపపత్తిషు॥ మయిచానన్యయోగేన భక్తిరవ్యభిచారిణీ॥ వివిక్తదేశసేవిత్వమరతిర్జనసంసది। అధ్యాత్మజ్ఞాననిత్యత్వం తత్వజ్ఞానార్థదర్శనమ్॥ ఏతజ్జ్ఞానమితిప్రోక్తమజ్ఞానం యదతోన్యథా" "సావిద్యాయావిముక్తయే" (அமாநித்வமடம்பித்வமஹிம்ஸாக்ஷாந்திரார்ஜவம், ஆசார்யோபாஸநம்ஶௌசம் ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ: - இந்த்ரியார்த்தேஷு வைராக்யம் மநோஹங்கார ஏவச, ஜந்மம்ர்த்யுஜராவ்யாதிது:க தோஷாநுதர்ஶநம்- அஸக்திரநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு; நித்யஞ்சஸமசித்தத்வம் இஷ்டாநிஷ்டோபபத்திஷு- மயிசாநந்ய யோகேநபக்திரவ்யபிசாரிணீ, அத்யாத்மஜ்ஞாநநிஷ்டத்வம்தத்வ ஜ்ஞாநார்த்த சிந்தநம், ஏதஜ்ஜ்ஞாநமிதிப்ரோக்தமஜ்ஞாநம்யத தோந்யதா) (ஸாவித்யாயாவிமுக்தயே)என்கிறபடியே-ஸதஸத்விவேசநவிஷயக பரிபூர்ணஜ்ஞாநமென்றபடி.அன்றிக்கே,தெரிவுற்ற ஞானமென்றது-ப்ரகாஶோபயுக்தஜ்ஞாநமென்றதாய் தத்வஸ்த்திதியை யதாதர்ஶநம பண்ணுகைககுறுப்பான ஜ்ஞாநமென்னவுமாம். தெரிவு - ப்ரகாஶம. உறுதல் - பொருந்துதல். (செறியப் பெறாது) ப்ராபிக்கப்பெறாதே.

(வெந்தீவினையால்) அநாதிகாலமே பிடித்து இவ்வளவாக நித்யஸம்ஸாரியாய்ப்போந்த நான் தீரக்கழியச் செய்த அக்ருத்ய கரணாதிகளாலே. "வெம், தீ" என்கிற மிமிசையாலே - அதினுடைய அதிக்ரௌர்யம் தோற்றுகிறது. (உருவற்றஞாநத்து) உருமாய்ந்துகிடக்கிற ஜ்ஞாநத்தோடே. ஜ்ஞாநத்தினுடைய ஸத்தையெல்லாம் போய்த்தென்றபடி. "అజ్ఞానమతోన్యదుక్తమ్" (அஜ்ஞாநமதோந்யதுக்தம்) என்கையாலே-இவ்விஷயங்களை அவகாஹிக்கிற ஜ்ஞாநமெல்லாம் உருவற்றஜ்ஞாநமித்தனையிறே. உரு-வடிவாகை

யாலும், "అర్థైకవిశేషో హి నిరాకారతయా ధియామ్" (அர்த்தைகவிஶேஷோஹி நிராகாரதயாதியாம்) என்கையாலே - அதுக்கு வடிவு விஷயமே யாகையாலும், "ஸந்தம்" என்கையாலே - அவ்விஷயாந்தரமும் ஸ்ரீயபதியாகையாலே ததிரிக்த விஷயங்களை அவகாஹிக்கிற ஜ்ஞாநமெல்லாம், "உருவற்றஞாநம்" என்னக் குறையில்லையிறே. (உழல்கின்றவென்னை) பக்தி ப்ரபத்தி முதலான ஸாதநங்களிலே யன்றியிலேயாகிலும் ஒருநிஷ்டையின்றிகயே கொண்டிப் பசுப்போலே ஸ்வை ஸஞ்சாரியாய்த் தட்டித்திரிகிற அடியேனை. "உருவற்றஞாலத்து" என்று - பாடமானபோது - உருவென்று - அழகாய், அதாவது - நன்மையாய், அறுகையாவது - இன்றிக்கே யொழிகையாய் - நன்மையென்பதொன்றில்லாத ஜகத்திலே, "எண்டு பல்யோநிகள்தோறுழல்வோம்" என்கிறபடியே - நாநாவித யோநிகளில் ஜநிப்பது மரிப்பதாய்த் தட்டித்திரிகிற வென்னை என்று பொருளாகக்கடவது.

(ஒருபொழுதில்) "సమిత్పాణిః శ్రోత్రియం బ్రహ్మనిష్ఠం తస్మై స విద్వానుపసన్నాయ సమ్యక్ ప్రశాన్తచిత్తాయ శమాన్వితాయ । యేనాక్షరం పురుషం వేద సత్యం ప్రోవాచ తాం తత్త్వతో బ్రహ్మవిద్యామ్" (ஸமித்பாணிஶ் ஶ்ரோத்ரியம் ப்ரஹ்மநிஷ்டம் தஸ்மைஸவித்வாநுபஸந்நாய ஸம்யகப்ரஶாந்த சித்தாய ஶமாந்விதாய, யேநாக்ஷரம் புருஷம் வேதஸத்யம் ப்ரோவாசதாம் தத்வதோ ப்ரஹ்மவித்யாம்) என்றும், "తద్విద్ధి ప్రణిపాతేన పరిప్రశ్నేన సేవయా । ఉపదేక్ష్యన్తి తే జ్ఞానం జ్ఞానినస్తత్త్వదర్శినః ॥ సంవత్సరం తదర్ధం వా మాసత్రయమథాపి వా । పరీక్ష్య వివిధోపాయైః కృపయా నిస్పృహో వదేత్" (ததவித்திப்ராணிபாதேந பரிப்ரஶ்நேநஸேவயா- உபதேக்ஷ்யந்தி தேஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்வதர்ஶிநঃ- ஸம்வத்ஸரம்ததர்த்தம்வா மாஸத்ரயமதாபிவா- பரீக்ஷ்ய விவிதோபாயைஃக்ருபயாநிஸ்ப்ருஹோவதேத்) என்றும, "సద్బుద్ధిః సాధుసేవీ సముచితచరితస్తత్త్వబోధాభిలాషీ శుశ్రూషుస్త్యక్తమానః ప్రణిపతనపరః ప్రశ్నకాలప్రతీక్షః । శాన్తో దాన్తోఽనసూయః శరణముపగతః శాస్త్రవిశ్వాసశాలీ శిష్యః ప్రాప్తః పరీక్షాం కృతవిదభిమతం తత్త్వతః శిక్షణీయః" (ஸத்புத்திஸ்ஸாதுஸேவீஸமுசிதசரிதஸ்தத்வபோதாபிலாஷீ ஶுஶ்ருஷுஸ்த்யக்தமாநঃ ப்ரணிபதநபரঃப்ரஶ்நகாலப்ரதீக்ஷঃ- ஶாந்தோதாந்தோநஸூயஶ்ஶரணமுபகதஶ்ஶாஸ்த்ரவிஶ்வாஸஶாலீ ஶிஷ்யঃப்ராப்தঃபரீக்ஷாம்க்ருதவிதபிமதம்தத்வதஶ்ஶிக்ஷணீயঃ) என்றும் பஹுப்ரகாரமாகசிஷ்யனுடையமநஸ்ஸைபரீக்ஷித்தேஉபதேசிக்கவேணுமென்று ஶாஸ்த்ரஞ் சொல்லாநிற்கச்செய்தேயும், உபதேசத்துக்காகத் தாம் திருக்கோட்டியூர்நம்பிஸந்நிதிக்கு பதினெட்டுத்தரமெழுந்தருளியிருக்கச்செய்தேயும் அவற்றையெல்லாம் தம்முடைய ஔதார்யத்தாலே கால்கடைக்கொண்டு என்னைக்கடாக்ஷித்த அந்தக்ஷணத்திலேதானே.

(பொருவற்றகேள்வியனாக்கி) "సర్వదేశగకాలః" (ஸர்வதேசகாலः) என்கிறசாஸ்த்ரார்த்தத்தை உட்கொண்டு உபமாநரஹிதமான ஸ்ருதத்தையுடையேனும்படி பண்ணியருளி. பொரு - உபமாநம். "తస్మాన్న్యాసమేషాం తపసామతిరిక్తమాహుః" "தஸ்மாந்ந்யாஸமேஷாம்தபஸாமதிரிக்தமாஹு:" என்றும், "సత్కర్మనిరతాశ్శుద్ధాస్సాంఖ్యయోగవిదస్తథా। నార్హన్తి శరణస్థస్య కలాంకోటితమీమపి" "ஸத்கர்மநிரதாஶ்ஶுத்தாஸ் ஸாங்கயயோகவிதஸ்ததா - நார்ஹந்திஶரணஸ்தஸ்ய கலாம்கோடிதமீமபி" என்றும், "తేన తేనాప్యతే తత్తన్న్యాసేనైవ మహామునే" (தேநதேநாப்யதேதத்தந் ந்யாஸேநைவமஹாமுநே) என்றுசொல்லுகிறபடியே ஸர்வோத்தமையான ப்ரபத்தியை உபதேசித்து ப்ரபந்நனாம்படி பண்ணியருளி யென்றபடி. (நின்றனை) "అభిషిచ్యచ లంకాయాం రాక్షసేన్ద్రం విభీషణమ్। కృతకృత్యస్తదా రామో విజ్వరః ప్రముమోద హ" (அபிஷிச்யசலங்காயாம் ராக்ஷஸேந்த்ரம் விபீஷணம்- க்ருதக்ருத்யஸ்ததாராமோ விஜ்வர꞉ப்ரமுமோதஹ) என்றாப்போலே க்ருதக்ருத்யராய் இந்தபூமியிலே தனிக்கோல் செலுத்திக்கொண்டு எழுந்தருளியிருந்தார். அவ்வளவும், "నాతిస్వస్థమనాః" (நாதிஸ்வஸ்தமநா꞉) என்னும்படி யிருந்தார்காணும்.

(தெரிவுற்றகீர்த்தி யிராமாநுசனென்னும் சீர்முகிலே) "திக்குற்றகீர்த்தி" என்கிறபடியே விஶேஷஜ்ஞர் அவிசேஷஜ்ஞர் என்னும் விபாகமற எல்லாரக்கும் ப்ரகாசியா நின்றுள்ள குணவத்தாப்ரதையையுடையராய், "குணம் திகழ்கொண்டல்" என்கிறபடியே என்றுமொக்க பரமோதாரரானஎம்பெருமானார். (தெரிவுற்றகீர்த்தி) ப்ரகாசயுக்தையானகீர்த்தி. சீர்முகில்-சீரியமுகில். முகிலுக்குச்சீர்மையாவது-ஜலஸ்தலவிபாகமறவர்ஷிக்கை. (என்னபுண்ணியனோ) என்னதார்மிகரோ. "యత్త్వత్ప్రియం తదిహ పుణ్యమ్" "யத்த்வத்ப்ரியம்ததிஹபுண்யம்" என்கிறபடியே ஸர்வேஶ்வரனுடைய முகமலர்த்திக்காக அவனை இப்படி திருத்தி அங்குத்தைக்காளாம்படி பண்ணியருளினீரென்றதாய்த்து. (அஉ)

உரை.—அ.— எண்பத்துமூன்றும்பாட்டு. "பொருவற்றகேள்வியனாக்கி நின்றான்" என்ன;உம்முடைய ச்ருதத்துக்கு வ்யாவர்த்தி யேது, எல்லார்க்கு மொவ்வாதோ ஶரணாகதியென்ன; ப்ரபத்தி பண்ணி பரமபதம்பெறுவார்கோடியிலன்று,தேவரீர் திருவடிகளாகிற மோக்ஷத்தை தேவரீர் ஔதார்யத்தாலே பெறுமவன் நானென்கிறார்.

மூ.—சீர்கொண்டு பேரறஞ்செய்துநல்வீடுசெறிதுமென்னும்
பார்கொண்டமேன்மையர்கூட்டனல்லேனுன்பதயுகமாம்
ஏர்கொண்டவீட்டையெளிதினிலெய்துவனுன்னுடைய
கார்கொண்டவண்மையிராமாநுசாவிதுகண்டுகொள்ளே.

| பதம். | உரை. |
|---|---|
| சீர்கொண்டு | சமதமாதிகள், ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்கள் ருசி விச்வாஸங்களாகிற ஸ்வபாவ விசேஷங்களையுடையராய |
| பேரறஞ்செய்து | பரம தர்மமாகிற ப்ரபத்தியைப் பண்ணி, ஆத்மாநுபவமாத்ரமான கைவல்யம் போலன்றிக்கே, |
| நல்வீடு | பரமபுருஷார்த்த லக்ஷண மோக்ஷத்தை, |
| செறிதுமென்னும் | ப்ராபிப்போமென்னும், |
| பார்கொண்ட | பூமியெங்கும் வ்யாப்தமான, |
| மேன்மையர்கூட்டனல்லேன் | ப்ரபாவத்தையுடைய பகவத்ப்ரபந்நருடைய திரளுக்குஉட்பட்டவனல்லேன்; |
| ராமாநுசா | உடையவரே!, |
| உன் | தேவரீருடைய, |
| பதயுகமாம் | திருவடிகளிரண்டுமாகிற, |
| ஏர்கொண்டவீட்டை | ஸர்வ விலக்ஷணமான மோக்ஷத்தை, |
| எளிதினில் எய்துவன் | அநாயாஸேந ப்ராபிப்பன்; |
| | அதுக்கு ஹேது, |
| கார்கொண்ட | ஸர்வவிஷயமாக ஸவகாலத்திலும் உபகரிக்கையாலே மேகத்தை ஜயித்திருக்கும், |
| உன்னுடைய வண்மை | தேவரீருடைய ஔதார்யம், |
| இது | |
| கண்டுகொள் | இது நான் சொல்லவேணுமோ, அநுஷ்டாநத்தால் கண்டுகொள்ளமாட்டீரோ. |

"நல்வீடுபெறுதும" என்றும் பாடஞ் சொல்லுவர்கள்; பார்கொண்டமேன்மை- விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியறபூமியிலுள்ளாரெல்லாராலும் கைகொள்ளப்பட்ட உத்கர்ஷமென்னவுமாம. ஏர்கொண்டவீட்டில் என்று பாடமானபோது தேவரீர்திருவடிகளிரண்டுமாகிற விலக்ஷணமோக்ஷத்திலே அநாயாஸேந சேர்வனென்றபடி. ஏர்-அழகு; கொள்கை-உடைத்தாகை. திருவடிகளை மோக்ஷமாகச்சொல்லுகிறது - ஆநந்தாவஹத்வத்தாலே. "ముక్తిర్మోక్షో మహానన్దః" "முக்திர் மோக்ஷோ மஹாநந்த:" என்னக்கடவதிறே. ... ...(௮௩)

---

வ்யா.—அ.—கீழ்ப்பாட்டிலே - இவர் தமமுடைய ஹர்ஷத்துக்குப் போக்குவீடாக, "பொருவற்ற கேள்வியனாக்கி நின்றான்" என்று சொன்னவாறே அத்தைக்கேட்டருளி உபமாநரஹிதமான ச்ருதத்தையுடையேனும்படி பண்ணியருளினீரென்று நீர் நம்மை ச்லாகித்தீர், உம்மை யொருவரையே நாம் அப்படி பண்ணினது,

ஒருநாடாக அப்படிபண்ணி பரமபதத்திலே கொண்டுபோகைக்கு பத்தகங்கணராயன்றோ நாம் அவதரித்தது, ஆகையாலே உமக்கும் உம்மை யொழிந்தார்க்கும் தன்னிலே வ்யாவ்ர்த்தி யேதென்று எம்பெருமானுர்க்குத் திருவுள்ளமாக; இவர் அவர்திருமுக மண்டலத்தைப் பார்த்து, நான் என்னை யொழிந்தாரெல்லாரையும்போலே பகவச்சரணுகதியைப் பண்ணி பரமபதத்தைப்ராபிப்போமென்றிருந்தேனலலேன்காணும், தேவரீர்திருவடிகளாகிற மோக்ஷத்தை தேவரீர் ஔதார்யத்தாலேக்ர்பைபண்ணப்பெறக்கடவேனென்று நேரேவிண்ணப்பம்செய்கிறுர்.

வ்யா.—(சீர்கொண்டு) "శాన్తో దాన్తః" "ஶாந்தோதாந்த:" இத்யாதிகளாலே சொல்லப்படுகிற சமதமாதிகளென்றும், "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண்மற்றிலேன்" என்றும், "என்நான்செய்கேனயாரேகளைகண் என்னை யென்செய்கின்ருய்" என்றும் சொல்லப்படுகிற ஆகிஞ்சந்யாநந்யகதித்வங்களென்ன, "ప్రియోహి జ్ఞానినోత్యర్థమహమ్" "ப்ரியோஹிஜ்ஞாநிநோத்யர்த்தமஹம்" என்றும், "రక్షిష్యతీతి విశ్వాసః" "ரக்ஷிஷ்யதீதிவிஶ்வாஸ:" என்றும்சொல்லப்படுகிறருசிவிச்வாஸஙகளென்ன இதுதொடக்கமான அதிகாரிவிசேஷ ஸ்வபாவங்களை யுடையராய். கொள்கை - உடைத்தாகை. (பேரறஞ்செய்து) "న్యాసమేషాం తపసామతిరిక్తమాహుః" "ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" என்றும, "సర్వగుహ్యతమం భూయః" "ஸர்வகுஹ்யதமம்பூய:" என்றும் சொல்லுகிறபடியே பரமகுஹ்யமாய்பரமதர்மமாய் ஸ்வரூபாநுரூபமானப்ரபத்தியைப்பண்ணி. அதாகிறது;- "న్యస్యత్వత్పాదపద్మే వరద నిజభరం నిర్భరో నిర్భయోస్మి" "ந்யஸ்யத்வத்பாதபத்மேவரத நிஜபரம்நிர்ப்பரோ நிர்ப்பயோஸ்மி" என்கிறபடியே-ஆத்மாத்மீயங்களினுடையரக்ஷணபரத்தைஅவன்பக்கலிலேபொகடுஸ்தநந்தயப்ரஜையோபாதி நிர்ப்பரராயிருக்கை. "பலத்துக்கு ஆத்மஜ்ஞாநமும் அப்ரதிஷேதமும்வேண்டுவது" என்று பிள்ளையுமருளிச் செய்தாரிறே. பேர் – பெருமை. அறம் - தர்மம்.

(நல்வீடுசெறிதுமென்னும்) வீடு - மோக்ஷம். ப்ராப்யஸ்தாநம். அதாவது - "స్వాత్మానుభూతిరితియాకిల ముక్తిరుక్తా" "ஸ்வாத்மாநுபூதிரிதியாகில முக்திருக்தா" என்கிறபடியே கைவல்யமும் மோக்ஷமாகையாலேதத்வ்யாவ்ர்த்யர்த்தமாக "நல்வீடு" என்று அத்தைவிஶேஷிக்கிறுர். வீட்டுக்கு நன்மையாவது - ஸ்வாத்மாநுபவமாத்ரமான கைவல்யம்போலே அல்பமாயும் ஸ்வார்த்தமாயுமிருக்கையன்றிக்கே, "நலமந்தமில்லதோர்நாடு" என்கிறபடியே அபரிமிதாநந்தரூபமாய், "தனக்கேயாகவெனைக்கொள்ளும்" என்கிறபடியே பகவதேகபோகமா யிருக்கை. (செறிதுமென்னும்)

இப்படிப்பட்ட பரமபுருஷார்த்த லக்ஷணமான மோக்ஷத்தை ப்ராபிப்போமென்னும். "நல்வீடுபெறுதும்" என்றும் பாடம் சொல்லுவர்கள்; ஆகிலும் அர்த்தபேதமில்லை. "యోగినామమృతంస్థానమ్" "యద్గత్వా న నివర్తంతే" "யோகிநாமம்ருதம்ஸ்தாநம்" "யத்வைபச்யந்தி ஸூரயஃ" என்று-ஸ்வாத்மாநுபவரூப கைவல்யலக்ஷணமோக்ஷத்தையும், பகவத்ப்ராப்திரூப பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷத்தையும், ஸ்தாநபரமசப்தங்களாலேவிபஜித்து கீதாசார்யனுமருளிச்செய்தானிறே. (பார்கொண்டமேன்மையர்) பூமியெங்குமொக்க வ்யாப்தமான ப்ரபாவத்தையுடையவரோனறுதல்; விசேஷஜ்ஞரோடு அவிசேஷஜ்ஞரோடு வாசியற பூமியிலுள்ளாரெல்லாராலும கைகொள்ளப்பட்ட வுத்கர்ஷத்தையுடையவரென்னுதல். கொள்கை - வ்யாபிகையும், ஸ்வீகரிக்கையும். (கூட்டனல்லேன்) இப்படிப்பட்ட பகவத்ப்ரபந்நருடைய கோஷ்டியிலேயுள்பட்டவர்களிலே யொருவனாயிருக்கிறவனல்லன்.

ஆகில் உம்முடையபடி யெங்ஙனேயென்னச் சொல்லுகிறார் (உன்பதயுகமாமேர்கொண்ட வீட்டை) தேவரீர்திருவடிகளிரண்டுமாகிற விலக்ஷணமோக்ஷத்தை. "గురోరేవపరాయణమ్" "గురురేవపరాగతిః" "పాదమూలంగమిష్యామి యానహంపర్యచారిషమ్" "குருரேவபராயணம்" "குருரேவபராகதிः" "பாதமூலம்கமிஷ்யாமி யாநஹம் பர்யசாரிஷம்" என்றும், "నిత్యంయతీంద్రతవదివ్యపదాబ్జసేవాం" "நித்யம் யதீந்த்ரதவ" ... என்றும சொல்லுகிறபடியே ஸர்வப்ரகாரவிலக்ஷணமான மோக்ஷத்தை. ஏர் - அழகு. (எளிதினிலெய்துவன்) வருத்தமறப்ராபிப்பன். "உன்பதயுகமாமேர்கொண்டவீட்டில" என்று பாடமானபோது - தேவரீர்திருவடிகளிரண்டுமாகிற விலக்ஷணமோக்ஷத்திலே யென்றபடி. இவர் இப்பெரும்பேறு பெற்றபின்பு பகவல்லாபத்தையும் ஒருபொருளாக நினைக்கமாட்டார் காணும். திருவடிகளை மோக்ஷமாகச் சொன்னது - ஆநந்தாவஹத்வத்தாலே.

இப்படிச்சொன்னால் உமக்கு இந்தப்ராப்யலாபம் எத்தாலே? அத்தைச்சொல்லிக்காணீரென்ன (உன்னுடையகார்கொண்டவண்மை) "அதுவுமவனதின்னருளே" என்கிறபடியே தேவரீரௌதார்யமே அதுக்கு ஸாதநமென்கிறார். "கார்கொண்ட" என்கிற விசேஷணத்தாலே - மேகத்தில்நின்றும் க்ர்பைக்குண்டான வ்யாவ்ர்த்தி சொல்லுகிறார். மேகமானது நாலுமாஸம் வர்ஷிக்கக்கடவதாய் அப்போதும் அபேக்ஷித்தவிடங்களிலே வர்ஷியாதே ஸமுத்ரத்திலும் பர்வதாக்ரத்திலும் அரண்யப்ரதேசத்திலும்வர்ஷிக்கும்; இவருடைய ஔதார்யம் அப்படியன்றிக்கே, * கொள்ளக்குறை

வற்றிலங்கிக் கொழுந்துவிட்டோங்கி யிருப்பதாகையாலே ஸர்வ காலத்திலும் ஸர்வர்க்கும் ஸர்வபலங்களையும் கொடுத்துக்கொண் டிருந்து, மஹாவ்ருக்ஷம்போலே யிருக்கிற மஹா மேகத்தை பரா ஜிதமாக்கி என்னை ஸ்வாதீநமாக எழுதிக்கொண்ட தென்றபடி. இப்படிப்பட்ட தேவரீருடைய பரமக்ருபாபூர்வகமாக இந்த ஔ தார்யமொன்றுமே அந்தபலத்துக்கு ப்ராபகமென்றபடி. (இராமா நுசா) எம்பெருமானாரே. (இதுகண்டுகொள்ளே)இதுதான்சொல் லவேணுமோ, *கையிலங்குநெல்லிக்கனிபோலேயிருக்கிறஇவ்வர்த் தத்தைதேவரீர் கண்டுகொள்ளமாட்டீரோ, அடியேன் சொல்லக் கேட்டருளவேணுமெனனுமொருநிர்ப்பந்தமுண்டோ. "సులభం స్వ గురుం త్యక్త్వా దుర్లభం య ఉపాసతే। లబ్ధం త్యక్త్వా ధనం మూఢో గుప్తమన్వేషతి క్షితౌ" "ஸுலபம்ஸ்வகுரும்த்யக்த்வா துர்லபம்யஉபாஸதே,லப்தம்த்யக்த்வாதநம் மூடோ குப்தமந்வேஷதேக்ஷிதௌ" என்னக்கடவதிறே. (அ௯)

உரை.—அ.—எண்பத்துநாலாம்பாட்டு. மேல்பெறும் அம்சம் கிடக்கச்செய்தேஇதுககுமுனபுநான்பெற்றவைதனக்கு ஒருஅவதி யுண்டோவென்கிறார்.

கண்டுகொண்டேனெம்மிராமாநுசன்றன்னைக்காண்டலுமே, தொ ண்டுகொண்டே னவன்றொண்டர்பொறறாளிலென் றொல்லைவெந் நோய், விண்டுகொண்டேனவன்சீரவெள்ளவாரியைவாய்மடுத்தி ன், றுண்டுகொண்டேனின்னமுற்றனவோதினுலப்பில்லையே. ()

| பதம். | உரை. |
|---|---|
| எம்இராமாநுசன்றன்னை | இவர் நம்மோடு ஸஜாதியரல்லர் நம்மைஉத்தரிக்கவந்தவரென்றுஅஸ்மத்ஸ்வாமியானஎம்பெருமானாரை, |
| கண்டுகொண்டேன் | உள்ளபடிகண்டுகொண்டேன்; |
| காண்டலுமே | இப்படி தர்சித்தவளவிலே, அவர் தம்மளவிலே |
| அவன்தொண்டர் | அவர்க்கு அநந்யார்ஹாரானவர்களுடைய |
| பொன்தாளில் | அழகிய திருவடிகளிலே, |

| பதம். | உரை. |
|---|---|
| தொண்டுகொண்டேன் | அடிமைப்பட்டேன்; |
| என் | என்னுடைய, |
| தொல்லை | அநாதியாய், |
| வெம் | அதிக்ரூரமான, |
| நோய் | கர்மங்களை, |
| விண்டுகொண்டேன் | நீக்கிக் கொண்டேன்; |
| அவன் | அவருடைய, |
| சீர்வெள்ளவாரியை | குணபூரமாகிறஸமுத்ரத்தை, பெருவிடாயர் மடுவிலே வாய்மடுத்துப் பருகுமாப்போலே, |
| வாய்மடுத்து | பெரிய அபிநிவேசத்தோடே, |

| பதம். | உரை. |
|---|---|
| இன்றுஉண்டுகொண்டேன் | இன்று புஜித்துக்கொண்டேன்; |
| இன்னம் | இன்னமும், |
| உற்றன | நான்பெற்றவற்றை, |
| ஓதில் | சொல்லில், |
| உலப்பில்லை | அதுக்கு ஒரு முடிவில்லை. |

பதம். உரை.

காண்டலுமேயென்றது-கண்டவளவிலே என்றபடி. தொண்டுகொண்டேனென்று தொண்டுபட்டேனென்றுஒரு முழுச்சொல்லு; அடிமையைக் கைக்கொண்டேனென்னுதல். விள்ளுதல்-நீங்குதல். வாரி-ஸமுத்ரம். உலப்பு-முடிவு. ... ... ...(அச)

---

வ்யா.—அ.—எண்பத்துநாலாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே-ப்ரதமபர்வநிஷ்டர்கோஷ்டியிலே அநவயியாதே யிருக்கிறவென்னைசரமபர்வமான எம்பெருமானார் திருவடிகளை பரமப்ராப்யமாக இவனத்யவஸித்திருக்கிறானென்று லோகத்தாரெல்லாரு மறியும்படி பண்ணியருளினாரென்று சொல்லி, இதிலே - எனக்கு வகுத்த சேஷியான எம்பெருமானாரைக் கண்ணாரக்கண்டு அந்தக்காட்சிகொழுந்துவிட்டோடிப் படர்ந்து ததீயபர்யந்தமாக வளருகையாலே அவர்களுடைய திருவடிகளிலே அடிமைப்பட்டு அதிகரூரமான துஷ்கர்மங்களைக் கட்டடங்கவிடுத்துக்கொண்டு அவருடைய கல்யாணகுணாம்ருதத்தை வாயார அள்ளிக்கொண்டு பருகிநின்றநான, இன்னமும் பெற்றவற்றைச் சொல்லப்புகால்மேலபெறவேண்டுமவற்றுக்கு ஒரு தொகையின்றிக்கே யிருக்கச்செய்தே இவைதன்னை ஒருவாசகமிட்டு என்னால சொல்லித் தலைக்கட்டப் போகாதென்கிறார்.

வ்யா.—(கண்டுகொண்டேன்) "కాషాయశోభికమనీయశిఖానివేశం దణ్డత్రయోజ్జ్వలకరం విమలోపవీతం। ఉద్యద్దినేశనిభముల్లసదూర్ధ్వపుణ్డ్రం రూపం తవాస్తు యతిరాజ దృశోర్మమాగ్రే" "காஷாயஶோபிகமநீயஶிகாநிவேஶம் தண்டத்ரயோஜ்வலகரம் விமலோபவீதம் - உத்யத்திநேஶநிபமுல்லஸதூர்த்வபுண்ட்ரம்ரூபம்தவாஸ்து யதிராஜத்ருஶோர்மமாக்ரே" என்று ப்ரார்த்தித்துப்பெறவேண்டின வடிவழகை ஆகஸ்மிகமாகக் கண்ணாரக் கண்டுகொண்டேன். "கண்டோம கண்டோம் கண்டோம் கண்ணுக்கினியன கண்டோம்," "திருக்கண்டேன் பொன் மேனிகண்டேன் திகழு, மருக்கனணி நிறமுங்கண்டேன்" இத்யாதிப்படியே * மயர்வறமதிநலமருளப்பெற்றவர்கள் ததீயரைக்கண்டாற்போலே ஸாக்ஷாத்கரித்தென்றபடி. நீர்தாம் கண்ட ப்ரகாரமேதென்னில் (எம்மிராமாநுசன்றன்னை) "కలౌ రామానుజ స్మృతః" "கலௌராமாநுஜஸ்ஸ்ம்ருத:" என்றும், "శేషో వా సైన్యనాథో వా శ్రీపతిర్వేతి సాత్త్వికైః। వితర్క్యాయ మహాప్రాజ్ఞైః యతిరాజాయ" "ஶேஷோவாஸைந்யநாதோவா ஶ்ரீபதிர்வேதிஸாத்விகை:-விதர்க்யாய மஹாப்ராஜ்

ஜைஞ்யதிராஜாய" என்றும் சொல்லுகையாலே இவர் நம்முடைய கோடியிலேயொருவரல்லர், எங்களை ஸம்ஸாரத்தில்நின்றும்உத்தரிக்கைக்காக பரமபதத்தினின்றும் நானிருந்தவிடந்தேடி வந்தவர் எனறத்யவஸித்துக்கொண்டு அஸ்மத்ஸ்வாமியான எம்பெருமானுருடையபடியை உள்ளபடிகண்டேனென்றபடி.

(காண்டலுமேதொண்டுகொண்டேன்அவன்தொண்டர்பொற்றுளில்) இப்படிதர்சித்தவளவிலே அந்தப்ரீதியானது மேன்மேலும பெருகிவந்து தம்மளவிலே சுவறிப்போகாதேஅவருக்குஅநந்யார்ஹரான ததீயரைத தொடர்ந்து அவர்களுடைய ஸ்பர்ஹணீயமான திருவடிகளிலே எல்லாவடிமைகளும் செய்வதாக அடிமைப்பட்டேன். "காண்டலுமே"என்றது- கண்டவளவிலே யென்றபடி. தொண்டுகொண்டேன் என்றது - தொண்டு பட்டேனென்று ஒருமுழுசசொல்லு. அடிமையைக்கொண்டேனென்னுதல். "த்வத்தாஸ தாஸ கணநாசரமாவதௌ யஸ்த்வத்தாஸதைகரஸதா விரதாமமாஸ்து" "த்வத்தாஸதாஸ கணநாசரமாவதௌயஸ்த்வத்தாஸதைகரஸதா விரதாமமாஸ்து" என்று ஜீயருமபேக்ஷித்தருளினாரிறே. (என்தொல்லைவெந்நோய் விண்டுகொண்டேன்)இப்படிதாஸ்யததிலே அந்வயிக்கவே அநாதி காலார்ஜிதங்களாய் ஸர்வேச்வரனுடைய * க்ஷிபாமி * நக்ஷமாமிக்குடலாய அதிக்ரூரங்களான கர்மங்களினுடைய பலமான என்னுடைய ஆத்யாத்மிகாதி துக்கங்களையெல்லாம் கட்டடங்க விடுவித்துக்கொண்டேன். விள்ளுதல் - நீங்குதல்.

(அவன் சீர்வெள்ளவாரியை) அந்த எம்பெருமானுருடைய கல்யாண குணங்களாகிற மஹாஸமுத்ரத்தை; ப்ரவஹியாநிற்கிற ஸமுத்ரத்தையென்றபடி. அவருடைய கலயாணகுணஙகள் அஸங்கயேயங்களாகையாலே அவற்றுக்கு நிஸ்சலமாய்கொண்டு பரித்ர்ஸ்யமாநமான ஸமுத்ரதசைப் போலியாகச்சொல்லவொண்ணாதென்று கரைபுரண்டு ப்ரவஹியாநிற்கிறஸமுத்ரத்தைப் போலியாகசசொல்லுகிறார். விஷயம் அநுபூதமாயிருக்கிறப்போலே இதுவும் அநுபூதமாய்காணுமிருப்பது. அன்றிக்கே அவருடைய கல்யாணகுணபூரமாகிற ஸமுத்ரத்தையென்னுதல். வாரி- ஸமுத்ரம். (வாய்மடுத்தின்றுண்டுகொண்டேன்)ஆதித்யகிரணங்களாலே தப்தனாய் த்ர்ஷார்த்தனானவன்மடுவிலே புக்கு வாய்மடுத்து அந்நீரைப்பருகுமாப்போலே அமுதனாரும் இவருடைய விஷயீகாரத்தைப் பெறுமளவும ஸாம்ஸாரிகதுக்கதாபதப்தராகையாலே அந்த விடாயெல்லாந் தீரும்படி இவருடைய விஷயீகாரத்தைப்பெற்று இவர்தம்மருகேசென்று அந்தக்கல்யாணகுணாம்ர்தத்தைப் பெரிய அபிநிவேசத்தோடே வாய்மடுத்து அநுபவித்துக்களித்தேனென்

கிறார். க்ஷீராதி ரஸ்யபதார்த்தங்கள் நமக்கு ரஸித்திருக்கிறப்போலேகாணும், "பாலேபோல்சீர்" என்னும்படியான அவருடைய கல்யாண குணங்கள் இவருக்கு ரஸிக்கிறபடி. வாய்மடுத்துண்கையாவது - வாயைத்திறந்து அவற்றுக்கு வாசகமான ஶப்தராசியையிட்டு அவைதன்னையே ஸ்துதிக்கை.

(இன்னமுற்றன) இவ்வளவும் சொல்லிப்போந்த இவையன்றிக்கே இன்னமும் அவர்தம்மாலே நான்பெற்றபேற்றை. (ஓதில்) சொல்லப்புக்கால். (உலப்பிலலை) முடிவில்லை. நான் பெற்றவற்றுக்கு ஒருதொகையில்லாமையாலே கணக்கிட்டுச் சொல்லமாட்டிற்றிலேனென்கிறார். உலப்பு - முடிவு. ... ... ... (அச)

உரை.—அ.—எண்பத்தஞ்சாம்பாட்டு. "இராமாநுசன்றன்னை-கண்டுகொண்டேன், அவன்தொண்டர் பொற்றாளில்-தொண்டுகொண்டேன்" என்றீர், இரண்டில் உமக்கு ஊற்றமெதிலேயென்ன; எம்பெருமானார்க்கு அநந்யார்ஹரா யிருப்பார்திருவடிகளையொழிய என்னாத்மாவுக்கு வேறொருபற்றில்லையென்கிறார்

மூ.—ஓதியவேதத்தினுட்பொருளாயதனுச்சிமிக்க
சோதியைநாதனெனவறியாதுழல்கின்றதொண்டர்
பேதைமைதீர்த்தவிராமாநுசனைத்தொழும்பெரியோர்
பாதமல்லாலென்றனுருயிர்க்கியாதொன்றும்பற்றிலலையே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ய | தாங்கள் அதிகரித் | | பட்டு உழன்று திரிகிறவர்களுடைய, |
| | ன் வேதத்து னுடைய, | பேதைமை | அப்ராப்த விஷய ப்ரவணத்துக்கடியான அஜ்ஞாநத்தை, |
| உட்பொருளாய் | ஆந்தர ப்ரமேயமாய, | | |
| | "ஸ்ருதிஸிரஸிதீப்தே" "ச்ருதி ஸிரஸி விதீப்தே' என்கிறபடியே, | தீர்த்த | போக்கியருளின, |
| | | இராமாநுசனை | எம்பெருமானாரை, |
| அதன் உச்சி | அந்தவேதஸிரஸ்ஸிலே, | தொழும் | தொழுகையே நிருபகமாமபடியான, |
| மிக்கசோதியை | நிரவதிகமாகப்ரகாசித்திருக்கிறவனை | பெரியோர் | பெருமையை யுடையவர்களுடைய, |
| நாதன்என அறியாது | நமக்கு நாதன் என்று அறியாதே, | பாதமல்லால் | திருவடிகளை யொழிய. |
| உழல்கின்ற தொண்டர் | வ்யதிரிக்த விஷயங்களிலே தொண்டு | என்றனுருயிர்க்கு | என்னுத்மாவுக்கு, |

பதம். உரை. பதம். உரை.

யாதொன்றும் வேறு ஏதேனுமொரு, பற்றில்லை அபாச்ரயமில்லை. "பேதைமைதீர்க்கும்" என்றும் பாடம்சொல்லுவர்கள். "ஆருயிர்க்கியாதொன்றும்" என ல் ககரத் ன் மேலேறின இகரம் குற்றியலிகரமாகையாலே, "பல்லுலகியாவும்" என்றவிடத்திற்போலே வண்ணம்கெடாமைக்குக் கழித்து, பூர்வாபரபாதங்களுக்குஒக்கப் பதினறெழுத்தாக எண்ணக்கடவது. (அரு)

வ்யா.—அ.— எண்பததஞ்சாம்பாட்டு. "இராமாநுசன்றன்னை - கண்டுகொண்டேன்" என்றும், "அவன்தொண்டர்பொற்றாளில்-தொண்டுகொண்டேன்" என்றும் தத்விஷயத்திலும் ததீயவிஷயத்திலும் இப்படி ஈடுபடாநின்றீர், ஆனால் இவ்விரண்டிலும் வைத்துக்கொண்டு உமக்கு எந்தவிஷயத்திலே ஊற்றமதிசயித்திருக்குமென்ன; அருகேயிருந்து கேட்கிறவர்களைக்குறித்து தாம் அதிகரித்துப்போந்த வேதத்தினுடைய பொருளாய்க்கொண்டு அந்தவேதசிரஸ்ஸுக்களான வேதாந்தங்களிலே ப்ரதிபாத்யனானவனை நமக்குவகுத்த சேஷியென்று அறியப்பெறாதே அப்ராப்தவிஷயங்களிலே தொண்டுபட்டும் கதாகதங்களாலே இடர்ப்பட்டும் போருகிற ஸம்ஸாரிப்ராயருடைய அறிவுகேட்டை விடுவித்த எம்பெருமானார்க்கு அநந்யார்ஹரானவர்களுடைய திருவடிகளையொழிய என்னாத்மாவுக்கு வேறொருஅபாச்ரயமில்லையென்கிறார்.

வ்யா.—(ஓதியவேதத்தினுட்பொருளாய்) "అష్టవర్షంబ్రాహ్మణము పనయీత తమధ్యాపయేత్" "స్వాధ్యాయోధ్యేతవ్యః" "వేదమనూచ్యాచార్యోన్తేవాసినమనుశాస్తి" "స్వాధ్యాయాన్మాప్రమదః" "அஷ்டவர்ஷம்ப்ராஹ்மணமுபநயீத, தமத்யாபயேத்" "ஸ்வாத்யாயோத்யேதவ்ய:" "வேதமநூச்யாசார்யோந்தேவாஸிநமநுசாஸ்தி" "ஸ்வாத்த்யாயாந்மாப்ரமத:" என்கிறபடியே - அத்யயநவிதிபரதந்த்ரராய்க்கொண்டு, தாம் அதிகரித்த வேதத்தினுடைய அவாந்தர ப்ரமேயமாய், "భజేత్సారతమంశాస్త్రమ్" "பஜேத்ஸாரதமம்சாஸ்த்ரம்" என்றும், "సర్వతస్సారమాదద్యాత్" "ஸாவதஸ்ஸாரமாதத்யாத்" என்றும்சொல்லுகிறபடியே ஸாரதமமாய்.

(அதனுச்சிமிக்கசோதியைநாதனெனவறியாது) "వేదైశ్చసర్వైరహమేవవేద్యః" "வேதைச்சஸர்வைரஹமேவவேத்ய:" என்றும், "వేదవేద్యేపరేపుంసి" "வேதவேத்யேபரேபும்ஸி" என்றும், "వేదేరామాయణేపుణ్యే" "வேதேராமாயணேபுண்யே" என்றும், "ఆదౌమధ్యేతథాన్తేచవిష్ణుస్సర్వత్రగీయతే" "ஆதௌமத்யேததாந்தேசவிஷ்ணுஸ்ஸர்வத்ரகீயதே" என்றும், "உளன்சுடர்மிகுசுருதியுள்" என்றும், "శ్రుతిశిరసివిదీప్తే" "ஶ்ருதிஶிரஸிவிதீப்தே" என்றும் சொல்லுகிறபடியே

வேதசிரஸ்ஸுக்களாலே கட்டடங்கப்ரதிபாத்யனாய், "జ్యోతిషాం జ్యోతిః" "తేజసాం రాశిమూర్జితమ్" "ஜ்யோதிஷாம் ஜ்யோதி:" "தேஜஸாம் ராசிமூர்ஜிதம்" என்கிறபடியே நிரவதிகமாக ப்ரகாசிக்கிறஸர்வேச்வரனை, "పతిం విశ్వస్య" "பதிம் விச்வஸ்ய" என்கிறபடியே நமக்கு ப்ராப்த சேஷியென்றறியமாட்டாதே. (உழல்கின்ற தொண்டர்) "కలౌ జగత్పతిం విష్ణుం సర్వస్రష్టారమీశ్వరమ్। నార్చయిష్యన్తి మైత్రేయ పాషణ్డోపహతా జనాః" "கலௌ ஜகத்பதிம் விஷ்ணும் ஸர்வஸ்ரஷ்டாரமச்யுதம், நார்ச்சயிஷ்யந்தி மைத்ரேய பாஷண்டோபஹதா ஜநா:" என்றும், "న మాం దుష్కృతినో మూఢాః ప్రపద్యన్తే నరాధమాః। కామైస్తైస్తైర్హృతజ్ఞానాః ప్రపద్యన్తేఽన్యదేవతాః" "நமாம் துஷ்க்ருதிநோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா:, காமைஸ்தைஸ்தைர் ஹ்ருதஜ்ஞாநா: ப்ரபத்யந்தே ந்யதேவதா:" என்றும், "నాథే నః పురుషోత్తమే త్రిజగతామేకాధిపే చేతసా। సేవ్యే స్వస్య పదస్య దాతరి సురే నారాయణే తిష్ఠతి। యం కఞ్చిత్పురుషాధమం కతిపయగ్రామేశమల్పార్థదం సేవాయై మృగయామహే నరమహో మూకా వరాకా వయమ్" "நாதே ந: புருஷோத்தமே த்ரிஜகதாமேகாதிபே சேதஸா - ஸேவ்யே ஸ்வஸ்ய பதஸ்ய தாதரி ஸுரே நாராயணே திஷ்டதி - யம் கஞ்சித்புருஷாதமம் கதிபயக்ராமேசமல்பார்த்ததம் ஸேவாயைம்ருகயாமஹே நரமஹோ மூகாவராகாவயம்" என்றும் சொல்லுகிறபடியே அநாதிபாபவாஸனையாலே க்ஷுத்ரதேவதைகளுக்கும் க்ஷுத்ரமநுஷ்யர்க்கும் தங்களுக்கும் என்றும் மொக்க சேஷபூதராய் அந்தசேஷவ்ருத்தி தன்னாலே, "అధశ్చోర్ధ్వం చ ప్రసృతాః, తస్య శాఖా గుణప్రవృద్ధా విషయప్రవాలాః" "அதஶ்சோர்த்வஞ்சப்ரஸ்ருதா:, தஸ்யசாகா: குணப்ரவ்ருத்தா விஷயப்ரவாளா:" என்றும், "గతాగతం కామకామా లభన్తే" "கதாகதம் காமகாமா லபந்தே" என்றும் சொல்லுகிறபடியே - கர்ப்ப ஜந்ம யாம்ய தூமாதிமார்க்கங்களிலே ஸஞ்சரித்து, பஞ்சாக்நிவித்யையிலே சொல்லுகிறபடியே தேவாதி யோநிகள்தோறும் * மாறிமாறிப்பலபிறப்பும் பிறந்து திரியாநிற்கிற சபலருடைய.

(பேதைமைதீர்த்த) "తేషామేవానుకమ్పార్థమహమజ్ఞానజం తమః। నాశయామి" "தேஷாமேவாநுகம்பார்த்தமஹமஜ்ஞாநஜம் தம: - நாசயாமி" என்றகீதாசார்யனைப்போலே, "పాపధ్వాన్తక్షయాయ చ। శ్రీమానావిరభూద్భూమౌ రామానుజదివాకరః" "பாபத்வாந்தக்ஷயாயச - ஸ்ரீமாநாவிரபூத்பூமௌ ராமாநுஜதிவாகர:" என்றும் - அஜ்ஞாநத்வாந்த நிவாரகராகையாலே அப்ராப்தவிஷயபஜநத்துக்கடியான அஜ்ஞாநத்தை வாஸனையோடே போக்கியருளினாரென்கிறார். (இராமாநுசனைத்தொழும்பெரியோர்பாதமல்லால்) இப்படி ஸர்வோத்தாரகரான எம்பெருமானாரைத் தாந்தாமுகந்து ரக்ஷகராக அத்யவஸித்திருக்கும் மஹாத்மாக்களுடைய பரமப்ராப்யமான திருவடி

யொழிய. பெரியோர்- ஆழ்வான், ஆண்டான், பிள்ளான்தொடக்கமானாரென்றபடி. (தொழும்பெரியோர்) "அடியைத் தொடர்ந்தெழுமைவர்கள்" என்று சொல்லவேண்டும்படி அவனை ஆச்ரயித்திருந்த பாண்டவர்கள், "சிறியார்" என்கிறபடியே உருவற்ற ஜ்ஞாநராய்ப்போந்தார்கள்; இவரை ஆச்ரயித்தவர்களுக்கு அப்படிப்பட்ட குறைகளொன்றுமின்றிக்கே அத்தாலேஇப்படிப்பட்ட பெருமையொன்றுமேகாணும் முற்படவுண்டாவது. (என்றனாருயிர்க்கு) * "அவன்தொண்டர் பொற்றாளில் தொண்டுகொண்டேன்" என்னும்படியான அத்யவஸாயத்தோடே போந்திருக்கிறவென்னுடைய விலக்ஷணமான ஆத்மாவுக்கு. (யாதொன்றும் பற்றில்லையே) வேறொரு அபாஶ்ரயமில்லை. "[illegible]" "வாசா யதீந்த்ர" என்கிறச்லோகத்தாலே இவ்வர்த்தத்தையும் ஜீயருமருளிச்செய்தாரிறே. ... ... ... ... (அரு)

உரை.—அ.—எண்பத்தாறும்பாட்டு. "இராமாநுசனைத் தொழும் பெரியோர்பாதமல்லாலென்றனுயிர்க்கியாதொன்றும் பற்றில்லை" என்றவநந்தரம, முன்பு அப்ராப்தவிஷயங்களைப் பற்றியிருப்பாரை பந்துக்களாக நினைத்து அவர்களளவிலே தாம்ப்ரவணராய்ப்போந்தபடிகளை யநுஸந்தித்து, இனி அது செய்யேன், எம்பெருமானாரைச்சிந்திக்கும்மநஸ்ஸுடையார் யாரேனுமாகிலும் அவர்கள் என்னை ஆளவுரியவர்களென்கிறார்.

மூ.—பற்றுமனிசரைப்பற்றியப்பற்றுவிடாதவரோ
யுற்றாரெனவுழன்றோடினையேனினியொள்ளியநூல்
கற்றார்பரவுமிராமாநுசனைக்கருதுமுள்ளம்
பெற்றார்யவரவரெம்மைநின்றாளும்பெரியவரே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| பற்று | ஒன்றுக்கும்பற்றாத, | ஓடி | அவர்கள் முகத்தில் விழிக்கப் பெறுவதெப் போதோவென்று ஓடி, |
| மனிசரை | க்ஷுத்ரமநுஷ்யரை, | | அவர்களுடைய ஸம்ச்லேஷ விச்லேஷங்களிலுண்டான ஹர்ஷ சோகங்களாலே, |
| பற்றி | ஆச்ரயித்து, | | |
| அப்பற்று விடாதவரோ | அநதஆச்ரயணம் விடாதே நிற்கிறவர்களையே, | | |
| உற்றோரென | பந்துக்களென்று அநுஸந்தித்து, | | |
| உழன்று | அவர்பின்னே திரிந்துழன்று, அவர்கள் விஷயமான ப்ராவண்யத்தாலே, | இனிளை யேன் | இனிஶிதிலனாகேன்; |
| | | | தத்வஹித புருஷார்த்தங்களை, |

| பதம். | உரை. |
|---|---|
| ஒள்ளிய | ஸுவ்யக்தமாக ப்ரகாசிப்பிக்கும், |
| நூல் | சாஸ்த்ரங்களை, |
| கற்றார் | அதிகரித்திருக்குமவர்கள், தங்கள் கல்விக்கு ப்ரயோஜநமிதுவென்று, |
| பரவும் | ப்ரேமத்தாலே அடைவுகெட ஸ்தோத்ரம் பண்ணுநின்றுள்ள, |
| இராமாநுசனை | எம்பெருமானாரை, |
| கருதும் | அநுஸந்திக்கையேயாத்ரையாயிருக்கும், |
| உள்ளம் | மநஸ்ஸை, |
| பெற்றார் | நிதிபெற்றாப்போலே லபித்திருக்குமவர்கள், |

| பதம். | உரை. |
|---|---|
| யவர் | யாவர் சிலர், அவர்கள் குலசரண கோத்ரங்கள் ஏதேனுமாக வமையும், |
| அவர் | அவர்கள், |
| எம்மை | நம்மை, |
| நின்றாளும் | இவ்வாத்மா உள்ளளவும் ஒருபடிப்பட அடிமை கொள்ளும், |
| பெரியவர் | மஹாநுபாவர். |

அதவா, பற்றுமனிசர் இத்யாதிக்கு-க்ஷுத்ரமநுஷ்யரை ஆச்ரயித்து அந்த ஆச்ரயணம்விடாதே அவர்களையே உத்தாரகராக அநுஸந்தித்து உழன்று ஒழிகையேனென்னவுமாம். (அசு)

---

வ்யா.—அ.—எண்பத்தாறும்பாட்டு. கீழ்ப்பாட்டிலே "இராமாநுசனைத்தொழும் பெரியோர் பாதமல்லாலென்றனுருயிர்க்கி யாதொன்றும் பற்றில்லை" என்று-தம்முடைய நிஷ்டையைசசொன்னார்- இப்பாட்டிலே - முற்காலமெல்லாம் அப்ராப்த விஷயங்களைத் தங்களுக்கு அபாச்ரயமாகப் பற்றிக்கொண்டு போந்து அவர்களைபந்துக்களாக நினைத்து அவர்களளவிலே, "தாயேதந்தையென்றுந் தாரமே கிளைமக்களென்றும்" என்கிறபடியே தாம அதிமாத்ரபரவணராய்ப் போந்தபடிகளை யநுஸந்தித்து பீதபீதராய், அப்படி செய்யக் கடவேனல்லேன், தத்வ ஹித புருஷார்த்தங்களை உள்ளபடி யறியக்கடவரான பெரியோர்களாலே ஸ்துதிக்கப்படுகிற எம்பெருமானாரைச் சிந்திக்கும் மநஸ்ஸை, நிதிபெற்றாப்போலே லபித்தவர்கள் ஆரேனுமாகிலும அவர்களே எனனை ஆளவுரியவர்களென்கிறார்.

வ்யா.—(பற்றுமனிசரைப்பற்றி) "பெரியேனாயினபின் பிறர்க்கே யுழைத்தேழையானேன்" என்றும், "ஶப்தாதிபோகஸக்தாஃ" "பாந்தவாபாஸலோலஃ" என்றுஞ் சொல்லுகிறபடியே ஸம்பத் ஸர்வஸ்வாபஹாரிகளாய் ஆபதிஅரக்ஷகராயுமிருக்கையாலே ஒன்றுக்கும் பற்றாதக்ஷுத்ரமநுஷ்யரை ஸ்வரூபநாசகரமான அடிமைத்தொ

ழில்செய்வதாக ஆச்ரயித்து.(அப்பற்றுவிடாதவரே) அந்த ஆச்ரயணத்தை விடமாட்டாதவரே. (உற்றுரெனவுழன்றோடி) இப்படி ஆபாஸபந்துக்களானவர்களை மாத்ர்பித்ர்பௌத்ராதியான ஸர்வவிதபந்துக்களென்றும் நிர்வாஹகரென்றும் ரக்ஷகரென்றும் ப்ரமித்து அவர்கள் பின்னே திரிந்து அவர்களைப் பார்க்குமளவும் நின்றவிடத்தில் நிற்கவொட்டாத அதிமாத்ர ப்ராவண்யத்தாலே அவர்களிருந்தவிடம் தேடிக்கொண்டு ஓடி. அவர்கள் தன்னிலும் தண்ணியரென்று அறியமாட்டாதே அவர்களாலே என்றனக்கு ஒருபுருஷார்த்தஸித்தி யுண்டென்று அவர்கள்க்ருஹங்களுக்குப் பலபடியாலு மோடி. ஓடி - ஓடிப்போயென்றபடி. (நையேனினி) எம்பெருமானாருடைய விஷயீகாரத்தைப் பெற்றபின்பு இப்படி செய்து பரிதிலனுகேன். அவர்களுடைய ஸம்ஶ்லேஷ விஶ்லேஷங்களிலுண்டான ஹர்ஷஶோகங்களாலே பரிதிலனுகேனென்றபடி.

அன்றிக்கே, (பற்றுமனிசர்) இத்யாதிக்கு - க்ஷுத்ரமநுஷ்யரை யாஶ்ரயித்து அந்த ஆஶ்ரயணம் விடாதே அவர்களையே உற்றுராக அநுஸந்தித்து உழன்று ஓடிநையேனென்று பொருளாகவுமாம். “దురీశ్వరద్వారబహిర్వితర్దికా దురాసికాయైరచితోయమఞ్జలిః” “துரீஶ்வரத்வாரபஹிர்விதர்திகா துராஸிகாயை ரசிதோயமஞ்சலிஃ” என்கிறுப்போலே அவர்களுக்கு ஒரு நமஸ்காரமென்கிறார்காணும்.

(ஒள்ளியநூல்கற்றார் பரவும்) “ఋచోయజూంషిసామాని తథైవాథర్వణానిచ। సర్వమష్టాక్షరాన్తస్థం యచ్చాన్యదపివాఙ్మయమ్” “స్వజ్ఞానంప్రాపకజ్ఞానం ప్రాప్యజ్ఞానంముముక్షుభిః। జ్ఞానత్రయముపాదేయమేతదన్యంనకిఞ్చన” “ரிசோயஜூம்ஷிஸாமாநிததைவாதாவணாநிச - ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்தம்யச்சாந்யதபிவாங்மயம்” “ஸ்வஜ்ஞாநம்ப்ராபகஜ்ஞாநம்ப்ராப்யஜ்ஞாநம் முமுக்ஷுபிஃ-ஜ்ஞாநத்ரயமுபாதேயமேதத்ந்யம்நகிஞ்சந” என்றும், “சுடர்மிகுசுருதி” என்றும் சொல்லுகிறபடியே ஸகலவேத ஸங்க்ரஹமாய் தத்வஹிதபுருஷார்த்தங்களை உள்ளபடி ப்ரகாஶிப்பிக்குமதானரஹஸ்யத்ரயத்தை ஸ்வாசார்யரான எம்பெருமானாருடைய ப்ரஸாதத்தாலே பெற்று, அதுக்கு ஆந்தர ப்ரமேயமாய் தத்யாதாத்ம்யரூபமாய் ஸாரதமமாயிருந்துள்ள அர்த்தம், “ఆచార్యదేవోభవ” “దేవమివఆచార్యముపాసీత” “ஆசார்யதேவோபவ” “தேவமிவ ஆசார்யமுபாஸீத” என்றும், “యస్యదేవేపరాభక్తి ర్యథాదేవేతథాగురౌ” “யஸ்யதேவே பராபக்திர் யதாதேவேததாகுரௌ” என்றும், “దేవవత్స్యాదుపాస్యః” (தேவவத்ஸ்யாதுபாஸ்யஃ) என்றும், “తస్మిన్రామానుజార్యేగురురితిచపదంభాతినాన్యత్ర” “தஸ்மிந்ராமாநுஜார்யேகுருரிதிசபதம்பாதி நாந்யத்ர” என்கையாலே - எம்பெருமானாரேயென்று

தெளிந்து நிலைபெற்றிருக்குமவர்கள் தந்தாமுடைய கல்விக்கு ப்ரயோஜந மிதுவேயென்று ப்ரேமத்தாலே அடைவுகெட ஸ்தோத்ரம் பண்ணுநின்றுள்ள.

(இராமாநுசனை) எம்பெருமானாரை. (கருதுமுள்ளம் பெற்றார் யவர்) "రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే" "ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம்ப்ரபத்யே" என்றும், "శరణముపైమి రామానుజమ్" "ஶரணமேமி ராமாநுஜம்" என்றும், "ராமாநுசமுனிவன் வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன்" என்றும், "இதத்தாயிராமாநுசன்" என்றும் சொல்லுகிறபடியே அநுஸந்திக்கையே யாத்ரையாயிருக்கும் திருவுள்ளத்தையுடையார், "எக்குற்றவாளரெதுபிறப்பேதியல்வாக நின்றோர்" என்கிறபடியே உருவற்றஜ்ஞாநத்தையும் தண்ணிய ஜந்மத்தையும் நிஷித்த வ்யாபாரத்தையு முடையாராகிலும்.

(அவர் எம்மை நின்றாளும் பெரியவரே) அப்படிப்பட்ட குற்றத்தையும் பிறப்பையும் இயல்வையுமுடையவர்களே நமக்குசேஷிகளாய், நம்மை யாவதாத்மபாவியாக அடிபேராதே ஒருபடிபட நின்று யதேஷ்டவிநியோகார்ஹராம்படி ஆளாநின்றுள்ள மஹாத்மாக்கள். "யவரேலுமவர்கண்டீர்" "அவரெம்மை நின்றாளும் பெரியவரே" என்று நம்மாழ்வாரும் அருளிச் செய்தாரிறே. "శ్వపచోపి మహీపాల విష్ణుభక్తో ద్విజాధికః" "నమో భగవద్భక్తా విప్రా భాగవతాస్స్మృతాః" "భక్తిరష్టవిధా హ్యేషా యస్మిన్ మ్లేచ్ఛేపి వర్తతే । స విప్రేన్ద్రో మునిశ్శ్రీమాన్ స యతిస్స చ పణ్డితః । తస్మై దేయం తతో గ్రాహ్యం స చ పూజ్యో యథా హ్యహమ్" "శ్వపచోపి హరేర్నామ యస్య వాచి" "సకృత్ప్రవర్తతే ... మత్పాదధూళిః" "అనువ్రజామ్యహం నిత్యం పూయేయేత్యఙ్ఘ్రిరేణుభిః" "తాస్సర్వాశ్శిరసా దేవః ప్రతిగృహ్ణాతి వై స్వయమ్" "ஶ்வபசோபிமஹீபாலவிஷ்ணுபக்தோத்விஜாதிக:" "நமோத்ராபகவத்பக்தாவிப்ராபாகவதாஸ்ஸ்மர்தா:" "பக்திரஷ்டவிதாஹ்யேஷா யஸ்மிந்ம்லேச்சேபிவர்ததே, ஸவிப்ரேந்த்ரோமுநிஶ்ஶ்ரீமாந் ஸயதிஸ்ஸசபண்டித:- தஸ்மைதேயம்ததோக்ராஹ்யம் ஸசபூஜ்யோயதாஹ்யஹம்" "ஶ்வபசோபிஹரேர்நாமயஸ்யவாசி" "ஸக்ர்தப்யவசாத்விநிர்கதஶ்சேத குலதைவவம்மமதஸ்யபாததூளி:" "அநுவ்ரஜாம்யஹம்நித்யம்பூயயேதயங்க்ரிரேணுபி:- தாஸ்ஸர்வாஶ்ஶிரஸாதேவ: ப்ரதிக்ர்ஹ்ணாதிவைஸ்வயம" என்னக்கடவதிறே. ... ... ... ... ... ... (அரு)

உரை.—அ.—எண்பத்தேழாம்பாட்டு. சேதநருடைய ஜ்ஞாநவ்யவஸாயங்கள்கலங்கும்படி ஆக்ரமியாநின்றுள்ளகலிகாலத்திலே உமக்கு இந்த வ்யவஸாயம் ஒருபடிப்பட நில்லாதிறே யென்ன; அது ஆக்ரமிப்பது எம்பெருமானாராலே உபக்ரமமான ஜ்ஞாநத்திலே அநந்விதராயுள்ளவர்களை யென்கிறார்.

மூ.—பெரியவர்பேசிலும்பேதையர்பேசிலுந்தங்குணங்கட்
குரியசொல்லென்றுமுடையவனென்றென்றுணர்வின்மிக்
தெரியும்வண்கீர்த்தியிராமாநுசன்மறைதேர்ந்துலகில்[கோர்
புரியும்நன்ஞானம்பொருந்ாதவரைப்பொருங்கலியே. ()

| பதம். | உரை. |
|---|---|
| பெரியவர் | பேசுகைக்கீடான ஜ்ஞாந ஶக்திகளையுடையராயிருக்கும்பேரளவுடையார், |
| பேசிலும் | சொல்லிலும், |
| பேதையர் | அஜ்ஞாந ஶக்திகளுக்கு எல்லையாயிருககும் அளவிலிகளானவர்கள், |
| பேசிலும் | சொலலிலும், அவர்களுடைய ஜ்ஞாநஶக்திகளால் எல்லைகாண ஒண்ணாத படியாய் இவர்களுடைய அஜ்ஞாநஶக்திகளால்நமக்குமூமயன்றெனறு மீளவேண்டாத படியாய், |
| தங்குணங்கட்குரிய | இபபடிதங்கள் குணஙகளுக்கீடாகப பேசலாம்படியிருககிற, |
| சொல் | தமமுடைய ஸ்வரூபாதிகளுக்கு வாசகமான ஶப்தங்கள், |
| என்றும | ஸர்வ காலத்திலும், |
| உடையவனென்றென்று | உடையராயிருக்குமவனென்று, |

| பதம். | உரை. |
|---|---|
| உணர்வில் மிக்கோர் | ஜ்ஞாநாதிகரானவர்கள், |
| தெரியும் | பலகாலும் விவேகித்தநுஸந்தியாநின்றுள்ள, |
| வண்கீர்த்தி | திவ்ய கீர்த்தியையுடையரான, |
| இராமாநுசன | எம்பெருமானார், |
| மறை | |
| தேர்ந்து | ஆராய்ந்து, |
| உலகில் | லோகத்திலே, |
| புரியும் | உபகரித்தருளின, |
| நல்ஞாநம் | |
| பொருந்ாதவரை | சேராதவர்களை, |
| கலிபொரும் | கலி மேலிட்டு நலியும். |

அந்தஜ்ஞாநத்தில் சேர்ந்தவர்களை நலியாதென்று கருத்து.

"குணங்கட்குரிய சொலலொன்றுமுடையவன்" என்று பாடமானபோது - தங்களுடைய ஜ்ஞாநஶக்திகளும்அஜ்ஞாநாஶக்களுமாகிற குணங்களுக்கீடாகப்பேசும் ஶப்தமித்தனையெல்லாம் மிகையென்றுதல், இது பொருதென்றுதல் சேராச் சேர்த்தியாயிராதே, அபரிச்சேத்யமஹிமாவாலும்அளவிறந்த ஸௌஶீல்யத்தாலும் சேரும்படியாயிருக்கும் ஸ்வாமியென்றுபொருளாகக்

பதம். உரை. பதம். உரை.

கடவது. ஒன்றுதல் - கூடுதலாமான சொல்லை யென்று முடை
ய் - சேர்த்திக்கு வாசகமாகிறது. பராயிருக்குமவரென்று பொரு
"தன்குணங்கட்கு" என்றும் பாளாகக் கடவது. உரியவென்றது-
டம்சொல்லுவர்கள். அப்போது, தக்கவென்றபடி. தெரிதல் - வி
பெரியவர் பேசிலுமாம், பேதை வேகித்தல. வண்மை - அழகு.
யர் பேசிலுமாம், அவரவர்கள தேர்தல் - ஆராய்தல். புரிதல் -
ளவுக்கிடாகப் பேசலாம்படி தம் கொடுததல். பொருந்துதல் - சே
முடைய குணங்களுக்கு ப்ராப்த ருதல். ... ... (அ௭)

வ்யா.—அ.—எண்பத்தேழாம்பாட்டு. "அவரெம்மைநின்று
ளும்பெரியவரே" என்று-ததீயர்விஷயமாக உமக்குண்டான ப்ரா
வண்யத்தைச்சொன்னீர், ஆனால்சேதநருடைய ஜ்ஞாநவ்யவஸாய
ப்ரேமங்கள் கலங்கும்படி ஆகரமியாநின்றுள்ள இந்த கலிகாலத்தி
லேஉமக்குஇப்படிப்பட்டவ்யவஸாயம் என்றுமொக்கஒருபடிப்பட்
டிருக்கக் கூடுமோஎன்று அருகேயிருப்பார் சிலர்கேடக; பரத்வ
ஸௌலப்யாதி குண பரிபூர்ணராகையாலே, அளவுடையராயும்
அறிவிலிகளாயுமிருக்கிற அதிகாரிகள் ஸ்தோத்ரம் பண்ணப்புக்
கால் அவரவர்களுடைய அதிகாரத்துக்குத் தகுதியான பேச்சுக்க
ளாலே பேசுகைக்கீடானஸ்வரூபரூபகுணவிபூதிகளையுடையரான
எம்பெருமானாராலே உபகரிக்கப்பட்ட விலக்ஷணஜ்ஞாநத்தைப்
பெறாதே யிருந்தவர்களை அந்தகலிகாலம் ஆக்ரமித்து ஜ்ஞாநப்ரஂ
ஸத்தைப்பண்ணு மித்தனையொழிய அந்த ஜ்ஞாநத்தைப் பெற்ற
வென்னை ஆக்ரமிக்கமாட்டாது, ஆகையாலே எனக்குஇந்தவ்யவ
ஸாயம் யாவதாத்மபாவியாக நடக்கத்தட்டில்லையென்று திருவுள்
ளமாகஅருளிச்செய்கிறார்.

வ்யா.—(பெரியவர்பேசிலும்)ஸ்தோத்ரமபண்ணுகைக்கீடான
ஜ்ஞாநஸக்திகளை யுடையராயிருக்கும் பேரளவுடையார் ஸ்தோ
த்ரம் பண்ணிலும். (பேதையாபேசிலும்) ஸ்தோத்ரமபண்ணாதே
கைவாங்கியிருக்கைககீடான அஜ்ஞாநாஸக்திகளுக்கீடா யிருககும்
அறிவிலிகள் ஸ்தோத்ரம் பண்ணிலும். ஜ்ஞாநாதிகரானவர்கள்
தந்தாமுடைய ஜ்ஞாநஸக்த்யாதிகளாலேஎல்லைகாணவொண்ணாத
வைபவத்தையுடையவரென்று ஸ்தோத்ரத்தில் நின்றும் மீள
வேண்டும்படியும், அஜ்ஞானவர்கள் தந்தாமுடைய அஜ்ஞாநாஸ
க்திகளையநுஸந்தித்துக்கொண்டுஅவருடையவைபவமெங்கே, அஜ்
ஞான நாங்களெங்கே?, அவர் வைபவத்தை நாம் ஸ்துதிக்கை
வஸிஷ்டனைச் சண்டாளன் ஸ்தோத்ரம்பண்ணப்போனபடியா

மென்று ஸ்தோத்ரத்தில்நின்றும் மீளவேண்டி யிராதபடி. (தன் குணங்கட்குரிய சொல்லென்றுமுடையவன்) அவ்விருவருடை யவும் ஜ்ஞாநஶக்த்யாதிகளுக்கும் அஜ்ஞாநாஶக்த்யாதிகளுக்கும் தகும்படிதம்மை யமைத்துவைத்து அவற்றுக்குத்தகுதியாக அவ் விருவரும் ஸ்துதிக்கலாம்படியிருக்கிறதம்முடைய ஸ்வரூபரூபகுண விபூதிகளுக்குத் தனித்தனியேவாசகமானசப்தங்களை ஸர்வகாலமு முடையவர். ஸஹஸ்ரமுகமாக ஸர்வவித்யைகளையும் சிக்ஷித்து க்கொண்டு போந்த மாஹாத்ம்யத்தையுடையவ ராகையாலே எத் தனையேனும்ஜ்ஞாநஶக்த்யாதிகளையுடையாரும் அவருடையவைப வத்துக்குத் தகுதியாகப் பாசுரமிட்டுச்சொல்லமாட்டார்கள். இப் படியானபின்பு அஜ்ஞாநாசக்திகளையுடையவர்க்குச் சொல்லவேண் டாவிறே. ஆனாலும் அவர்கள் தந்தாமுடைய பக்திபலாத்காரத்தா லேஸ்துதிக்கப்புக்கால்அவர்களுடையஸ்துதிக்குத் தகுதியாம்படி தம்மையமைத்துவிஷயமாக்கின ஸௌசீல்யகுண நிதியென்றபடி. என்று என்றது-இப்படிசொல்ல வென்றபடி. “தமகுணங்கட்கு” என்று பாடமானபோது - தந்தாமுடைய ஜ்ஞாநசக்திகளும் அஜ் ஞாநாஶக்திகளுமாகிறகுணங்களுக்கீடாகப்பேசும்சப்தமித்தனை மி கையென்றுதல், இதுபொருதென்றுதல், சேராசேர்த்தியாயிரா தே அபரிச்சேத்யமஹிமாவாலும் அளவிறந்த ஸௌசீல்யத்தாலும் சேரும்படியிருக்கும் ஸ்வாமியென்று பொருளாகக்கடவது. ஒன்று தல்-கூடுதலாய-சேர்த்திக்கு வாசகமாகிறது. இதுவேயதார்த்தம், விஸத்ர்சமாகச சொன்னார்களல்லர் என்று அவர்கள் பண்ணும் ஸ்தோத்ரங்களினுடைய ஸமீசீநயதையைஸ்த்தாபிக்கையென்ற படி. உரியவென்றது - தக்கவென்றபடி. உடையவரென்றது - ஸ்வாமியென்றபடி. “தம்குணங்கட்கு” என்றும் பாடஞ் சொல்லு வர்கள்; அபபோது - பெரியவர் பேசிலுமாம், பேதையர்பேசிலு மாம், அவர்கள் தந்தாமுடையஅளவுகளுக்கீடாகப் பேசலாம்படி தம்முடையகுணஙகளுககு ப்ராப்தமான சொல்லையென்று முடை யவரா யிருககுமவரென்று பொருளாகக்கடவது.

(உணர்வில்மிககோர்) ஜ்ஞாநசக்திகளில் வந்தால் “இவர் களே ஸர்வஜ்ஞாகள் இவர்களே ஸர்வாதிதர்கள்” என்னும்படி * மயர்வறமதிநல மருளப்பெற்றவர்கள். (தெரியும் வண்கீர்த்தி) தெளிந்துகொண்டு, “கலியுங்கெடுங்கண்டுகொண்மின” என்னும் படி பவிஷ்யதாசார்ய விக்ரஹத்தைக் கொடுக்கும்படியாயிருக்கிற அழகிய கீர்த்தியையுடையரான. தெரிதல்-விவேகித்தல். வண்மை- அழகு (இராமாநுசன்) எம்பெருமானார். (மறைதேர்ந்துலகில்) “గమ్భీరాణామకృతకగిరామ్” “கம்பீராணுமகர்தககிராம்” என்கிறபடியே தன்னுடைய * உட்பொருளைத் தெரியப்புக்கார்க்கு தான் அதிக ஹநமாயிருக்கையாலே வேதத்துக்கு “மறை” என்று பேராய் த்து. இப்படிப்பட்டவேதத்தை, “ఇతిహాసపురాణాభ్యాం వేదంసముపబృంహ

கூ" "இதிஹாஸபுராணுப்யாம்வேதம்ஸமுபப்ரஹ்மயேத்" என்கிறபடியே உபப்ரஹ்மணத்தைக்கொண்டு அர்த்தவிரோதாதிகளொன்றும் வாராதபடிபராமர்சித்து வேதார்த்தஸங்க்ரஹ கீதாபாஷ்யாதிகளைப் பண்ணியருளியென்றபடி. தேர்தல் - ஆராய்தல்.

(உலகில் புரியும்நன்ஞானம்)இந்தஅஜ்ஞாநப்ரசுரமான லோகத்திலே அவற்றை வ்யாக்யாநம்பண்ணி ஆஸேதுஹிமாசலமாக எல்லார்க்கும் உபகரித்த விலக்ஷணமான ஜ்ஞாநத்திலே. புரிதல்- கொடுத்தல். (பொருந்தாதவரை) இப்படிஸர்வருக்கும் உபதேசித்துப் போந்தாலும்,உய்யக்கொண்டாரைப்போலேவிஸ்வாஸமாந்த்யதையாலும் கர்ப்பநிர்ப்பாக்யதையாலும் அந்வயி யாதவர்களை. உபதேசத்துக்குட்படாதவர்களையென்றபடி. பொருந்துதல் சேருதல். (பொருங்கலியே) கலிதோஷம்வந்து ஆக்ரமிக்கும். கலிவந்து மேலிட்டு நலியத்தொடங்குமென்றபடி. ஆகையாலே எம்பெருமானாருடைய விஷயீகாரத்தாலே அந்த விலக்ஷணஜ்ஞாநத்தைப் பெற்றிருக்குமவர்கள் எவர்களேயாகிலும் அவர்களை கலிநலியமாட்டாதென்றதாய்த்து. "காவலில் புலனை வைத்துக் கலிதன்னைக் கடக்கப்பாய்ந்து - நாவலிட்டுழிதருகின்றோம் நமன்றமர்தலைகள் மீதே" என்று இவ்வர்த்தத்தைத்தொண்டரடிப்பொடியாழ்வாரும் அருளிச்செய்தாரிறே. "నఖలుభాగవతాయమవిషయంగచ్ఛన్తి" "நகலுபாகவதாயமவிஷயம்கச்சந்தி" என்றுச்ருதியும், "పరిహరమధుసూదనప్రపన్నాన్ ప్రభురహమన్యనృణాన్నవైష్ణవానామ్" "త్యజభటదూరతరేణతానపాపాన్" "பரிஹரமதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம்நவைஷ்ணவாநாம்" என்றும், "த்யஜபடதூரதரேணதாநபாபாந்" என்றும் * நமனும் தன்தூதுவரைகுறித்துச் சொன்னனிறே. ... (அஎ)

உரை.—அ.— எண்பத்தெட்டாம்பாட்டு. எம்பெருமானார் உபகரித்தஜ்ஞாநத்தில் அந்வயமில்லாதாரைக் கலிதோஷம் நலியுமென்றார் - கீழ்; அந்தஜ்ஞாநத்தை உபகரிக்கைக்காக அவர் வந்து அவதரித்தபடியை யநுஸந்தித்து, எம்பெருமானாராகிற ஸிம்ஹம் குத்ர்ஷ்டிகளாகிறபுலிகளைநிரஸிப்பதாகலோகத்திலேவந்தப்ரகாரத்தைச்சொல்லிஸ்தோத்ரம்பண்ணக்கடவேனென்கிறார்.—இதில்

மூ.—கலிமிக்கசெந்நெல்கழனிக்குறையல்கலைப்பெருமா
னொலிமிக்கபாடலையுண்டுதனனுள்ளந்தடிததததனால்
வலிமிக்கசீயமிராமாநுசன்மறைவாதியராம்
புலிமிக்கதென்றிப்புவநத்தில்வந்தமைபோற்றுவனே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| கலிமிக்க | உழுவது நடுவது அறுப்ப தாய்ச் செல்லுகிற ஆரவாரத்தால் மிக்க, | செந்நெல் | செந்நெற்கள் விளையாநின்றுள்ள, வயலகளையுடைய |

| பதம். | உரை. |
|---|---|
| குறையல் | திருக்குறையலூருக்கு நிர்வாஹகராய், * இருந்தமிழ் நூற்புலவராகையாலே, |
| கலை | சாஸ்த்ர ரூபமான ப்ரபந்தங்களைச் செய்தருளின, |
| பெருமான் | வைபவத்தை யுடையரான திருமங்கையாழ்வாருடைய, |
| மிக்கவொலி பாடலை | "ஒலிகெழுபாடல்" என்னும்படி மிகத்வநியையுடைத்தான திருமொழியை, |
| உண்டு | தாரகமாகவும் போஷகமாகவும் போக்யமாகவும் அநுபவித்து, |
| தன் | தம்முடைய, |
| உள்ளம் தடித்து | திருவுள்ளம பூரித்து, |
| அதனால் | அத்தாலே, ப்ரதிபக்ஷ தர்ஶநத்தை ஸஹியாதபடி, |
| வலிமிக்க | அதி ப்ரபலமான, |
| சீயம் | ஸிம்ஹம்போலே யிருக்கிற, |
| இராமாநுசன் | எம்பெருமானார், |

| பதம். | உரை. |
|---|---|
| | பாஹ்யரைப்போலன்றிக்கே, |
| மறை | வேதங்களை அங்கீகரித்துக்கொண்டு நின்று, |
| வாதியராம் | வாதங்களைப்பண்ணி லோகத்தை நஶிப்பிக்கிற, |
| புலிமிக்கதென்று | குத்ருஷ்டிகளாகிற புலிகள் மிக்கதென்று, ஸாதும்ருகங்களை நலியாநின்றுள்ள துஷ்டம்ருகமான புலிமிக்ககாட்டிலே அவை தன்னை நிரஸிக்க வற்றானதொரு ஸிம்ஹம் வந்து தலைப்படுமாபோலே, |
| இப்புவனத்தில் | ஸந்மததூஷகரான குத்ருஷ்டிகள் வர்த்திக்கிற இந்த பூமியிலே |
| வந்தமை | தந்மததூஷகராய்வந்தவதரித்தப்ரகாரத்தை, |
| போற்றுவன் | ஸ்துதிக்கக் கடவேன். |

கலி - ஆரவாரம்; மிடுக்குமாம். அப்போது பூஸாரத்தைச்சொல்லுகிறது. கழனி-வயல். சீயம்-ஸிம்ஹம். போற்றுதல்-புகழுதல்.

வ்யா.—அ.—எண்பத்தெட்டாம்பாட்டு. கீழ்ப்பாட்டில் - எம்பெருமானார் உபதேஶித்த ஜ்ஞாநத்தில் அந்வயமில்லாதாரை கலிப்ரயுக்தமரணதோஷம் ஆக்ரமித்து நலியுமென்று சொல்லி, இதிலே. அந்த ஜ்ஞாநத்தை லோகத்தார்க்கெல்லா முபதேஶிக்கைக்காக

அவர் * விண்ணின்தலைநின்றும் * மண்ணின்தலத்துதித்தபடியை யநுஸந்தித்து, செந்நெல்கள் விளையாநின்றுள்ள வயல்களையுடைய திருக்குறையலூர்க்கு ஸ்வாமியான திருமங்கையாழ்வாருடைய திவ்யப்ரபந்தமாகிறபெரியதிருமொழியை அநுபவித்துக்களித்து, ப்ரதிபக்ஷிகளுடையகந்தத்தையும் ஸஹிக்கமாட்டாதே ப்ரபலமான ஸிம்ஹம்போலேயிருக்கிற எம்பெருமானார், வேதபாஹ்யரைப்போலன்றிக்கே வேதத்தைப்ரமாணமாக இசைந்து அதுக்கு விபரீதார்த்தங்களைச்சொல்லி லோகத்தை நசிப்பித்த குத்ருஷ்டிகளாகிற புலிகள் தன்னரசு நாடாகக்கொண்டு தடையறநடமாடாநின்ற அவர்களுடைய மதங்களை நிரஸிக்கைக்காகஅவர்கள் நடையாடுகிற இந்தபூமியிலே வந்தவதரித்தப்ரகாரத்தை ஸ்துதிக்கக்கடவே னென்கிறார்.

வ்யா,—(கலிமிக்கசெந்நெல்கழனி) உழுவது நடுவது அறுப்பதாய்க்கொண்டு ஸர்வகாலமும் செல்லுகிற ஆரவாரத்தால மிக்க செந்நெலையுடைத்தான கழனிகளையுடைய. கலி - ஆரவாரம். அன்றிக்கே, "கலி" என்று - மிடுக்காய் ஸாரவத்தான பூமியிலே விளைந்தசெந்நெலென்னுதல். தத்தத்காலங்களிலே விதைத்து விளைந்த பயிராகையாலே ஸாரமாக விளையாநிற்கிற பயிரென்றுதல். கழனி-வயல். (குறையல்கலைப்பெருமான) இப்படிப்பட்ட செந்நெலகளோடே கூடின வயல்களையுடைத்தாகையாலே, "மன்னிய சீர் தேங்குங்குறையலூர்" என்கிறபடியே - ஸகலஸம்பத்துக்களையுமுடைத்தான திருக்குறையலூருக்கு நிர்வாஹகராய, "இருந்தமிழ் நூல்புலவன்" என்கிறபடியே - ஶாஸ்த்ரரூபங்களான திவ்யப்ரபந்தங்களைச செய்தருளி உபகரித்த மஹோபகாரகரான திருமங்கையாழ்வாருடைய. "குறையல்பிரானடிக்கீழ்" என்று இப்ரபந்தாதியிலேயும் இவருடைய உபகாரத்தை அநுஸந்தித்தாரிறே. செய தவம்ஶத்தில் க்ருதஜ்ஞராய்ப் போருகிறவர் இவரும் அவருமே காணும்.

(ஒலிமிக்கபாடலை) இம்மஹோபகாரகராலே அருளிச்செய்யப்பட்ட திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம் தொடக்கமான திவ்யப்ரபந்தங்களை "இனபபபாடல்" என்கிறபடியே-அநுஸந்திக்கப் புக்கவர்களுக்கு அர்த்தரஸத்தாலும் போக்யதையாலும் ஆநந்தம் மிகுதியாய்க்கரைபுரண்டிருக்கையாலேதிமிர்த்து, "கலியனதொலிமாலை" என்கிறபடியே பெருமிடறு செய்து அநுஸந்திக்கவேண்டுகையாலே மிக்கத்வநியையுடைத்தானப்ரபந்தங்கள். * மாறன்பணித்த தமிழ்மறைக்கு மங்கையர்கோன் ஆறங்கங்கூறுவதாகப் பண்ணியருளின திவ்யப்ரபந்தங்க ளென்றபடி. ஒலி - த்வநி. அந்தப்ரபந்தங்களைதாரகமாகவும் போஷகமாகவும்

போக்யமாகவும் நினைத்துக்கொண்டு முற்றூட்டாக வநுபவித்து. (தன்னுள்ளந்தடித்து) அவ்வநுபவஜநிதப்ரீதியாலே தம்முடைய திருவுள்ளம்பூரித்து. இவ்வநுபவத்தாலே காணும்ப்ரதிபக்ஷநிரஸநத்துக்குத் தகுதியான மிடுக்குஅவருக்குண்டானது. தடித்தல்-பூரிக்கை. (அதனால் வலிமிக்கசீயம்) அந்த பரிபூர்ணஜ்ஞாநமாகிற மிக்க பலத்தையுடையராய் ஸிம்ஹம்போலே யிருக்கிற. (இராமாநுசன்) எம்பெருமானார். ப்ரதிபக்ஷ தர்ஶநத்தை ஸஹியாதே அவர்களை பக்நராகப்பண்ணுமவராகையாலே, "வலிமிக்கசீயம்" என்கிறார். வலி - பலம். சீயம - ஸிம்ஹம். (மறைவரதியராம்) வேதாப்ராமாண்யவாதிகளான பௌத்தாதிகளைப்போலன்றிக்கே வேதத்தைப்ரமாணமாக அங்கீகரித்துவைத்து அதுக்கு அபார்த்தங்களைச்சொல்லி இவற்றைகொண்டு துர்வாதம்பண்ணி லோகத்தாரெல்லாரையும் ப்ரமிப்பித்துநஶிப்பித்துக்கொண்டுபோருகிறகுத்ர்ஷ்டிகளாகிற. (புலிமிக்கதென்று) புலிகள்மிக்கதென்று. நிவாரகரில்லாமையாலே அவை தனிக்கோல் செலுத்தாநின்றனவென்று. (இபபுவநத்தில் வந்தமை) ஸாதுமர்க்கங்களை நலியாநின்றுள்ளதுஷ்டமர்கமானபுலிமிக்ககாட்டிலே அவைதன்னை நிரஸிக்கவற்றானதொரு ஸிம்ஹம்வந்து தலைப்படுமாப்போலே ஸந்மததூஷகரான குத்ர்ஷ்டிகள் வர்த்தித்து தனிக்கோல் செலுத்துகிற இந்தபூமியிலே தந்மததூஷகராய்க்கொண்டு * விண்ணின்தலைநின்றும் வந்துஅவதரித்தப்ரகாரத்தை. (போற்றுவனே) ஸ்துதிக்கக்கட்வேன். போற்றுதல்-புகழ்தல். "[Grantha]" "குரும் ப்ரகாஶயேத்திமாந்" எனகிறபடியே அவர்தம்முடைய குணசேஷ்டிதங்களைப புகழக்கடவேனென் றருளிச்செய்தாராய்த்து. ()

உரை.—அ.—எண்பத்தொன்பதாம்பாட்டு. "போற்றுவன்" என்று புகழுவதாக ஒருப்பட்டவர் அதுநிமித்தமாகத் தமக்குண்டான பயத்தை எம்பெருமானார்தமக்கு விண்ணப்பஞ் செய்கிறார்.

ரூ.—போற்றருஞ்சீலத்திராமாநுசநின்புகழ்தெரிந்து
சாற்றுவனேலதுதாழ்வதுதீரினுன்சீர்தனக்கோ
ரேற்றமென்றேகொண்டிருக்கினுமென்மனமேத்தியன்றி
யாற்றகில்லாதிதற்கென்னினைவாயென்றிட்டஞ்சுவனே. ()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| போற்றரும் | "நாளு மென்புகழ் கோவு னசீலம்" என்னுமாப் போலே புகழ்ந்து தலைக்கட்டவரிதான, | சீலத்திராமாநுசநின் புகழ் தெரிந்து | சீலகுணத்தையுடையவரே, தேவரீருடைய, கல்யாணகுணங்களை விவேகித்து, |

| பதம். | உரை. |
|---|---|
| சாற்றுவனேல் | லோகப்ரஸித்தமானபடி பேசுவேனாகில், வஸிஷ்டர் குணங்களை சண்டாளன் வர்ணித்துப்பேசுகை அவற்றுக்கு அவத்யமாய்த் தலைக் கட்டுமாப்போலே, |
| அது | அது, |
| தாழ்வு | இழிவாகாநிற்கும்; |
| அதுதீரில் | அப்படி பேசுகிற அத்தைத் தவிரில், |
| உன்சீர் தனக்கு | தேவரீர் குணங்களுக்கு, |
| ஓரேற்றமென்று கொண்டேயிருக்கிலும | ஒரு உத்கர்ஷமாயிருக்குமென்று கொண்டே இரா நிற்கச் செய்தேயும, |

| பதம். | உரை. |
|---|---|
| என் | என்னுடைய, |
| மநம் | மநஸ்ஸானது, |
| ஏத்தியன்றி | தேவரீர் குணங்களை ஸ்தோத்ரம் பண்ணி யொழிய, |
| ஆற்றகில்லாது | தரிக்கமாட்டுகிற தில்லை; "மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலு மென்னாவினுக்காற்றேன்" என்னுமாப்போலேயிராநின்றது என்னுடைய தசை, |
| இதற்கு | இதுக்கு, |
| என்னினைவாயென்றிட்டு | தேவரீரேது திருவுள்ளம்பற்றுகிறதோ வென்று, |
| அஞ்சுவன் | பீதனாகாநின்றேன். |

சாற்றுதல் - பரகாசமாகச் சொல்லுதல். (௮௬)

---

வ்யா.—அ.—எண்பத்தொன்பதாமபாட்டு. கீழ்ப்பாட்டிலே - வேதப்ரதாரகராய் லோகத்தாரெல்லாரையும் விபரீதஜ்ஞாநராக ப்ரமிப்பித்து நசிப்பித்துப்போந்த குத்ருஷ்டிகளாகிற புலிகளை பக்நராக்குகைக்கு அவதரித்தவலிமிக்க சீயமானஎமபெருமானாரை ஸ்துதிக்கிறேனென்று ஸ்வாத்யவஸாயத்தை ஆவிஷ்கரித்து, இதிலே - தம்முடைய பூர்வவ்ருத்தத்தை அநுஸந்தித்துக்கொண்டு புகழ்ந்து தலைக்கட்டவரிதான ஶீலகுணத்தையுடையரான எம்பெருமானாருடைய திருமுகமண்டலத்தைப் பார்த்து, மஹாப்ரபாவமுடையரானதேவரீரை அத்யந்தாதமனான நான்ஸ்துதிக்கை தேவரீர்க்கு அவத்யமாய்த் தலைக்கட்டக்கடவதாகையாலே ஸ்துதியாதே யொழிகையே தேவரீர்க்கு அதிசயமிறே. ஆனாலும் ஸ்தோத்ரம்பண்ணாதொழியில் என் மநஸ்ஸு ஆறியிராது, இப்படியானபின்பு, "மூர்க்குப்பேசுகின்றானிவன்" என்று தேவரீர் திருவுள்ளத்தில் என்னவோடுகிறதோ என்று நான் அத்தை நினைத்து எப்போதும் பீதனாகாநின்றேனென்று விண்ணப்பம் செய்கிறார்.

வ்யா.—(போற்றருஞ்சீலத்திராமாநுசா) எத்தனை யேனும் தரமுடையார்க்கும் ஸ்துதித்துத்தலைக்கட்டவரிதான சீலகுணத்தையுடைய வெம்பெருமானாரே. இவருடைய ஸௌசீல்யம்பிள்ளை யுறங்காவில்லி தாஸர், ஊமைமுதலானாரிடத்திலே காணப்பட்டதிறே. (நாளுமெனபுகழ் கோவுன சீலமே) என்றும், "శీలవతః" "ஶீலவதஃ" என்றுஞ் சொல்லப்படுகிற ஸர்வேச்வரனுடைய சீலகுணத்தை புகழ்ந்துதலைக்கட்டிலும் இவர்தமமுடைய சீல குணத்தைப் புகழ்ந்து தலைக்கட்டவரிதா யிருக்குமென்று காணும் இவர்தம்முடைய திருவுள்ளத்திலோடுகிறது.

(நின்புகழ்தெரிந்து சாற்றுவனேல்) "తత్త్వేనయస్యమహిమార్ణవశీకరాణుశ్శక్యోనమాతుమపిశర్వపితామహాద్యైః" "தத்வேநயஸ்யமஹிமாரணவஶீகராணுஶ்ஶக்யோந மாதுமபிஶர்வபிதாமஹாத்யைஃ" என்றும், "యస్యాస్తేమహిమానమాత్మన ఇవ త్వద్వల్లభోపి ప్రభుః। నాలంమాతుమియత్తయా" "யஸ்யாஸ்தேமஹிமாநமாத்மந இவ த்வத்வல்லபோபி ப்ரபுஃ- நாலம்மாதுமியத்தயா" என்றுஞ் சொல்லப்படுகிற தம்பதங்களைப்போலே, "శేషోవాసైన్యనాథోవా శ్రీపతిర్వేతిసాత్త్వికైః। వితర్క్యాయ" "ஶேஷோவா ஸைந்யநாதோவாஶ்ரீபதிர்வேதிஸாத்விகைஃ-விதர்க்யாய" என்கிறபடியே அநந்தாவதாரராகையாலே பெரியமதிப்பை யுடையராய், "నమస్త్రిణమనక్షరం నవకనాయ యజ్ఞోపవీతంస్త్రిదండపరిమండితం త్రివిధతత్త్వనిర్వాహకమ్। దయాంచితస్వగాత్రం పరిపాలితాశ్రితజనం శరణమేమిరామానుజమ్" "நமத்ப்ரணமமண்டநம்நவகஷாயகண்டாம்பரம் த்ரிதண்டபரிமண்டிதம் த்ரிவிததத்வநிர்வாஹகம்- தயாஞ்சிதத்ர்கஞ்சலம் தளிதவாதிவாக்வைபவம் ஶமாதிகுண ஸாகரம் ஶரணமேமிராமாநுஜம்" என்கிறபடியே ஸார்வௌதாரரான தேவரீருடைய ஸௌசீல்ய ஸௌலப்யாதி கல்யாணகுணங்களை நன்றாகத் தெளிந்து அவற்றை எல்லாருமறியும்படி ப்ரகாசமாகஸ்துதிப்பேனாகில். தேர்தல - ஆராய்தல். சாற்றுதல் - ப்ரகாசமாகச் சொல்லுதல்.

(அதுதாழ்வு) வஸிஷ்டட குணங்களைச் சண்டாளன் வர்ணித்துப் பேசினால் அது அவனுக்கு அவத்யமாய்த் தலைக்கட்டுமாப் போலே நான் பண்ண வொருப்பட்ட அந்தஸ்துதி தேவரீர்க்கு அவத்யமாய்த் தலைகக்கட்டும். "இமையோர் பலரும் முனிவரும் புனைந்த கண்ணிநீர் சாந்தம்புகையோ டேந்தி வணங்கினால் - உன்பெருமைமாசூணாதோ மாயோனே" என்று - ப்ரதம பர்வத்திலே ஆழ்வாரும் இப்படியே யருளிச் செய்தாரிறே. "హంతత్వదగ్రకమనస్యయతీన్ద్రనార్హః" "ஹந்தத்வதக்ரகமநஸ்யயதீந்த்ர நார்ஹஃ" என்று ஜீயரும் வ்யதிரேகமுகேந இவ்வர்த்தத்தை யருளிச்செய்தாரிறே. (அதுதீரில்) உமக்கு அவத்யாவஹமான அந்தஸ்துதியை நான் பண்ணுதொழியில். தீருகை - தவிருகை.

(உன்சீர்தனக்கு ஓரேற்றமென்றே கொண்டிருக்கிலும்) "తృణీకృతవిరిఞ్చ్యాది నిరఙ్కుశవిభూతయః। రామానుజపదామ్భోజసమాశ్రయణశాలినః" "த்ர்ணீக்ர்த விரிஞ்சாதி நிரங்குஶவிபூதய:-ராமாநுஜ பதாம்போஜ ஸமாஶ்ரயணஶாலிந:" என்கிறபடியே ஸ்வாச்ரிதரான சேதநரை, "తదితరాణి తృణాయ మేనే" "ததிதராணி த்ர்ணாயமேநே" எனனும்படியான தேவரீர்தம்முடைய ஸாம்யத்தைக் கொடுக்கக் கடவ மஹாப்ரபாவத்தை யுடையதான தேவரீருடைய கல்யாண குணங்களுக்கு ஓரதிசயமா யிருக்குமென்று இவ்வர்த்தத் திலே வ்யவஸிதனா யிருந்தேனே யாகிலும். (என்மநமேத்தியன்றி யாற்றகில்லாது) "చఞ్చలం హి మనః" "சஞ்சலம்ஹிமந:" என்றும், "நின்றவாநில்லாநெஞ்சு" என்றும் சொல்லுகிறபடியே அதிசஞ் சலமாய் அதிசபலமாய் தேவரீருடைய ப்ரபாவத்தை உள்ளபடி யறியமாட்டாதவென்னுடையமநஸ்ஸானது நாம்இவ்விஷயத்தைப் புகழுகை, * உபசாராபதேஶநப்பண்ணும் அபசாரமென்று அறி யமாட்டாதே தேவரீருடையகுணங்களை அடைவுகெட ஸ்தோத் ரம் பண்ணியொழியத் தரிக்கமாட்டுகிறதில்லை.

(இதற்கென்னினைவாயென்றிட்டு) இப்படிப்பட்ட வென்னு டைய ஸாஹஸோத்யோகத்துக்கு தேவரீர்திருவுள்ளத்திலே என் னாக நினைப்பிடுகிறதோ வென்று கருத்து. (அஞ்சுவனே) தேவரீ ருடைய மேன்மையையும் என்னுடைய தண்மையையும் அடை வேபார்த்து அஞ்சாநின்றேன். "மூர்க்குப்பேசுகின்ற னிவனெ ன்று முனிவாயேலு மென்னாவினுக்காற்றேன்" என்னுமாப்போ லே யிராநின்றது என்னுடைய தசை. இதுக்கு தேவரீர் ஏது திருவுள்ளம்பற்றுகிறதோவென்று பீதனாகா நின்றே னென்ற தாய்த்து. ... ... ... ... ... (௮௯)

உரை.—அ.—தொண்ணூறாம்பாட்டு. இவர், "அஞ்சுவன்" என்றவாறே இவர் பயமெல்லாம் போமபடி குளிரகடாக்ஷிக்க, அத்தாலே நிர்ப்பீதராய் கரணத்ரயத்திலும் ஏதேனுமொன்றால் இவ்விஷயத்திலே ஓராநுகூல்யத்தைப்பண்ணிப் பிழைத்துப் போ கலாயிருக்க, சேதநர் ஜந்மக்லேசத்தை அநுபவிப்பதே! என்று, இன்னாதாகிறார்.

மூ.—நினையார்பிறவியைநீக்கும்பிரானையிந்நீணிலத்தே
எனையாளவந்தவிராமாநுசனையிருங்கவிகள்
புனையார்புனையும்பெரியவர்தாள்களில்பூந்தொடையல்
வனையார்பிறப்பில்வருந்துவர்மாந்தர்மருள்சுரந்தே. (௯௦)

| பதம். | உரை. |
|---|---|
| பிறவியை | தம்மை நினைத்தவர்களுடைய ஜந்மத்தை, |
| நீக்கும் | போக்கும், |
| பிரானை | உபகார சீலரான இவரை, |
| நினையார் | நினைக்கிறார்களில்லை; * நிகரின்றி நின்ற நீசதையை யுடைய வென்னை அங்கீகரித்து தம்முடைய குணங்களுக்கு தேசிகனாய் வாசகமிடும்படி பண்ணி இப்படியே ஆளுகைக்காக, |
| இந்நிலத்தே | இப்பூமிப் பரப்பெல்லாம் கிடக்கச் செய்தே, |
| எனையாள வந்த | நான் கிடந்த விடம் தேடிவந்த, |
| இராமாநுசனை | எம்பெருமானாரை, |
| இருங்கவிகள் | தத்குண ப்ரகாசகமான பெரியகவிகளை, |
| புனையார் | தொடுக்கிறார்களில்லை; தாங்கள் கவிபுனையமாட்டுகிறிலர்களாகில், |

| பதம். | உரை. |
|---|---|
| புனையும் | அவர் விஷயமாகக் கவிகளைத் தொடுக்கும், |
| பெரியவர் தாள்களில் | மஹா ப்ரபாவருடைய திருவடிகளிலே, |
| பூந்தொடையல் | பூமாலைகளை, |
| வனையார் | ஸமர்ப்பிக்கிறார்களில்லை; |
| மாந்தர் | இத்தனைக்கும் யோக்யமான ஜந்மத்தைப் பெற்றிருக்கிறவர்கள், |
| மருள்சுரந்து | அறிவுகேடு மிக்கு, |
| பிறப்பில் வருந்துவர் | ஜந்மமக்நராய் அலைகப்படாநின்றார்கள்; ஐயோ! இவர்கள் பாக்யஹீநதை யிருந்தபடி யென்னென்று கருத்து. |

"நினைவார் பிறவியை நீக்கும் பிரானை" என்றும்பாடம் சொல்லுவர்கள். புனைதல் - தொடுத்தல். வனைதல் - செய்தல். இத்தால் - ஸமர்ப்பிக்கையைச்சொன்னபடி. வருந்துதல் - துக்கித்தல். () (கூ0)

---

வ்யா.—அ.—தொண்ணூறாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - எம்பெருமானாருடைய மதிப்பையும் அவரை ஸ்தோத்ரம்பண்ணுகைக்குத் தமக்குண்டான அயோக்யதையையுமநுஸந்தித்து, இவ்விஷயத்திலே நான்ஸ்துதிப்பதாக போராஸாஹஸ கார்யத்துக்கு உத்யோகித்தேனென்று அனுவாய்த்து இவர் அஞ்சினவாறே எம்பெருமானார் இவருடைய அச்சமெல்லாம் தீரும்படி குளிர

கடாக்ஷிக்க, அத்தாலே நிர்ப்பயராய் ஸ்தோத்ரம்பண்ண வொருப்பட்டு, இதில்-லௌகிகர்படியைக்கடாக்ஷித்து எம்பெருமானார்யோக்யா யோக்யவிபாகமற ஸர்வரையும்கடாக்ஷிக்கைக்காக வந்தவதரித்திருக்கச் செய்தே இந்தலௌகிகர் தம்மை ஒருக்கால் ப்ராஸங்கிகமாக நினைத்தவர்களுடைய சோஷியாத பவக்கடலை சோஷிப்பிக்குமவரான இவரை நினைக்கிறார்களில்லை; என்னை ரக்ஷிக்கைக்காக நானிருந்தவிடம் தேடிவந்த இவரை * என்கவிகளாலேஸ்துதிக்கிறார்களில்லை; அப்படி ஸ்துதிக்கைக்கு அதிகாரமில்லையாகிலும் ஸ்துதிக்குமவர்களுடைய திருவடிகளை ஆராதிக்கிறார்களில்லை; ஐயோ! இவற்றுக்கெல்லாம் முறைப்பான ஜந்மத்தைப் பெற்றிருந்தும் அறிவு கேட்டாலே ஜந்மபரம்பரைக்கு அதுதன்னை பீடாக்கி க்லேசப்பட்டுப் போனார்களேயென்று இன்னாதாகிறார்.

வ்யா.—(நினையார்பிறவியை நீக்கும்பிரானை) நம்மை ஒருக்கால் நினைக்கையாகிற ஆபிமுக்யத்தைப்பண்ணினார்களாகில, "భక్తైరణ్వప్యుపహృతం ప్రేమ్ణా భూర్యేవ మే భవేత్" "பக்தைராணுப்யுபஹ்ருதம் ப்ரேமணாபூர்யேவமேபவேத்" என்று சொல்லப்படுகிறவனைப்போலே அதனை ஒன்று நூறாக்கி, "పాపధ్వాన్తక్షయాయచ" "பாபதவாந்தக்ஷயாயச" என்கிறபடியே அவர்களுடைய ஜந்மமரணாதி துக்கங்களை அவர்களருகே செல்லாதபடி நீக்குமுபகாரகரானவிவரை அறிந்து நினைக்கிறார்களில்லை. "కామాదిదోషహరమాత్మపదాశ్రితానామ్" "காமாதிதோஷஹரமாத்மபதாஶ்ரிதாநாம்" என்றருளிச்செய்தாரிறே ஜீயரும்.

(இந்நீணிலத்தேயெனையாளவந்த விராமாநுசனை) * நிகரின்றி நின்ற நீசதையையுடைய வடியேனை அபிமானித்து, தம்முடைய குணங்களுக்கு தேசிகனாய்வாசகமிட்டு குறைநுகுணமாக ஸ்தோத்ரம்பண்ணி அது தனனை ப்ரபந்திகரிக்கும்படியமைத்துக்கொண்டு அப்படி என்னை யாளுகைக்கே ஸர்வேசவரன் வந்தவதரித்தாலும் அவனையுங்கூட மோஹிப்பிக்குமதாய் விஸ்தீர்ணமான * இருள் தருமாஞாலத்திலே ஏகலக்ஷ்யமாக அடியேனை யொருவனையுமே ரக்ஷிக்கவேணுமென்று க்ருதஸங்கல்பராய், இந்தபூமிப்பரப்பெல்லாங் கிடக்கச்செய்தே அடியே னிருந்தவிடம் தேடிவந்து கோயிலிலே அடியேனையகப்படுத்திக்கொண்ட எம்பெருமானாரை. (இரும் கவிகள் புனையார்) இவருடைய விஷயீகாரத்தைப் பெற்றபின்பு ஸ்தோத்ரநிர்மாணத்திலே தங்களுக்கதிகாரமுண்டாயிருக்கச்செய்தேயும், "செஞ்சொல்கவிகாள்" என்கிறபடியே அதிபோக்யங்களாய்த்தக்குணங்களைச் சுருக்கமொழியப்ரதிபாதிக்குமவையான கவிகளைத்தொடுக்கிறார்களில்லை. அவர்களுடைய கல்யாண குணங்களை

விஸ்தரித்துஸ்தோத்ரம் பண்ணுகையாகிற வாசாகைங்கர்யத்தையும் பண்ணமாட்டிற்றில ரென்றபடி. புனைதல் - தொடுத்தல்.

(புனையும் பெரியவர் தாள்களில் பூந்தொடையல்வனையார்) தாங்கள் கவிபுனைய மாட்டிற்றிலர்களாகிலும், "వాచాయతీన్ద్ర మనసా వపుషా చ యుష్మత్పాదారవిన్దయుగళం భజతాం గురూణామ్। కూరాధినాథకురుకేశముఖాద్యపుంసాం పాదానుచిన్తనపరః" "வாசாயதீந்த்ர மநஸா வபுஷா ச யுஷ்மத் பாதாரவிந்தயுகளம் பஜதாம் குரூணாம்- கூராதிநாதகுருகேசமுகாத்யபும்ஸாம் பாதாநுசிந்தநபர:" என்கிறபடியே கரணத்ரயத்தாலும் அவர்பக்கலிலே அதிப்ரவணராய்க்கொண்டு, "నచేద్రామానుజేత్యేషా" "நசேத்ராமாநுஜேத்யேஷா" என்றும், "పుణ్యామ్భోజవికాసాయ" "புண்யாம் போஜவிகாஸாய" என்றும், "నమప్రణవమణ్డనమ్" "நமப்ரணவமண்டநம்" என்றும், "యతిరాజో జగద్గురుః" "யதிராஜோ ஜகத்குரு:" என்றும் இத்யாதியான கவிகளைத் தொடுக்கும் மஹாப்ரபாவத்தையுடையவர்களான ஆழ்வான், ஆண்டான், எம்பார், ஆச்சான் முதலானவர்களுடைய திருவடிகளிலே பரிமளப்ரசுரமான புஷ்பங்களைக்கொண்டுவந்து மாலிகையாகத் தொடுத்து ஸமர்ப்பிக்கிறார்களில்லை. புனைதல் - செய்தல். இத்தால் - ஸமர்ப்பிக்கையைச்சொன்னபடி. "కూరాధినాథకురుకేశముఖాద్యపుంసాం పాదానుచిన్తనపరస్సతతం భవేయమ్" "యతీశ్వరసరస్వతీసురభితాశయానాం సతాం వహామి చరణామ్బుజం ప్రణతశాలినా మౌళినా" "கூராதிநாதகுருகேசமுகாத்ய பும்ஸாம் பாதாநுசிந்தநபரஸ்ஸததம்பவேயம்" "யதீஶ்வர ஸரஸ்வதீஸுரபிதாஶயாநாம்ஸதாம்வஹாமிசரணாம்புஜம் ப்ரணதஶாலிநா மௌலிநா" என்னக்கடவதிறே.

(பிறப்பில் வருந்துவர்மாந்தர்மருள்சுரந்தே) அஜ்ஞாநத்தாலே ஆவ்ர்தராய்க்கொண்டு த்யாஜ்யோபாதேயவிவேக மில்லாதே ஜந்மாதிகளிலே அநாதியாகக்லேசப்படாநின்றார்கள். வருந்துதல் - துக்கித்தல. "అజ్ఞానేనావృతం జ్ఞానం తేన ముహ్యన్తి జన్తవః" "அஜ்ஞாநேநாவ்ர்தம் ஜ்ஞாநம் தேந முஹ்யந்தி ஜந்தவ:" என்னக்கடவதிறே. ஐயோ! இத்தனையும் பண்ணுகைக்கு யோக்யமான ஜந்மத்தைப் பெற்றிருந்தும் இதெல்லாம் தெளியமாட்டாதே அறிவுகேடுமிக்கு ஜந்மமக்நராய துக்கப்படாநின்றார்கள், இவர்களுடைய கர்ப்பநிர்ப்பாக்யதை யிருந்தபடி யெங்ஙனே! என்று இன்னாதாகிறார்காணும். "దుర్లభో మానుషో దేహో దేహినాం క్షణభఙ్గురః। తత్రాపి దుర్లభం మన్యే వైకుణ్ఠప్రియదర్శనమ్" "నృదేహమాద్యం ప్రతిలభ్య దుర్లభం ప్లవం సుకల్పం గురుకర్ణధారమ్। మయానుకూలేన నభస్వతేరితః పుమాన్భవాబ్ధిం న తరేత్స ఆత్మహా" "துர்லபோ மாநுஷோ தேஹோ தேஹிநாம் க்ஷணபங்குர: - தத்ராபி துர்லபம் மந்யே வைகுண்டப்ரியதர்ஶநம்" "ந்ர்தேஹமாத்யம் ப்ரதிலப்ய துர்லபம் ப்லவம்

ஸுசல்யம் குருகர்ணதாரம் - மயாநுகூலேந நபஸ்வதேரித:புமாந் பவாப்திம் நதரேத்ஸ ஆத்மஹா" என்னக்கடவதிறே. "மாயவன் தன்னை வணங்கவைத்த கரணமிலை" என்று இவர் தாமே அருளிச்செய்தாரிறே ... ... ... ... ... (௯0)

உரை.—அ,—தொண்ணூற்றோராம்பாட்டு. இவர்கள் இப்படியிருக்கச்செய்தே இவர்களுடைய உஜ்ஜீவநார்த்தமாக எம்பெருமானார் செய்தருளின க்ருஷியை யநுஸந்தித்து அவரைக் கொண்டாடுகிறார்.

மூ.—மருள்சுரந்தாகமவாதியர்கூறுமவப்பொருளா
மிருள்சுரந்தெய்த்தவுலகிருணீங்கத்தன்னீண்டியசீர்
அருள்சுரந்தெல்லாவுயிர்கட்குநாதனரங்கனென்னும்
பொருள்சுரந்தானெம்மிராமாநுசன்மிக்கபுண்ணியனே. ( )

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| மருள் | அஜ்ஞாநமெல்லாம், | இருள் | அந்தகாரமானது, |
| சுரந்து | ஒருமுகமாத் திரண்டு, | நீங்க | போம்படியாக, |
| ஆகமவாதியர் | ருத்ர ப்ரோக்தமான ஆகமத்தை ப்ரமாணமாக அவலம்பித்துக் கொண்டு நின்று வாதம்பண்ணாநின்றுள்ள பாசுபதாதிகள், | தன் | தம்முடைய, |
| கூறும் | ருத்ரபரத்வஸ்தாபநார்த்தமாக அநேக உபபத்திகளை கல்பித்துக் கொண்டு சொல்லாநின்றுள்ள, | ஈண்டியசீர் | ஆச்ரித ரக்ஷணங்களாகிற திரண்ட வைலக்ஷண்யத்தையுடைய, |
| அவப்பொருளாம் | நிஹீநதரமான அர்த்தங்களாகிற, | அருள்சுரந்து | க்ருபை ஒருமடை கொண்டு, |
| இருள்சுரந்து | தமஸ்ஸுமிக்கு, | எல்லாவுயிர்கட்குநாதன் | ஸகலாத்மாக்களுக்கும் சேஷி, |
| எய்த்த | அத்தாலே அவஸந்நமாய்ப்போன, | அரங்கனென்னும் பொருள் | பெரியபெருமாளென்னுமர்த்தத்தை, |
| உலகு | லோகத்தினுடைய, | சுரந்தான் | உபகரித்தார்; |
| | | எம் | இவ்வர்த்தத்தை நமக்கு வெளியிட்டருளின, |
| | | இராமாநுசன் | எம்பெருமானார், |
| | | மிக்கபுண்ணியன் | பரமதார்மிகர்கிடீர். |

படம். உரை. படம். உரை.

அன்றிக்கே, மிக்க புண்ணி யனை - எம்மிராமாநுசன்-பொருள்சுரந்தான் என்று க்ரியை யாகவுமாம். அவப்பொருள்-பொல்லாதபொருள். "ஆகமவாதியர் கூறும் மறப்பொருள்" என்று பாடமானபோது - ஆகமவாதிகள் சொல்லுகிற காதுகமான அர்த்தமென்கை. காதுகமென்கிறது- ஆத்மநாசக மாகையாலே. அன்றிக்கே, "ஆகமவாதியர் கூறும் மறைப்பொருள்" என்று பாடமானபோது - "தைஸ்சப்ரஸித்தவிபவஸ்யஸமூலதாயை க்ராஹ்யாத்ரத்யீ," என்கிறபடியே ஆகமமுகேந தாங்கள் சொல்கிற வர்த்தத்துக்கு மூல ப்ரமாணமாக "த்ரையாமபிசஸாமாந்யா வா

தஸ்சித்த விபேதக:" என்கிறபடியே ப்ரஸம்ஸாபரமான வேத வாக்யங்களை ப்ரிக்ரஹித்துக்கொண்டு வேதமும் இப்படியே சொல்லிற்றென்று ஆகம வாதிகள் சொல்லுகிற வேதார்த்தமென்றபடி. "இருள்சுமந் தெய்த்த" என்றும் பாடம் சொல்லுவர்கள். அப்போது - இருளை பரித்து அத்தாலே ஆவஸந்நமான வென்கை. ஈண்டுதல் - திரளுதல். சீர் - அழகு. புண்ணியனென்றது - தார்மிகனென்றபடி. "இராமாநுசனென்னும் புண்ணிய" என்றும் பாடம் வர்கள். அதுவும் இரண்டாம்யோஜனைக்குச் சேரும். (கூக)

---

வ்யா.—அ.—தொண்ணூற்றோராம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே-நித்யஸம்ஸாரிகளா யிருக்கிறவர்களையும் அல்பாநு கூல்யமுடையாரையும்ஒக்கஉத்தரித்தஸர்வோத்தமரானஎம்பெருமானாரை அநுவர்த்தியாதே காப்பனிர்ப்பாக்யராய்ப் போந்தார்களென்று அவர்கள்படியை அடைவேசொல்லி, இதிலே-தமோகுணமுஷித சேமுஷீகராய் ருத்ரப்ரோக்தமான ஆகமத்தைஉத்தம்பகமாகக்கொண்டு பௌத்தாதயாத்தஸாரங்களாய் ருத்ரபக்ஷபாதிகளான பாசுபதர் சொல்லுகிற துஸ்தர்க்கங்களாகிற அந்தகாரத்தை பூலோகத்தில் நின்றும் அகன்றுபோம்படி பண்ணியருளின எம்பெருமானார் தம்முடைய நிர்ஹேதுக பரமக்ருபையை, ஒருபாட்டம் மழை பொழிந்தாற்போலே லோகத்திலே எங்குமொக்க ப்ரவஹிப்பித்து, ஸகலாத்மாக்களுக்கும் ஸுலபனாய்க் கண்ணுக்கிலக்காயிருக்கிற பெரிய பெருமாளே வகுத்தசேஷியென்னு மர்த்தத்தை நமக்கெல்லாம் பூரிதாநம் பண்ணினார், இவர் எத்தனை தார்மிகரோவென்று அவருபகரித்த உபகாரத்தை யநுஸந்தித்து அவர்தம்மைக் கொண்டாடுகிறார்.

**வ்யா,—(மருள்சுரந்தாகமவாதியர்கூறும்) நாராயண க்ருஷ்ண வாஸுதேவகேசவஹ்ருஷீகேச அச்யுத அநந்தாதிதிவ்யநாமங்களு**

க்குவாச்யஞைகயாலே த்ரிவித சேதநாசேதந வர்க்கத்துக்கும்தார கத்வவ்யாபகத்வ நியந்த்ருத்வ த்ரிவிதபரிச்சேதராஹித த்வஅவ்யயத்வாதி தர்மங்களோடேகூடியிருந்தவனே ஸர்வஸ்மாத் பரனென்றறிய மாட்டாதே பூர்வபாபஸங்காத மெல்லாம்படிந்து கடலிலே ஒருகாளகூடமுண்டானாற்போலே அஜ்ஞாநமெல்லாம் ஒருமுகமாகத்திரண்டு அத்தாலே வ்யாப்தராய், ஸர்வ லோகஸாக்ஷிகமான ப்ரஹ்லாத கஜேந்த்ராதிரக்ஷண கதைகளையும், "యత్తైశ్చైతచ్చరాచరమ్" "யதஶ்சைதச்சராசரம்" என்கிறமைத்ரேயருடையஸாமாந்யப்ரஶ்நத்துக்கு, "విష్ణోస్సకాశాదుద్భూతమ్" "விஷ்ணோஸ்ஸகாஶாதுத்பூதம்" இத்யாதியான பராசர பகவானுடைய விசேஷோத்தரம் முதலான அர்த்தங்களையும அநாதரித்து, "తమస్త్వజ్ఞానజం విద్ధి మోహనం సర్వదేహినామ్। ప్రమాదాలస్యనిద్రాభిః తన్నిబధ్నాతి భారత" "தமஸ்த்வஜ்ஞாநஜம்வித்தி மோஹநம்ஸர்வ தேஹிநாம் ப்ரமாதாலஸ்யநித்ராபிஸ்தந்நிபத்நாதி பாரத" எனகிறபடியே பந்த ஹேதுவான அஜ்ஞாநத்தையெல்லாம் தன்னிடத்திலே சணவைத்தமாத்ரத்திலே கொடுக்கக்கடவசிவயோகஸாரம் முதலானதுராகமங்களிலே நிஷ்டராய், அத்தை ப்ரமாணமாக அவலம்பித்துக் கொண்டு நின்று துர்வாதங்களைப் பண்ணுநின்றுள்ள பாசுபதாதிகளைச் சொல்லுகிற.

(அவப்பொருளாமிருள்சுரந்து) ஜடாகலாப பஸ்மருத்ராக்ஷ லிங்கதாரணந் தொடக்கமான நிஷித்தார்த்தங்களாகிற அந்தகாரமானது வ்யாபித்து. அவப்பொருள - பொல்லாதபொருள். "ஆகமவாதியர்கூறும் மறைப்பொருள்" என்று பாடமாம்போது- ருத்ரஹரத்ர்யம்பக ஸ்த்தாணு விரூபாக்ஷாதிஶப்தங்களாலே நிஷித்த தர்மப்ரவர்த்தகனான ருத்ரனுடைய வ்யாப்யத்வத்தைத்தெரிய மாட்டாதே வேதத்திலே, "సబ్రహ్మా సశివః" "ஸப்ரஹ்மாஸஶிவஃ" இத்யாதியாலே ஸாமாநாதிகரண்யேந உக்தவாக்யஙகளினுடைய தாத்பர்யத்தையும், உபக்ரமோபஸம்ஹாரத்தையும் பராமர்சியாதே,ப்ரசம்ஸாபரங்களாயும் அப்ரஸித்தார்த்தங்களாயுமிருந்துள்ள ஸ-ூதஸம்ஹிதாதிகளுக்கு அநுகூலமாக, அதுக்குச் சொன்ன அவப்பொருளாகிற அந்தகாரத்தை யென்னவுமாம். அன்றிக்கே, கூறும் அறைப்பொருளென்று பதசசேதமாய்-அவர்கள் சொல்லுகிற காதுகமான அர்த்தவத்தையென்கை.காதுகமென்கிறது-ஆத்மநாசக மாகையாலே. அங்ஙனுமன்றிக்கே, அறையென்று - த்வநியாய் * கடலோசையோபாதியான பொருளென்னவுமாம்.

(எய்த்த வுலகிருள் நீங்க) "తమస్త్వజ్ఞానజం విద్ధి" "தமஸ்த்வஜ்ஞா நஜம்வித்தி" என்னும்படியான அந்த அஜ்ஞாநமாகிற அந்தகாரத்

திலே ஸத்வத் விவேகமற்று அவிவேகராய்ப்போந்த சேதநரு டைய அந்தகாரமான து நீங்கிப்போம்படியாக. எய்த்தல்-இளைத்தல். (தன்னீண்டியசீர் அருள்சுரந்து) அந்தகாரத்தைப்போக்கும் ஆதித் யன அநேகமாயிரமகிரணங்களை ஒருக்காலே லோகத்திலெல் லாம் ப்ரஸரிப்பிக்குமாப்போலே, தம்முடை ய ஆச்ரித பாரதந்த்ர்யாதிகளால திரண்ட வைலக்ஷண்யத்தை யுடைய கர்ஷையை லோகமெல்லாம வ்யாபிப்பித்து. ஈண்டுதல் - திரளுதல. சீர் - அழகு. “తత్ర సత్త్వం నిర్మలత్వాత్ ప్రకాశకమనామయమ్। సుఖ సఙ్గేన బధ్నాతి జ్ఞానసఙ్గేన చానఘ” “தத்ர ஸத்வம் நிர்மலத்வாத்ப்ரகாஶகமநா மயம்-ஸுகஸங்கேந பத்நாதி ஜ்ஞாநஸங்கேந சாநக” என்கிறபடியே இவர்தம்முடைய விஷயீகாரத்தாலுண்டான ஸத்வோத்ரேகத்தா லும், “అజ్ఞానతిమిరాన్ధస్య జ్ఞానాఞ్జనశలాకయా। చక్షురున్మీలితం యేన తస్మై సద్గురవే నమః” “அஜ்ஞாநதிமிராந்தஸ்ய ஜ்ஞாநாஞ்ஜநஶலாகயா-சக்ஷுருந் மீலிதம் யேந தஸ்மை ஸத்குரவே நம:” என்கிறபடியே இவர்தம்மு டைய உபதேசத்தாலும் அநாதிகாலமே பிடித்துத் தொடர்ந்த அஜ் ஞாநாந்தகாரமெல்லாம் வாஸனையோடே முடிந்துபோமிறே.

(எல்லாவுயிர்கட்கும் நாதனரங்கனென்னும் பொருள் சுரந் தான்) “పతిం విశ్వస్య” “பதிம் விஶ்வஸ்ய” “ఉతామృతత్వస్యేశానః” “உதாம்ருதத்வஸ்யேஶாந” என்றும், “లోకనాథః పురా భూత్వా” “லோகநாத:புராபூத்வா” என்றும், “முழுவேழுலகுக்கும்நாதன்” என்றும சொல்லுகிறபடியே ஸகலாத்மாக்களுக்கும் வகுத்த சேஷி, நமக்கு எட்டாத நிலத்திலன்றிக்கே நாமிருந்த கோயிலிலே கண்வளர்ந்தருளுகிற பெரியபெருமாள் என்கிற விசேஷார்த்தத் தை லோகமெல்லாம உஜ்ஜீவிக்கும்படி உபதேசித்தார். (எம்மிரா மாநுசன) அஸ்மத்ஸ்வாமியான எம்பெருமானார். (மிக்கபுண்ணி யனே) பரமதார்மிகரானவர். “ராமாநுசனென்னும் புண்ணியன்” என்றும பாடம் சொல்லுவர்கள். இப்படிஉபகரிக்கையாலே ஆசந் த்ராரக்மாக தார்மிகர்கிடீரென்றபடி (மிக்கபுண்ணியனான எம்மிரா மாநுசன - பொருள் சுரந்தான) என்று அங்கு அந்வயிக்கவுமாம்.

உரை.—அ —தொண்ணூற்றிரண்டாம்பாட்டு. சேதநர் இவ் விஷயத்தில அலபாநுகூல்யத்தாலே உஜ்ஜீவிக்கலாயிருக்க ஜந்மாதி துக்கங்களை யநுபவிக்கிறபடியையும் இவர்களுக்கு உஜ்ஜீவநார்த்த மாக எம்பெருமானார் செய்த காஷியையும் அநுஸந்தித்தார் - கீழி ரண்டுபாட்டாலே; இப்பாட்டிலே-தாமறிய ஒருஹேதுவின்றிக்கே யிருக்கத் தம்மை அங்கீகரித்தருளுகைக்கும் அங்கீகரித்தருளி பாஹ்யாப் யந்தரகரண விஷயமாய் எழுந்தருளியிருக்கிறபடியை யநுஸந்தித்து வித்தராய் இதுக்குக் காரண மின்னதென்று அரு ளிச்செய்யவேணுமென்கிறார்.

மூ.—புண்ணியநோன்புபுரிந்துமிலேனடிபோற்றிசெய்யும் [க்
நுண்ணருங்கேள்விநுவன்றுமிலேன்செம்மைநூற்புலவர்
செண்ணருங்கீர்த்தியிராமாநுசாவின்றுநீபுகுந்தென்
கண்ணுள்ளுநெஞ்சுள்ளுநின்றவிக்காரணங்கட்டுரையே. ()

| பதம். | உரை. |
|---|---|
| புண்ணிய நோன்பு | இப்பேற்றுக் குறுப்பாக வொரு புண்யவ்ரதத்தை, |
| புரிந்தும் இலேன் | அநுஷ்டிப்பதும் செய்திலேன்; |
| அடி | திருவடிகளை, |
| போற்றி செய்யும் | ஆச்ரயிக்கைக் குறுப்பான, |
| நுண் | ஸூக்ஷ்மமாய், |
| அரும் | துர்லபமான, |
| கேள்வி | ச்ரவணத்தை, ச்ரவியாத வளவன்றிக்கே. |
| நுவன்றும் இலேன் | ச்ரவிக்க வேணுமென்று ப்ரஸங்கிப்பதும் செய்திலேன்; |
| செம்மை | அநந்யப்ரயோஜநராய், |
| நூல் | சாஸ்த்ர ரூபமான கவிகளை, |
| புலவர்க்கு | சொல்ல வல்லவர்களுக்கு, |
| எண்ணரும் | பரிச்சேதிக்க வரிதான, |
| கீர்த்தி இராமாநுசா | கீர்த்தியை யுடையவரே, |
| நீ | இப்படி நிரதிசயப்ரபாவரான தேவரீர், அநாதிகாலம் செய்யாமல், |
| இன்று | இன்று, |
| உகந்து | உகந்து, |
| என் | என்னுடைய, |
| கண்ணுள்ளும் | * கட்கண்ணுக்கும், |
| நெஞ்சுள்ளும் | * உட்கண்ணுக்கும், |
| நின்ற | விஷயமாய்நின்ற, |
| இக்காரணம் | இந்த ஹேதுவை, |
| கட்டுரை | தேவரீர் தாமே அருளிச்செய்யவேணும். |

கட்டுரைஎன்றது, சொல்லவேணும் என்றபடி. கட்டுரையென்று - ஒரு முழுச்சொல்லு. புரிதல - செய்தல. நுவலுதல் - சொல்லுதல. செம்மை - செவ்வை. இத்தால - அநந்ய ப்ரயோஜநதையைச் சொன்னபடி. (௯௨)

வ்யா.—அ.—தொண்ணூற்றிரண்டாம்பாட்டு. எம்பெருமானை ஆச்ரயியாத கர்ப்பநிர்ப்பாக்யரை நிந்தித்தும் ஸமயஜ்ஞாநஹீநராய் நிஷித்தமார்க்கநிஷ்டரானவர்களுடைய துருபதேசத்தாலே அவஸந்நராய்ப் போந்த சேதநருடைய அஜ்ஞாநத்தை மாற்றி ஸர்வருக்கும் ஸ்ரீயப்பதியே சேஷியென்று உபதேசித்த

பரமதார்மிகர் எமபெருமானார் என்று சொல்லிப் போந்தார்-கீழிரண்டுபாட்டாலே; இதிலே-எமபெருமானாருடைய திருமுகமண்டலத்தைப்பார்த்து, அடியேன இவ்வளவும நானறிந்ததாக ஒரு ஸத்கர்மத்தைப் பண்ணினேனல்லேன்; அப்படியே உததாரகமாயிருப்பதொரு ஸூக்ஷமமான விசேஷாாததத்தைக் கேட்பதாக ப்ரஸங்கிப்பதும செயதிலேன, இது என்ரீதியாயிருக்க, ஸச்சாஸ்த்ர பரவர்த்தகரானவாகளுககும தொகையிட்டுசசொல்ல வரிதான குணவத்தாப்ரதையையுடையீரான தேவரீா இவ்வளவும் வெறுமனே யிருந்து இன்று என்னுடைய ஸமீபத்திலே ப்ரவேசிதது * உட்கண்ணுககும் கடகண்ணுககும் விஷயமாய் நின்றீர், இதுககு ஹேது தேவரீரே சொலலவேணுமென்று விண்ணப்பம செயகிறா.

வ்யா.—(புண்ணியநோனபு புரிநதுமிலேன்) புண்யமாவது-ஐஹிகாமுஷ்மிகஸுகஹேதுவாயசாஸ்த்ரீயமான வர்ணாச்ரமநியதமான கர்மவிசேஷம. இப்படிப்பட்டவர்தத்தைப்பண்ணினேனல்லேன. புரிதல-செய்தல. "நோறறநோன்பிலேன்" "నధర్మనిష్ఠోస్మి" "நதாமநிஷ்டோஸ்மி" என்னககடவதிறே. அன்றிக்கே, "పుణ్యానామపి పుణ్యోసౌ" "புண்யாநாமபிபுண்யோஸௌ" என்கையாலே-புணயசபதம பகவத்வாசகமாய் அந்த பகவானை உத்தேசித்து ததாராதந ரூபமாகப் பண்ணப்படும ஸத்கர்மததை யென்னுதல்; "యత్తవప్రియం తదిహ పుణ్యమ్" "யததவத் ப்ரியம்ததிஹபுண்யம்" என்கிறபடியே ஸர்வேச்வரனுககு ப்ரியதமமாய, "మమమద్భక్తభక్తేషు ప్రీతిరభ్యధికా భవేత్। తస్మాన్మద్భక్తభక్తాశ్చ పూజనీయా విశేషతః" "மமமத்பக்தபக்தேஷுப்ரீதிரப்யதிகாபவேத் - தஸ்மாத மதபக்த பக்தாஶ்ச பூஜநீயா விசேஷத." என்று அவன தன்னாலே நியமிக்கப்பட்ட ததீயவிஷயமான ஸுச்ருதகாரததை யென்னுதல். அடியேனிடத்திலே இபபடிப்பட்ட நோனபு ஒன்றுமிலலை யென்றபடி.

(அடிபோற்றிசெயயும நுண்ணருங்கேள்விநுவன்றுமிலேன்) தேவரீருடைய திருவடிகளை ஆச்ரயிகளைக்குறுபபாய், ஸூக்ஷமமென்றும, "సర్వగుహ్యతమం భూయః శృణు మే పరమం వచః" "ஸர்வகுஹ்யதமம பூயஃப்ரவக்ஷ்யாமி" என்றும் "నచాశుశ్రూషవే వాచ్యమ్" "நசாஶுஶ்ருஷவேவாச்யம" என்றும சொலலுகிறபடியே ஸுஸூக்ஷமமாய் பரம ரஹஸ்யமாய் அநதிகாரிகளுக்கு உபதேசிக்க வரிதான மந்த்ரததை ச்ரவிகைகயன்றிககே ச்ரவிக்கவேணும் என்று ப்ரஸங்கிப்பதும் செய்திலே னென்னுதல்; தேவரீர் பதினெட்டுத்தரம் திருக்கோட்டியூர்நம்பி பக்கலிலேசென்று ஸாரதம்மாக சரம ச்லோகார்த்தததை யாசித்தாப்போலே அடியேன் யாசித்தேனல்லே

னென்னுதல் நுவலுதல் - அபேக்ஷித்தல். "நுண்ணறிவிலேன்" "నచాత్మవేదీ" "நசாத்மவேதீ" என்னக்கடவதிறே.

(செம்மைநூல்புலவர்க் கெண்ணருங்கீர்த்தி) ப்ரதம பாவ மென்றால், சிலர் ஸகுணனென்றும் சிலர் நிர்க்குணனென்றும், சிலர் ஹரியென்றும், சிலர் ஹரனென்றும் இப்படி அவரவர்கள் புத்திக்கநுரூபமாகச் சொல்லுகைக் குறைப்பாயிருக்கும்; இது சரம பர்வமாகையாலே அந்த தோஷங்களொன்றுமின்றிக்கே யிருந்ததென்று அநந்ய ப்ரயோஜநராய்க்கொண்டு அநேகப்ரகாரமாக சாஸ்த்ராநுரூபமான கவிகளைச் சொல்லவல்ல வித்வாங்களுக்கு, இவ்வளவு ஏவம்விதமென்று பரிச்சேதித்துச் சொல்லவொண்ணாத கீர்த்தியையுடையரான, (இராமாநுசா) எம்பெருமானாரே. செம்மை - செவ்வை. இத்தால் - அநந்ய ப்ரயோஜநதையைச்சொன்னபடி. நூல்-சாஸ்த்ரம். புலவர் - வித்வாங்கள். (இன்றுநீபுகுந்து) இத்தனைநாளும் காணாதே கண்ணிட்டிருந்து இப்போதாகத் தேவரீர் அடியேனுடையஸமீபத்திலே ப்ரவேசித்து.

(என்கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நின்ற இக்காரணம் கட்டுரையே) "ప్రాప్యమాడరక్షిత్రకృతమనసస్స్నానార్థమేన" "நிதராப்ரமாதகலுஷீக்ர்தமாநஸஸ்யதத்ராபி ஹேதுரிஹ மேந" என்கிறபடியே இவ்வளவும் தேவரீர்கண்வட்டத்திலே யிருந்தும் ஆநுகூல்யமில்லாத தோஷத்தாலே வணங்காமுடியாய்ப் போந்த வடியேனுடைய பாஹ்ய கரணங்களுக்கும் அந்தக்கரணத்துக்கும் இலக்காய் இந்தவீட்டில் இருப்புக்கு ஒரு ஹேதுவை தேவரீரே விசாரித்தருளிச் செய்யவேணும் கண்ணுள்ளுமென்றது - வாகாதிகளுக்கும் உபலக்ஷணம். கண்ணுள்ளும் நெஞ்சுள்ளும் நிற்கையாவது - கண்ணுக்கும் நெஞ்சுக்கும் விஷயமாகை. கட்டுரையென்றது - சொல்லவேணுமென்றபடி. கட்டுரை என்று - ஒரு முழுச்சொல்லு.

உரை.—அ.—தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு. அவர் இதுக்கு ஒன்றும் அருளிச்செய்யாமையாலே நிர்ஹேதுகமாகாதே! என்றுதெளிந்து என்ப்ரபலகர்மங்களைத் தமமுடையகாபையாலே அறுத்தருளின வெம்பெருமானார், ஒருவர் அபேக்ஷியாதிருக்கத் தாமேவந்து குத்ருஷ்டிமதங்களை நிராகரித்தவரன்றோ, அவர்செய்யுமது வெல்லாம் நிர்ஹேதுகமாகவன்றோ இருப்பதெனகிறார்.

மூ.—கட்டப்பொருளைமறைப்பொருளென்றுகயவர்சொல்லும்
பெட்டைக்கெடுக்கும்பிரானல்லனேயென்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடுதன்னருளென்னுமொள்வாளுருவி
வெட்டிக்களைந்தவிராமாநுசனென்னும்மெய்த்தவனே.()

| பதம். | உரை. |
|---|---|
| என் | இன்னைத்தனையபோலே அண்டவொண்ணாதபடி யிருக்கிற என்னுடைய, |
| பெருவினையை | மஹாபாபங்களைக் கண்டு, |
| கிட்டி | பிற்காலியாதே வந்து கிட்டி மீளவும் கிளருகைக் குறுப்பாயிருக்கிற, |
| கிழங்கொடு | வாஸனையாகிற கிழங்கோடேகூட, |
| தன் | தம்முடைய, |
| அருளென்னும் | க்ருபையாகிற, |
| ஒள் | தெளியக் கடைந்த, |
| வாள் | வாளை, |
| | அங்கீகாராவஸரம வருந்தனையும் புறம்பு தோற்றாதபடி மறைத்துக்கொண்டு இருக்கிற தம்முடைய ஸங்கல்பமாகிற வுறையை, |
| உருவி | கழற்றி, |
| வெட்டிக் களைந்த | சேதித்துப் பொகட்ட, |
| மெய்த்தவனென்னும் | ப்ரபந்நஜந கூடஸ்தரான, |

| பதம். | உரை. |
|---|---|
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| | "பரமப்ரஹ்மைவ வஜ்ஞம ப்ரம பரிகதம ஸம்ஸரதி" இத்யாதிபபடியே |
| கட்டம | நிஹீநதரமான, |
| பொருளை | ஆர்த்தங்களை, |
| மறைப் பொருளென்று | வேதார்த்தங்க ளென்று, |
| கயவர் | கலரான குத்ர்ஷ்டிகள், |
| சொல்லும் | சொல்லுகிற, |
| பெட்டை | ப்ராமகவாகயங்களை, |
| கெடுக்கும் | போக்கின, |
| பிரானல்லனே | உபகாரகரன்றோ. |

அவர் செய்தருளுவதெல்லாம நிர்ஹேதுகமாகவன்றோ இருப்பதென்றுகருத்து.

கட்டம் - கஷ்டம். பெட்டு- ப்ராமகவாகயம். மெய்த்தவன - ஸ்வரூபாநுரூபமாகையாலே யதாவாயிருந்துள்ள சரணாகதிரூப தபஸ்ஸை யுடையவரென்கை, "తస్మాన్న్యాసమేషాం తపసామతిరిక్తమాహుః" "தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" என்று தபஸ்ஸுக்களில் மிக்க தபஸ்ஸாகச் சொல்லிற்றிறே சரணாகதியை. ... ... (௯௩)

வ்யா.—அ.—தொண்ணூற்றுமூன்றாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - எம்பெருமானார்திருமுகமண்டலத்தைப் பார்த்து, இத்தனை நாளும் என்னை அங்கீகரிக்கையிலேகால்கண்டிட்டுக்கொண்டிருந்த தேவரீர், இப்போது அடியேன்பக்கல் ஒருகைம்முதலின்றிக்கே யிருக்க இப்படி அங்கீகரிக்கைக்கு ஹேது வேது, அத்தைச்

சொல்லிக்காணீரென்று இவர் மடியைப்பிடித்தாலும் அவர் அது க்கு ஒரு மறுவுத்தரஞ் சொல்லாதே கவிழ்ந்து தலையிட்டிருந்த வாறே இப்படி நிர்ஹேதுகமாகக்கண்டிடுமோ என்று நினைத்து, இதிலே - என்னுடைய ப்ரபலபாதகங்களை வாஸனையோடேகூட தம்முடைய க்ர்பையாகிற கட்கத்தை ஸங்கல்பமாகிற வுறையில நின்றும் உருவி அத்தாலே சேதித்துப் பொகட்டு, ப்ரபந்நகுலத் துக்கெல்லாம ஒக்க உத்தாரகரான வெம்பெருமானார், ஸ்வாஜ்ஞாந விஜ்ர்ம்பிதமான அபார்த்தங்களையெல்லாம் வேதார்த்தங்க ளென்று பரமமூடரான குத்ர்ஷ்டிகள் சொல்லுகிற பாமகவாக் யங்களை நிவர்த்திப்பித்த பரமோபகாரக ராகையாலே அவர்செய் யுமதெல்லாம நிர்ஹேதுகமாயன்றோ விருப்பதென்று தெளிந்து தம மிலே தாமே ஸமாஹிதராயச் சொலலுகிறா.

வ்யா.—(என்பெயவினையைககிட்டி) இவ்வளவும விமுகராய்ப் போந்த என்னால் உண்டாககப்பட்டதாய அநுபவப்ராயஶ்சித்தங்களாலும் நிவர்த்திப்பிகக வரிதாய சாகோபசாகமாயப் பணைத்துப் போருகிற துஷ்கர்மரூப விஷவ்ருக்ஷத்தை, இன்னைத்தாறுபோலே ஒருவருக்கும் அண்டவொணணுதபடி யிருந்ததேயாகிலும், கௌரவஸேனையை, "కాలోస్మి లోకక్షయకృత్ప్రవృద్ధః" "காலோஸ்மிலோகக்ஷயக்ர்தப்ரவ்ர்த்த:" என்று சொல்லாநின்ற க்ர்ஷ்ணன் சென்று கிட்டினாப்போலே தாமசெனறுகிட்டி. "అవిద్యాతరు" (அவித்யாதரு) என்னக்கடவதிறே. வினையைக கிட்டியென்றது - வினையேனைக்கிட்டி யென்றபடியாய், ஆளைவிட் டுக் காரியங்கொள்ளுகை யன்றிகேகே நேரேகொடுநேரே தாமே வந்து கிட்டினார்காணுமெனகிறா. (கிழங்கொடு) பீனவும கிளருகைக் குறுப்பாயிருககிற துர்வாஸனையாகிற கிழங்கோடேகூட. (தன்னருளென்னும) "స్థితిర్భవత్వానేతి సంశ్రయోద్యుత సేవినామ్" "ஸ்திதிர்ப்பவத்வாநேதி ஸம்ஶ்ரயோசயுத ஸேவிநாம" என்றவனருளின் றிக்கே, "న సంశయస్తు తద్భక్త పరిచర్యారతాత్మనామ్" "நஸம்ஶயஸ்து தத்பக்த பரிசர்யாரதாத்மநாம்" என்று சொலலப்படுகிற தமமுடைய அருளாகிற.

(ஒள்வாளுருவி) அழகிதான வாளாயுதத்தைத் தம்முடைய ஸங்கல்பமாகிற உறையில்நின்றும் பிடுங்கி. ஒள் - அழகு. ஒள் வாள் - ஒளியையுடைத்தானவாளென்னுதல். கூரியவாளென்னுதல். (வெட்டிக்களைந்த) எடுத்துப் பொகட்ட. செடியைவெட்டி வேரைக் களைந்துவிட்டால், இந்நிலத்திலே இச்செடி முற்காலத் திலே யிருந்ததோவென்றுதோற்றுமாப்போலே இவனிடத்திலே இப்பாபங்கள் இருந்ததோவென்று தோற்றுமபடியாகக் காணும்

இவர் வேரைக் களைந்துவிட்டபடி. (மெய்த்தவன்) ஸத்யமான தபஸ்ஸையுடையவர். ஆத்மயாதாத்ம்யஜ்ஞாநரூபமாய் ஶரணாகதி ரூபமான தபஸ்ஸையுடையவர். "తస్మాన్న్యాసమేషాం తపసామతిరిక్తమాహుః" "தஸ்மாந்ந்யாஸமேஷாம்தபஸாமதிரிக்தமாஹு:" என்கிறபடியே ஸர்வேஷாம்தபஸாம் உத்க்ர்ஷ்டையான ப்ரபத்தியிலே நிஷ்டரென்றபடி. இந்நிஷ்டையாலேகாணும்இவர்ப்ரபந்நகுலோதகேச்யரானதும் ப்ரபந்நஜநகூடஸ்தரானதும். (இராமாநுசன்) இப்படிப்பட்ட வெம்பெருமானார்.

(கட்டப்பொருளைமறைப்பொருளென்று) "పరంబ్రహ్మైవాజ్ఞం భ్రమపరిగతం సంసరతి తత్పరోపాధ్యాలీఢమ్" "பரம்ப்ரஹ்மைவாஜ்ஞம்ப்ரமபரிகதம் ஸம்ஸரதிதத்பரோபாத்யாலீடம்" இத்யாதிப்படியே உபப்ர்ஹ்மண விருத்தங்களாயும், ஸூத்ரவிருத்தங்களாயும், ப்ரத்யக்ஷவிருத்தங்களாயுமிருக்கையாலே நிஹீநதர்மமான அர்த்தங்களை வேதார்த்தங்களென்று. கட்டம - கடு. (கயவர்சொல்லும்) "మాయావాదమసచ్ఛాస్త్రం ప్రచ్ఛన్నం బౌద్ధముచ్యతే। మయైవ కథితం దేవి కలౌ బ్రాహ్మణరూపిణా" "மாயாவாதமஸச்சாஸ்த்ரம் ப்ரச்சந்நம் பௌத்தமுச்யதே - மயாசகதிதம்தேவி கலௌப்ராஹ்மணரூபிணா" என்கிறபடியே ஜகத்பரதாரகராய்க்கொண்டு சுபாச்ரயமான விக்ரஹமில்லையென்றும், ஸ்வாபாவிகமான கல்யாணகுணங்களில்லையென்றும், "పాదోస్య విశ్వా భూతాని త్రిపాదస్యామృతం దివి" "பாதோஸ்யவிச்வாபூதாநி, த்ரிபாதஸ்யாம்ருதம்திவி" என்கிற விபூதி இல்லையென்றும், "హ్రీశ్చ తే లక్ష్మీశ్చ పత్న్యౌ" "ஹ்ரீஶ்சதேலக்ஷ்மீஶ்சபத்ந்யௌ" என்கிற ஶ்ரிய:பதித்வமில்லையென்றும், இப்படிப்பட்ட விருத்தார்த்தங்களையெல்லாம வேதாந்த வாக்யங்களுக்கும் வேதாந்த ஸூத்ரங்களுக்கும் தாத்பர்யார்த்தமாகச் சொல்லுகிற சங்கராதிகுத்ர்ஷ்டிகளைப் பாக்கசசொலலா நின்றுள்ள. கயவர் - துர்மார்க்கர்.

(பெட்டைக்கெடுக்கும்பிரானல்லனே) ப்ராமகவாக்யங்களை நிவாததிபடுத்தஉபகாரகரன்றோ. பெட்டு - ப்ராமகவாக்யம். பெட்டைக்கெடுகையாவது - "పఙ్క్త్యంతరితకుఞ్జేన సఙ్కరోత్యర్థబల్యతా" (பங்க்த்யந்தரிதகுஞ்ஜேந ஸங்கரோத்யர்த்தபல்யதா) என்னும்படி அதிகாந்தரிதகுஞ்ஜேந ஸங்கரோத்யர்த்தபல்யதா) என்னும்படி அதி நிஹீநங்களாய் துஸ்தாககஜடிலங்களாய்க்கொண்டு அவர்கள் ப்ரபந்தீகரித்ததுஷ்ப்ரபந்தங்களை. "యతీన్ద్రమతసూక్త్యర్థస్వచ్ఛన్దగతిరత్నవత్" (யதீந்த்ரமதஸூக்த்யர்த்தஸ்வச்சந்தகதிரத்நவத) என்று கொண்டாடப்படுமவையாய், "చిరన్తనసరస్వతీచికురబన్ధసైరన్ధ్రికా" (சிரந்தநஸரஸ்வதீசிகுரபந்தஸைரந்த்ரிகா) என்று வேதாந்தங்களினுடைய சிடுக்கை அவிழ்க்கக்கடவனவாயிருக்கிறஸத்தர்க்கஜடிலங்களான ஶ்ரீபாஷ்யாதி ஸத்ப்ரபந்தங்களாலே நிரஸித்தாரென்றபடி.

இது ஒருவர் அர்த்திக்கச் செய்ததல்லாமையாலே இவர் செய்ததெல்லாம் நிர்ஹேதுகமாக விருப்பதொன்றன்றோவென்று ஸமாஹிதாராய்த்து.... ... .. ... (௬௩)

உரை.—அ.—தொண்ணூற்றுநாலாம்பாட்டு. தம்மை நிர்ஹேதுகமாக அங்கீகரித்து கர்மங்களைப் போக்கினபடியை யநுஸந்தித்தார் - கீழ்; இப்பாட்டில் - எம்பெருமானார், தம்மை ஆச்ரயித்தார்க்கு ப்ரபத்தி நிஷ்டை தொடங்கி பரமபதபர்யந்தம் கொடுத்தருளுவரேயாகிலும நான் அவர்குணங்களையொழிய வேறொன்றையும் விரும்பி புஜியேனென்கிறார்.

மூ.—தவந்தருஞ்செல்வுந்தகவுந்தருஞ்சலியாப்பிறவிப்
பவந்தருந்தீவினைபாற்றித்தரும்பரந்தாமமென்னுந்
திவந்தருந்தீதிலிராமாநுசன்றனைச்சார்ந்தவர்கட்
குவந்தருந்தேனவன்சீரன்றியானொன்றுமுண்மகிழ்ந்தே.

| பதம். | உரை. |
|---|---|
| தீதில் | ஆஶ்ரயித்தவர்களை அநிஷ்ட நிவ்ருத்தி இஷ்ட ப்ராப்திகளில் ஒன்றினுடையவும் அலாபத்தாலே துக்கப்பட விட்டிருக்கும் குற்றமில்லாத, |
| இராமாநுசன் | எம்பெருமானார், |
| தன்னை | தம்மை, |
| சார்ந்தவர்கட்கு | ஆச்ரயித்தவர்களுக்கு, முதல் பூர்வவாக்யத்தில் சொல்லுகிற, |
| தவம் | சரணாகதி நிஷ்டையை, |
| தரும் | கொடுத்தருளுவர்; அநந்தரம், உத்தர வாக்யத்தில் சொல்லுகிற கைங்கர்யத்துக்கு ருசிவேண்டுகையாலே, |

| பதம். | உரை. |
|---|---|
| செல்வம் | பக்தியாகிற ஸம்பத்தை, |
| தகவு | ப்ராப்யாநுரூபமாகவும், |
| தரும் | கொடுத்தருளுவர்; பின்பு "சாரந்த இருவல் வினைகளும் சரித்து" என்கிறபடியே, |
| சலியா | ஒரு ஸர்வசக்தி சரிக்கிலொழிய சரியாததாய, |
| பிறவி | ஜந்ம ப்ரயுக்தமான, |
| பவம் | ஸம்ஸாரத்தை, |
| தரும் | மேன்மேலும் உண்டாக்காநிற்கும், |
| தீவினை | க்ரூரகர்மங்களை, "பண்டை வல்வினை பாற்றியருளினான்" என்கிறபடியே, |
| பாற்றி | க்ஷுத்ரதூளியாம்படி, |

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தரும் | பண்ணிக்கொடுப்பர் "పరాస్తమాక్షరపర మవ్యోమాదిశబ్దితే" "பரந்தாமாக்ஷர பரமவ்யோ மாதி ஶப்திதே" என்கிறபடியே, | ஒன்றும் | வேறொன்றையும், |
| பரந்தாமம் என்னும் | பரந்தாமமென்று சொல்லப்படுகிற | உள்மகிழ்ந்து | மநஃப்ரீதியோடே, |
| திவம் | பரமாகாசமான ஸ்ரீ வைகுண்டத்தை | உவந்து | விரும்பி, |
| தரும் | கொடுப்பர்; இப்படி அவர் எல்லாவற்றையும் தந்தாலும், | அருந்தேன் | புஜியேன். |
| யான் | நான், | | |
| அவன் | அவருடைய, | | |
| சீர் அன்றி | குணங்களையொழிய, | | |

தருமென்றது - கொடுக்குமென்றபடி. "சலியாப் பிறவிப்பவம் தரும் தீவினை" என்று பாட்டமானபோது, சலிகையாவது - நிலைபெருகையாய், நிலைபேர்க்கவரிதாய் ஸம்ஸாரஹேதுவான துஷ்கர்மமென்றபடி. பவம்-பவம்; ஸம்ஸாரம். பாறு - பொடி - பாற்றுகை-பொடியாக்குகை. மகிழ்ந்தென்று-ப்ரீதிவாசக சப்தமுண்டாகையாலே, உவந்துஎன்கிறவிது-விருப்பமாய், ஆதரவாசியாகிறது. ... ... (கூச)

வ்யா.—அ.—தொண்ணூற்றுநாலாம் பாட்டு. தம்மை நிர்ஹேதுகமாக அங்கீகரித்து அநாதியான பாபங்கள் மறுவலிடாதபடி தமமுடைய க்ருபையாகிற கட்கத்தாலே சேதித்து அத்தாலே பரபக்ஷஜநகூடஸ்தரான எம்பெருமானார் லோகத்திலே அபஹரித்தாநந்தங்களை வேதார்த்தங்களாக ப்ரமிப்பிக்கும் குத்ருஷ்டிகளை நிரஸித்த வுபகாரகமென்று கொண்டாடினார் - கீழ்ப்பாட்டில்; இப்பாட்டில - அந்த எம்பெருமானார், தம்மை ஆச்ரயித்தவர்களுக்கு ஸாவோத்தாரக ஹேதுவான ப்ரபத்த்யுபாயத்தையும், தத்தர காலகர்த்தயமான கைங்கர்யரூப ஸம்பத்தையும், சரீராநுரூப ஸம்பந்தத்தை யறுத்துப்போகட்டு பரமபுருஷார்த்த லக்ஷணமோக்ஷத்தையும் அடைவே கொடுத்தருளுவரே யாகிலும் அடியேன் அவருடைய கல்யாணகுணங்களையொழிய வேறொன்றை ஆதரித்து புஜியேனென்று ஸ்வாத்யவஸாயத்தை யருளிச்செய்கிறார்.

வ்யா.—(தீதிலிராமாநுசன்) ஆச்ரயணோந்முகராய்வந்த சேதநரைக் கடாக்ஷித்து, "ప్రశాన్తచిత్తాయ శమాన్వితాయ" (ப்ரஶாந்தசித்தாய ஶமாந்விதாய) இத்யாதி சாஸ்த்ர மர்யாதையை யுட்கொண்டு இவர்களுக்கு ஆச்ரயணவிரோதிகளான பாபங்கள் நசித்துப்போந்ததுமில்லை, தத்பயோகிகளான கரணங்கள் உதித்தது மில்லை

என்று தோஷகுணஹாநிகளைக் கணிசித்து அங்கீகரியாதே யிருந்தாரென்கிற குற்றமில்லாத எமபெருமானார். "పరీక్ష్యవివిధోపాయైః" (பரீக்ஷ்யவிவிதோபாயை:) என்னும் விசேஷவாக்யமிருக்க இது குற்றமாய்த் தலைக்கட்டுமோவென்னில்; "இரண்டும் குலையவேணுமென்றிருக்கில் இரண்டுக்கும் இரண்டுமுண்டாய்த்ததாம" என்று ஸ்ரீவசநபூஷணத்திலே சொல்லுகையாலே தோஷகுணஹாநிகளைக் கணிசிக்கிறது ப்ரபத்தவ்யனுக்குக் குற்றமாய்த தலைககட்டுமிறே. "త్యజ్యతే యది దోషేణ గుణేనాపి పరిగృహ్యతే। ఏతత్సాధారణం హ్యేవం ఆశ్రితస్య కృతం ఫలమ్" (த்யஜ்யதே யதி தோஷேண குணேநாபி பரிக்ருஹ்யதே-ஏதத ஸாதாரணம்பந்தா: ஆச்ரிதஸ்யக்ருதம்பலம) என்னககடவதிறே. தீதாவது - தம்மை ஆச்ரயித்தவர்களை, அநிஷ்டநிவர்த்தி இஷ்டப்ராப்திக ளிரண்டிலுமுடையவும அலாபத்தாலே துக்கப்பட விட்டிருக்கையாகிற குறறம்; அதில்லாதவரை யென்றபடி.

(தன்னைச் சார்ந்தவாகட்கு) இப்படிப்பட்ட வைபவத்தையுடையரான தம்மை, *உபாயோபேயபாவேந அத்யவஸித்து ஆச்ரயித்தவர்களுக்கு. முந்துறமுன்னம (தவந்தரும) "న్యాసమేషాం తపసామతిరిక్తమాహుః" "ந்யாஸமேஷாம்தபஸாமதிரிக்தமாஹு:" என்கிறபடியே ஸர்வோபாய விலக்ஷணமாய் ஸ்வரூபாநுரூபமாய் த்வயத்திலே பூர்வவாக்ய ப்ரதிபாதிதமான கைஙகர்யததுக்கு, போஜநத்துக்கு க்ஷுத்துப்போலே பூர்வபாவியா யிருந்துள்ள ருசிரூபபக்தியாகிறஸமபத்தை ப்ராபயாநுரூபமாககொடுததருளுவா. தகவு - தகுதி. அன்றிக்கே, (செல்வும-தரும) "స తు నాగవరః శ్రీమాన్" "లక్ష్మణో లక్ష్మిసంపన్నః" (ஸதுநாகவரஶ்ஸ்ரீமாந) (லக்ஷமணோலக்ஷமிஸம்பந்ந:) என்னுமபடியான கைங்கர்ய ஸமபததையும் கொடுததருளுவர்.

(தகவும்தரும்) அந்தகைங்கர்யத்தைப் பெறுவதெப்போதோவென்கிற ப்ராப்யத்வரையையும கொடுத்தருளுவர். அஙஙனுமன்றிக்கே (செல்வமதகவுமதரும) உத்தரவாக்யததில சொலலுகிற கைங்கர்யம் சரமபர்வபர்யநதமாயிருபபதாகையாலும், அதுபரம தர்மமாகையாலும, பரம தாமமான சரமபாவபர்யநதயா யிருந்துள்ள கைங்கர்ய லக்ஷமியைக கொடுததருளுவரொன்றுமாம். இந்த யோஜனையிலே, தகவாவது - தர்மம.

(சரியாப்பிறவிப்பவந்தரும் தீவினைபாற்றித்தரும்) அநந்தரம், (சார்ந்த விருவல்வினைகளும் சரித்து) என்கிறபடியே ஒரு ஸர்வசக்திகழிக்கி லொழிய அநுபவத்தாலும் ப்ராயஶ்சித்ததாலும் சரியாததாய் பலயோநிகள்தோறும் பலபடியாலும் பிறக்கையாகிற ஸம்ஸாரததைமேன்மேலும் கொழுந்துவிடும்படி பண்ணக்கடவன

வானக்ரூரகர்மங்களை. (பண்டைவல்வினை பாற்றியருளினான்) என்கிறபடியேக்ஷுத்ரதூளியாகும்படி பண்ணிக்கொடுப்பர். காற்றடித்த வாறே தூள்பறக்குமாப்போலே பறந்துபோகும்படி பண்ணிக்கொடுப்பரென்றபடி. பவம்-பவம்.ஸம்ஸாரமென்றபடி. பாறு-பொடி. பாற்றுகை - பொடியாக்குகை. "సర్వపాపేభ్యో మోక్షయిష్యామి" (ஸர்வபாபேப்யோமோக்ஷயிஷ்யாமி)என்றுணிறே கீதாசார்யனும்.

(பரந்தாமமென்னுந் திவந்தரும்) அநந்தரம்(பரந்தாமாக்ஷரபரப்ரஹ்மவ்யோமாதி ஶப்திதே) என்று கத்யத்ரயத்தில் அருளிச்செய்தபடியே-பரந்தாமமென்று சொல்லப்படுகிற, திவம்-பரமாகாசம். ஸ்ரீவைகுண்டமென்றபடி. அதனைக்கொடுத்தருளுவர். இப்படி ப்ரபத்திநிஷ்டை தொடங்கி பரமபதத்தளவுங் கொடுத்தருளுவரேயாகிலும், (அவனசிரானறியான்)என்று கீழ்ச்சொன்னபடியே ஸர்வப்ரகாரத்தாலும் உத்தாரகரான எம்பெருமானாருடைய கல்யாணகுணங்களையொழிய நான் மற்றொருவிஷயத்தை; (உள்மகிழ்ந்து- உவந்தருந்தேன்) மநஸ்ஸந்தோஷத்துடனே ஆதரித்தநுபவிக்கக்கடவேனல்லேன். அருந்துதல்- உண்டல். (சுழிபட்டோடும் சுடர்ச்சோதிவெள்ளம்) என்னும்படியான பரமபதத்தையும் கூட, ஐச்வர்ய கைவல்யங்களைப்போலே காற்கடைக்கொள்ள வேண்டும்படி அமுதனார்க்கு இருந்ததுகாணும். எம்பெருமானாருடைய "பாலேபோல்சீர்" என்னும்படியான கல்யாணகுணங்களினுடைய போக்யதை. இத்தால் - ப்ரீதமநஸ்கராய் அவருடைய கல்யாணகுணங்களையே விரும்பி புஜிப்பேனென்கிறார். மகிழ்ந்து என்று - ப்ரீதிவாசக சப்தமுண்டாகையாலே, உவந்து என்கிறவிது - விருப்பமாய், ஆதரவாசியாகிறது. "சலியாப்பிறவி" என்று பாடமானபோது, சலிக்கையாவது-நிலைபெயர்கையாய் நிலைபேர்க்கவரிதாய் ஸம்ஸாரஹேதுவான துஷ்கர்மங்களென்றபடி. "నిత్యం యతీంద్ర" (நித்யம்யதீந்த்ர) இத்யாதிஶ்லோகத்திலே ஜீயரும் அத்தை ப்ரார்த்தித்தருளினாரிறே. .... ... (கூரு)

உரை.—அ.—தொண்ணூற்றஞ்சாம்பாட்டு. எம்பெருமானார், தம்மை ஆச்ரயித்தவர்களுக்கு உஜ்ஜீவநத்துக்கு வேண்டுவதெல்லாம் தாமே உண்டாக்கி உஜ்ஜீவிப்பித்துவிடுவரென்றார்-கீழ்; இப்படியிருக்கிற இவருடைய ஜ்ஞாநசக்த்யாதிகளை அநுஸந்தித்தவாறே இந்த லோகத்திலுள்ளார் படியன்றிக்கே வ்யாவ்ருத்தமாயிருக்கையாலே அஸ்ப்ருஷ்டஸம்ஸார கந்தரிலே ஒருவர், பார்த்தமாக ஸம்ஸாரத்திலே அவதரித்தாராகவே நினைத்து அருளிச்செய்கிறார்-இதில்.

மூ.—உண்ணின் றுயிர்களுக்குற்றனவேசெய்தவர்க்குயவே
பண்ணும்பரனும்பரிவிலனும்படிபல்லுயிர்க்கும்
விண்ணின் றலைநின் றுவீடளிப்பானெம்மிராமாநுசனிம்
மண்ணின்றலத்துதித் துமறைநாலும்வளர்த்தனனே. ( )

| பதம். | உரை. |
|---|---|
| உள் நின்று | “[illegible]” “ய ஆத்மாநமந்தரோயமயதி” என்கிற படியேஸத்தா நிர்வாஹார்த்தமாக உள்ளேநின்று, |
| உயிர்களுக்கு உற்றனவே செய்து | இவ்வாத்மாக்கள் யாதொரு வழியாலே உஜ்ஜீவிக்கும் அதுக்கீடான க்ருஷிகளையேபண்ணி, |
| அவர்க்கு | அவர்களுக்கு, |
| உயவே | உஜ்ஜீவநத்தையே, |
| பண்ணும் | பண்ணாநின்றுள்ள, ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதந ஸ்வரூபஸ்திதி ப்ரவ்ருத்தி பேதனான, |
| பரனும் | ஸர்வஸ்மாத்பரனும், |
| பரிவிலனும் படி | ஆத்மாக்களளவில் இவரோபாதி, ஸ்நேஹமுடையனல்லன் என்னும்படியாக, |
| பல்லுயிர்க்கும் | ஸகல ஆத்மாக்களுக்கும், “[illegible]” “ஸ்ரீ விஷ்ணுலோக மணிமண்டபமார்க்கதாயீ” என்கிறபடியே, |
| வீடு | பரம புருஷார்த்தலக்ஷண மோக்ஷத்தை, |
| அளிப்பான் | கொடுத்தருளுவதாக, |
| எம | நம்முடைய நாதரான, |
| இராமாநுசன் | எம்பெருமானார், “[illegible]” “நாகஸ்யபாஷ்டடே” என்கிறபடியே, |
| விண்ணின் தலைநின்று | விண்ணின தலையான ஸ்ரீ வைகுண்டத்தில நின்றும், |
| மண்ணின் தலத்து | பூதலத்திலே, |
| உதித்து | தத்கததோஷஸ்பர்சமற அவதரித்து, ஸர்வோஜ்ஜீவநமாஸ்த்ரமான, |
| மறைநாலும் | ரிகாதிசதுர் வேதத்தையும், |
| வளர்த்தனன் | அஸங்குசிதமாக நடத்தியருளினார். இப்படி செய்தருளுவதே! என்று கருத்து. |

உற்றனவேசெய்து என்றது - தக்கனவே செய்தென்றபடி. பரிவு - ஸ்நேஹம், பக்ஷபாதமாகவுமாம். “பல்லுயிர்க்கு” என்று பாடமாலும் பொருள் ஒக்கும். ... ... (௬௫)

வ்யா.—அ.—தொண்ணூற்றஞ்சாம்பாட்டு, எம்பெருமானார், தம்மை ஆஸ்ரயித்தவர்களுக்கு உத்தாரணஹேதுவான உபாய விசேஷத்தையும், அத்தாலே உண்டாகக்கடவ பகவத்ப்ரீதிரூபபலம் பத்தையும், ப்ராப்திப்ரதிபந்தகமான பாபவிமோசநத்தையும், தத நந்தரபாவியான பரமபத ப்ராப்தியையும பண்ணிக்கொடுப்பரே யாகிலும், நான் அவருடைய கல்யாண குணங்களையொழிய வேறொன்றை விரும்பி அநுபவியேனென்றருளிச்செய்தார் - கீழ்ப் பாட்டிலே; இப்பாட்டிலே-ஸகலஆத்மாக்களுக்கும அந்தர்யாமி யாய்அவர்களுடைய ஸகலப்ரவ்ர்த்திநிவ்ர்த்திகளையும் பண்ணிக் கொடுக்கிறஸர்வேஸ்வரனும் இவரைப்போலே ஆச்ரித வ்யாமுக்த னல்லனென்னும்படியாடும், ஜ்ஞாநவைராக்யாதிகளாலே ஸம்ஸாரி களைக்காட்டில அத்யந்த வ்யாவ்ர்த்த ரென்னும்படியாயும் இவர் தாமிருக்கையாலே பரமபதத்தில்நின்றும் அந்தபரமப்ராப்யத் தைஎல்லார்க்கும் கொடுப்பதாக அஸ்பர்ஷ்டஸம்ஸாரகந்தரிலேஒரு வர் பரார்த்தமாக இந்தலோகத்திலே எம்பெருமானாராய் அவதரி தது ஸர்வகாலமும் வேதார்த்தத்தை ப்ரவர்த்திப்பித்தாரென்று அருளிசசெயகிறார்.

வ்யா.— (உள்நின்று) (అన్తఃప్రవిష్టశ్శాస్తా జనానాం సర్వాత్మా) (அந்தப்ரவிஷ்டம் ஶாஸ்த்தாஜநாநாம்ஸர்வாத்மா) (అన్తఃప్రవిష్టం కర్తారమేతం) (అన్తర్బహిశ్చ తత్సర్వం వ్యాప్య నారాయణః స్థితః) (அந்தப்ரவிஷ்டம் கர்த்தாரமேதம) (அந்தர்ப்பஹிஶ்சததஸர்வம்வ்யாப்யநாராயணஸ்ததித:) (య ఆత్మని తిష్ఠన్ - య ఆత్మానమన్తరో యమయతి) (யஆத்மநிதிஷ்டந - யஆத்மாநமந்தரோயமயதி) என்றும், (సర్వస్య చాహం హృది సన్నివిష్టః) (ஸர்வஸ்யசாஹம்ஹ்ர்திஸந்நிவிஷ்ட:) எனறும், (உடல் மிசை யுயிரெனககரநதெங்கும் பரந்துளன்) என்றும், (பரந்த தண்பரவையுள நீர்தொறும பரந்துளன்) என்றும் சொல்லு கிறபடியே அநதர்யாமியாய் ஸத்தாநிர்வாஹகனாய்க் கொண்டிரு ந்து, (அநாதிமாயயாஸுப்தோயதா)(అనాదిమాయయా సుప్తో యదా)என் கிறபடியே அநாதயசித்ஸம்பந்த நிபந்தநமான அஜ்ஞாநாந்தகா ரத்திலே தத்வஹித புருஷார்த்தஜ்ஞாநஶூந்யரான சேதநர்க்கு அததை அறிவிக்கைக்காக அருகேவந்து கண்காண நிற்கில், ஜ்ஞா நைகாகாரத்தாலே உன்னோடு நானும் துல்யனென்று ஆணையிட் டுத்தள்ளிவிடுவர்களென்று, அதிசங்கைபண்ணி, இராமடமூட்டு வாரைப்போலே அவர்களுக்குத் தெரியாதபடி ஸத்தையை நோக்குவதாக உள்ளேபுகுந்துநின்றென்றபடி.

(உயிர்கட்குற்றனவேசெய்து) ஸ்வேதரஸமஸ்தப்ராணிகளுக் கும் "அவரவர்விதிவழியடைய நின்றனர்" என்கிறபடியே-தத்தத்

பூர்வகர்மாநுகுணமாக ப்ரவ்ருத்தி நிவ்ருத்திகளைப்பண்ணிக் கொடுத்து. அன்றிக்கே, ஸ்வரூபமானவற்றைக்ரமக்ரமேண விரகாலே ஏறிட்டு ததநுரூபமாயிருந்துள்ள ப்ரவ்ருத்திகளிலே மூட்டுவித்தென்னுதல்; இவ்வாத்மாக்கள் யாதொருவழியாலே உஜ்ஜீவிப்பர்களோ அதற்கு ஈடான க்ருஷிகளைப்பண்ணி என்னுதல். உற்றனவே செய்தென்றது - தக்கனவே செய்தென்றபடி (భవన్తిభావాభూతానాం మత్తఏవపృథగ్విధాః) (பவந்திபாவாபூதாநாம் மத்தஏவப்ருதக்விதா:) என்றுணிறே.

(அவர்க்கு உயவேபண்ணும்பாணும) (త్రిపాదూర్ధ్వఉదైత్పురుషః) (த்ரிபாதூர்த்த்வ உதைத்புருஷ:) எனவும், (తమసఃపరస్తాత్) (தமஸ:பரஸ்தாத்) என்றும் சொல்லுகிறபடியே ஸர்வோத்தமமான பரமபுருஷார்த்தத்தை ப்ராபிக்கையாகிற உச்ச்ராயத்தைப் பண்ணிநின்றுள்ள ஸர்வேச்வரனும். "పతింవిశ్వస్య" "యస్మాత్పరం నాపరమస్తికించిత్" "பதிம்விஸ்வஸ்ய" யஸ்மாத்பரந்நாபரமஸ்திகிஞ்சித" "అధయదతఃపరః" "அதயதத:பர:" என்கிறபடியே ஸ்வாதீநத்ரிவித சேதநாசேதநஸ்வருபஸ்திதி ப்ரவ்ருத்திபேதகனுமானவஸ்மாத்பரனான ஸர்வேச்வரனும.(பரிவிலனும்படி)சேதநஸம்ரக்ஷணம் பண்ணுமளவில் இவ்வெம்பெருமானுரோபாதிஸ்நேஹத்தையுடையவனல்லனென்னும்படியாக.பரிவு-ஸ்நேஹம்.பக்ஷபாதம என்னுதல. இலன்-இல்லாதவன். (துர்லபமயஉபாஸதே) எனவும, (க்ஷிபாமி) (நக்ஷமாமி) என்றும, "క్షిప్రంభవతిధర్మాత్మా శశ్వచ్ఛాన్తిం నిగచ్ఛతి" "க்ஷிப்ரம்பவதி தர்மாத்மா சச்வச்சாந்திந்நிகச்சதி" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வேஸ்வரன துர்லபனுய் நிக்ரஹாநுக்ரஹங்கள இரண்டுக்கும பொதுவானவனுய் பலமவிதரிக்குமோ வி தரியாதொழியுமோவென்று ஸந்தேஹிக்கவேண்டுமபடியிருக்கையாலும, இவர் "సులభస్సమ్" "ஸுலபம்ஸ்வகுரும" எனறும "సంసారసాగరసముత్తరణైకపోతం" "ஸம்ஸாரஸ்துதத்பக்த பரிசாயாரதாமநாம" எனறும சொல்லுகிறபடியே ஸுலபராய் அநுக்ரஹசீலராய நிஸ்ஸம்ஸயைகபலப்ரதரா யிருக்கையாலும், இருவரையும பார்க்குமளவில் இவரோ அவனைக்காட்டில் சேதநர்பக்கல அதிஸ்நேஹி என்னுமிடம்தோற்றுகிறதிறே.

(விண்ணின்தலைநின்று) "నాకస్యపృష్ఠే" "நாகஸ்யப்ருஷ்டே" என்கிறபடியே ஸ்வர்க்காதிலோகங்களுக்கெல்லாம்மேலாய் பரமாகாசசப்தவாச்யமான ஸ்ரீவைகுண்டத்தில்நின்றும். (பல்லுயிர்க்கும் - வீடளிப்பான்) "శ్రీవిష్ణులోకమణిమణ్టపమార్గదాయీ రామానుజో విజయతే యతిరాజరాజః" "ஸ்ரீவிஷ்ணுலோக மணிமண்டப மார்க்கதாயீராமாநுஜோவிஜயதே யதிராஜராஜ:" என்கிறபடியே ஸகலஆத்மாக்க

ளுக்கும் * அந்தமில் பேரின்ப மாகையாலே பரமபுருஷார்த்தலக்ஷணமான மோக்ஷத்தைக்கொடுத்தருளுவதாக."புல்லுயிர்க்கு" என்றபாடமானபோது, புல்லுயிரென்றது - க்ஷுத்ரரென்றபடி. (எம்மிராமாநுசன்) எங்களுக்கு ஸ்வாமியான எம்பெருமானார். (மண்ணின தலத்துதித்து) "ప్రకృతింస్వామధిష్ఠాయసమ్భవామి" "ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்டாய ஸம்பவாமி" என்றாப்போலே அவதரிப்பது பூமியிலேயாகிலும தத்கததோஷை ரஸம்ஸ்ப்ர்ஷ்டராய் அஜஹத் ஸ்வபாவராயக்கொண்டு அவதரித்தார்காணும்.

(மண்ணின் தலத்துதித்து) * இருள்தருமா ஞாலமான இந்த பூமியிலே இதினுடைய தோஷமொன்றும் தட்டாதபடி திருவவதரித்து. (மறைநாலும வளர்த்தனனே) "ఋచోయజూంషి సామాని తథైవాథర్వణానిచ" (ரிசோயஜூம்ஷிஸாமாநி ததைவாதர்வணாநிச) என்கிறபடியே-ரிகாதிபேதேந நாலுவகைப்பட்டிருக்கிற வேதத்தையுமலோகமெல்லாம்வ்யாபிப்பித்து அஸங்குசிதமாகநடத்தியருளினார். "[illegible]" - (ஸிரந்தநஸரஸ்வதீசிகுரபந்துஸைரந்த்ரிகா)-எனனும்படியான ஸ்ரீஸூக்திகளாலே நிர்மித்தருளின ஸ்ரீபாஷ்யாதிக்ரந்த வ்யாக்யாநம் பண்ணிக்கொண்டே இந்த வேதசதுஷ்டயத்தையும் தடையற நடப்பித்தருளினாரென்றபடி. இத்தால் - ஸ்ரீமத்வேதமார்க்க ப்ரதிஷ்டாபநாசார்யரான வேதாந்தாசார்யரென்றதாய்த்து. ... (கூ௫)

உரை.—அ.— தொண்ணூற்றாறாம்பாட்டு. (மறைநாலும் வளர்த்தனனே) என்றீர், அவர் தாம சேதநர்க்கு உஜ்ஜீவநோபாயமாக வேதாநத ப்ரகரியையாலே அருளிச்செய்தது பக்தி ப்ரபத்தி ரூப உபாய த்வயமிறே; அதில் ஸுகரோபாயமான ப்ரபத்தியிலேயோ உமக்கு நிஷ்டையென்ன; அதுவுமன்று, தாம,அபிமாநநிஷ்டரென்னுமத்தை யருளிச்செய்கிறார்.

மூ.—வளரும்பிணிகொண்டவல்வினையால்மிக்கநல்வினையின்
கிளரும்துணிவுகிடைத்தறியாதுமுடைத்தலையூன்
தளருமளவுந்தரித்தும்விழுந்துந்தனிதிரிவேற்
குளரெமமிறைவனிராமாநுசன்றனையுற்றவரே. (கூசு)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| வளரும்பிணிகொண்ட | நிரவதிகதுக்காவஹமாய், | | செய்யாத ப்ரபல கர்மத்தாலே, |
| வல்வினையால் | அநுபவவிநாச்யமாதல் ப்ராயச்சித்த விநாச்யமாதல் | மிக்கநல்வினையில் | பரமதர்மமான ஸரணாகதியில், |
| | | கிளரும் துணிவு | மஹாவிஸ்வாஸம் என்பதொன்று, |

| பதம். | உரை. |
|---|---|
| கிடைத்தரியாது | நேராகக் கிடையாததே, |
| முடைத்தலை | துர்க்கந்தாச்ரய பூதமாய், |
| ஊன் | மாம்ஸாஸ்ருகாதி ரூபமான சரீரம், "தளராவுடலம்" என்கிறபடியே, ப்ராணவியோக தசாபந்நமாய், |
| தளரும் | கட்டுக்குலையுமளவும, |
| அளவும் | "வன்சேற் றள்ளல் பொயநிலம்" என்றும், "பொதும்பினில் வீழ்ந்து வழுக்கி" என்றும், "கூடியழுங்கிக் குழியில் வீழ்ந்து வழுக்காதே" என்றும் சொல்லுகிறபடியே அள்ளலும் வழுக்கலுமான ஸம்ஸார விபூதியிலே தார்மிக ரூபகரித்த த்யாஜ்யோபாதேயமாகிற ஊற்றங்கோல் கொண்டு, |
| தரித்தும | தரித்தும், துர்வாஸநாமூலமான அநவதாநத்தாலே, |
| விழுந்தும் | * கொடுவனகுழியான சப்தாதிகளிலே விழுந்தும், |
| தனித்திரிவேற்கு | ஒருதுணையின்றிக்கே திரியாநிற்குமெனக்கு, என் தனிமைதீர எனக்குத் துணையாய் ஒரு குழியிலே வீழாதபடி தாங்களே பிடித்து நடத்தி உஜ்ஜீவிப்பிக்கைக்கு, |
| எம் | நமக்கு, |
| இறைவன் | சேஷியான, |
| இராமாநுசன் தன்னை | எம்பெருமானாரை, (தேவுமற்றறியேன்) என்று, |
| உற்றவர் உளர் | பற்றியிருப்பார் உளர் அவர்களாமே எனக்கு உத்தாரகமென்று கருத்து. |

(எம்மிறைவர் இராமாநுசன் றன்னை யுற்றவர்) என்று பாடமானபோது - எம்பெருமானாரை யல்லது அறியோமென்று பற்றியிருப்பாராய் நமக்கு சேஷிகளானவர்களென்று யோஜிப்பது. பிணி - துக்கம். நலவினை - ஸுக்ருதம். கிளரும துணிவு - மிக்க துணிவு. கிளர்த்தி-மிகுதி. முடை - துர்க்கந்தம். (மிக்க நல்வினையில் கிளரும் துணிவு) என்றும் பாடம் சொல்லுவர்கள். அப்போது பரமதார்மமான சரணாகதிக்கு அபேக்ஷிதமான மஹாவிச்வாஸமென்கை. ... ... (௬௬)

வ்யா.—அ.—தொண்ணூற்றாறாம்பாட்டு.கீழ்ப்பாட்டிலே-நிக்ரஹாநுக்ரஹங்களிரண்டுக்கும் பொதுவாய் தண்டதரனான ஸர்வஸ்மாத்பரனிலும் அஜ்ஞாநநிக்ரஹராய் பரமபதத்தில்நின்றும் ரக்ஷணைகதீக்ஷிதராய்வந்து அவதரித்த எம்பெருமானார், நிர்ஹேதுக க்ருபையையுடையவராகையாலே சேதநஸம்ரக்ஷணார்த்தமாக வேத வேதாந்தப்ரவர்த்தநம்பண்ணியருளினரென்று இவர் அருளிச்செய்யக்கேட்டு அருகேயிருப்பார், அந்தவேதாந்தங்களிலே, "ముముక్షుర్వై శరణమహం ప్రపద్యే" (முமுக்ஷுர்வை ஶரணமஹம்ப்ரபத்யே) என்று - மோக்ஷாதிகாரிகளுக்குச்சொன்ன சரணாகதியிலே நிஷ்டராயிருந்தீரோ வென்ன; ஶரணாகதியைப் பெறுகைக்கு ப்ரதிபந்தகங்களான ப்ரபலகர்மங்களாலே அதுதன்னிலும் மஹாவிச்வாஸம் கிடையாதே, துர்க்கந்தப்ரசுரமாய் மாம்ஸாஸ்ருகாதிமயமானசரீரம் கட்டுக் குலைந்துபோமளவும் ஸுகதுःகாநுபவம் பண்ணிக்கொண்டு ஸஹாயமின்றிக்கே யிருக்கிறவெனக்கு, அந்த சரமோபாயமான எம்பெருமானாரிலும் ஸுலபதமராய்சேஷிகளாய், எனக்கு ஸ்வாமியானவவர்தமமையே, (தந்தைநல்தாய் தாரம்) இத்யாதிபடியே ஸர்வவிதபந்துவாக அத்யவஸித்து, (தேவுமற்றறியேன) என்றிருக்கும மஹாத்மாக்களே வழித்துணையாய் ரக்ஷகராயிருப்பார் என்று அத்யவஸிதத்தேன், ஆகையாலே நான் ததீயாபிமாநநிஷ்டனென்று அருளிச்செய்கிறார்.

வ்யா.—(வளரும்பிணிகொண்ட வல்வினையால்) "అదత్తదోషేణ భవేద్దరిద్రీ దరిద్రదోషేణ కరోతిపాపమ్। పాపాదవశ్యం నరకం వ్రజన్తి పునర్దరిద్రీ పునరేవ పాపీ" (அதத்ததோஷேணபவேத்தரித்ரீ தரித்ரதோஷேண கரோதிபாபம் - பாபாதவஶ்யம்நரகம்வ்ரஜந்தி புநர்த்தரித்ரःபுநரேவபாபீ) என்றும், "ధ్యాయతో విషయాన్ పుంసః సఙ్గస్తేషూపజాయతే। సఙ్గాత్సఞ్జాయతే కామః కామాత్క్రోధోఽభిజాయతే॥ క్రోధాద్భవతి సమ్మోహః సమ్మోహాత్స్మృతివిభ్రమః। స్మృతిభ్రంశాద్బుద్ధినాశః బుద్ధినాశాత్ప్రణశ్యతి" (த்யாயதோவிஷயாந் பும்ஸஸ்ஸங்கஸ்தேஷூபஜாயதே-ஸங்காத்ஸஞ்ஜாயதேகாமःகாமாத் க்ரோதோபிஜாயதே - க்ரோதாத்பவதிஸம்மோஹः ஸம்மோஹாத்ஸ்ம்ருதிவிப்ரமः - ஸ்ம்ருதிப்ரம்ஶாத்புத்திநாஶः புத்திநாஶாத் ப்ரணஶ்யதி) என்றும் சொல்லுகிறபடியே, மேன்மேலும் பெருகி வருகிற, பிணிஉண்டு -வ்யாதி, தந்மூலதுःகமென்றபடி.(கொண்ட வல்வினையால்) அந்த துःகத்தையே ஸர்வகாலத்திலும் விளைக்கக் கடவதாய், அநுபவப்ராயஶ்சித்தங்களாலே நசியாதபடி அதிப்ரபலமான துஷ்கர்மத்தாலே,

(மிக்கநல்வினையில்கிளரும்துணிவுகிடைத்தறியாது) "తస్మాన్న్యాసమేషాం తపసామతిరిక్తమాహుః" (தஸ்மாந்ந்யாஸமேஷாம்தபஸாமதிரிக்தமா

ஷூ:) என்றும், "సత్కర్మనిరతాశ్శుద్ధాస్సాంఖ్యయోగవిదస్తథా। నార్హన్తి శరణస్థస్య కలాం కోటితమీమపి" (ஸத்கர்மநிரதாஶ்ஶுத்தாஸ்ஸாங்க்ய யோகவிதஸ்ததா-நார்ஹந்திஶரணஸ்தஸ்யகலாங்கோடிதமீமபி) என்றும்சொல்லுகிறபடியே - ஸர்வோபாயோத்க்ருஷ்டமாய் உபாயாந்தரங்களைப் போலே ஸ்வரூப விருத்தமாயிருப்பதுமன்றிக்கே ஸ்வரூபாநுரூபமா யிருக்கையாகிற நன்மையையுடைத்தான அநுசவிருப க்ரியையிலே, "మహావిశ్వాసపూర్వకం" "తదేకోపాయతాయాచ్ఞా" "மஹாவிஶ்வாஸபூர்வகம்" (ததேகோபாயதா யாச்ஞா) என்றும், "విశ్వాసః ప్రార్థనాపూర్వం ఆత్మరక్షాభరం" (விஶ்வாஸ: ப்ரார்த்தநாபூர்வம் ஆத்மரக்ஷாபரம்) என்றும்சொல்லுகிறபடியே, பரபக்தி பரஜ்ஞாந பரமபக்தி பர்யந்தமாகப் பெருகிவருகிற ப்ராப்யத்வரைக் குறுப்பான மஹாவிஶ்வாஸமென்பதொன்றும் நேராக லபியாதபடி ஜ்ஞாநவிதுரனாயிருந்துவைத்து. நல்வினை-ஸாக்ஷாத்தம;அதாவது-பரபக்தி.கிளரும துணிவு-மிக்கதுணிவு;கிளர்த்தி-மிகுதி.(மிககநல்வினையினகிளரும் துணிவு) என்று பாடமானபோது - பரமதர்மமான சரணாகதிக்கு அபேக்ஷிதமான மஹாவிச்வாஸமென்கை.

(முடைத்தலையூன்தளருமளவும) "అమేధ్యపూర్ణం కృమిజన్తుసంకులం స్వభావదుర్గన్ధమశౌచమధ్రువమ్। కళేబరం మూత్రపురీషభాజనమ్" (அமேத்யபூர்ணம் க்ருமிஜந்துஸங்குலம் ஸ்வபாவதுர்கந்தமஶௌசமத்ருவம, களேபரம்மூத்ரபுரீஷபாஜநம்) எனகிறபடியே - ஸ்வபாவ துர்க்கந்தஸ்த்தாநமாய்,* "మాంసాసృక్పూయవిణ్మూత్రస్నాయుమజ్జాస్థిసంహతౌ" (மாம்ஸாஸ்ருக்பூயவிண்மூத்ர ஸ்நாயுமஜ்ஜாஸ்திஸம்ஹதரூபமான சரீரம் தளர்ந்துபோகுமளவும். முடை-துர்க்கந்தம;முடை என்றும்,ஊன் என்றும்-மாம்ஸமாய், தத்ப்ரசுரமான சரீரத்தைச் சொன்னபடி. (ஊனவுடல்சிறை) என்னக்கடவதிறே.(தரிததும்விழுந்தும்)இப்படியானதசையிலே "సంసారవిషవృక్షస్య ద్వే ఫలే హ్యమృతోపమే। కదాచిత్కేశవే భక్తిస్తద్భక్తైర్వా సమాగమః" (ஸம்ஸாரவிஷவ்ருக்ஷஸ்யத்வேபலே ஹ்யம்ருதோபமே - கதாசித்கேஶவேபக்திஸ்தத்பக்தைர்வாஸமாகம:) என்றும், (கூடிமுழுங்கிக் குழியில்வீழ்ந்து வழுக்காதே) என்றும், (மாயவன்சேற்றள்ளல்பொய்ந்நிலம்) என்றுஞ்சொல்லுகிறபடியே அள்ளலும்வழுக்கலுமான ஸம்ஸாரவிபூதியிலே யாத்ருச்சிகமாக ஸஞ்சரித்துக்கொண்டுபோருகிற சிலதார்மிகர் ஸம்ஸாரகர்த்தத்திலே அழுந்திக்கிடந்த நான உத்தரிக்கும்படி உபகரித்தும், த்யாஜ்யோபாதேய விவேகமாகிற ஊன்றுகோலை உத்தம்பகமாகப் பிடித்துக்கொண்டு அத்தாலே அல்பதுக்கசாந்தி பிறந்து ஆச்வஸித்தும், பின்னையும் துர்வாஸநாமூலமான அநவதாநத்தாலே* கொடுலன் குழியான ஶப்தாதிவிஷயங்களிலே விழுந்தும்.

(தனிதிரிவேற்கு) "జీర్ణాతరిస్సరితతీవగభీరనీరాబాలావయం సకలమిత్థమనర్థహేతుః" (ஜீர்ணதரிஸ்ஸரிததீவகபீரநீரா பாலாவயம் ஸகலமித்தமநர்த்தஹேதுঃ) என்றும்,(நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேன்) என்றும், "నధర్మనిష్ఠోస్మి" (நதர்மநிஷ்டோஸ்மி) என்றும், "భవదుర్దినే పథస్ఖలితమ్"(பவதுர்த்திநேபதஸ்கலிதம்) என்றும் சொல்லுகிறபடியே சேதநரூபமாயாதல் அசேதநரூபமாயாதல் ஒருஸஹாயாந்தரமின்றிக்கே யிருக்கிற நமக்கு. (இராமாநுசன்றன்னையுற்றவர்) "రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే" "రామానుజార్యవశగః పరివర్తిషీయ" "నచేద్రామానుజేత్యేషా" "ராமாநுஜஸ்யசரணௌஶரணம் ப்ரபத்யே" "ராமாநுஜார்யவஶகঃ பரிவர்த்திஷீய" "நசேத்ராமாநுஜேத்யேஷா" இத்யாதிப்படியே எம்பெருமாநாரை அத்யவஸித்திருப்பார்.

(எம்மிறைவர் - உளர்) நம்முடைய தனிமைதீர நமக்குத் துணையாய் ஸம்ஸாரமாகிற படுகுழியிலே விழாதபடி, தாங்களாயேபிடித்துநடத்தி உத்தரிக்கும் அஸ்மத்ஸ்வாமிகளாவர்கள். எம்மிறைவர் என்றது - கூரத்தாழ்வானை. (வஞ்சமுக்குறும்பாம் குழியைக்கடத்தும் நம் கூரத்தாழ்வான்) என்று கீழேயும் அருளிச்செய்தாரிறே. அன்றிக்கே, (எம்மிறைவர்-இராமாநுசன்)என்று-எம்பெருமானார்க்கு விசேஷணமாகவுமாம். (எம்மிறையவன் - இராமாநுசன் தன்னையுற்றவரே) என்று பாடமானபோது,எம்பெருமானாரையல்லது அறியோமென்றுஅற்றிருப்பார் நமக்குசேஷிகள் என்றுயோஜிப்பது. "కర్మేతి కేచిదపరే మతిమిత్యథాన్యే భక్తిం పరే ప్రపదనం ప్రవదన్త్యుపాయమ్। ఆమ్నాయసారరసికాస్త్వమితానుభావాస్త్వామేవ యాన్తి శరణం శఠజిన్మునీన్ద్ర" (கர்மேதிகேசிதபரேமதிமித்யதாந்யேபக்திம்பரேப்ரபதநம்ப்ரவதந்த்யுபாயம், ஆம்நாயஸாரரஸிகாஸ்த்வமிதாநுபாவாஸ்த்வாமேவயாந்திஶரணம் ஶடஜிந்முநீந்த்ர)என்றும் சரமபர்வத்தைப்பற்றினவர்களே பெரியோர்கள் என்று அபியுக்தரும் அருளிச்செய்தாரிறே. "త్వద్దాసదాసగణనాచరమావధౌ యస్తద్దాసతైకరసతావిరతా మమాస్తు" "த்வத்தாஸதாஸகணநாசரமாவதௌயஸ்த்வத்தாஸதைகரஸதாऽவிரதாமமாஸ்து" என்று ததீயசேஷத்வத்தை ஜீயரும் ப்ரார்த்தித்தருளினாரிறே ... ... ... (௯௯)

உரை.—அ.—தொண்ணூற்றேழாம்பாட்டு. இப்படி எம்பெருமானார் தம்மளவன்றிக்கே அங்குத்தைக்கு அநர்யார்ஹரா யிருப்பார் உத்தேச்யரென்றிருக்கைக்கு இந்தருசி உமக்கு வந்தவழிதானென்னென்ன; அதுவும் எம்பெருமானார்தம்முடைய கேவலக்ர்பையாலே வந்ததென்கிறார்.

மூ.—தன்னையுற்றாட்செய்யுந்தன்மையினோர்மன்னுதாமரைத்தாள்
தன்னையுற்றாட்செய்யவென்னையுற்றானின்றுதன்றகவால்
தன்னையுற்றாரன்றித்தன்மையுற்றாரில்லையென்றறிந்து
தன்னையுற்றாரையிராமாநுசன்குணஞ்சாற்றிடுமே. (௯௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| தன்னை | தம்மை, | தாள்தன்னை | திருவடிகளையொழிய, |
| உற்றான்றி | பற்றியிருப்பாருண்டித்தனையொழிய, | உற்று | தத்வ்யதிரிக்தங்களொன்றுமறியாதபடி பண்ணி, |
| தன்னை | தம்மை, | ஆட்செய்ய | அவர்களுக்கு அடிமை செய்யும்படியாக, |
| உற்றாரை | பற்றியிருக்குமவர்களை, | இராமாநுசன் | எம்பெருமானார், |
| குணம்சாற்றிடும் | குணகீர்த்தனம்பண்ணுகையாகிற, | தன் | தம்முடைய, |
| தன்மை | ஸ்வபாவத்தில், | தகவால் | க்ருபையாலே, |
| உற்றார் | உற்றிருப்பார், | இன்று | இன்று, |
| இல்லையென்று | ஒருவருமில்லையென்று, | என்னை | என்னை, |
| அறிந்து | திருவுள்ளம்பற்றி, | உற்றான் | அங்கீகரித்தருளினார் |
| தன்னையுற்று | தம்மையொழிய விஷயாந்தரமறியாதபடி பற்றி, | | |
| ஆட்செய்யும்தன்மையினோர் | தமக்கடிமை செய்கையே ஸ்வபாவமாக வுடையராயிருக்குமவர்களுடைய, | | |
| மன்னு | பரஸ்பரம் பொருந்தி, | | |
| தாமரை | பரமபோக்யமாயிருக்கிற, | | |

தன்மை - ஸ்வபாவம். மன்னுதல் - பொருந்துதல். தன்னையுற்றாரன்றி - தன்னையுற்றாரை - குணம சாற்றிடும் - தன்மையுற்றாரில்லை என்றறிந்து-தன்னையுற்றாட்செய்யும் தன்மையினோர் மன்னுதாமரைத் தாள்தன்னை யுற்றாட்செய்ய, இராமாநுசன் - தன்தகவால் - இன்று - என்னை யுற்றான் என்றந்வயம். (௯௭)

வ்யா.—அ—தொண்ணூற்றேழாம்பாட்டு.கீழ்ப்பாட்டிலே(எம்மிறைவர் - இராமாநுசனறன்னை உற்றவரே) என்று-"सर्वं यदेव नियमेन मदन्वयानाम्" "ஸர்வஂயதேவநியமேநமதந்வயாநாம்" என்றாப்போலே, எம்பெருமானாரை (தேவுமற்றறியேன்) என்றுபற்றியிருப்பாரே * தமக்குத்துணையென்று இவர்சொன்னவாறே, உமக்கு அவர்தம்மளவிலன்றிக்கே அங்குத்தைக்கு * நிழலும் அடிதாறும்

போலே அநந்யார்ஹராயிருப்பாருங் கூட உத்தேச்யரென்றிருக்கைக்கீடான இந்தருசிவந்த வழிதான் ஏதென்ன; "திக்குற்றகீர்த்தி" என்னும்படியான தம்முடையவைபவத்தைக் கண்களாற்கண்டும் செவிகளாற் கேட்டும் தம்பக்கலிலே அடிமைப்படுவாருமித்தனையொழியத் தமக்கு அநந்யார்ஹராயிருப்பார், பிறர்க்கடிமைப் படுவார் கிடக்கத்தக்காரென்று திருவுள்ளமாய், முந்துறமுன்னம் தம்முடைய ஸம்பந்திஸம்பந்திகள்பக்கலிலே என்னை அடிமைப்படுத்தினராகையாலே இந்தருசி அடியேனுக்கு அவர்தம்முடையக்ர்பையாலேவந்ததென்கிறார்.

வ்யா.—(தன்னை உற்றாரன்றி) "[illegible]" "கலௌகஶ்சித்பவிஷ்யதி" என்று நாரதபகவான சொல்லுகையாலும், பாகவதபுத்ராணன ஊமை இவர்தம்முடைய ப்ரபாவத்தைக் கட்டடங்கவெளியிட்டு அங்ஙனே திரோஹிதனாகையாலும், யாதவப்ரகாசன் இவரைவஞ்சிப்பதாக மணிகர்ணிகைக்கு அழைத்துக்கொண்டு போகிறபோது கோவிந்தப்பெருமாள் அச்செய்தியைக்கேட்டு விந்த்யாடவியிலே அறிவித்தவாறே, அங்கே இவர் தனிமைப்பட்டிருக்க அவ்வளவிலே பெருமாள்தாமே இவருக்கு வழித்துணையாய்வந்து ஒருராத்திரியிலேதானே இவர்தம்மை * ஒளிமாடங்கள் சூழ்ந்தழகாய கச்சித்திருப்பதியிலே சேர்த்தாரென்று சொல்லுகையாலும், இவருக்குத் திருக்கச்சிநம்பிமுகமாக ஸமஸ்ததத்வார்த்தங்களையும் பேரருளாளர் வெளியிட்டாரென்கையாலும், திக்விஜயார்த்தமாக தத்தேசங்களிலேசென்று சைவ மாயாவாத ஜைநபௌத்தாதிகளோடே ஸஹஸ்ரமுகமாகப்ரஸங்கித்து அவர்களைபக்நராக்கினார் என்கையாலும், வேங்கடாசல யாதவாசலங்களை நிர்வஹித்தார் என்கையாலும், இச்செய்திகளை அடைவேகண்டும் கேட்டும் லோகத்தாரெல்லாம் வித்தராய், "[illegible]" (அவஶாஃப்ரதிபேதிரே)என்றாப்போலே தம்மை ப்ராப்யமாகவும் ப்ராபகமாகவும் அத்யவஸித்து ஆஶ்ரயித்திருப்பாருண்டு இத்தனையொழிய.

(தன்னை உற்றார்குணஞ்சாற்றிடுந் தன்மையுற்றாரில்லை யென்றறிந்து)(தன்னைஉற்றார்)தம்முடையஸ்வரூபாநுரூப குணவிபவங்களை உள்ளபடி தெளிந்திருக்குமவர்கள். அன்றிக்கே, ஸம்பந்தி ஸம்பந்திகளளவிலே க்ர்பை அதிசயித்திருக்கையாகிற தம்முடைய ஸ்வபாவத்தை உள்ளபடி தெளியப்பெற்றவர்கள் என்னுதல். அமுதனார் தம்முடைய ஸம்பந்திஸம்பந்திகள்விஷயத்தில் க்ர்பை பண்ணவிரும்புவதும் அந்தஸ்வபாவத்தை உள்ளபடி அறிகைக்கு உத்தேச்யமன்றிறே. எம்பெருமானாருடையஸ்வபாவம், தம்மை

ஆச்ரயித்திருக்குமவர்களில்காட்டில்ஸ்வஸம்பந்திஸம்பந்திகள்விஷயத்தில் கர்பை அதிசயித்துச்செல்லவேண்டும்படியா யிருக்கும். ஆகையாலேயிறே "త్వద్దాసదాసగణనాచరమావధౌ యస్తద్దాసతైకరసతావిరతా మమాస్తు"(த்வத்தாஸ தாஸகணநாசரமாவதெளயஸ்ஸ்த்வத்தாஸதைகரஸதாவிரதாமமாஸ்து)என்றுஜீயரும்ப்ரார்த்தித்தருளினரிறே. இப்படிப்பட்டஸ்வபாவத்தை அறிந்து ஆச்ரயித்தாருடைய.

(குணம் சாற்றிடுந் தன்மை யுற்றார்) (எம்மைநின்றாளும் பரமரே) (நம்மை அளிக்கும் பிராக்களே) (தம்மடியா ரடியார் தமக்கடியா ரடியார் தம்மடியா ரடியோங்களே) (சிறுமா மனிசரா யென்னையாண்டாரிங்கே திரியவே) (தொண்டர் சேவடிச் செழுஞ்சேறென் சென்னிக்கணிவனே) (கடலமல்லைத் தலசயநம் ஆர்எண்ணு நெஞ்சுடையார் அவர் எம்மையாள்வாரே) (தண்சேறை யெம்பெருமான் தாள்தொழுவார் காணுமென் தலைமேலாரே) என்று ப்ரதமபர்வ நிஷ்டரான ஆழ்வார்கள் ததீய விஷயத்திலே அருளிச்செய்த குறுதிக்யத்தை யிட்டு ஸ்தோத்ரம் பண்ணுகையாகிற ஸ்வபாவத்தை யுடையராயிருப்பார். தன்மை - ஸ்வபாவம். சாற்றுதல் - ப்ரகாசமாகச் சொல்லுதல்.

(இல்லையென் றறிந்து) "తత్రాపి దుర్లభం మన్యే వైకుంఠప్రియదర్శనమ్" (தத்ராபி துர்லபம்மந்யே வைகுண்ட ப்ரியதர்ஶநம்) என்னுமாப்போலே இதுதான் துர்லபம், "விஷயப்ரவணனுக்கு அத்தைவிட்டு, பகவத்விஷயத்திலே வருகைக குள்ள அருமைபோலன்றிறே, ப்ரதமபர்வத்தைவிட்டு சரமபர்வத்திலேவருகைக்குள்ள வருமை" என்றும் சொல்லுகிறபடியே- மேட்டுமடையான இவ்வத்யவஸாயத்தை யுடையவர் ஒருவருமில்லையென் றறிந்து. இல்லையென்று திருவுள்ளம்பற்றி என்றபடி. இந்த ஸூக்ஷ்மார்த்தத்தைத் தெளிந்திருக்குமவர் இவர் ஒருவருமேயென் றிருக்கிறார்காணும் அமுதனர். (இராமாநுசன்) எம்பெருமானர். தம்முடைய பூர்வாவதாரத்திலேவெளியிடமாட்டாத வர்த்தத்தைக்காணும் இப்போதுவெளியிடத்தொடங்கினர்.

(தன் தகவால்) "సవిత్రీ ముక్తానాం సకలజగదేనః ప్రశమనీ గరీయోభిః స్థైర్యైరుపచితరసా యామునముఖైః । నిరుంధానా నిమ్నేతరమపి సమాప్లావయతి మాం యదర్చావిక్షేపాద్యతిపతిదయాదివ్యతటినీ" (ஸவித்ரீமுக்தாநாம் ஸகல ஜகதேந: ப்ரஶமநீகரீயோபிஸ்திர்த்தை ருபசித ரஸாயாமுநமுகை:- நிருந்தேதாநிம்நேதரமபி ஸமாப்லாவயதிமாம் யதர்ச்சாவிக்ஷேபாத் யதிபதிதயாதிவ்யதடிநீ)என்கிறபடியேகரைகட்டாக்காவேரிபோலே பெருகிவருகிற தம்முடைய பரமக்ர்பையாலே, இக்க்ர்பை பூர்வாவதாரத்

திலே ராமஸௌந்தர்யத்தாலே அமுக்குண்டுநிற்கையாலே, இவ் வர்த்தத்தைவெளியிடமாட்டாதே யிருந்தார் என்றபடி.

(தன்னையுற்று ஆள்செய்யும் தன்மையினோர்) "వాచాయతీన్ద్ర మనసావపుషాచయుష్మత్పాదారవిన్దయుగళంభజతాంగురూణాం" (வாசாயதீந்த்ர மநஸாவபுஷாசயுஷ்மத் பாதாரவிந்தயுகளம் பஜதாம் குரூணாம்) என்றும், "నిత్యంయతీన్ద్రతవదివ్యవపుస్స్మృతౌమే సక్తంమనోభవతువాగ్గుణకీర్తనేసా। కృత్యఞ్చదాస్యకరణంతుకరద్వయస్య వృత్త్యన్తరేస్తువిముఖంకరణత్రయఞ్చ" (நித்யம்யதீந்த்ரதவதிவ்யவபுஸ்ஸ்மர்தௌமே ஸக்தம்மநோபவது வாக்குண கீர்த்தநேஸௌ - கர்த்யஞ்சதாஸ்ய கரணந்து கரத்வயஸ்ய வ்ர்த்யந்த ரேஸ்து விமுகம்கரணத்ரயஞ்ச) என்றும் "నిత్యంయతీన్ద్రతవదివ్యపదాబ్జసేవా" (நித்யம் யதீந்த்ரதவதிவ்யபதாப்ஜஸேவா) என்றும் சொல்லுகிறபடியே தம்மை யொழிய வேறு ஒருவிஷயாந்தரம் அறியாதபடி ஆஸ்ரயித்து கரணத்ரயத்தாலும தமக்கு ஸகலவித கைங்கர்யங்களும் பண்ணவேணுமென்னும் ஸ்வபாவத்தை யுடையரா யிருக்குமவர்கள். தன்மையினோர் - ஸ்வபாவமுடையார்.

(மன்னு தாமரைத்தாள்தன்னையுற்றுள்செய்ய என்னை உற்றான் இன்று) "తృణీకృతవిరిఞ్చాది నిరఙ్కుశవిభూతయః। రామానుజపదామ్భోజ సమాశ్రయణశాలినః" (த்ரணீக்ர்தவிரிஞ்சாதிநிரங்குஶவிபூதய:-ராமாநுஜபதாம்போஜஸமாஶ்ரயணஶாலிந:) என்றும், "రామానుజార్యచరణద్వన్ద్వైకఙ్కర్యవృత్తయః॥ సర్వావస్థాసుసర్వాసు ధారకాః పోషకాశ్చమే" (ராமாநுஜாயசரண த்வந்த்வ கைங்கர்யவர்த்தய: - ஸர்வாவஸ்தாஸு ஸர்வாஸு தாரகா: போஷகாஶ்சமே) என்றும் சொல்லுகிறபடியே இப்படி ஸர்வப்ரகாரத்தாலும் ச்லாகநீயரா யிருக்குமவர்களை, (உண்ணும் சோறு, பருகும்நீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன் எம்பெருமான்) என்று ஆழ்வார் அத்யவஸித்தாப்போலே, தமக்கு தாரகாதிகளாக அத்யவஸித்து, *கம்பீராம்பஸ்ஸமுத்பூதமாய் செவ்விபெற்றிருக்கிறசெந்தாமரை மலர்போலேயதிஸுகுமாரங்களாய ஒன்றுக்கொன்று போலியாய்பொலிந்துஎன்றும்அத்யந்த போக்யங்களாயிருக்கிற அவர்களுடைய திருவடிகளை, "త్వద్దాసదైకరసతావిరతామమాస్తు" (தத்தாஸதைகரஸதாவிரதாமமாஸ்து) என்கிறபடியே* வழுவிலாவடிமை செய்யவேணுமென்னும் மநோரதத்தையும், "మమమద్భక్తభక్తేషు ప్రీతిరభ్యధికాభవేత్। తస్మాన్మద్భక్తభక్తాశ్చ పూజనీయావిశేషతః" (மமமத்பகதபக்தேஷு-ப்ரீதிரப்யதிகாபவேத்-தஸ்மாத் மத்பக்த பக்தாஶ்ச பூஜநீயாவிஶேஷத:) என்று அவனுடைய ஊற்றத்தைப்போன்ற ஊற்றத்தையு முடையாராய்க்கொண்டு, * மற்றொருபேறும் மதியாதபடி பற்றினார், மநோரதித்தபடியே அவர்களுக்கு வழுவிலாவடிமை செய்யவேண்டும்படியாக அடி

யேனை இன்று திருக்தி அங்கீகரித்தருளினார். மன்றுதல் - பொருந்துதல். இவ்வங்கீகாரம் முன்பு உண்டாயிருந்த தொன்றல்ல (இன்று - உற்றான்) "అద్య మే సఫలం జన్మ సుప్రభాతా చ మే నిశా" (அத்ய மேஸபலஂஜந்ம ஸுப்ரபாதாசமேநிசா) என்கிறபடியே * விடியா வெந்நரகம் அற்றுப்போய் இன்று நல்வீடு உண்டாகத் தொடங்கிற்று என்கிறார். ... ... ... ...(௯௭)

உரை.—அ.—தொண்ணூற்றெட்டாம்பாட்டு. இப்படி எம்பெருமானார் செய்த வுபகாரத்தைப் பேசினவாறே இவர்திருவுள்ளமானது, நிருபாதிகபந்துவான ஈச்வரன், அநாதிகாலம் ஸ்வர்க்க நரக கர்ப்பங்களிலே தட்டித் திரியவிட்டிருந்தது கர்மத்தைக் கடாக்ஷித்தன்றோ, ப்ரக்ருதி ஸம்பந்தம் கிடக்கையாலே துர்வாஸனை மேலிட்டு விபரீதங்களிலே போகவும் யோக்யதையுண்டே, இன்னம் ப்ராப்தி பர்யந்தமானுலிறே யென்று தளர, எம்பெருமானார் தம்மைச் சரணமென்றால் அப்படி ஒன்றிலும் விட்டுக்கொடார், ஆகையால் ப்ராப்திநிமித்தமாக நீ க்லேசிக்க வேண்டாவென்கிறார்.

மூ.—இடுமேயினியசுவர்க்கத்திலின்னம்நரகிலிட்டுச்
சுடுமேயவற்றைத்தொடர்தருதொல்லைச்சுழல்பிறப்பில்
நடுமேயினிநம்மிராமாநுசனம்மைநம்வசத்தே
விடுமேசரணமென்றால்மனமேநையல்மேவுதற்கே. (௯௮)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நம் | நம்மை உத்தரிப்பிக்கைக்காக வந்தவதரித்த, | இன்னம் | தம திருவடிகளைப் பற்றினபின்பும், |
| இராமாநுசன் | எம்பெருமானார், | நரகில் | நரகத்திலே, |
| சரணமென்றால் | தேவரீரே சரணமென்று ஒருக்கிமாதரம் பண்ணினாலும், பரக்ருதி வச்யருக்கு சப்தாதி போகவிஷயங்களாலே, | இட்டு | இட்டுவைத்து, |
| | | சுடுமே | தப்பிப்பரோ; |
| | | | அந்த ஸ்வர்க்க நரகாநுபவத்துக்கு ஹேதுவான கர்மஜாதத்துக்கு உறுப்பாகையாலே, |
| இனிய | இனிதாகத்தோற்றியிருக்கும், | அவற்றை | அவற்றை, |
| சுவர்க்கத்தில் | ஸ்வர்க்கத்திலே, | தொடர்தரு | அநுஸந்தித்துக் கொண்டிருப்பதாய், |
| இடுமே | இட்டுவைப்பரோ; | தொல்லை | அநாதியாய், |

| பதம். | உரை. |
| --- | --- |
| சுழல் | வளையவளைய வாரா நின்றுள்ள, |
| பிறப்பில் | ஜந்மத்திலே, |
| நடுமே | நிறுத்துவரோ; |
| | மேலுள்ளகாலம், |
| நம்மை | நம்மை, |
| நமவசத்தே | நம்முடைய ருச்யநுகுணமாக, |
| விடுமே | விடுவரோ; |
| | ஆனபின்பு, |

| பதம். | உரை. |
| --- | --- |
| மேவுதற்கு | ப்ராப்திநிமித்தமாக |
| மனமே | நெஞ்சே! |
| நையல் | சிதிலமாகாதேகொள. |

மேவுதல் - பொருந்துதல். அதாவது - ப்ராபித்தல். சோற்றுக்குக் கரையாதேகொள் என்றால்-சோறுநிமித்தமாகக்கரையாதே கொள்ளெனனுமாப்போலே, மேவுதற்கு நையலென்றது-மேவுதல் நிமித்தமாக என்றபடி. நடுதல்-ஸ்தாபித்தல். (௯௮)

---

வ்ய.—அ.—தொண்ணூற்றெட்டாம்பாட்டு. இப்படிஎம்பெருமானார், தம்மை ஸர்வோத்க்ருஷ்டமான அதிகாரத்திலே மூட்டின உபகாரத்தை அநுஸந்தித்து ஹ்ருஷ்டரானவாறே இவருடைய திருவுள்ளமானது, நீர இபபடி சொன்னீரேயாகிலும் ஸர்வநியந்தாவான ஸர்வேஶ்வரன், அநாதிகாலந்தொடங்கி தத்தத்கர்மாநுகுணமாக பலத்தைக கொடுபபதாக ஸங்கல்பித்துக்கொண்டிருக்கிற ஒருவனாகையாலே இவ்வளவும் ஸ்வர்க்க நரக கர்ப்பங்களிலே இடைவிடாதே அடைவேதட்டித் திரியவிட்டிருந்தது நம்முடைய கர்மத்தைக கடாக்ஷித்தன்றே, அக்கர்மங்களை உண்டாக்கநடவதான பராக்ருதிஸமபந்தம நமக்கு இன்னும் கிடக்கையாலே, துர்வாஸனைமேலிட்டு திரும்பவும நிக்ரஹத்துக்கு உடலான துஷ்கர்மங்களிலே அந்வயிககவும் யோக்யதை யுண்டே, ப்ராப்திபாயந்தமானுலிறே நீர் இப்படி நிர்ப்பரராய்ச் சொலலககூடுவது என்று தளராநிற்க; எம்பெருமானார்தம்மை சரணமென்றால அப்படி ஸ்வர்க்க நரகாதிகள் ஒன்றிலும் விட்டுக்கொடுக்கும் ஸ்வபாவரல்லராகையாலே இனி ப்ராப்தி நிமித்தமாக நீ கலேசிககவேண்டாவென்கிறார்.

வ்யா.—(மனமே) இப்படி அதிசங்கைபண்ணுகிற்கிறநெஞ்சே!. (எம்இராமாநுசன்) "సాక్షాన్నారాయణోదేవః కృత్వామర్త్యమయీంతనుమ్। మగ్నానుద్ధరతేలోకాన్ కారుణ్యాచ్ఛాస్త్రపాణినా" (ஸாக்ஷாந்நாராயணோதேவ: கர்த்வாமர்த்யமயீம்தநும் - மக்நாநுத்தரதேலோகாந் காருண்யாச் சாஸ்த்ரபாணிநா) என்றும், "పాపధ్వాన్తక్షయాయచ। శ్రీమానావిరభూద్భూమౌ రామానుజదివాకరః" (பாபத்வாந்தக்ஷயாயச-ஸ்ரீமாநாவிரபூத்பூமௌராமாநுஜதிவாகர:) என்றுஞ் சொல்லுகிறபடியே எங்களுடைய* முன்னைவினைபின்னைவினையாரத்தமென்று மூன்று வகைப்

பட்டிருக்கிற வினைத்தொகை யனைத்தும் நசிப்பித்து ஸம்ஸார கர்த்தத்தில்நின்றும் உத்தரிப்பிக்கவேணுமென்று தீக்ஷித்துக்கொண்டு * இக்கொடு உலகத்திலே திருவவதரித்த எம்பெருமானார்.

(சரணம் என்றால்) "రామానుజస్య చరణౌ శరణం ప్రపద్యే" (ராமாநுஜஸ்ய சரணௌ ஶரணம் ப்ரபத்யே) என்றும், "శరణమేమి రామానుజమ్" (ஶரணமேமி ராமாநுஜம்) என்றும், (இராமாநுசன் சரணே கதி) என்றும், "మూలే నివేశ్య మహతాం నిగమద్రుమాణాం ముష్ణన్ ప్రతారకభయం ధృతతైర్థదణ్డః। రఙ్గేశభక్తజనమానసరాజహంసో రామానుజశ్శరణమస్తు మునిస్స్వయం నః" (மூலே நிவேஶ்ய மஹதாம் நிகமத்ருமாணாம் முஷ்ணந் ப்ரதாரகபயம் த்ருததைர்த்ததண்ட: - ரங்கேஶபக்தஜநமாநஸராஜஹம்ஸோ ராமாநுஜஶ்ஶரணமஸ்து முநிஸ்ஸ்வயம் ந:) என்றும், "రామానుజాయ మునయే నమ ఉక్తిమాత్రం కామాతురోపి కుమతిః కలయన్నభీక్ష్ణమ్। యామామనన్తి యమినాం భగవజ్జనానాం తామేవ విన్దతి గతిం తమసః పరస్తాత్" (ராமாநுஜாய முநயே நம உக்திமாத்ரம் காமாதுரோபி குமதி: கலயந்நபீக்ஷ்ணம் - யாமாமநந்தி யமிநாம் பகவஜ்ஜநாநாம் தாமேவ விந்ததி கதிம் தமஸ: பரஸ்தாத்) என்கிறபடியே - "தேவரீரே ஶரணம்" என்கிற ஒரு உக்திமாத்ரத்தைப் பண்ணினால்.

(இனிய சுவர்க்கத்தில்) ப்ரக்ருதி வஶ்யராயிருப்பார்க்கு சப்தாதி போகவிஷயங்களாலே அத்யந்தம் போக்யமாயத் தோற்றுகிற ஸ்வர்க்கத்திலே. இனிமை-போக்யதை. ஸ்வர்க்கமாவது - "త్రైవిద్యా మాం సోమపాః పూతపాపా యజ్ఞైరిష్ట్వా స్వర్గతిం ప్రార్థయన్తే। తే పుణ్యమాసాద్య సురేన్ద్రలోకమశ్నన్తి దివ్యాన్ దివి దేవభోగాన్॥ తే తం భుక్త్వా స్వర్గలోకం విశాలం క్షీణే పుణ్యే మర్త్యలోకం విశన్తి" (த்ரைவித்யா மாம் ஸோமபா: பூதபாபா யஜ்ஞைரிஷ்ட்வா ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே - தே புண்யமாஸாத்ய ஸுரேந்த்ரலோகம் அஶ்நந்தி திவ்யாந் திவி தேவபோகாந் - தே தம் புக்த்வா ஸ்வர்க்கலோகம் விஶாலம் க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி) என்கிறபடியே, நச்வரமாய ஸோபாதிகமாயிருப்பதொரு லோகவிசேஷமிறே; இப்படிப்பட்ட ஸ்வர்க்கத்திலே.

(இடுமே) இட்டுவைப்பரோ. "యన్నదుఃఖేన సమ్భిన్నమ్" (யந்நது:கேந ஸம்பிந்நம்) இத்யாதிப்படியே அதுக்கு இதோபிவிலக்ஷணமாயிருந்ததேயாகிலும், முமுக்ஷுவுக்கு நரகதுல்யமாயும் ப்ரதிகூலதமமாயுமிறேயிருப்பது. "దేవేన్ద్రత్వాదికం పదమ్" "ఏతే వై నిరయాస్తాత స్థానస్య పరమాత్మనః" "క్షేత్రాణి మిత్రాణి ధనాని నాథ పుత్రాశ్చ దారాః పశవో గృహాణి॥ త్వత్పాదపద్మప్రవణాత్మవృత్తేర్భవన్తి సర్వే ప్రతికూలరూపాః" (தேவேந்த்ரத்வாதிகம் பதம் - ஏதே வை நிரயாஸ்தாத ஸ்தாநஸ்ய பரமாத்மந: - க்ஷேத்ராணி மித்ராணி தநாநி நாத புத்ராஶ்ச தாரா: பஶவோ க்ருஹாணி - த்வத்பாத

பத்மப்ரவணாத்மவர்த்தோப்பவந்தி ஸர்வேப்ரதிகூலரூபா:) என்னக்கடவதிறே.(பலநீகாட்டிப்படுப்பாயோஇன்னம்கெடுப்பாயோ) (போரவைத்தாய்புறமே) (நெறிகாட்டி நீக்குதியோ) (அம்பசாரங்கள் அவைசுவைத்தகன்றொழிந்தேன்) (கூவிக்கொள்ளுங்காலம் இன்னம் குறுகாதோ) என்னும் ப்ராக்ர்தஸுகத்தைக் கட்டடநக ப்ரதிகூலமாகவும் ஸ்வரூபநாசகமாகவும் நம்மாழ்வார் அநுஸந்தித் தருளினாரிறே.

(இன்னும் நரகில் இட்டுச்சுடுமே) "ఉపాయోపేయభావేన తత్త్వత స్సర్వదేహినామ్। సంశ్లిష్టాంఘ్రిపద్మాయ" (உபாயோபேயபாவேந தத்வதஸ் ஸர்வதேஹிநாம் - ஸம்ஸ்லிஷ்டாங்க்ரிபத்மாய) என்கிறபடியே தன் திருவடிகளையே உபாயமென்றும் உபேயமென்றும் அத்யவஸித்து அநந்யார்ஹராய்ப் போனபின்பு கேட்டபோதே அஞ்சவேண்டும்படி அதிதுஸ்ஸஹங்களான ரௌரவாதிநரகங்களிலே விழவிட்டு தஹிப்பிப்பரோ. (க்ருச்சரேணதேஹாந்நிஷ்க்ராந்திம் யாம்யகிங்கரதர்ஸநம் - யாதநாதேஹ ஸம்பந்தம் யாம்யபாஸைஸ்சகர்ஷணம், உக்ரமார்க்க கதிக்லேஸம் யமஸ்யபுரதஸ்திதம் - தந்நியோககதாயாத யாதநாஸ்சஸஹஸ்ரஸ: - ஸ்ருத்வாஸ்மர்த்வாசதூயேஹம் தத்ப்ரவேஸபயாகுல:) "కృచ్ఛ్రేణ దేహాన్నిష్క్రాన్తిం యామ్యకింకరదర్శనమ్। యాతనాదేహసమ్బన్ధం యామ్యపాశైశ్చ కర్షణమ్॥ ఉగ్రమార్గగతిక్లేశం యమస్య పురతః స్థితిమ్। తన్నియోగగతా యాతా యాతనాశ్చ సహస్రశః॥ శ్రుత్వా స్మృత్వా చ దూయేఽహం తత్ప్రవేశభయాకులః" என்றும், (கடுஞ்சொலார்கடியார்காலனார் தமரால் படுவதோர கொடுமிறைக்கஞ்சி) என்றும், (எண்ணிறந்த துன்பமதருநிரயமபல) என்றுமசொல்லப்பட்ட நரகங்களிலே சென்று, துக்கப்படும்படி உதாஸீநராயிருப்பரோ என்றபடி.

(அவற்றைத் தொடர்தரு தொல்லைச் சுழல்பிறப்பில் நடுமே) "కర్మప్రవాహతోఽనాదిః" (கர்மப்ரவாஹதோநாதி) என்கிறபடியே அந்த ஸ்வர்க்க நரகாதிகளுக்கு கிடான புண்யபாபரூப கர்மார்ஜநத்துக்கு ப்ரவாஹரூபமாய் அவாச்யமானசரீரம் ஹேதுவா யிருக்கையாலே அத்தை அநுஸரித்துக்கொண் டிருப்பதாய,(தொன்மாயப்பல்பிறவி) என்கிறபடியே அநாதியாய், "ఏవం సంసృతిచక్రస్థే భ్రామ్యమాణే స్వకర్మభిః" (ஏவம்ஸம்ஸ்ருதிசக்ரஸ்த்தே ப்ராம்யமாணே ஸ்வகர்மபி:) என்றும்,(மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து) என்றும் சொல்லுகிறபடியே சக்ரம்போலே சுழன்று வாராநின்றுள்ள ஜந்மபரம்பரைகளிலே நிறுத்துவரோ. அவற்றிலே அந்வயிக்கும்படி ப்ரவர்த்திப்பிப்பரோ என்றபடி. நடுதல்-ஸ்த்தாபித்தல்.

(இனி நம்மை நம்வசத்தேவிடுமே) எம்பெருமானார் திருவடிகளுக்கு * நிழலும் அடிதாறும்போலே அத்யந்த பரதந்த்ர

ராய்ப்போந்த நம்மை மேலுள்ளகாலமெல்லாம் ஸ்வதந்த்ரராக்கி நம்முடையருச்யநுகுணமாக ஸ்வைரஸஂசாரிகளாய்ப் போகும்படி விட்டுவிடுவரோ. எம்பெருமானார்திருவடிகளை ஆச்ரயித்து, (தனக்கேயாகவெனைக்கொள்ளும்) என்னும்படியான கிஷ்காஷத்தைப் பெற்ற அடியோங்களை, அப்ராப்தமானவை ஒன்றும் தடடாதபடி பண்ணியருளுவர்என்று கருத்து. "తృణీకృతవిరిఞ్చాదినిరఙ్కుశవిభూతయః। రామానుజపదామ్భోజ సమాశ్రయణశాలినః" "మనసకథనైర్నక్లిశ్యన్తేయతీశ్వర సంశ్రయాః" (த்ருணீக்ருதவிரிஞ்சாதி நிரஂகுஶவிபூதய - ராமாநுஜ பதாம்போஜ ஸமாஶ்ரயணஶாலிந) (முதநகதனைர்நக்லிஶ்யந்தே யதீஶ்வர ஸஂஶ்ரயா) என்னக்கடவதிறே. (மேவுதற்கு) (அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதுஎன்றுகொலோ) என்றும், "రామానుజస్యవశగః పరివర్తిషీయ" (ராமாநுஜஸ்யவஶக பரிவர்த்திஷீய) என்றும் சொல்லுகிறபடியே-நம்மால் ப்ரார்த்திக்கப்படுகிற ப்ராப்திநிமித்தமாக. (நையல்) சிதிலமாகாதே கொள். மேவுதல் - பொருந்துதல். அதாவது-ப்ராபித்தல், சோற்றுக்குக் கரையாதே கொள் என்றால் - சோறுநிமித்தமாகக் கரையாதே கொள் என்னுமாப்போலே, மேவுதற்குநையல் என்றது- மேவுதல் நிமித்தமாக நையவேண்டா என்றபடி. "నాభుక్తం క్షీయతే కర్మ కల్పకోటిశతైరపి। అవశ్య మనుభోక్తవ్యం కృతంకర్మ శుభాశుభమ్" (நாபுக்தஂக்ஷீயதே கர்ம கலபகோடிஶதைரபி, அவஶ்யமநுபோகதவ்யஂகர்தஂகர்ம ஶுபாஶுபம்) என்கிற சாஸ்த்ரத்தை உட்கொணடு ஸர்வேஶ்வரன ஸஂஸாரத்திலே மூட்டும் ஸ்வபாவனாய்விட்டாப்போலே, எம்பெருமானாரும், தம் சாஸ்த்ரமர்யாதையை யுட்கொண்டு உதாஸீநராயிருப்பரோ என்று அதிசங்கைபண்ணின நெஞ்சைக்குறித்து, எம்பெருமானை ஆஶ்ரயித்தபின்பும் ப்ரபந்நராய் சரமபர்வநிஷ்டரா யிருக்கும் நம்மை உபாஸகரைப்போலே ப்ராப்யாவஸாநபர்யந்தம் ஸஂஸார வெக்காடம்தட்டுமபடி காட்டிககொடார் என்றதாயத்து.

(மநமேநையல்மேவுதற்கே) என்று-சேதநஸமாதியாலே அருளிச்செய்கிறார். அசித்தைக்கூட திருத்தும்படிகாணும் இவருடைய உபதேசமிருப்பது. "నఖలుభాగవతాయమవిషయంగచ్ఛన్తి" "పరిహరమధుసూదనప్రపన్నాన్ ప్రభురహమన్యనృణాంనవైష్ణవానామ్" "త్యజభటదూరతరేణతానపాపాన్" (நகலுபாகவதாயமவிஷயஂகச்சந்தி) (பரிஹரமதுஸூதநப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாஂ நவைஷ்ணவாநாம்)(த்யஜபடதூரதரேணதாநபாபாந்) என்னக்கடவதிறே. (எத்திறலிடர்க்கடல்கிடத்தியேழைநெஞ்சமே) என்று இவ்வர்த்தத்தை ப்ரதமபர்வத்திலே திருமழிசைப்பிரானும் அருளிச்செய்தாரிறே. (௯௮)

உரை.—அ.—தொண்ணூற்றொன்பதாம்பாட்டு. "நம்மைநம் வசத்தேவிடுமே - மநமேமைநயல்" என்றவாறே, ஆனாலும் ஜ்ஞாந வ்யவஸாயங்களை புஜிக்கும் பாஹ்யகுத்ர்ஷ்டி பூயிஷ்டமான தேசமன்றோவென்ன; எம்பெருமானார் அவதரித்தபின்பு அவர்களெல்லாரும் நஷ்டரானார்களென்கிறார்.

மூ.—தற்கச்சமணருஞ்சாக்கியப்பேய்களுந்தாழ்சடையோன்
சொற்கற்றசோம்பருஞ்சூநியவாதருநான்மறையும்
நிற்கக்குறும்புசெய்நீசருமாண்டனர்நீணிலத்தே
பொற்கற்பகமெம்மிராமாநுசமுனிபோந்தபின்னே. (கூகூ)

| பதம். | உரை. |
|---|---|
| | "தருக்கினால் சமண்செய்து" என்கிறபடியே, |
| தர்க்கம் | தர்க்க ஸாமர்த்யத்தாலே ஸ்வமத பரிபாலநம் பண்ணுகிற, |
| சமணரும் | ஆர்ஹதரும், "சமணரும் சாகியரும்" என்று அவர்களை எண்ணினால் இரண்டாம்விரலுக்கு விஷயமாம்படி அவர்களோடு தோள்தீண்டியாய, |
| பேய | பேய்போலே விடுதல் பற்றுதல் அறியாதே பிடித்தத்தையே பிடித்துக் கொண்டு நிற்கிற, |
| சாக்கியர்களும் | பௌத்தரும், தன்னை ஈச்வரனென்றுலோகம் ஆராதிக்கவேணுமென்று அதுக்கீடாக, |

| பதம. | உரை. |
|---|---|
| தாழ்சடையோன் | தீர்க்க ஜடாதரனாய்க்கொண்டு ஸாதநம் அநுஷ்டித்து பகவதநுமதியாலே மோஹசாஸ்த்ரங்களை ப்ரவர்த்திப்பித்த ருத்ரனுடைய, |
| சொல் | வசநமான ஆகமத்தை, |
| கற்ற | அதிகரித்திருக்கிற, |
| சோமபரும | தாமஸரான சைவரும், |
| | ப்ரமாண ப்ரமேய ப்ரமாதாக்களான இவை மூன்றும் இல்லை என்று, |
| சூநியவாதரும் | ஸர்வசூந்ய வாதம் பண்ணுகிற மாத்யமிகரும், |
| | இவர்களைப்போலன்றிக்கே, |
| நால் | ரிகாதிபேதத்தாலே, நாலுவகைப் பட்டிருந்துள்ள, |
| மறையும் | வேதத்தைப்ரமாணமாக அங்கீகரித்து |

| பதம். | உரை. |
|---|---|
| | வைத்து (திஷ்டத்ஸூ வேதேஷூ) என்கிறபடியே, |
| நிற்க | அது நிற்கச்செய்தே, |
| | அத்தோடு ஒரு ஸம்பந்தமில்லாத அபார்த்தங்களைச் சொல்லி, |
| குறும்பு செய | மூலையடியே நடத்துகிற, |
| நீசரும் | ப்ரவீணரான குத்ருஷ்டிகளும், |
| பொன் | ஸ்ப்ருஹணீயமான, |
| கற்பகம் | கல்பகம்போலே பரமோதாரராய், |
| எம் | அதுதன்னை நமக்கு ப்ரகாசிப்பித்தருளின. |

| பதம். | உரை. |
|---|---|
| இராமாநுசமுனி | எம்பெருமானார், |
| நீள்நிலத்தே | மஹாப்ருதிவியிலே, |
| போந்தபின் | எழுந்தருளின பின்பு, |
| மாண்டனர் | முடிந்து போனார்கள். |

ஸ்ரீபாஷ்யமுகேந தத்தந்மதங்களை பங்கித்து அஸத்கல்பமாக்குகையாலே அவர்கள் நஷ்டரானார்கள் என்று கருத்து.

சாக்கியர் என்றது - சாக்கேயர் என்றபடி. மாத்யமிகரும் சாக்யவர்க்கத்திலேயாயிருக்க, பிரித்தெடுத்தது - தங்மதாசௌர்யத்தைப் பற்ற. ... . . ... ... (௯௯)

வ்யா.—அ.—தொண்ணூற்றொன்பதாம்பாட்டு. இப்பாட்டிலே - எம்பெருமானாரை ஆச்ரயித்தபின்பு, (நம்மை நம்வசத்தே விடுமே) என்று - இவர் மஹாவிச்வாஸத்தோடே சொன்னவாறே, அது ஸத்யம், ஆனாலும் ஸமயஜ்ஞாநமும் தத்நுரூபமான அநுஷ்டாநமும் இவ்விரண்டையும் அடைவே அறிவிப்பிக்கக் கடவதான வேதம் நடையாடாதபடி அதனை மூலையடியே நடப்பித்துக்கொண்டு உபத்ரவகாரிகளான பாஹ்யகுத்ருஷ்டிகள் தனிக்கோல்செலுத்தும் தேசமன்பது என்ன; ஸமஸ்தபுருஷார்த்தப்ரதத்வத்தாலே "கற்பகம்" என்று சொல்லப்படுகிற எம்பெருமானார் இந்த மஹாப்ருதிவியிலே அவதரித்தபின்பு அப்படிப்பட்ட நீசஸமயநிஷ்டரெல்லாரும் ஸமூலகமாக நஷ்டமாய்ப் போனார்களென்கிறார்.

வ்யா.—(தற்கச்சமணரும்) (தருக்கினால் சமண்செய்து) என்கிறபடியே, ப்ரமாணாநுகுணங்களாயிருந்துள்ள தர்க்கங்களாலன்றிக்கே, ஸ்வாபிநிவேசாநுகுணங்களான தர்க்கங்களாலே ஒருமதத்தைக் கற்பித்து அத்தைப் பரிபாலித்துக்கொண்டு போருகிற ஆர்ஹதரும். அன்றிக்கே (தற்கச்சமணரும்) பரமாணுகாரணவாதிகளாய், "पाषाणकल्पमुक्तिः" (பாஷாணகல்பமுக்தி:) என்னும் சொல்லுகிற நையாயிகவைசேஷிகர்களும் வேதவைதிகப்ரத்

மநுஷ்யேஷு-ஸ்தாவரேஷ்வபிஜந்துஷு- வ்யாப்யதிஷ்டதி ஸர்வத்ரபூதேஷ்வபி மஹாத்மா-ச - இதிப்ரஹ்லாதவசநம் ஶ்ருத்வாதைதயபதிஸ்ததா,உவாசரோஷதாம்ராக்ஷ:பர்த்ஸயந்ஸ்வஸுதம்முஹு: அஸௌஸர்வகதோவிஷ்ணு ரபிசேத்பரம:புமாந், ப்ரத்யக்ஷம் தர்ஶயஸ்வாத்ய பஹுபி: கிம்ப்ரலாபிதை:- இத்யுக்த்வாஸஹஸாதைத்ய: ப்ராஸாதாத்ஸ்தம்பமாதமந்- தாடயாமாஸஹஸ்தேந ப்ரஹ்லாத இதமப்ரவீத், அஸ்மின் தர்ஶயமேவிஷ்ணும் யதிஸர்வகதோபவேத- அந்யதாத்வாம்வதிஷ்யாமி மித்யாவாகய ப்ரலாபிநம்) என்றும், (எங்குமுளன் கண்ணனென்ற மகனைக்காய்ந்து இங்கில்லையாலென் றிரணியன் தூண்புடைப்ப) என்றும் சொல்லுகிறபடியே - தன்படிகளையுடைய வெளியிட்ட சிறுக்கனமேலே அவன் முறுகி தூணைத் தன்காலாலே உதைத்தவன்று.

(வாளவுணன கிளர்ந்தபொன்னாகம் கிழித்தவன்)"ఇత్యుక్త్వా సహసా ఖడ్గమాదాయ దితిజేశ్వరః" (இத்யுக்த்வாஸஹஸாகட்க மாதாயதிதிஜேச்வர:) என்றும், (வயிறழலவாளுருவிவந்தானை) என்றும் சொல்லுகிறபடியே கட்கஹஸ்தனாய்க்கொண்டு எதிர்ந்த ஹிரண்யாஸுரனுடைய,*இந்திர னுள்ளிட்ட தேவர்குழாத்தையெல்லாம் பாதித்து அவர்களுடைய ஸ்தாநங்களையடங்கலும ஆக்ரமித்து அவர்களுடைய ஹவிர்ப்பாகங்களை பலாத்காரேண பறித்துக்கொண்டுபக்ஷிக்கையாலே மிடியறவளர்ந்துநிறம்பெற்று ஸ்வர்ணமபோலேயிருக்கிறசரீரத்தை,(எவ்வும்வெவ் வேலபொன்பெயரோனேதலனின்னுயிரை வவ்வி ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்தவம்மான திடம்) என்றும், (அவுணன் உடல்) என்றும, (இடந்திட்டிரணியன் நெஞ்சையிருபிளவாக முன்கீண்டாய) என்றுமசொல்லுகிறபடியே கூரிய நகங்களாலே, அநாயாஸேந ஆட்டின குடலை கிழித்தாபபோலே இருபிளவாககிழித்துப் பொகட்டவனுடைய. கிளர்ந்தபொன்னாகம் என்றது - மாற்றெழும்பின பொனபோலற சரீரம் என்னவுமாம்.

(கீர்த்தி) திவ்யகீர்த்தியாகிற. "సహస్రశీర్షా పురుషః, సహస్రాక్షస్సహస్రపాత్, సభూమిం విశ్వతో వృత్వా, అత్యతిష్ఠద్దశాఙ్గులం, పురుష ఏవేదం సర్వం, యద్భూతం యచ్చ భవ్యం, ఉతామృతత్వస్యేశానః, యదన్నేనాతిరోహతి। ఏతావానస్య మహిమా" "యచ్చ కిఞ్చిజ్జగత్యస్మిన్ దృశ్యతే శ్రూయతేఽపి వా। అన్తర్బహిశ్చ తత్సర్వం వ్యాప్య నారాయణస్స్థితః" "వేదాహమేతం పురుషం మహాన్తం, ఆదిత్యవర్ణం తమసః పరస్తాత్, తమేవం విద్వానమృత ఇహ భవతి, నాన్యః పన్థా విద్యతేఽయనాయ" (ஸஹஸ்ரஶீர்ஷாபுருஷ:,ஸஹஸ்ராக்ஷஸ்ஸஹஸ்ரபாத், ஸபூமிம்விஶ்வதோவ்ர்த்வா, அத்யதிஷ்டத்தஶாங்குலம், புருஷ ஏவேதம்ஸர்வம், யத்பூதம்யச்ச பவ்யம்,உதாம்ர்தத்வஸ்யேஶாந:,யதந்நேநாதிரோஹதி,ஏதாவா நஸ்யமஹிமா)(யச்சகிஞ்சிஜ்ஜகத்யஸ்மிந்த்ர்ஶ்யதேஶ்ரூயதேபிவா,

அந்தர்ப்பஹிஸ்சதத்ஸர்வம் வ்யாப்யநாராயணஸ்த்திதஃ") (வேதாஹமேதமபுருஷம்மஹாந்தம், ஆதித்யவர்ணம்தமஸஃபரஸ்தாத், தமேவம்வித்வாநம்ருத இஹபவதி,நாந்யஃபந்தா-அயநாயவித்யதே) என்றும்-வேதபுருஷனாலே பரதிபாதிக்கப்பட்ட அப்ரதிமப்ரபாவமென்றபடி. (பயிரொழுந்து விளைந்திடும் சிந்தை) ஸுக்ஷேத்ரத்திலே விளைவிளைத்தால ஓங்கிவளர்ந்து ஸம்ர்த்தியாய் பலபர்யந்தமாக விளையுமாப்போலே அழகியசிங்கருடைய கீர்த்தியாகிற பயிர் நித்யாபிவ்ர்த்தமாய் லோகமெல்லாம் வ்யாபித்து பலபர்யந்தமாரும்படிக்கீடான வீரத்தையுடைத்தான திருவுள்ளத்தையுடைய. (இராமாநுசன) எம்பெருமானார். இவர்க்கு அழகியசிங்கர் திருவாராதநமானையாலே இப்படியருளிச்செய்கிறார்.

(என்றன மெய்வினைநோய களைந்து) "కర్మబ్రహ్మపరంపర" (கர்மப்ரஹ்மபரம்பவித்தி) என்றும், "ప్రకృతేః క్రియమాణాని గుణైః కర్మాణి సర్వశః" (ப்ரக்ர்தேஃக்ரியமாணாநி குணைஃ கர்மாணிஸர்வஶஃ) என்றும் சொல்லுகிறபடியே - அநாத்யவித்யாகர்மவாஸநாருசிப்ரக்ர்தி ஸம்பந்தத்தாலே பத்துமபத்தாகப்பண்ணப்பட்டதுஷ்கர்மபலமான துக்கங்களை நிவர்த்திப்பித்து. (கையிலகனியன்னவே - நல்ஞானமளித்தனை) "సర్వగుహ్యతమం భూయః శృణు మే పరమం వచః। ఇష్టోఽసి మే దృఢమితి తతో వక్ష్యామి [illegible]తమ్" (ஸர்வகுஹ்யதமம்பூயஃ ஶ்ருணுமே பரமம்வசஃ - இஷ்டோஸிமேத்ருடமிதி ததோவக்ஷ்யாமிதேஹிதம்) என்கிறபடியே - ப்ரபந்ந ப்ராபண்யத்துக்கு குடலான தத்வஹிதபுருஷார்த்த தத்யாதாத்ம்யஜ்ஞாநத்தைக் கையில் கனிபோலே ஸுலபமாய் ஸுவ்யக்தமாயிருக்கும்படி உபதேசித்தருளினாரென்றதாய்த்து.()

உரை.—அ —நாம்நாலாமபாட்டு. உபதேசஜ்ஞாநலாபமாத்ரம் ரஸிக்கிறபடிகண்டால பகவத்விஷயத்தை ஸாக்ஷாத்கரித்தாலல்ல உமக்கு எப்படி ரஸிக்கிறதோவென்று எம்பெருமானார் திருவுள்ளத்தாககொண்டு, பகவத்விஷயத்தை விசதமாகக்காட்டித் தரிலும், தேவரீர் திருமேனியில ப்ரகாசிக்கிற குணங்களொழிய நானவேண்டேன; இதுக்கீடான ப்ரஸாதத்தைச் செய்தருளில் இரண்டுவிபூதியிலும காலபாவுவனல்லது தரியேனென்கிறார்.

மூ.—கையில்கனியன்னகண்ணனைக்காட்டித்தரினுமுன்றன்
மெய்யில்பிறங்கியசீரன்றிவேண்டிலன்யான்நிரயத்
தொயயில்கிடக்கினுஞ்சோதிவிண்சேரிலுமிவ்வருள்நீ
செய்யில்தரிப்பனிராமாநுசாவெஞ்செழுங்கொண்டலே.()

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| செழும் | விலக்ஷணமான, | எம்இராமாநுசா | அதுதன்னை எங்களுக்கு ப்ரகாசிப்பித்தருளினவரே, |
| கொண்டல் | மேகம்போலே பரமோதாரராய், | | |

| பதம் | உரை. |
| --- | --- |
| கண்ணனை | ஆச்ரித ஸுலபனான ஸர்வேச்வரனை, |
| கையில்கனி அன்ன | உள்ளங்கை நெல்லிக்கனிபோலே, |
| காட்டித்தரினும் | ஸாக்ஷாத்கரிப்பித்துத் தரினும், |
| உன்றன் | தேவரீருடைய, |
| மெய்யில் | திவ்யவிக்ரஹத்தில், |
| பிறங்கிய | ப்ரகாசிக்கிற, |
| சீரன்றி | ஸௌசீல்யாதி குணங்களொழிய, |
| யான் | நான், |
| வேண்டிலன் | வேண்டேன்; |
| நிரயந்தொய்யில் | ஸம்ஸார கர்த்தமத்தில், |
| கிடக்கிலும் | அழுந்திக் கிடக்கவுமாம்; சுத்தஸத்வ குணமாகையாலே, |
| சோதி | நிரவதிகதேஜோமயமான, |
| விண் | பரமபதத்தை, |
| சேரினும் | ப்ராபிக்கவுமாம்; தேவரீருடைய திருமேனி குணத்தையே அநுபவிக்கையாகிற, |

| பதம் | உரை |
| --- | --- |
| இவ்வருள் | இதுக்குறுப்பான ப்ரஸாதத்தை, |
| நீசெய்யில் தரிப்பன் | தேவரீர் செய்தருளில், ஏதேனுமோரிடத்திலும், காலபாவிநியமனம் - அல்லாதபோது தரிக்கமாட்டேன் என்று கருத்து. |

பிறங்குதல்-பிரகாசம். நிரயம்- "விடியாவெந்நரகம்" என்கிற ஸம்ஸாரம். தொய்யில்- சேறு. தொய்யில் என்கிறவிடத்தில் ஏழாம் வேற்றுமை தொக்கிடக்கிறது. "நிரயத் தொய்யில் கிடக்கிலென், சோதிவிண்சேரிலென்" என்றுபோமாகில் - ஸம்ஸாரத்திலே கிடக்கிலென், பரமபதத்திலே போகிலென் இவை இரண்டுமொன்று எனக்குக் காரியமல்ல; ஸம்ஸாரத்தினுடைய தோஷத்தையும் பரமபதத்தினுடைய வைலக்ஷண்யத்தையும் அநுஸந்தித்து இத்தை விட்டு அத்தையபேக்ஷிக்கிறேனல்லேன், இவ்வநுபவத்தை தேவரீர் தரில் ஸம்ஸாரத்திலும் தரிப்பன், இது இல்லையாகில் பரமபதத்திலும் தரியேனென்கை. (௧௦௪)

---

வ்யா.—அ — நூற்றுநாலாம்பாட்டு. கீழ்ப்பாட்டிலே - தத்வஹிதபுருஷார்த்த தத்யாதாத்ம்யஜ்ஞானத்தை ஸ்வயகத்யமாம்படி உபதேசித்தார் என்று இவர் இனியராயிருந்தவாறே, அத்தைக் கண்டு உபதேசமாத்ரத்துக்கே இப்படி இனியராய்க்கொண்டு ரஸித்திருந்தீர், பகவத்விஷயத்தை ஸாக்ஷாத்கரிக்கும்படி பண்ணிக்கொடுத்தோமாகில் எப்படி ரஸித்து இனியராயிருக்கக்கடவீரோ என்று எம்பெருமானாருக்குத் திருவுள்ளமாக நினைத்து, தேவரீர் ஸகலஜநமநோஹாரி திவ்யசேஷ்டிதங்களைப் பண்ணிக்கொண்டுபோ . . . . ஹஸ்தாமலகமாகக் காட்டித்தரிலும், தேவரீருடைய

திவ்யமங்கள விக்ரஹத்திலே ப்ரகாசியாநின்றுள்ள கல்யாண குணங்களையொழிய, அடியேன் வேறொரு விஷயத்தை வேண்டேன் என்ன; இவன் இப்படி * மூர்க்குப்பேசலாமோஎன்று சீறுபாறுசெய்து அடியேனை ஸம்ஸாரமாகிற நரகத்திலே விழப்பண்ணினாலும் நம்மையேபற்றியிருக்கிறானிறே என்று, க்ர்பையாலே நிரவதிகதேஜோரூபமான பரமபதத்திலேகொண்டுபோய்ச் சேர்த்திடிலும், வர்ஷுகவலாஹகம்போலேபரமோதாரரானஎம்பெருமானாரே, தேவரீருடைய திவ்யமங்கள விக்ரஹத்தை அநுபவிக்கைக்குடலான நிர்ஹேதுக பரமக்ர்பையாலே தேவரீர் செய்தருளினவிபூதித்வயத்திலுமவைத்துக்கொண்டு, ஏதேனுமோரிடத்திலகால்பாவி நின்றுதரிப்பன; இல்லையாகில் தரிக்கமாட்டேனென்று ஸ்வப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்தருளுகிறார்.

வ்யா.—(எம்செழுங்கொண்டல்) ஒருபாட்டம்மழை குறைச்சலாயிருந்தால் முகம் வாடிக்கிடக்கும் பயிர்போலே, “విద్యాऽన్యా శిల్పనైపుణమ్” (வித்யாந்யா சில்பநைபுணம்) என்கிறபடியே - செருப்புக்குத்தக்கற்றனவோபாதியான சாஸ்த்ராந்தரங்களையே அப்யஸித்துக்கொண்டுபோந்து, “సా విద్యా యా విముక్తయే” (ஸா வித்யா யா விமுக்தயே) என்கிற தத்வஜ்ஞாநத்தை ப்ராபிக்கப்பெறாதே, “வாடினேன் வாடி” என்கிறபடியே உஜ்ஜீவநஹேதுவன்றிக்கே முகம்வாடிக்கிடக்கிற எங்களுக்கு ஒருபாட்டம் மழை பொழிந்தாப்போலே விலக்ஷணமான தம திருவடிகளில் ஸம்பந்தத்தை உண்டாக்கிஜ்ஞாநோபதேசம்பண்ணி ஜீவநத்தைக்கொடுத்து ஸத்தையை உண்டாக்கினவாரானையாலே “செழுங்கொண்டல்” என்கிறார். * தாமஜ்யோதிஸ்ஸமருதாம் ஸந்நிபாதத்தாலே யுண்டானதாய் ப்ராக்ர்தமாய அபேக்ஷிதத்தவர்களுக்கு வர்ஷியாதே, அபேக்ஷியாதஸமுத்ராதிகளிலே வர்ஷித்துக்கொண்டுபோருகிற மேகம்போலன்றிக்கே, தத்வயாதாத்ம்யஜ்ஞாநங்களிலே தலைவராய் அபேக்ஷாநிரபேக்ஷமாகவே லோகத்தாரையெல்லாம்உஜ்ஜீவிப்பிக்கக்கடவோம் என்று தீக்ஷித்துக்கொண்டு அவதரித்த கல்யாணகுணவைலக்ஷண்யத்தை யுடையராகையாலே (செழுமகொண்டல்) என்கிறார். (இராமாநுசா) இப்படிப்பட்ட எம்பெருமானாரே.

(கையில்கனி யன்ன கண்ணனைக் காட்டித்தரிலும்) (பத்துடையடியவர்க்கெளியவன்) என்கிறபடியே ஆச்ரிதபாரதந்த்ரனாய்க்கொண்டு, தூத்யஸாரத்யங்களைப்பண்ணுகையும், (கண்ணிக்குறுங்கயிற்றாலகட்டுண்டான் காணேடி) என்கிறபடியே, ஒரு அறுதல்கயிற்றாலேகட்டுண்டும் அடிஉண்டுமிருக்கையும், (கொற்றக்குடையாக ஏந்திநின்ற கோவர்த்தநத் தென்னையுய்த்திடுமின்) என்கிறபடியே கோவர்த்தநோத்தாரணம் பண்ணுகையும், (திண்ணன் வீடுமுதல்

முழுதுமாய்) என்கிறபடியே - ஸர்வஸ்மாத்பரனுமாகிற ஆஸ்ரய குணசேஷ்டிதங்களையுடையனான க்ருஷ்ணனை உள்ளங்கை நெல்லிக்கனிபோலே ஸாக்ஷாத்கரிப்பித்துத்தரினும், (உனதன்மெய்யில்பிறங்கியசீரன்றிவேண்டிலன்யான்) “[illegible]” (பதிம்விஸ்வஸ்ய) என்றும், “[illegible]” (தேவாநாம்தாநவாநாஞ்ச ஸாமாந்யமதிதைவதம்) என்றும், (உலகுக்கோர் முந்தைத்தாய்தந்தை) என்றும் சொல்லுகிறபடியே எல்லார்க்கும் பொதுவானவனவிஷயத்திலே ஸக்தனல்லேன்; அநந்யார்ஹ சேஷபூதர்க்கே ஸ்வாமியான தேவரீர்பக்கலிலேயன்றோ நான் ஸக்தனானது, எப்போதும் ப்ரீதிவிஷயமான வஸ்துவிலேயன்றோ ருசிபிறப்பது; ஆகையாலே என்னுடைய ப்ரீதிவிஷயமான தேவரீர் திவ்யமங்கள விக்ரஹத்திலே ப்ரகாசிக்கிற ஸௌந்தர்யலாவண்யாதி குணங்களையொழிய வேறொன்றை நான் அபேக்ஷியேன்; அதைப்ரஸங்கிப்பதும் செய்யேன். பிறங்குதல் - ப்ரகாசித்தல். அது வொழிய ஸர்வ ஸமாச்ரயணீயனான ஸர்வேச்வரன் ப்ராப்யன் என்றும் சேதநரான நீர் ப்ராப்தா என்றும் “[illegible]” (ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோரூபம்) இத்யாதி சாஸ்த்ரங்களிலே சொல்லாநிற்கச்செய்தே, நீர் இங்ஙனே சொல்லக்கூடுமோ என்னில்; ப்ராப்யனான ஸர்வேச்வரன் ஹ்ருதயனாய் எனக்கு அந்தராத்மாவாயிருக்கச்செய்தே அநாதிகாலமே பிடித்து இவ்வளவும் நான் ஸம்ஸாரத்திலுழன்று கரைகண்டு கொண்டேனல்லேன், நான் இன்று தேவரீரைப் பற்றின பின்பு கரையேறப்பெற்றேன்; ஆகையாலே தேவரீரே எனக்கு ப்ராப்யம் என்று கருத்து.

அன்றிக்கே, க்ருஷ்ணன் தூதஸாரத்யங்களைப் பண்ணுகிற தசையில், தன்னுடைய விச்வரூபத்தைக் காட்டி அநுகூல ப்ரதிகூலவிபாகமற தர்சிப்பித்தவளவிலும் திருத்தேர்த்தட்டிலேயிருந்து தத்வஹிதபுருஷார்த்தங்களை உபதேசித்தவளவிலும் ஒருவராகிலும் முமுக்ஷையிலே ஜநித்ததில்லை, தேவரீரை ஸேவித்தமாத்ரத்தாலே ஊமைக்கு முமுக்ஷை பிறந்ததாமே, தேவரீருடைய விக்ரஹவைலக்ஷண்யத்தை ஸாக்ஷாத்கரிப்பித்தருளி அவன் தனக்கு வீட்டை அப்போதே கொடுத்தருளிற்று என்னும் இச்செய்தியை ஆழ்வான் கேட்டருளி, இனி நமக்குப் பேறு கிடையாதாகாதே என்று தம்மை வெறுத்துக் கொண்டார் என்றும் ப்ரஸித்தமிறே. இப்படிகளாலே பகவத் விஷயத்துக்கும் தேவரீர்க்கும் நெடுவாசியுண்டாகையாலே இப்படி அத்யவஸித்தேன் என்கிறார் என்னவுமாம். அங்ஙனுமன்றிக்கே, ஸுலபனான ஸர்வேச்வரனைக் காட்டித்தரிலும் அவன் தண்டதரனாகையாலே, என்தண்மையைப்பார்த்து விபரீதனாயிருப்பன், ஆகையாலே தேவரீர் அபிமானமே உத்தாரகமென்று அத்யவஸித்

லக்ஷிதம் நசாத்மாநம் நாங்யத்கிமபிதவ ஶேஷத்வவிபவாத் - பஹிர்ப்பூதந்நாதக்ஷணமபிஸஹேயாதுஶததா விநாஶந்தத் ஸத்யம் மதுமதந விஜ்ஞாபநமிதம) என்றும, (நரகும் சுவர்க்கமும் நாண்மலராள்கோனைப்,பிரிவும்பிரியாமையும்) என்று - ப்ரதமபர்வத்திலேஆழ்வாரும் ஆளவந்தாரும் அருளாளப்பெருமாளெம்பெருமானாரும் அநுஸந்தித்தாப்போலே அமுதனாரும சரமபர்வத்திலே அநுஸந்தித்தாராய்த்து. ... ... ... ... (௧0௪)

உரை.—அ.—நூற்றஞ்சாபபாட்டு. எலலாருமம, ஸம்ஸாரம் த்யாஜ்யம, பரமபதம் உபாதேயமென்றறுதியிட்டு, வஸ்தவ்யதேசமதுவேயென்று அஙகேபோகஆசைப்படாநிறக, நீரபரமபதத்தையும் ஸம்ஸாரத்தையும் ஸஹபடியாகின்றி, உமக்குவஸ்தவ்யதேசமாக நீர்தாம் அறுதியிட்டிருபபது ஏதென்ன அருளிசசெயகிறார.

மூ.—செழுந்திரைப்பாறகடல்கண்டுயில்மாயன்திருவடிக்கீழ்
விழுந்திருப்பார்நெஞ்சில்மேவுநனஞானிநலவேதியாகள்
தொழுந்திருப்பாதனிராமாநுசனைத்தொழுபெரியோா
எழுந்திரைத்தாடுமிடமடியேனுக்கிருப்பிடமே. (௧0௫)

| பதம். | உரை. |
|---|---|
| செழும் | அழகிய, |
| திரை | திரைகளையுடைத்தான, |
| பாற்கடல் | திருப்பாற்கடலிலே, "கடலோதமகாலலைப்பக்கண்வளரும்" என்கிறபடியே, துடைகுத்த உறங்குவாரைப்போலே அததிரைகளானவை திருவடிகளை அநுகூலமாக அசைக்க, |
| கண்துயில் | கண்வளராநிற்பானாய், *உறங்குவான்போல்யோகுசெய்கிற, |
| மாயன் | ஆஶ்சர்யத்தையுடையனான ஸர்வேச்வரனுடைய குணத்திலே ஈடுபட்டு "ஜிதந்தே" என்று, |
| திருவடிக்கீழ் | திருவடிகளின்கீழே |
| விழுந்திருப்பார் | விழுந்து இந்த ஸ்வபாவத்துக்குத் [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] [illegible] இதனையே பலகாலும் [illegible] [illegible] கொண்டு போருகையாலே, |
| நெஞ்சில் | அவர்கள்நெஞ்சிலே |
| மேவும் | மேவப்பட்ட, |
| நல் | விலக்ஷணமான, |
| ஞானி | ஜ்ஞாநத்தையுடையராய், |
| நல்வேதியர்கள் | பரமவைதிகரானவர்கள், |

| பதம். | உரை. | பதம். | உரை. |
| --- | --- | --- | --- |
| தொழும் | ப்ரணாமாத்யநுவர்த்தநங்களைப் பண்ணாநின்றுள்ள, | | தவிடத்தில் இராதே, |
| திருப்பாதன் | திருவடிகளை யுடையரான, | எழுந்து | கிளர்ந்து, |
| இராமாநுசனை | எம்பெருமானாரை "நிதயாஞ்சலி புடா ஹ்ருஷ்டா:" என்கிறபடியே, | இரைத்து | கடலிரைத்தாப்போலே இரைத்துக் கொண்டு, |
| தொழும் | ஸதாநுபவம்பண்ணாநின்றுள்ள, | ஆடுமிடம் | ஸஸம்ப்ரமவ்யாபாரங்களைப்பண்ணுமிடம், |
| பெரியோர் | வைபவத்தை யுடையவர்கள், | அடியேனுக்கு | அவர்களடியனான எனக்கு, |
| | அவ்வநுபவஜநிதஹர்ஷ ப்ரகர்ஷத்தாலே உடம்பு இருந் | இருப்பிடம் | வஸ்தவ்யதேசம். |

செழுமை-அழகு; பெருமையுமாம். "பாற்கடல் பள்ளிகொள் மாயன்" என்றும் பாடம்சொல்லுவர்கள் ... ... ... (கoரு)

வ்யா.—அ—நூற்றஞ்சாம்பாட்டு. கீழ் எம்பெருமானார் நமக்குப்பண்ணியருளின உபகாரத்தை அநுஸந்தித்து மஹோதாரரான எம்பெருமானாரே! என்று அவரை ஸம்போதித்து, தேவரீர, ஸகலபுருஷார்த்தங்களை கரதலாமலகமாகப்பண்ணிக் கொடுத்தாலும், அவன் நித்யவாஸம் பண்ணுகிற பரமபதத்தைக் கொடுத்தாலும், அவனுக்கு க்ரீடாகந்துகஸ்த்தாநீயமான இந்த லீலாவிபூதியைக்கொடுத்தாலும், தேவரீருடைய திவ்யமங்கள விக்ரஹாநுபவமொழிய அவற்றில் ஒன்றும் எனக்கு வேண்டுவதில்லை, ஆகையாலே இவ்வநுபவம் எனக்கு எப்போதும் நடக்கும்படி க்ருபைபண்ணில் தரிப்பன், இல்லையாகில், ஜலாதுத்த்ருத மத்ஸ்யம்போலே தரிக்கமாட்டேன் என்ன; அத்தைக்கேட்டவர்கள், "జనిమృతిదురితనిధౌమే జగతిజిహాసాసాన్ద్రజృమ్భితాభవతాత్ । భవతుచనభసిపరస్మిన్ నిరవధికానన్దనిర్భరేలిప్సా" (ஜநிம்ருதி துரிதநிதௌமே ஜகதி ஜிஹாஸாஸாந்த்ரஜர்ம்பிதாபவதாத்-பவதுசநபஸிபரஸ்மிந்நிரவதிகாநந்தநிர்ப்பரேலிப்ஸா) என்கிறபடியே லோகத்தார் எல்லாரும் ஸம்ஸாரம் த்யாஜ்யம் என்றும், பரமபதம் உபாதேயம் என்றும் அறுதியிட்டு அங்கேபோக ஆசைபபட்டாநிற்க நீர் இவ்விரண்டையும் ஸஹபடித்துச்சொன்னீர், இனி உமக்கு வஸ்தவ்யதேசமாக அறுதியிட்டிருப்பது என்னென்றுகேட்க; திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளின ஸர்வேச்வரனுடைய குணங்களிலே ஈடுபட்டு, * கலக்கமில்லா நல்தவ

முனிவராலே விரும்பப்பட்ட விலக்ஷணஜ்ஞாநத்தையுடையரான பரமவைதிகராலே (தொழுது முப்போதும்) என்கிறபடியே அநவரதம் ஸேவிக்கப் படாநின்றுள்ள திருவடிகளையுடைய எம்பெருமானை (தேவுமற்றறியேன) என்றுஸதாநுபவம் பண்ணிக்கொண்டிருக்குமவர்கள் எழுந்தருளியிருக்குமிடம் அவர்களடியேனுக்கு வஸ்தவ்யதேஶம் என்று கீழ் தாம் சொன்ன ப்ராப்யத்தை நிஷ்கர்ஷித்தருளுகிறார்.

வ்யா.—(செழுந்திரைப்பாற்கடல் கண்துயில்மாயன்) செழுமென்றது - திரைக்கு விசேஷணமாகவுமாம், கடலுக்கு விசேஷணமாகவுமாம்; திரைக்கு விசேஷணமானபோது, செழுமை - அழகாய், பால்கிளருமாப்போலே ஒன்றுமேல ஒன்றாகத் திரண்டு வருகிற இவற்றினுடைய ஸமுதாயசோபையைச் சொன்னபடி. கடலுக்கு விசேஷணமானபோது, செழுமை - பெருமையாய், (தெளிநீர்க்கடலைப் படைத்துத் தன்தாளும் தோளும் முடிகளும் சமனிலாத பலபரப்பி) என்கிறபடியே ஸர்வேச்வரனுக்கு இடங்கை வலங்கைகொண்டு கண்வளருகைக்கிடான பரப்பையுடைய கடல் என்றபடி. அன்றிக்கே, செழுமை மாயனுக்கு விசேஷணமாகவுமாம். இப்படிப்பட்ட திருப்பாற்கடலிலே, (கடலோதம் கால் அலைப்பக்கண்வளரும்) என்கிறபடியே துடைகுத்த உறங்குவாரைப்போலே, தரைகளானவை திருவடிகளை அநுகூலமாக அலைக்க அவ்வோசையிலே கண்வளருமவனைப்போலே கண்வளராநிற்பனாய், * உறங்குவானைப்போல் யோகுசெய்கிற ஆஶ்சர்யத்தையுடையனான ஸர்வேஶ்வரன் "[illegible]" (ஏஷநாராயணஶ்ஸ்ரீமாந்க்ஷீரார்ணவநிகேதந) என்றும், (வெள்ளத்தரவிலதுயிலமர்ந்தவித்தினை) என்றும் சொல்லுகிறபடியே அநந்தாவதாரகந்தமாய்க்கொண்டு, திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளுகிற ஸர்வேச்வரன் என்றபடி. "செழுந்திரைப்பாற்கடல் பள்ளிகொள்மாயன" என்னும்பாடம் சொல்லுவர்கள்.

(திருவடிக்கீழ் விழுந்திருப்பார்) (பாற்கடலான்பாதம் வழுவாவகைநினைந்து) என்கிறபடியே அப்படிப்பட்ட ஸர்வேச்வரனுடைய கல்யாணகுணங்களை அநுபவித்து அவற்றிலே ஈடுபட்டு, (உன்னடிக்கீழ் அமர்ந்துபுகுந்தேனே) என்கிறபடியே - அவனுடைய திருவடிகளின்கீழே * நிழலுமடிதாறும்போலே பிரியாதே விழுந்திருக்குமவர்களான * கலக்கமில்லாநல்தவமுனிவராலே. (நெஞ்சில்மேவும் நல்ஞானி) இது ஒருஜ்ஞாநவைபவமே! என்று இத்தையே பலகாலும் அவர்கள் ச்லாகித்துக்கொண்டு போருகையாலே, அவர்கள் நெஞ்சிலே வைக்கப்பட்ட ஜ்ஞாந வைலக்ஷண்யத்தையுடையராய். மேவுதல் - விரும்புதல்.

(நல்வேதியர்கள்) பரமவைதிகரானவர்கள். (தொழுந்திருப் பாதன்) "లక్ష్మణాయమునయే తస్మై నమస్కుర్మహే" (லக்ஷ்மணாய முநயே தஸ்மை நமஸ்குர்மஹே) என்றும், (தஸ்மைராமாநுஜார்யாயநம: பரமயோகிநே) என்றும், "ప్రణామం లక్ష్మణమునిః ప్రతిగృహ్ణాతుమామకమ్" (ப்ரமாணம லக்ஷமணமுநி: ப்ரதிக்ருஹ்ணாதுமாமகம்) என்றும், "రామానుజం యతిపతిం ప్రణమామి మూర్ధ్నా" (ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்நா) என்றும சொல்லுகிறபடியே ப்ரணாமத்யநுவர்த்தநங்களைப பண்ணுகின்றுள்ள திருவடிகளையுடையனான. (இராமாநுசனை) எமபெருமானை. (தொழும்பெரியோர்) "నిత్యాఞ్జలిపుటా హృష్టాః" (நித்யாஞ்ஜலிபுடாஹ்ருஷ்டா:) என்றும், (புணர்த்தகையராய்) (கைகள்கூப்பிச்சொல்லீா) என்றும் சொல்லுகிறபடியே ஸாவகாலமும் ஸேவித்துக்கொண்டிராநின்றுள்ள பெருமையையுடையவர்கள்.

(எழுந்திரைத்தாடுமிடம்) அவ்வநுபவஜநிதமான ஹர்ஷம் உந்மஸ்தகமாய் அதநாலே உடம்பு இருந்தவிடத்திலிராதே கிளர்ந்து கடல் இரைத்தாப்போலே இரைத்துக்கொண்டு ஸஸம்ப்ரமவ்யாபாரங்களைப்பணணுமிடம். (அடியேனுக்கு இருப்பிடமே) (தன்னை உற்றாட்செய்யுந் தன்மையினோர், மன்னுதாமரைத்தாள் தன்னை உற்றாட்செயய என்னை உற்றான்) என்கிறபடியே - அவர்களுக்கு சரமாவதிதாஸனான அடியேனுக்கு வஸ்தவ்யதேசம் * சீர்த்தானதொலபுகழ்பாடி, கும்பிடு நட்டமிட்டாடிக் கோகுகட்டுண்டுழலுகிற ப்ரதமபர்வநிஷ்டரைப்போலே இச்சரமபர்வத்திலும் எழுந்து இரைத்து ஆடுமவர்கள் இருக்குமிடம் அடியேனுக்கு இருபபிடம என்கிறார். "యా వైకుణ్ఠకథాసుధారసభుజాం రోచేత నో చేతసే" "వాసస్థానం తదిహ కృతినాం భాతి వైకుణ్ఠకల్పమ్" (யாவைகுண்டகதாஸுதாரஸபுஜாம் ரோசேத நோ சேதஸே) (வாஸஸ்த்தாநம் ததிஹக்ருதிநாம் பாதி வைகுண்டகலபம) "வஸ்தவ்யம் ஆசார்யஸந்நிதியும்" என்னக் கடவதிறே. ... ... ... ... (௧0௫)

உரை.—அ.—நூற்றெட்டாம்பாட்டு. இப்படி இவர்தமக்குத் தமபக்கலுண்டான அதிமாத்ர ப்ராவண்யத்தைக்கண்டு எம்பெருமானார் இவர்திருவுள்ளத்தை மிகவும் விரும்பியருள, அத்தைக் கண்டு உகந்து அருளிச்செய்கிறார்.

மூ. இருப்பிடம்வைகுந்தம்வேங்கடம்மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம்மாயனுக்கென்பர்நல்லோரவைதன்னொடும்வந்
திருப்பிடம்மாயனிராமாநுசன்மனத்தின்றவன்வந்
திருப்பிடமென்றனிதயத்துள்ளேதனக்கின்புறவே. (௧0௯)

| பதம். | உரை. |
|---|---|
| மாயனுக்கு | ஸ்வரூபரூபகுண விபூதிகளால்ஆஶ்சர்யபூதனான ஸர்வேச்வரனுக்கு, |
| இருப்பிடம் | வஸ்தவ்யதேசம், |
| வைகுந்தம் | ஸ்ரீவைகுண்டமும், |
| வேங்கடம் | திருமலையும், |
| மாலிருஞ்சோலையென்னும் | திருமாலிருஞ்சோலையென்று ப்ரஸித்தமான, |
| பொருப்பு | திருமலையாகிற, |
| இடம் | ஸ்தலமுமாக, |
| என்பர் | "வைகுந்தம் கோயில்கொண்ட" "வேங்கடம் கோயில்கொண்ட" "அழகர்தம்கோயில்", என்று சொல்லாநிற்பர்கள், |
| நல்லோர் | பகவத் தத்வத்தை ஸாக்ஷாத்கரித்திருக்கிற விலக்ஷணரானவர்கள்; |

| பதம். | உரை. |
|---|---|
| மாயன் | இப்படியிருந்துள்ள ஸர்வேசவரன், "அழகிய பாற்கடலோடும்" என்கிறபடியே, |
| அவைதன்னொடும் | அந்தஸ்த்தலங்கள்தன்னோடேகூட, |
| வந்து | வந்து, |
| இருப்பிடம் | எழுந்தருளியிருக்கிறஸ்த்தலம், |
| இராமாநுசன் மனத்து | எம்பெருமானார்திருவுள்ளத்திலே; |
| இன்று | இப்போது, |
| அவனே | அவர்தாம், |
| வந்து | வந்து, |
| தனக்கு | தமக்கு, |
| இன்புஉற | நிரதிசயஸுகமாக, |
| இருப்பிடம் | எழுந்தருளியிருக்கிறஸ்த்தலம், |
| என்றன் | என்னுடைய, |
| இதயத்துள்ளே | ஹ்ருதயத்துக்குள்ளே ... (௩0௬) |

வ்யா.—அ.—நூற்றாறும்பாட்டு.எம்பெருமானார் திருவடிகளை ஆச்ரயித்தமஹாத்மாக்கள், அவர்தம்முடைய குணாநுபவஜநித ஹர்ஷப்ரகர்ஷத்தாலேகளித்து ஸஸம்ப்ரமந்ருத்தம் பண்ணுமிடம் தமக்குவாஸஸ்த்தானம்என்று கீழ்ப்பாட்டிலேயருளிச்செய்து,இப்பாட்டிலே-வேத தத்வபர்ஹ்மணாதிகளாலே பரிசீலநத்தைப் பண்ணியிருக்குமவர்கள் ஸர்வேச்வரனுக்கு உகந்தருளின நிலங்களாகச் சொல்லுகிற ஸ்ரீவைகுண்டம், வடதிருமலை, தெனதிருமலைதொடக்கமான திவ்யஸ்த்தலங்களோடேகூட எம்பெருமானாருடைய திருவுள்ளத்திலே அவன் மிகவும் விரும்பி வர்த்திக்குமாப்போலே இப்போது அத்திவ்யதேசங்களோடும அந்த திவ்யதேசங்களுக்கு நிர்வாஹகனான ஸர்வேச்வரனோடும்கூடவந்து எம்பெருமானார்தாமும் நிரதிசய ஸுகமாக எழுந்தருளியிருக்கிற ஸ்த்தலம், தம்முடைய திருவுள்ளம் என்று அநுஸந்தித்து ப்ரீதராகிறார்.

வ்யா.—(வைகுந்தம்) "అవ్యాహతేచ్ఛస్సంకల్పం వస్తులక్ష్మీధరం విదుః" (அவ்யாஹதஸம்கல்பம் வஸ்துலக்ஷ்மீதரம்விதுః) என்கிறபடியே ஸமஸ்தஸங்கல்பங்களும் மாறுதேசெல்லுகைக்குடலான தேசமாய், (நலமந்தமில்லதோர்நாடு) என்று ச்லாகிக்கப்படுமதான ஸ்ரீவைகுண்டமும். அன்றிககே, தர்மபூதஜ்ஞாநத்துக்கு திரோதாநமில்லாத தேசமென்னுதல். (வேங்கடம்) (கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்குத் தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பு) என்றும், (பரனசென்றுசேர் திருவேங்கடமாமலை) என்றும் சொல்லுகிறபடியே, இரண்டு ப்ரஜையைப்பெற்ற மாதாவானவள் இருவர்க்கும் முலைகொடுக்கப்பாங்காக நடுவே கிடக்குமாப்போலே நித்யஸூரிகளுக்கும் நித்யஸம்ஸாரிகளுக்கும் ஒக்கமுகங்கொடுக்கைக்காக அவன் நின்றருளின திருமலையும். (மாலிருஞ்சோலையென்னும்பொருப்பிடம்)(புயல்மழைவண்ணர் புரிந்துறை கோயில) என்றும், (வலம்செய்யும் வானோர்மாலிருஞ்சோலை) என்றும, (கிளரொளிசேர்கீழரைத்தபேறு கிடைக்க, வளரொளி மாலசோலைமலை) என்றும் சொல்லுகிறபடியே - திருமாலிருஞ்சோலைஎனனும பெயரையுடைத்தாய்ஆழ்வார் ப்ரார்த்தித்தருளினபடியே உகந்துவர்த்திக்கைக்கு ஏகாந்தஸ்த்தலம் என்று அவன் விருபபத்தோடே வர்ததிககிற தென்திருமலையாகிற ஸ்த்தலமும். பொருபபு - பர்வதம். இருப்பிடம் - ஆவாஸஸ்த்தாநம்.

(மாயனுக்கு), "యతోవాచోనివర్తన్తే అప్రాప్యమనసాసహ" (யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்யமநஸாஸஹ) என்றும், "నమేవిదుస్సురగణాః" "ప్రభవంనమహర్షయః" (நமேவிதுஸ்ஸுரகணாः) (ப்ரபவந்நமஹர்ஷயः)என்றும்,(யவர்க்கும் சிந்தைக்கும் கோசரமல்லன்)என்றும சொலலுகிறபடியே-அசிந்த்யஸ்வபாவனாய், "తదైక్షత బహుస్స్యాం ప్రజాయేయేతి" (ததைக்ஷத பஹுஸ்யாம்ப்ராஜாயேயேதி)என்றும், (தானோருருவே தனிவித்தாய்)என்றும்சொல்லுகிறபடியே ஸர்வகாரணபூதனாய ஸ்வரூபரூபகுணவிபூதிகளால் ஆஸ்சர்யபூதனான ஸர்வேஸ்வரனுக்கு (நல்லோர்) "మహాత్మానస్తుమాంపార్థ దైవీం ప్రకృతిమాశ్రితాః। భజన్త్యనన్యమనసో జ్ఞాత్వాభూతాదిమవ్యయమ్" (மஹாத்மாநஸ்துமாம்பார்த் தைவீம்ப்ரக்ருதிமாஸ்திதாः - பஜந்த்யநந்யமநஸோஜ்ஞாத்வா பூதாதிமவ்யயம்) என்கிறபடியே பராவரதத்வயாதாத்ம்யவிதக்ரேஸரான மஹர்ஷிகள். (எனபர்) சொல்லுவர்கள் "వైకుణ్ఠేతుపరేలోకే శ్రియాసార్ధం జగత్పతిః। ఆస్తే విష్ణురచిన్త్యాత్మా భక్తైర్భాగవతైస్సహ" வைகுண்டேது பரேலோகே ஸ்ரீயாஸார்த்தம்ஜகத்பதிः - ஆஸ்தேவிஷ்ணுரசிந்த்யாத்மாபக்தைர்பாகவதைஸ்ஸஹ) இத்யாதியாலே ப்ரதிபாதிப்பர் என்றபடி. அன்றிககே (நல்லோர்) * மயர்வறமதிநலமருளப்பெற்ற

ஆழ்வார்கள் அருளிச்செய்வர்களென்றுமாம். (அயர்வறுமமரர்க
ளதிபதி)என்றும், (திருமால்வைகுந்தம்) என்றும்,(தெண்ணலருவி
மணி பொன்முத்தலைக்கும் திருவேங்கடத்தான்) என்றும், (வள
ரொளிமாயோன் மருவியகோயில், வளரிளம்பொழில்சூழ் மாலி
ருஞ்சோலை) என்றும், (விண்டோய்சிகரத் திருவேங்கடம்) என்
றும், (சீராருமாலிருஞ்சோலை) என்றும்,(வேங்கடத்துமாயோனை)
என்றும், (விரைதிரைநீர்வேங்கடம்) என்றும், (மங்குல்தோயுசெ
ன்னிவடவேங்கடத்தானை)என்றும்,(வெற்பென்றிருஞ்சோலைவேங்
கடம்) என்றும் இத்யாதிகளிலே அருளிச்செயவர்கள் என்றபடி.

(அவைதன்னொடும்) அந்த வைகுண்டம், வேங்கடம், மாலி
ருஞ்சோலை தொடக்கமான திவ்யதேசங்களோடேகூட. (வந்து)
(அழகியபாற்கடலோடும்) என்கிறபடியே அந்த திவ்யதேசங்க
ளில் அவனைப்பெறுகைக்கும் ஜகத்ரக்ஷணம்பண்ணுகைக்கு முறுப
பாகையாலே அந்தஸ்தானங்களையாலும் தனக்கு பராப்யரான
இவர்தம் முடைய ப்ரீதிவிஷயங்களானவையாலும் அவற்றைப்பிரிய
மாட்டாதே, அத்திவ்யதேசங்களோடேகூடத் தானே வந்து.
(மாயன்),ஸர்வேஶ்வரன் என்னும்படி நிரதிசயபோக்யனான ஸர்வேஶ்வர
னுக்கு, "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்" (ஜ்ஞாநீத்வாத்மைவமேமதம்)என்று
அவன்றானே சொல்லும்படி தாரகராயிருக்குமவர். அதாங்கே,
(எந்நின்ற யோநியுமாய்ப்பிறந்தாய்) என்கிறபடியே ஸர்வேஶ்
வரன்தானே வந்து உபகரித்து * படாதனபட்டு உபதேசித்தரா
லும் திருந்தாத ப்ராக்ருதஜநங்களையெல்லாம் அநாயாஸேந திருத்தி
ப்பணிகொண்ட ஆஶ்சர்ய பூதரென்றுதல. (இராமாநுசன்)
இப்படிப்பட்ட எம்பெருமானாருடைய. (மனத்து) திருவுள்ளத்
திலே வாஸஸ்தாநமாக எழுந்தருளியிருந்தார் என்றபடி. (இன்று)
அடியேனை அந்தரங்கனாகக் கைக்கொண்ட இப்போது.

(என்றனிதயத்துள்ளே) தம்முடைய திருவுள்ளம்போலே
பக்திரஸஸந்துக்ஷிதமாய் நிஶ்சலமாய * விஷய விரக்தமாயிருக்கை
யன்றிக்கே, சுஷ்கமாய சஞ்சலமாய விஷயஸங்கியான என்னு
டைய ஹ்ருதயத்திலே. (தனக்கு இன்புறவே) அந்தஎம்பெரு
மானார் தமக்கு - "யமேவைஷ வ்ருணுதே தேந லப்ய:" (யமேவைஷவ்ருணு
தேதேநலப்ய:) என்னும்படியான நிரவதிக ப்ரீதியோடே
எழுந்தருளி யிருக்குமிடம். காமிநி உடம்பிலழுக்கை காமுகன
உகக்குமாப்போலே, என்பக்கல் வ்யாமோஹத்தாலே என் ஹ்ருத
யத்தைவிட்டு மற்றொன்றை விரும்பார் என்றபடி. (உச்சியுள்ளே
நிற்கும்) என்னும்படி ஸர்வேசுவரன். ஆழ்வார்திருமுடிக் கவ
ருகு போக்கிலலையென்று அங்கேதானே நின்றாப்போலே

எம்பெருமானாரும் இவர்திருவுள்ளத்துக் கவ்வருகே போக்கொண்டிலலை என்றுதிருவுள்ளமாய், அங்கேதானே ஸ்த்தாலர ப்ரதிஷ்டையாக வெழுந்தருளியிருந்தார்காணும். ... ... (௧0௬)

உரை.—அ.—நூற்றேழாம்பாட்டு. இப்படி தம்பக்கலிலே வ்யாமோஹத்தைப்பண்ணுகிற்கிற எம்பெருமானாருடைய திருமுகத்தைப்பார்த்து, தேவரீர்க்கு விண்ணப்பம்செய்யவேண்டுவதொன்றுண்டு என்று தம்முடைய அபேக்ஷிதத்தை விண்ணப்பம் செய்கிறார்.

இன்புற்றசீலத்திராமாநுசவென்றுமெவ்விடத்து
மென்புற்றநோயுடல்தோறும்பிறந்திறந்தெண்ணரிய
துன்புற்றுவீயினுஞ்சொல்லுவதொன்றுண்டுன்தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படியென்னையாக்கியங்காட்படுத்தே. (௧0௭)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | எத்தனையேனும் தண்ணியனை என்னுடைய ஹ்ருதயத்திலே வந்துபுகுந்து அது தன்னைப் பெறுப்பேறாக நினைத்து, | என்புஉற்ற | அஸ்திகதமாய் நின்று நலியக்கடவ, |
| இன்புற்ற | ஆநந்தநிர்ப்பரராய்எழுந்தருளியிருக்கிற, | நோய் | வ்யாதிகளுக்கு பாஜநமான, |
| சீலத்து | ஸௌசீல்யத்தையுடையவரே, | உடல்தோறும் | சரீரங்கள்தோறும், |
| இராமாநுச | இப்படியிருக்கிற தேவரீாக்கு, | பிறந்து இறந்து | ஜநிப்பதுமரிப்பதாய், |
| சொல்லுவது | விண்ணப்பம் செயயவேண்டுவது, | எண்ணரிய | அஸங்க்யேயமாய், |
| ஒன்று | ஒருகார்யம், | துன்பு | துக்கங்களை, |
| உண்டு | உண்டு; அதேதென்னில், "ஐயார்கண்டமடைகிலும் நின் கழலெய்யாதேத்த" என்னுமாப் போலே தோற்புரையேபோமதன்றியிலே, | உற்று | அநுபவித்து, |
| | | வீயினும் | முடியிலும், |
| | | என்றும் | ஸர்வகாலத்திலும், |
| | | எவ்விடத்தும் | ஸர்வதேசத்திலும், |
| | | உன் | தேவரீர்க்கு, |
| | | தொண்டர்கட்கே | அநந்யார்ஹராயிருக்குமவர்களுக்கே, |
| | | அன்பு | மறுபாடுருவின ஸ்நேஹத்தை, |
| | | உற்றிருக்கும்படி ஆக்கி | உடையேனாயிருக்கும்படியாகச்செய்து, |
| | | என்னை | என்னை, |

| பதம். | உரை. |
|---|---|
| அங்கு | அவர்கள்திருவடிகளிலே, |
| ஆள்படுத்து | அடிமை யாகும்படி பண்ணி யருளவேணும். இதுவே அடியேனுக்கு புருஷார்த்தமென்று கருத்து. |

இன்பு-ஸுகம். சீலமாவது-பெரியவன் தண்ணியரோடே புரையறக்கலக்கும் ஸ்வபாவம். என்பு-எலும்பு. துன்பு-துக்கம்.

---

வ்யா.—அ.—நூற்றேழாமபாட்டு. கீழ்ப்பாட்டிலே - எம்பெருமானார் தம்முடைய திருவுள்ளத்திலே புகுந்து நிரதிசய ப்ரீதியோடேகூட நித்யவாஸம்பண்ணுகின்றார் என்று தம்மளவிலே அவர் பண்ணின விஷயீகாரத்தை அநுஸந்தித்து, இதிலே - அப்படிப்பட்ட வ்யாமோஹத்தையும் நிரவதிகஸௌசீல்யத்தையும் உடையவரோ என்று அவரை ஸம்போதித்து,அஸ்திரமாய்க்கொண்டு நலியக்கடவவ்யாதிகளுக்கு பாஜநமான சரீரங்கள்தோறும ஜநிப்பது மரிப்பதாய்க்கொண்டு அஸங்க்யேயமான துக்கங்களை அநுபவித்து உருமாய்ந்து முடியிலும், ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் தேவரீர்க்குஅங்கீகாரார்ஹராயிருக்குமவர்கள் பக்கலிலே அதிவ்யாமுக்தனாய், அவர்களுக்கு க்ரயவிக்ரயார்ஹனாய்க்கொண்டு அடிமைப்படும்படியாக அடியேனைப்பண்ணி யருளவேணுமென்று தமமுடைய அபேக்ஷிதத்தை விண்ணப்பம்செய்கிறார்.

வ்யா.—(இன்புற்றசீலத்திராமாநுசா) திருவேங்கடமுடையானுக்கும், திருக்குறுங்குடி நம்பிக்கும் திருவிலச்சினையையும ஸ்ரீபாஷ்யத்தையும் ப்ரஸாதித்தஆசார்யராயும்,செல்வப்பிள்ளைக்கு பிதாவாயுமிருக்கிற தேவரீருடைய மதிப்பையும அத்யந்த பாபிஷ்ட்டனான என்னுடையதண்மையையும் பாராதே, என்னை தேவரீர்க்கு அவ்வருகாகவெண்ணி என்னுடைய ஹ்ருதயத்திலே வந்து புகுந்து அதுதன்னையே பெறுபபேறாகநினைத்து ஆநந்தநிர்ப்பரராயெழுந்தருளியிருக்கிற ஸௌசீல்யத்தையுடையரான எம்பெருமானாரே. இன்பு - ஸுகம். சீலமாவது - பெரியவன் தண்ணியரோடே புரையறப்பரிமாறும் ஸ்வபாவம். இப்போதாககாணும்- இவருடையசீலம் அமுதனார்க்குவெளியாகததொடங்கிறது. (சொல்லுவது ஒன்றுண்டு) ஸர்வஜ்ஞரான தேவரீர்க்கு விண்ணப்பம்செய்யவேண்டுவது ஒன்றுண்டு.“ஸத்யேநாஹம்”(நதவேவாஹம) என்றுதொடங்கி, கர்மஜ்ஞாநபக்திகளைப்பரக்க உபதேசித்துக் கொண்டு போந்து, “ஸர்வகுஹ்யதமம்பூய: ஶ்ருணுமேபரமம்வச:” (ஸர்வ குஹ்யதமம்பூய: ஶ்ருணுமேபரமம்வச:) என்று உபதேசிக்கும் கீதாசார்யன் அருளிச்செய்தாப்போலே, இவரும் (இரா

மாநுசா இது என்விண்ணப்பம்) என்கிறபடியே - இவ்வளவும் தம்முடைய அபிநிவேசமெல்லாம் விண்ணப்பம்செய்து, இப் பாட்டிலே - தம்முடைய அபேக்ஷிதத்தை நிஷ்கர்ஷித்து அருளிச்செய்கிறார். அஙகு - சேஷியுடைய உக்தி; இங்கு- சேஷபூதனுடைய அபேக்ஷிதம்.

ஒருப்ரயோஜநமுண்டு என்றீர், அது என்னென்ன; (என்புறற நோயுடல்தோறும் பிறந்திறந்து எண்ணரியதுன்புற்று) நோய் - வ்யாதி. அதாகிறது - ஆத்யாத்மிகாதி து:கங்கள். அந்த நோயானது, அந்தர்ப்பஹிரிந்த்ரிய வ்யாபார ரூபஸ்வகர்தகர்மபலமாகையாலே தோற்புரையே போமதன்றிக்கே அஸ்திகதமாய்க்கொண்டிருக்கையாலும், ஆத்மநாஶகமாகையாலும், (என்புற்ற) என்று விசேஷிக்கிறார். என்பு-எலும்பு. உறுகை - அத்தைப்பற்றி நிற்கை. (உடல்தோறும்) அப்படி அஸ்திகதங்களாய்க்கொண்டு நலியக்கடவ வ்யாதிகளுக்குபாஜநமான சரீரந்தோறும். "𑌦𑍁𑌰𑍍𑌵𑌾𑌰𑌦𑍁𑌰𑌿𑌤𑌮𑍂𑌲𑌂 𑌦𑍁𑌸𑍍𑌤𑌰𑌦𑍁𑌃𑌖𑍌𑌘𑌬𑌨𑍍𑌧𑌨𑍀𑌰𑌨𑍍𑌧𑍍𑌰𑌂𑌵𑌪𑍁𑌃" (துர்வாரதுரிதமூலம் துஸ்தரது:கௌகபந்தநீரந்த்ரம்வபு:) என்னக்கடவதிறே. அன்றிக்கே, (நோயெலாம் பெய்ததோராக்கை) என்கிறபடியே, அந்தவ்யாதிதானே உருவுகொண்டிருக்கிற தேவ திர்யங் மநுஷ்ய ஸ்தாவரரூபமான சரீரங்களென்னுதல்; ஜந்மபரம்பரைகள்தோறும் என்றபடி. பிறந்து இறந்து என்ற இது-மற்ற அவஸ்த்தாந்தரங்களுக்கும் உபலக்ஷணம. இறப்பு - நாஶம். (பிறந்து, இறந்து எண்ணரிய துன்புற்றுவியிலும)-அவ்வவ சரீரங்களிலே ஜநிப்பது, மரிப்பது தொடக்கமான அவஸ்த்தாஸப்தகத்திலும் விரலைமடக்கிஒன்று இரண்டு மூன்று என்று எண்ணப்புக்கால் அது காலதத்த்வம் உள்ளதனையுமெண்ணிலும எண்ணித் தலைக்கட்ட வரிதான து:கங்களை, ஒன்றும மிறிகதிரபடாதபடி அநுபவித்து முடியிலும். (போற்றருஞ்சீலத்திராமாநுசா) எனகிறபடியே தேவரீருடைய சீலகுணத்தை அளவிட்டுச்சொல்லிலும் இஶ்ஶரீராநுபந்தியான து:கத்தை அளவிடநிச் சொல்லவொண்ணுதென்கிறார்காணும். துன்பு - து:கம. (என்றும) எல்லாக்காலத்திலும். (எவ்விடத்தும்) எல்லாவிடத்திலும். (உன்தொண்டர்கட்கே) பந்தமோக்ஷங்களிரண்டுக்கும் பொதுவாயிராதே மோக்ஷப்ரதாநதீக்ஷிதராயன்றோ இவ்வளவாகத்திருத்தி என்னுடைய ஹ்ர்தயத்திலேபுகுந்து நித்யவாஸம்பண்ணுகிற்கிற தேவரீர்க்கு அநந்யார்ஹஶேஷமாயிருக்குமவர்களுக்கே. அவதாரணத்தாலே - அந்யயோக வ்யவச்சேதம் பண்ணுகிறார். (உனக்கேநாம் ஆட்செய்வோம்)(தனக்கேயாக எனைக்கொள்ளுமீதே) (ஆறெனக்கு நின்பாதமே சரணாகத்தந்தொழிந்தாய்) என்றும், "𑌤𑌮𑍇𑌵𑌚𑌾𑌦𑍍𑌯𑌂𑌪𑍁𑌰𑍁𑌷𑌂𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇". (தமேவசாத்

யம் புருஷம்ப்ரபத்யே) என்றும் - ப்ரதமபர்வத்திலே சொல்லு கிறபடியே, "గురురేవపరంబ్రహ్మ," "ఉపాయోపేయభావేన తమేవశరణంవ్రజేత్" (குருரேவபரம்ப்ரஹ்ம) (உபாயோபேயபாவேநதமேவ ஶரணம் வ்ரஜேத்) என்றும், (தேவுமற்றறியேன்) என்றும், (திகில், சாரு சுதிதந்த தன்னிறைவன்றானே, அரணாகமன்னுமது) என்றும் சரம பர்வத்திலேயும் சொல்லுகிறபடியே சொல்லுவித்தாரிறே. (அன் புற்றிருக்கும்படி) நிரவதிக பரேமயுக்தனாயிருக்கும்படி. அன்பு - ஸ்நேஹம். (என்னை ஆக்கி) தேவரீர்க்கு சர்பாவிஷயபூதனாம்படி என்னைப்பண்ணி. (அங்கு ஆட்படுத்தே) பவதியர் திருவடிகள் விஷ யமான எல்லா அடிமைகளிலும் அந்வயித்து க்ருதார்த்தனாம்படி பண்ணியருளவேணுமென்கிறார். (பூபாரகண்டமண்டலத்திலும நின்கழலெய்யாதே தந்தவருள்செய்யவென்கை) என்று ஆழ்வாரும் இப்படியே அருளிச்செய்தாரிறே. .. ... ... (௧௦௭)

உரை.—அ—நூற்றெட்டாம்பாட்டு. நிகமத்தில் - இப்ப்ர பந்தாரம்பத்திலே, "இராமாநுசன சரணாரவிந்தம நாமமன்னிவாழ" என்று ப்ராப்யம் தமக்கு யாவதாத்மபாவியாயபடி கைப்புகுந்ததை யும், அந்தப்ராப்யருசிரூபபக்திபௌஷ்கல்யமுமே தமக்கு அபே க்ஷிதமாகையாலே தத்துபய ஸித்த்யர்த்தமாக ஸ்ரீயானகையாலே, "தேனமரும்பூமேலதிரு - நமக்கென்றும் சார்வு" என்கிறபடியே ஸர்வார்த்தமாகக்கருதும் என்றுமொக்கச் சார்வாய ஸஹபத்ப்ராதை யான பெரியபிராட்டியாரை ஆசரயிப்போமென்கிறார்.

மூ.—அங்கயல்பாய்வயல்தென்னரங்கனணியாகமன்னும்
பங்கயமாமலர்ப்பாவையைப்போற்றுதும்பத்தியெல்லாம்
தங்கியதென்னத்தழைத்துநெஞ்சேநந்தலைமிசையே
பொங்கியகீர்த்தியிராமாநுசனடிப்பூமன்னவே. (௧௦அ)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நெஞ்சே | நெஞ்சே, | இராமாநுசன் | எம்பெருமானுடைய |
| பத்தி | பக்தித்த்வமானது, | அடி | திருவடிகளாகிற, |
| எல்லாம் | நிரவசேஷமாக, | பூ | செவ்விப்பூ, மயிர்கழுவிப் பூச்சூட விருப்பாரைப் போலே எப்போதோவென்று ஆசைப்பட்டிருக்கிற. |
| தங்கியதென்ன | நம்மளவிலே குடிகொண்டதென்னும்படி, | | |
| தழைத்து | ஸம்ருத்தமாய், | | |
| பொங்கிய | விஸ்த்ருதையான, | | |
| கீர்த்தி | கீர்த்தியை யுடையரான, | | |

| பதம். | உரை. |
| --- | --- |
| நமதலைமி. | நந்தலைமேலே, |
| மன்னி | நித்யவாஸம்பண்ணும்படியாக, "செம்கயல பாய்நீர்த் திருவரங்கம்" என்கிறபடியே ஜலஸமர்த்தியாலே, |
| அம் | அழகிய, |
| கயல் | கயல்கள், |
| பாய் | உகளா நின்றுள்ள, |
| வயல் | வயல்சளையுடைத்தாய், |
| தென் | தர்சநியமான, |
| அரங்கன் | கோயிலையே தமக்கு நிரூபகமாகவுடையரான பெரியபெருமாளுடைய, |
| அணி | அழகிய, |
| ஆகம் | திருமார்பிலே, "இறையுமகல கில்லேன்" என்று, |
| மன்னும் | நித்ய்வாஸம் பண்ணுநிற்பாளாய், |
| மா | சலாகயமான, |
| பங்கயமலர் | தாமரைப்பூவைப் பிறப்பிடமாகவுடையளாய், |
| பாவையை | நிருபாதிக ஸ்த்ரீத்வத்தையுடைய ராயாரை, |
| போற்றுதும் | ஆச்ரயிப்போம். |

போற்றுதல் - வணங்குதல் ஏத்தலுமாம்.

அடியில் - பூமன்னுமாதென்றார், இங்கே-பங்கயமாமலர்ப் பாவையென்கிறார்; அங்கே-பொருந்தியஎன்றார், இங்கு - அணியாகமன்னும்என்கிறார்; அங்கு - இராமாநுசன்சரணாரவிந்தம் நாம் மன்னிவாழ என்றார், இங்கு - தலைமிசையே இராமாநுசன்டிப் பூமன்ன என்கிறார்; அங்கு-நெஞ்சேயென்று திருவுள்ளத்தைக் கூட்டிக்கொண்டு உபக்ரமித்தார்; இங்கு - நெஞ்சே என்று திருவுள்ளத்தோடே கூட அநுஸந்தித்துத் தலைக்கட்டினார். இத்தால்-ப்ராப்யருசிவ்ர்த்தியும் ப்ராப்யஸித்தியுமாகிற ஸ்வரூபாநுரூப ஸம்பத்ஸித்திக்கடி, ஸகல ஆத்மாக்களுக்கும தத்ததிகாராநுகுணமாக அபேக்ஷித்தஸம்பத் விசேஷங்களைஸ்வ கடாக்ஷவிசேஷங்களாலே உண்டாக்கியருளும் பெரிய பிராட்டியார் என்றும், ப்ராப்யந்தான், "ஆசார்ய சரணாரவிந்தம்" என்றும் "అత్ర పరత్ర చాపి నిత్యమ్" 'அத்ர பரத்ர சாபி நித்யம்' என்கிறபடியேயாவதாத்ம்யம்விச்லேஷம் அற்றிருக்கை யென்றும், இதுக்கு அதிகாரிகளும் இந்த ப்ராப்யத்தில் ஸஹர்தயமானப்ராவண்யமுடையவர்க ளென்றும் சொல்லிற்றுய்த்து. (௧௦அ)

பெரியஜீயர்திருவடிகளே சரணம்.

பெரியஜீயரருளிச்செய்த உரை முற்றிற்று.

[illegible]வத்விஷயத்திலே ஸ்வார்த்த பர்யாய மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டுபோருகைக்கேயிறே. "உகந்தருளின நிலங்களில் [illegible]ராரியமும் மங்களாசாஸநமும் ஆசார்ய ப்ரஸாதத்தாலே வர்த்திக்கும்படி பண்ணிக்கொண்டு போரக்கடவன்" என்று ஸ்ரீவசநபூஷணத்திலே பிள்ளையும் அருளிச்செய்தாரிறே.

ஆக இத்தாலே - எம்பெருமானார் தம்முடைய நிர்ஹேதுக பரமக்ருபையாலே பரகதஸ்வீகாரபாத்ரனனபின்பு அதற்கு பலமாக இப்படி மங்களாசாஸநபரராயிருந்தோமென்று தாம்பெற்ற பேற்றை, தம் திருவுள்ளத்தைக்குறித்து அருளிசசெய்து இப்ரபந்தத்தைத்தலைக்கட்டியருளினாராய்த்து.

எம்பெருமானார்திருவடிகளேஶரணம்.

திருவரங்கத்தமுதனார் திருவடிகளேஶரணம்.

பிள்ளைலோகம்ஜீயர்திருவடிகளேசரணம்.

பிள்ளைலோகார்யஜீயரருளிச்செய்தவ்யாக்யானம்,

ஸம்பூர்ணம்.